# சிறுவர் சாரணியம்

T. V. நீலகண்டம்

முன்னாள் பாரத சாரண சாரணியர் சங்க

தேசியப் பயிற்சி ஆணையாளர்,

தேசியப் பயிற்சி நிலையம்,

பச்மரி. M. P.

வெளியிடுவோர்

தென் மொழிகள் புத்தக டிரஸ்ட்

458, பூந்தமல்லி நெடுஞ்சாலை

சென்னை-10.

TAMIL
FIRST EDITION
1973 - February



# சிறுவர் சாரணியம்
# SIRUVAR SARANIYAM

A Handbook of Scouting Original in Tamil

*Approved By*
National Headquarters, Bharat Scouts & Guides, India—vide
National Secretary's Letter PD/942/71 dated 22—9—1971

By

**T. V. NILAKANTAM** B. A., B. L.,
Leader Trainer, Bharat Scouts & Guides
*Formerly* National Training Commissioner (Scouts)
National Training Centre, PACHMARHI M. P.
Ex-Citizenship Special Officer, Madras Educational Service

*Author of*
Education in Citizenship (Oxford University Press)
A Handbook for Cubmasters (N. H. Q.)



Price Rs. 25/- Nett.

Published by
The Southern Languages Book Trust
458, Poonamallee High Road, Madras-10.




Printed at
Sremati Printers
3/30, Mount Road, Madras-2.

# அர்ப்பணம்

# சாரணியம்

என்ற

உயர் தனி விளையாட்டை

நாட்டின் எதிர்காலச் செல்வங்களாகிய

**சிறுவர்களுடன்**

**விளையாட வேண்டிய முறையில்**

**விளையாடி**

அச்சிறுவர்களிடையே

ஒழுக்கம், கண்ணியம், கட்டுப்பாடு, கடமை உணர்ச்சி

ஆகிய

உத்தம குணங்களையும்

கடவுள்பக்தி, நாட்டுப்பற்று, தொண்டுபுரியும் மனப்பான்மை

போன்ற உயரிய பண்புகளையும் வளரச்செய்து

**நாட்டுக்கு நற்றொண்டு புரியும்**

**சாரண ஆசிரியப் பெருமக்களுக்கு**

**''சிறுவர் சாரணியம்''**

என்ற

இந்த நூல்

ஆசிரியரின் அன்பு கலந்த நன்றி உணர்வோடு

**அர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது**

## MESSAGE

I am glad to learn that Shri T. V. Nilakantam has written a book entitled SIRUVAR SARANIYAM (Boy Scouting) in Tamil, which is in the Press and will be out before long. I have not gone into the contents of the book as I do not know Tamil. Nonetheless I feel sure that the book written by a person so well-versed in Scout-lore and Scout-practice as Shri Nilakantam will be a very valuable addition to our basic literature on Scouting in India. Besides it will be most useful for the people in Tamil Nadu as there is hardly any basic book on Scouting in Tamil now.

I congratulate Shri Nilakantam on his effort to serve the Movement even in his retirement by trying to fill a big gap in our Studies for the promotion of Scouting right at the grass roots of the Country.

Padmashri (Mrs.) L. MAZUMDAR,
*National Commissioner*
Bharat Scout & Guides
National Headquarters
New Delhi.

தமிழக கல்வி அமைச்சர், மாண்புமிகு

**டாக்டர், நாவலர் நெடுஞ்செழியன், M.A., அவர்களின்**

# அணிந்துரை.

நல்ல மக்களாட்சி நாட்டில் மலர்ந்து தழைக்க வேண்டுமானால், நல்லெண்ணங்கள், நன்னடத்தை, தன்னம்பிக்கை, தன்னலமற்ற தொண்டாற்றும் மனப்பான்மை பெற்ற குடிமக்கள் மிக அவசியம். இன்றைய இளைஞர்கள் நாளைய குடிமக்கள். எனவே, இளைஞர்களை இளமையிலேயே நல்லெண்ணங்கள் உடையவர்களாகவும், நல்லொழுக்கம் நிறைந்தவர்களாகவும், தன்னம்பிக்கை பெற்றவர்களாகவும், தன்னலமற்ற பொதுநலம் பேணும் உள்ளம் உடையவர்களாகவும் உருவாக்குவது மிக மிக அவசியமாகும். மேலும், அவர்களைக் கட்டுப்பாட்டுடன் கடமையாற்றி, கண்ணியத்துடன் வாழ வழி நடத்திச் செல்வதும் இன்றியமையாதது. இத்தகைய பயிற்சிகளை அவர்களுக்கு விளையாட்டின் மூலம் பரந்த வெளியில் இயற்கையோடு இசைந்த முறையில் அளித்து வருவது சாரணிய இயக்கம்.

சிறுவர், சிறுமியர் இந்த சாரணிய இயக்கத்தின் மூலம் நல்ல பண்புகளையும், பயிற்சிகளையும் பெற்று வருவது பாராட்டுதற்குரியது. உலக மா இயக்கங்களில் ஒன்றாகிய சாரணிய இயக்கம் இளைஞர் சமுதாயத்திற்கு இன்றியமையாத பணியாற்றி வருகிறது. இவ்வியக்கத்தை நிறுவிய பெரியார் பேடன் - பவல் பிரபு அவர்கள் 'சிறுவர் சாரணியம்' என்ற நூலை ஆங்கிலத்தில் எளிய முறையில் எழுதி இளைஞர்களுக்கு வழங்கினார்கள். சிறுவர்கள் இந்நூலைத் தாமே கற்றுத் தெளிந்த பயிற்சி பெற்று, தமது திறமையை வெளிப்படுத்தினார்கள். இந்நூல் பல்வேறு மொழிகளில் இயற்றப் பட்டிருக்கின்றது.

ஆனால், சாரணியம் தமிழ்நாட்டில் பரவலாக வேரூன்றித் தழைத்து, நிலைத்துவரினும், இன்றுவரையில் 'சிறுவர் சாரணியம்' தமிழில் இயற்றப்படாதது ஒரு குறையே. இக்குறையை நீக்கி நிறைவு செய்யும் வகையில் சாரணிய இயக்கத்தில் நீண்ட நெடுங் காலமாக நெருங்கிய ஈடுபாடுடைய அருமை நண்பர் திரு. டி. வி. நீலகண்டம் பி.ஏ., பி.எல். அவர்கள் தமது ஆழ்ந்த அறிவையும் அகன்ற அனுபவத்தையும் அடிப்படையாகக் கொண்டு 'சிறுவர் சாரணியம்' என்ற இந்நூலைத் தெள்ளிய தமிழில் உருவாக்கியிருப்பது வரவேற்கத் தக்கது; பயன் அளிக்கக் கூடியது; பாராட்டுக்குரியது.

நண்பர் நீலகண்டம் அவர்கள் அகில இந்திய சாரண பயிற்சித் துறை முன்னாள் தலைவராக இருந்து பெரும் புகழும் ஈட்டியவர்; சாரண ஆசிரியர்களின் நன்மதிப்பைப் பெற்றவர். அவர் இயற்றி உள்ள இந்நூல் அவர் சொந்த அனுபவத்தின் அடிப்படையில் அமைந்த ஒன்று. இது முழுமையான நூல் என்பதை அறிய மகிழ்ச்சி. நம் தமிழ் நாட்டின் இளைஞர்கள் அனைவரும் இந்நூலைப் படித்துப் பயனடைவர் என்பதில் எனக்கு ஐயமில்லை. இந்நூலை நான் வரவேற்றுப் பாராட்டி, ஒவ்வொரு பள்ளி, நூல்நிலையத்திலும் இதனை வைப்பது சாலச்சிறந்தது என்று பரிந்துரைக்கின்றேன்.


**இரா. நெடுஞ்செழியன்**

தலைவர்,

தமிழ்நாட்டுப் பாரத சாரண, சாரணிகள்,

சென்னை-5.

சென்னைப் பல்கலைக்கழக துணைவேந்தர்

**“தாமரைத்திரு” நெ. து. சுந்தரவடிவேலு** M.A.,L.T., அவர்களின்

# பாராட்டுரை

இன்றைய சிறுவன் நாளைய இளைஞன். நாளைய இளைஞன் அடுத்து, நாடாளும் குடிமகன். எனவே நாடுகளின் எதிர்காலம், உலகத்தின் எதிர்காலம், எங்கோ யார் கையிலோ இருப்பதல்ல. இங்கே இன்றுள்ள சிறுவர் சிறுமியர், இளைஞன் ஆகியோர் கைகளில் மக்கள் இனத்தின் எதிர்கால நல்வாழ்வு இருக்கிறது. சிறுவர் சிறுமியரும், வாலிப ஆண்களும் பெண்களும் நன்முறையில் வளர்ந்து உருவானல் அவர்களது நாடுகளும் உலகமும் நன்முறையில் இயங்கும், வாழும்.

நவீன போக்குவரத்து சாதனங்கள் இல்லாத மிகப் பழங்காலத்தில் ஊருக்கு ஊர் தொடர்பு குறைவு. எப்போதோ ஓர் முறை தொடர்பு கொள்வோரிடையே ஏற்படும் நல்லுணர்வோ பூசலோ, அக்காலத்தில் பொது மக்களை அதிகம் பாதிக்காது. அந்நிலை மாறி பல ஆண்டுகளாகி விட்டன.

இப்போது உலகத்தின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்கு சில மணி நேரத்தில் பறந்து செல்ல முடிகிறது. அத்தகைய விரைவுப் பயணத்தை நாள்தோறும் எண்ணற்றோர் மேற்கொள்ளுகின்றனர். அது மட்டுமா? உலகத்தின் மூலையொன்றில் நிகழும் நிகழ்ச்சி பற்றிய செய்தி சில மணித் துளிகளில் வானொலி வாயிலாக எல்லா நாடுகளுக்கும் எட்டிவிடுகிறது. அது பொது மக்களிடையே மகிழ்ச்சியையோ, எழுச்சியையோ அல்லது நேர் மாருன உணர்ச்சிகளையோ பெருக்கெடுக்கச் செய்கிறது. இதனுல் உணர்வதென்ன? இந்நூற்றுண்டின் இப்பகுதியில், உலக நாடுகளோ, பல்வேறு மக்கட் பிரிவுகளோ, வெகு தொலைவில் இல்லை. மாருக அண்டை வீடுகளாகவும், வீட்டுக்காரர்களாகவும் மாறிவிட்டார்கள். இப்புதிய சூழ்நிலைக்கு ஏற்ற மனப்போக்கு எது? ‘எல்லோரும் ஓர் குலம்’ எனும் மனித ஒருமைப்பாடே காலத்திற்கேற்ற மனப்போக்கு; மனித குலத்தைக் காத்து, வாழ்விக்கும் மனப்போக்கும் அதுவாகும்.

உலகக் கண்ணேட்டமும், மக்களினப் பற்றும் இன்றைய தேவைகள். இவற்றைப் பெறுவதெப்படி? சொல்லிச் சொல்லி எழுதி எழுதி வளர்க்கலாம். இவற்றைவிட அதிகப்பயன் தருவது செயல் திட்டங்களின் மூலம், புதிய நோக்கையும், விரிந்தபற்றையும்

வளர்ப்பது. பெரியவர்களைப் புறக்கணிப்பது நல்லதல்ல. ஆயினும் சிறுமியரிடமும் இளம் ஆண்கள் பெண்களிடமும் தக்க செயல் முறைகளை வளர்ப்பதால் மேலும் நெடுநாளைக்கு தொலை நோக்கும் பாசமும் பயன்படும். கற்றுக்கொடுக்கும் செயல் திட்டங்கள், இளைஞர் களின் இயல்பை ஒட்டியனவாக அவர்களின் பண்புகளை வளர்ப் பனவாக அமையவேண்டும்.

இவற்றையெல்லாம் கருத்திற் கொண்டு இந்நூற்றுண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்தில், சர் ராபர்ட் பேடன்-பவல் என்பவரால் சாரணிய இயக்கம் தொடங்கப்பட்டது இங்கிலாந்தில் தொடங்கினு லும், இன்று இவ்வியக்கம் உலகம் முழுவதற்கும் சொந்தம்.

இளமைப் பருவம் ஆர்வமும் ஆற்றலும் கொப்பளிக்கும் பருவம்; பற்பல செயல்களைச் செய்துகாட்டத் துடிக்கும் பருவம்; ஓய்வு நேரம் மிகுந்த பருவம். இவ்வாய்ப்புக்களை முதலாக வைத்து இயற்கைச் சூழ் நிலையில் பற்பல பயிற்சிகளை, செயல்திறன்களை கற்றுக்கொடுக்கிறது சாரண இயக்கமும் அதன் பெண்பாதியான வழிகாட்டி இயக்கமும். இதில் சேர்ந்துள்ளோர், தன்னம்பிக்கை, தன்னடக்கம், கூடித் தொழில் புரிதல், தலைமைப் பொறுப்பேற்றல், இணைந்து வாழ்தல் மரியாதை கொடுத்து மரியாதை பெறுதல் ஆகிய நற்பண்புகளை வளர்த்துக்கொள்ளுகிருர்கள். இந்த இயக்கம் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகப் பரவுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு உலக ஒற்றுமையும் தனிமனித ஆளுமையும் வளரும். எனவே சாரண – வழிகாட்டிகள் இயக்கம் பரவ வாழ்த்த வேண்டும்.

இவ்வியக்கத்தின் கொள்கைகள், இதன் பலப்பல படிகளிலே செய்து பழக வேண்டிய திட்டங்கள், அடைய வேண்டிய தேர்ச்சிகள் ஆகியவைப்பற்றி ஒவ்வொரு மொழியிலும் சரியான நூல் தேவை. நம் தாய் மொழியாம் தமிழில் அத்தகைய நூல் ஒன்று தேவையென் பதைப் பலரும் உணர்ந்து வந்தனர். அத் தேவையை நிறைவு செய்ய முன்வந்துள்ளார் திரு. T. V. நீலகண்டம். அவர் சாரண இயக் கத்தில் முழுக்க முழுக்க ஈடுபட்டுள்ளவர். ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக அவ்வியக்கத்தில் அயராது உழைத்து, பல்நிலை அனுபவம் பெற்றவர். சாரண இயக்கத் தொண்டின் ஆழத்திலும், அகலத்திலும் திரு. நீலகண்டத்திற்கு இணை அவரே. அத்தகைய ஒருவர் ''சிறுவர் சாரணியம்'' என்ற இந்நூலை விரிவாக எழுதியுள்ளது போற்றி வரவேற்பதற்குரிய தமிழ்த் தொண்டு; சாரணியத் தொண்டு மாகும். தமிழ் மக்கள் நல்ல வண்ணம் ஆதரிப்பார்களென்று நம்புகிறேன்.

**நெ. து. சுந்தரவடிவேலு**
தலைவர்,
தென்மொழிகள் புத்தக டிரஸ்ட், சென்னை.
(முன்னுள் தமிழ்நாடு சாரண ஆணையர்)

அனைத்திந்திய சாரணப் பேராணையர்

**உயர்திரு. கா. து. நடராசன்,** M.A.,B.L., அவர்களின்

# பரிந்துரை.

உலக மா இயக்கங்களில் சாரண இயக்கம் சாலச்சிறந்த ஒன்று. இளைஞர்களுக்கு மிக ஏற்ற இயக்கம். அமரில் தோன்றியது எனினும் அமைதிக் காலத்தில் ஆக்கம் அளிக்கக் கூடியது. மேல் நாட்டுப் பெரியார் பேடன் - பவல் பிரபு அவர்கள் அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு உருவாக்கிய சாரண இயக்கம் இன்று உலகமெலாம் பரவி இளைஞர்களுக்கு ஏற்ற ஒரு இயக்கமாகப் பெரும் பயனளித்து வருகின்றது. ஒழுக்கம் ஓம்பல், உடல்நலம் பேணல், கைத்திறன் வளர்த்தல், தொண்டுள்ளம் படைத்தல் இன்னும் பிற நல்ல அறிவு நுட்பங்களை இளைஞர்களுக்கு எளிய முறையில் வழங்கி வரும் சாரண இயக்கம் இன்றைய உலகுக்கு இன்றியமையாதது.

இன்றைய இளைஞர்கள் எதிர்காலக்குடிமக்கள். எனவே அவர்கள் நல்லொழுக்கம், நன்னடத்தை, நல்லபண்பு நிறைந்தவர்களாக வளர்வதற்கு வழிவகை செய்வது சாரண இயக்கம். இந்த இயக்கம் இன்று தமிழகமெங்கும் பரவி, சிறுவர் சிறுமிகள் இயக்கமாக இயங்கி வருவது வரவேற்கக்கூடிய ஒன்று. இது கண்டு நான் மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன். இந்த இயக்கத்தின் பல்வேறு கூறுகளை இளைஞர்களுக்கு எடுத்துரைக்கும் நூல்கள் ஆங்கிலத்தில் பல உள்ளன. ஆனால் நமது செந்தமிழ் மொழியில் உள்ளவை மிகச் சிலவே.

இந்தக் குறையை நீக்கி நிறைவு செய்யும் வகையில் அருமை நண்பர், உயர்திரு, டி. வி. நீலகண்டம் பி. ஏ., பி. எல்., அவர்கள் இயற்றியுள்ள **'சிறுவர் சாரணியம்'** வரவேற்கக்கூடிய ஒரு நல்ல நூல்; பேடன் - பவல் பிரபு அவர்கள் ஆங்கிலத்தில் இயற்றிய 'சிறுவர் சாரணிய'த்தைத் தழுவி எழுதப்பட்டுள்ளது. நண்பர் நீலகண்டம் அவர்கள் சாரண இயக்கத்தில் பன்னெடுங்காலமாக, நெருங்கிய, நிலைத்த ஈடுபாடு உடையவர். தன்னுடைய இளமையெலாம் இவ்வியக்கத்தின் வளர்ச்சிக்காக ஈடுபடுத்தியவர். அகில இந்திய சாரண பயிற்சித்துறை முன்னாள் தலைவராகப் பணியாற்றிப் பேரும், புகழும் பெற்றவர். எனவே, 'சிறுவர் சாரணியம்' என்ற இந்நூலை உருவாக்க எல்லாவித தகுதியும் பெற்றவர். அவர்களிடம்

எனக்குத் தனிப்பட்ட மதிப்பும், பற்றும் உண்டு. இனிய செந்தமிழில், எளியநடையில், சாரணிய இயக்கத்தில் அமைந்துள்ள பல்வேறு பயிற்சிகளைச் சிறுவர்கள் நன்கு அறிந்து பயன்பெறும் வகையில் இந்நூலை அவர்கள் உருவாக்கி இருப்பது மகிழ்ச்சிக்குரிய ஒன்று.

பிறர் உதவி இன்றி, இளைஞர்கள் தாமாகவே கற்றுப் பயிற்சி பெறும் வகையில் இந்நூலை அமைத்திருப்பது பாராட்டுக்குரியது. பள்ளிச் சிறுர் மட்டுமின்றி, பிற இளைஞர்களும் இதனைப் படித்துப் பயன் பெறுவர் என்பதில் எனக்கு மிக்க நம்பிக்கை உண்டு. அவருடைய இப்பெரும் முயற்சியினை நான் மிகவும் பாராட்டு கின்றேன். இந்நூல், காலத்தை வென்று, என்றென்றும் இளைஞர் களுக்கு உறுதுணையாக இருக்கும் என்று கூறுவது மிகையாகாது.

இந்நூலுக்குப் பரிந்துரை வழங்கும் வாய்ப்பினைப் பெற்றமைக்கு மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன். சாரணியம் இளைஞர்களின் ஒரு பயிற்சிக் கூடம், களம் என்றும் கூறலாம். இக்களத்தில் வெற்றி பெறும் இளைஞர்கள் புடம்போட்ட குடிமக்களாக வளர்வார்கள் என் பதில் ஐயமில்லை. எனவே, நல்ல குடிமக்களை உருவாக்கும் முயற்சி யின் வெற்றியே சாரணியத்தின் வெற்றியாகும். இவ்வெற்றிக்கு 'சிறுவர் சாரணியம்' வழிவகை செய்யும். எனவே, இந்நூலை அனைவருக்கும் பரிந்துரைக்கின்றேன்.

**கா. து. நடராசன்.**
செயலாளர்,
தமிழ்நாடு சட்டப் பேரவை.

தமிழ்நாடு, பாரத சாரண சாரணிகள் மாநிலப் பேராணையர்,

**உயர்திரு. சை. வே. சிட்டிபாபு,** M.A., B.T., அவர்களின்

# சிறப்புரை

சாரணியத்தின் தந்தை பேடன்-பவல் சாரணர்களுக்கென ஆங்கிலத்தில் மிகத் தெளிவாகவும், விளக்கமாகவும் புத்தகங்கள் வெளியிட்டுள்ளார். அத்தகைய கருத்துச் செறிவும், சிந்தனை விருந்துமான நூல் தமிழில் இல்லை என்ற பெருங்குறை நீண்ட காலமாக இருந்ததுண்டு. அக்குறையினை நிறைவு செய்யும் வகையில் நண்பர் **திரு. டி. வி. நீலகண்டம்** அவர்கள் **''சிறுவர் சாரணியம்''** என்ற இந் நூலினை வெளியிட்டுள்ளார். சாரணியத்தின் தந்தை பேடன் - பவல் கூறியுள்ள கருத்துக்கள் அனைத்தையும் மிக எளிய, இனிய தமிழ் நடையில் சாரணரும் சாரண ஆசிரியரும் படித்து அறிந்து கொள்ளும் வகையில் நண்பர் திரு. நீலகண்டம் அவர்கள் இந் நூலை எழுதியுள்ளது பாராட்டத்தக்கது.

நண்பர் திரு. நீலகண்டம் அவர்கள் சாரணியத்தில் ஆழ்ந்த, அகன்ற அனுபவம் மிக்கவர். பல்லாண்டுகளாகப் பல்வேறு வகையில் சாரண இயக்கத்தில் ஈடுபட்டுள்ளவர். அவருடைய அனுபவங்களில் வடித்த பல விளக்கங்களை இந் நூலில் ஆங்காங்கு காணலாம்.

''சாரணப் பயிற்சியின் இன்றியமையாச் சிறப்பு, அது சிறுவர்களின் ஓய்வு நேரத்தை இயற்கையின் நடுவில் எழில் பொருந்திய சூழ்நிலையில் நல்ல பயன்தரும் வகையில் செலவுசெய்ய அவர்களைத் தூண்டுவதே ஆகும்,'' என்று சாரணப் பயிற்சியைப்பற்றி அன்னார் இந் நூலில் குறிப்பிட்டுள்ளார். இது ஆசிரியரின் திரண்ட அனுபவத்தின் வாயிலாக வந்துள்ள உண்மை என்பது விளங்கும்.

''சாரணப் பயிற்சி, பள்ளிப் பயிற்சிக்கு இயற்கையான சில குறைபாடுகளுக்கு ஏற்ற பரிகாரம் ஆகும்......எதிர்காலத்தில் அவர்கள் நாட்டின் நற்குடி மக்களாகத் திகழவும் வழி வகுக்கிறது''

''சாரணப் பயிற்சி என்பது ஒழுக்கத்தை ஓம்பும் பயிற்சி. உடல் நலத்தைப் பேணிக்காக்கும் பயிற்சி; கைத்திறனை வளர்க்கும் பயிற்சி; தொண்டு மனப்பான்மையை தோற்றுவிக்கும் பயிற்சி''

''சாரணப் பயிற்சி தன் முயற்சியாலேயே செய்முறையில் கற்றுத் தெரிந்து கொள்ளவேண்டிய பயிற்சி''

''சாரணப் பயிற்சி சாரணனை அன்பர் பணி செய்ய ஆளாக்கி விடுகின்ற சிறப்புடைய பயிற்சி.''

இந் நூலில் காணப்படும் இத்தகைய கருத்துக்கள் சிந்தனைக் குரியன. சாரணியத்தைப் பள்ளிகளில் பயிலுவதற்கு வசதி செய்ய வேண்டியதன் இன்றியமையாமையை உணர்த்துவன.

''நம்பிக்கை சாரணப் பயிற்சிக்கு அடிப்படை'' என்று குறிப் பிடுவதன் மூலம் சாரணர் தன்னம்பிக்கையை வளர்க்கவேண்டும் என்பதை ஆசிரியர் வலியுறுத்தித் தூண்டுகிறார்.

இந் நூலில் சாரண வாக்குறுதி, சாரண விதிகள் ஆகியவை ஒவ் வொன்றும் மிக அழகாக, தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. மேலும் இளம் பாதன், இரண்டாம்தரச் சாரணன், முதல்தரச் சாரணன் ஆகியோர் தெரிந்துகொள்ள வேண்டியவை, அவர்கள் பெறவேண் டிய பயிற்சிகள் ஆகியவையும் தனித்தனியே விளக்கப்பட்டுள்ளன. படிப்படியாக முன்னேறிச்சென்று ஜனாதிபதி சாரணன் ஆகும் தகுதியைப் பெறுவதற்கு ஊக்குவிப்பதற்குத் தேவையான பயிற்சி களின் விளக்கங்களை ஆசிரியர் விளக்கங்களுக்கு ஏற்ற படங்களும் இந் நூலில் ஆங்காங்கு சேர்க்கப்பட்டுள்ளமை இந் நூலின் மற்றொரு சிறப்புமிக்க அம்சமாகும். முடிச்சுகளின் படங்கள் முதலுதவிப் படங்கள் ஆகியவற்றைக் காணும்போது அவற்றை நாம் பழக்கப் படுத்தி அறிந்து கொள்ள வேண்டும் என்ற அவாவினைத் தூண்டு கின்றன. அத்தகைய தெளிவுடன் படங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

முதலுதவிச் சிகிச்சையை விவரிக்கும்போது ஒவ்வொரு சிகிச்சைக்கும் மேற்கொள்ளவேண்டிய முறைகள் தெள்ளத் தெளி வாக — ஒன்றன் பின் ஒன்றாக — வரிசைப்படுத்தி, அவற்றைக் கையாளுவோருக்குத் தடுமாற்றத்தையோ குழப்பத்தையோ ஏற் படுத்தாத வகையில் எழுதப்பட்டுள்ளது.

வீட்டுள் முற்காப்பு, தொழில் நிலையங்களில் முற்காப்பு, பள்ளியில் முற்காப்பு, பள்ளிக்கு வருகையில் முற்காப்பு, பண்ணையில் முற்காப்பு என்ற தலைப்புகளில் கூறப்பெற்ற கருத்துக்கள் ஆசிரியரின் அனுபவ முதிர்வை அனைவரும் அறியச் செய்பவை. இவை மாணவர்க்குப் பெரிதும் பயன்படத் தக்கவை.

பேடன்–பவல் பெரியார் தமது ஆழ்ந்த அறிவின் காரணமாக வெளியிட்டுள்ள கருத்துக்கள் பல இந் நூலில் மிளிர்வதைக் காணலாம். இவை சாரணர்களின் அரிய கருத்துக் கருவூலங்களாம். இந் நூலி லுள்ள அத்தகைய கருத்துக்கள் சில வருவன:—

“நெடுந்தூரம் நடந்து செல்லும்பொழுது அல்லது ஓட்டத்தில் ஈடுபட்டுள்ளபொழுது ஒரு சிறு கூழாங்கல்லை வாய்க்குள் போட்டுக்கொள்ள வேண்டும். இது நாம் நம் வாயை மூடிக்கொள்ள நம்மை வற்புறுத்துகிறது. தவிர நமக்குத் தாகம் உண்டாகாமலும் தடுக்கிறது.”

“அதிகாலையில் ஒரு மணி நேரத்திற்குமுன் எழுந்தால் ஒரு வருடத்தில் 365 மணி நேரம் அதிகமாக நம் பங்குக்குக் கிடைக்கிறது. முப்பது பகல் அதிகமாக நமக்குக் கிடைப்பதால் ஏனையோர்க்கு வருடம் பன்னிரண்டு மாதம் என்றால் நமக்குப் பதின்மூன்று மாத அளவு.”

“சாரணர் எங்கு போகப் புறப்பட்டாலும் இரண்டு பொருள்களைத் தம்முடன் எடுத்துச் செல்ல மறந்துவிடக்கூடாது. ஒன்று சாரண தண்டம். இன்னொன்று தம் முகத்தில் புன்முறுவல்.”

துருவநட்சத்திரமும் வடதிசையும் என்ற தலைப்பின் கீழ் ஆசிரியர் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்:—

“துருவன் நின்ற நிலையிலேயே நிற்கிறது” என்பது நூற்றுக்கு நூறு உண்மையல்ல. உண்மையில் அது நின்ற நிலையிலிருந்து இரண்டு டிகிரிவரை அசைகிறதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்த அசைவினால் பூமியின் மேற்பரப்பில் திசையறிதலுக்கு எவ்வித இடைஞ்சலுமில்லை.”

படிப்போர்க்கு உண்மையை உள்ளவாறு உணர்த்த வேண்டும் என்ற ஆசிரியரின் அக்கறை இதுபோன்ற கருத்திலிருந்து அறியக் கிடக்கிறது.

இந் நூலை சாரண உலகத்திற்கு ஈந்துள்ள நண்பர் திரு. நீலகண்டம் அவர்களைப் பாராட்டுகிறேன். சாரண உலகம் இந் நூலை வரவேற்றுப் பயன்பெறும் என்பதில் ஐயமில்லை.

**சை. வே. சிட்டிபாபு,**
இயக்குனர்,
தமிழ்நாடு பள்ளிக்கல்வி.

# ஆசிரியர் முன்னுரை

**சிறுவர் சாரணியம்** என்னும் இந்த நூல் பன்னிரண்டு முதல் பதினெட்டு வயது வரை உள்ள சிறுவர்களுக்குரிய சாரணப் பயிற்சித் திட்டத்தை விளக்கும் நூல் ஆகும்.

சாரணியம் என்பது போற்றத் தகுந்த ஒரு வாழ்க்கை முறை. சாரண விதியும் சாரண வாக்குறுதியும் அந்த வாழ்க்கை முறையின் எல்லைக்கோடுகள். அவை இரண்டும் சிறுவர்களுக்கு வாழ்க்கை-வழிகாட்டியாக அமைந்துள்ளன. வாழ்க்கையை பண்பும் பயனும் உடையதாக அமைக்கும் திறன் அவைகளுக்கு உண்டு. வாழ்க்கையை வளம்பெறச் செய்யும் ஆற்றல் பொருந்திய அவை இரண்டினையும் வாழ்க்கையாகிய ஓடத்துக்கு உறுதுணையாக உள்ள கலங்கரை விளக்கு எனக் கருதுவது மிக மிகப் பொருத்தமுடையது.

சாரணப் பயிற்சி சிறுவர்களின் ஒழுக்கத்தைப் பாதுகாக்கின்றது. அவர்கள் உடல் நலத்தைப் பேணி வளர்க்கின்றது. அவர்கள் கைத்திறனைப் பெருக்கும் இயல்பு உடையது. உழைப்பின் பெருமையை உணர வைக்கும் ஆற்றல் பொருந்தியது. தொண்டு புரியும் ஆர்வத்தை ஊட்ட வல்லது. மக்கள் பணியில் சிறுவர்களை ஈடுபடச் செய்து அச் சிறுவர்களிடையில் தொண்டு மனப்பான்மையை வளர்க்க வல்லது. சமுதாய உணர்ச்சி அளித்துச் சிறுவர்களைச் சமுதாய வாழ்க்கைக்கு பக்குவப்படுத்தும் ஆற்றல் படைத்தது.

சாரணப் பயிற்சி கண்ணியத்தைப் பேணிப் பாதுகாக்கும் தன்மை பொருந்திய பயிற்சி. கட்டுப்பாடான வாழ்க்கையை அமைத்துத் தரவல்ல பயிற்சி. கடமை உணர்ச்சியை அளிக்கவல்ல பயிற்சி. தற்போது தன்னிடம் உள்ளதைக் கொண்டே தனக்கு வேண்டிய எந்த வசதியையும் தானாகவே அமைத்துக்கொள்ளும் ஆற்றல் தரும் பயிற்சி. பிறரைச் சார்ந்து நிற்காமல் தன்னையே நம்பி நின்று தன் முன்னேற்றத்துக்காக உழைப்பெடுக்கத் தன்னையே தூண்டிக் கொள்ளும் ஆற்றல் அளிக்க வல்ல பயிற்சி. சிறுவர்களைச் சமூக வாழ்க்கைக்கு ஆளாக்கும் பயிற்சி கூட்டுறவு வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒத்துழைப்பு மனப்பான்மையை வளர்க்க வல்ல பயிற்சி. உரிமைகளைவிடக் கடமைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப் பழக்கி வைக்கும் பயிற்சி. தன் சொத்தைப்

போலவே பொதுச் சொத்துக்களையும் பேணிப் பாதுகாக்கும் மனப் பான்மை அளிக்க வல்ல பயிற்சி. தன் அபிப்பிராயங்களுக்கு மதிப்பும் முக்கியத்துவமும் தருவது போலவே பிறர் அபிப்பிராயங் களுக்கும் மதிப்பும் முக்கியத்துவமும் தரப் பழக்கி வைக்கும் பயிற்சி. தன் சொந்த முடிவு எதுவாக இருப்பினும் பொது முடிவுக்கு மதிப்புத் தந்து அதைப் பின்பற்றிச் செயலாற்ற ஆர்வம் அளிக்க வல்ல பயிற்சி. சிறுவர்களுக்குக் குடிமை உணர்ச்சி தந்து அவர்களிடைக் குடிமைப்பண்புகளை வளர்த்து, அவர்களை வருங்கால நற்குடி மக்களாக ஆக்க வல்ல பயிற்சி.

இத்தகைய சாரணப் பயிற்சியை சிறுவர்களுக்கு அளிக்க விரும்பும் சாரண ஆசிரியர்களின் பொறுப்பு மிக முக்கியத்துவம் வாய்ந்த பொறுப்பு. சாரணப் பயிற்சித் திட்டத்தை வகுத்துத் தந்துள்ள நம் சாரண இயக்கத் தந்தை **பேடன்-பவல்** பெரியார் வரையறுத்துத் தந்துள்ள பயிற்சிக் கட்டுப்பாடுகளை அவர்கள் நன்கு மதித்து முழு மனதுடன் பின்பற்றுவது அவசியம்.

இந்தக் கட்டுப்பாடுகளுள் ஒன்று ஒரு சாரணப் படையில் உள்ள சாரணர்களின் எண்ணிக்கை குறைவாகவே இருந்து வரவேண்டும் என்பதாகும். சாரணப் படை இருபது அல்லது இருபத்துநான்கு சாரணர்களைக் கொண்டதாக இருக்கலாம். அதற்கு மேற்படக் கூடாது. எண்ணிக்கை ஏற ஏற அளிக்கப்படும் பயிற்சியின் திறன் குறைந்து கொண்டே வரும். சாரணர்களின் எண்ணிக்கை இருபத்துநான்குக்கு மேற்பட்டால் சாரண ஆசிரியருக்குத் தன் வேலையை முறையாகச் செய்ய இயலாது போகும். சாரணர்களைத் தனித் தனியாகக் கண்காணிக்க வேண்டிய பொறுப்புடைய சாரண ஆசிரியர் எண்ணிக்கை மிகுதியால் தன் பொறுப்பை நிறைவேற்ற முடியாமல் திணற நேரிடும்.

அணிகள் அணித்தலைவர்கள் பொறுப்பில் பூரண சுதந்திரம் பெற்று இயங்கவேண்டும் என்பது இரண்டாவதான நிபந்தனை. அணி நிருவாகத்தில் அணித்தலைவர்களுக்கு முழுப்பொறுப்பு தரப்படுவது மிக அவசியம். பொறுப்பேற்றுச் செயலாற்றுவது அணித்தலைவர்களை நல்ல பொறுப்புணர்ச்சி உள்ளவர்களாக ஆக்கும். அணித்தலைவர்கள் தங்களுக்குள்ள பொறுப்பை நன்குணர்ந்து நடந்து கொள்வார்கள். அவர்களிடம் பூரண நம்பிக்கை உள்ளவர்களாக இருந்து சாரண ஆசிரியர்கள் அணியின் நிருவாகத்தில் தலையிடாமல் இருக்க வேண்டும். மிகுந்த அவசியம் நேரிட்டால் மட்டும் தலையிடுவது பொருந்தும். அப்பொழுதுகூட அணித்தலைவன் ஆணைக்கும் அவனுக்குள்ள தன்மதிப்புக்கும் ஒரு சிறிதும் இழுக்கு ஏற்படாமல் பார்த்துக் கொள்வது அவசியம்.

மூன்ருவது நிபந்தனை படை நிருவாகத்தையும் அணி நிருவாகத்தையும் சார்ந்தது. இந்த நிருவாகங்களில் கையாளப்பட வேண்டிய முறை அணிமுறை என்ற முறையே. இந்த முறையை சுய ஆட்சி என்று கூறலாம். இதைக் குடியரசு முறைக்கு ஒப்பிடலாம். சாரணர்கள், சாரணர்களின் நன்மைக்காக, சாரணர்களால் ஆட்சிபுரியப்படுவது இந்த முறையின் தத்துவம். சாரணப் படையை கண்ணிய மன்றம் நிருவகிக்க வேண்டும். சாரண ஆசிரியரின் மேற்பார்வையில் அது நடந்தேறுவதால் சாரணர்கள் பாராட்டத்தக்க முறையில் செயலாற்றல் திறம் பெறுவார்கள். அணிமுறையைப் பின்பற்றினலன்றி சாரணியத்தால் நாம் எதிர்பார்க்கும் நன்மைகள் எதுவும் கைகூடமாட்டா. அணிமுறைப் பயிற்சி நம் சாரணர்களை நல்ல குடிமக்களாக ஆக்கும் பயிற்சி என்பதை ஒருபோதும் நாம் மறந்துவிடக் கூடாது.

தன் கையே தனக்கு உதவி என்ற தத்துவத்தை சாரணியம் சாரணர்கள் பயிற்சி முறையில் கையாளுகிறது. சாரணக்கலைகளை கற்றுக் கொள்வதில் சாரணனுக்கு நல்ல தீவிர ஆசையை ஊட்டுவது தான் சாரண ஆசிரியரின் பொறுப்பு. சாரணன் தானே கற்றுக் கொள்ளவேண்டும். தன் சொந்த முயற்சியால் கற்றற்குரிய வசதிகளைத் தானே தேடி அமைத்துக்கொள்ள வேண்டும். சாரண ஆசிரியர் துணையாக நிற்பார். கற்று முன்னேற வேண்டிய பொறுப்பு சாரணனுடையது. அவசியமான தூண்டுதலும் அவனிடமிருந்தே வரவேண்டும் என்பது சாரணியம் கையாளும் பயிற்சி அளித்தல் முறை. இந்த முறை சாரணர்களின் தனிப் பொறுப்பை விளக்குகின்றது. இதைக் கையாளுவதால் நம் சாரணப்படைகள் வலுவடையும். அந்தச் சாரணர்கள் கையாளும் சாரணியமும் நாட்டுக்கு நேரடியாக நன்மை பயக்கும்.

நல்ல பயன் தரவல்ல இந்தப் பழக்கத்தையும் இதற்கு முன் கூறப்பட்டுள்ள நிபந்தனைகளையும் மனதிற் கொண்டு சாரணர்களும் சாரண ஆசிரியர்களும் இந்தச் சிறுவர் சாரணியத்தைப் பயன் படுத்த வேண்டும் என்பது நான் அவர்களிடம் பணிவாகக் கேட்டுக் கொள்ளும் என் விண்ணப்பம். மனம் கனிந்து அவர்கள் இரு சாராரும் என் வேண்டுகோளை மதித்துச் செயலாற்ற முன்வருவார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன், நம்புகிறேன்.

இறைவன் இன்னருளொடு தூண்டப்பெற்று இறைவன் இன்னருளாலே எழுதி முடிக்கப்பெற்ற இந்த நூல் இன்று அவன் இன்னருளாலேயே அச்சேறி முழுமை பெறுகிறது. முழுமை பெற்று நூலுருவத்தில் வெளிவருகையில் அது நம் தமிழ்நாட்டுச் சாரணர்களுக்கும் சாரண ஆசிரியர்களுக்கும் ஆணையர்களுக்கும் ஏனையோர்களுக்கும்

நல்லமுறையில் பயன்பட வேண்டும், அது நம் தமிழ்நாட்டுச் சாரணியத்துக்கு நல்ல தொண்டாற்றவேண்டும் என்ற என் அவாவை இறைவனுக்கே அர்ப்பணித்து அவன் ஆசிகளையும் அருளையும் விரும்பி வேண்டி அவனை இறைஞ்சுகிறேன். இறைவன்பால் நான் கொண்டுள்ள நன்றிக்கடனைச் செலுத்த முயற்சி செய்யும் முறையில் இந்தச் **சிறுவர் சாரணியத்தையே** என் காணிக்கையாக மிகுந்த வணக்கத்துடன் இறைவன் திருவடிக்கமலங்களில் வைக்கத் துணிகிறேன். அதன்பால் அவன் அருளும் ஆசிகளும் என்றும் இருந்து வர அவன் அருள் புரிவானாக.

இந்த நூலுக்குத் தங்கள் ஆசிகளை வழங்கும் முறையில் **அணிந்துரை** வழங்கியுள்ள தமிழ்நாட்டுக் கல்வித்துறை, தலத்தாபன நிருவாகத்துறைகளுக்கு அமைச்சரும் பாரத சாரண சாரணியர் மாநிலசங்கத் தலைவருமான மாண்புமிகு டாக்டர், நாவலர், உயர்திரு V. R. நெடுஞ்செழியன், M. A. அவர்களுக்கும், **பாராட்டுரை** வழங்கியுள்ள சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் தாமரைத்திரு N. D. சுந்தரவடிவேலு, M. A., L. T. அவர்களுக்கும், **பரிந்துரை** வழங்கியுள்ள தமிழ்நாட்டுச் சட்டப்பேரவைச் செயலாளரும், பாரத சாரண சாரணியர் **அனைத்திந்திய சாரணப் பேராணைய** (Chief Commissioner for Scouts)ருமான உயர்திரு C. D. நடராசன் M. A., B. L அவர்களுக்கும், **சிறப்புரை** வழங்கியுள்ள தமிழ்நாட்டுப் பள்ளிக்கல்வி இயக்குனரும் தமிழ்நாட்டு பாரதச் சாரணர் சாரணியர் மாநிலப் பேராணையரும் (State Chief Commissioner) ஆன உயர்திரு S. V. சிட்டிபாபு, M. A., B. T. அவர்களுக்கும் என் வணக்கங்களும் மனமார்ந்த நன்றியும் உரித்தாகின்றன. இந்நான்கு பெருந்தகையாளர்களும் இவ்வுரைகள் வழங்கும் முகத்தால் என்னைப் பெருமைப்படுத்தி உள்ளார்கள். அவர்களுக்கு நான் கொண்டுள்ள நன்றிக் கடன் மிகமிகப் பெரியது.

இத்தகைய தமிழ்நூல் ஒன்று நம் நாட்டுக்குத் தேவையாக உள்ளது என்று அதன் அவசியத்தை எனக்கு நன்குணர்த்தி, அதை எழுதும்படி என்னைத் தூண்டி எனக்கு ஊக்கம் அளித்துப் பலவகையில் உதவி புரிந்துள்ள என் சாரணத் தோழர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். அதிலும் இந்த நூலின் கையெழுத்துப் படிவங்களை அவ்வப்போது அழகுபட நகல் செய்து உதவி, பின் அவைகளை அச்சேற்றுவதற்குரிய முறையில் ஆயத்தம் செய்து தந்து, அச்சேறும் வழிவகைகளையும் தேடி அமைத்து, அச்சேறும்போது அச்சுப் படிவங்களைத் தணிக்கை செய்து திருத்தி எனக்குப் பலவகையில் உதவி புரிந்துவரும் என் ஆப்த நண்பர்கள் சாரண ஆசிரியப் பயிற்சித் துணையாளர்கள் (Assistant Leader

Trainers) திருவாளர் உயர்திரு S. G. அரங்கநாதம், A. L. T. (S) அவர்களுக்கும் திருவாளர் உயர்திரு S. P. ஜகந்நாதன், A. L. T. (C) அவர்களுக்கும் நான் கொண்டுள்ள நன்றிக்கடன் மிகப்பெரிது. அவர்களிருவருக்கும் என் மனங்கனிந்த நன்றி உரித்தாகுக.

எழுதிய நூலை மனக்கனிவுடன் ஏற்று அழகிய முறையில் மிகப் பல விளக்கப் படங்களுடன் அச்சியற்றித் தந்துள்ள தென்மொழிகள் புத்தக டிரஸ்ட்டு நிறுவனத்தாருக்கும், சிறப்பாக என் பழைய நண்பர் அதன் நிருவாக அலுவலர் (Administrative Officer) உயர்திரு S. K. தம்பா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியும் வணக்கங் களும் உரித்தாகின்றன

சாரணியத்தில் நான் பெற்றுள்ள சிறிய அனுபவங்களுக்கும் தேர்ச் சிக்கும் மூலகாரணமாக அமைந்துள்ள என் பழைய சாரணப்படை- 2வது திருநெல்வேலி (இந்துக்கல்லூரி) சாரணப் படைக்கும் அதில் என்னோடு ''சாரண விளையாட்டை'' விளையாட வேண்டிய முறையில் விளையாடி சாரணியத்தின் நுட்பங்களை உணர்ந்துகொள்ள எனக்கு வாய்ப்பு அளித்த என் பழைய சாரணர்கள் அனைவருக்கும் நான் கொண்டுள்ள நன்றிக்கடன் ஈடுசெய்ய முடியாதது. என் மன மார்ந்த நன்றி அவர்களுக்கு உரித்தாகின்றன.

இந்த நூலை அச்சிட மனமுவந்து எனக்கு அனுமதி அளித்துள்ள பாரத சாரண சாரணியர் சங்கத்தின் தலைமையகத்தினர்களுக்கும் (National Headquarters) சிறப்பாக பாரத சாரண சாரணியர்களின் தேசிய ஆணையாளர் (National Commissioner) தாமரைத்திரு திருமதி L. மசும்தார் அவர்களுக்கும், தேசியச் செயலாளர் (National Secretary) உயர்திரு S. K. தாஸ், B. A., B. L. அவர்களுக்கும் என் வணக்கங்களும் நன்றியும் உரித்தாகுக. நூலை மிக நுட்பமாகப் படித்துப் பார்த்து அதைச் சீர்திருத்த உதவும் பல நல்ல கருத்துக்களை வழங்கி எனக்கு உதவி புரிந்துள்ள என் ஆப்த நண்பர் தேசிய உதவிப்பயிற்சி ஆணையர் (Assistant National Training Commis- sioner) ஆகப் பணியாற்றிய உயர்திரு K. S. சம்பத் அவர்களுக்கும் நான் பெரிதும் கடமைப் பட்டுள்ளேன். என் வணக்கங்களும் மன மார்ந்த நன்றியும் அவர்களுக்கு உரித்தாகுக.

சாரணியம் தோன்றி அறுபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. நம் பாரத நாட்டில் சென்ற ஐம்பத்தைந்து ஆண்டுகளாக அது செயல் பட்டு வருகிறது. ஆங்கிலத்திலே எழுதப்பெற்ற நூல்களையே நம்பி வாழ்ந்த நம் தமிழ்நாட்டுச் சாரணியம் தன் வளர்ச்சிக்கும் முன்னேற் றத்துக்கும் அவசியமாக உள்ள தமிழ்ச் சூழ்நிலையை இதுவரை அமைத்துக் கொள்ளவில்லை. தமிழ் மொழியில் அமைந்துள்ள சாரண

நூல்கள் மிகக்குறைவாக இருக்கிற இந்த நாளிலே சிறுவர் சாரணியம் வெளிவருகின்றது. இது சாரண ஆசிரியர்களுக்குப் போலவே சாரணர்களுக்கும் பயன்படும். சாரணியரும் ஓரளவு இதனைப் பயன் படுத்தல் கூடும். சாரணியத்தில் ஈடுபாடுடைய அனைவருக்கும் இது பயன்பட வேண்டும் என்பது இந்நூலை இயற்றிய என் உளமார்ந்த ஆசை. எழுதப்பட்டுள்ள பொருள்களை சாரணச் சிறுவர்களும் எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய முறையில் எழுதப்பட்டிருக்கும் இந்த நூல் முழு உருவம் பெற்று வெளிவரும்போது தமிழ்நாட்டுச் சாரணப் பெரு மக்கள், ஆசிரியப் பெருமக்கள், சாரணியத்தில் ஈடுபாடுள்ள ஏனை யோர், எல்லோரும் அதனை நல்ல ஆர்வத்தோடு வரவேற்றுப் பயன் படுத்தித் தமிழ்நாட்டுச் சாரணியத்துக்கு இன்னும் பன்மடங்கு முன் னேற்றம் உண்டாகும் முறையில் தொண்டு புரிய வேண்டும் என்பது நூலாசிரியராகிய நான் கொண்டுள்ள ஆசை. இந்த ஆசை கைகூடும் அளவுக்கு இறைவன் அருளும் ஆசியும் இருந்துவர வேண்டும், என இறைஞ்சுகின்றேன்.

T. V. நீலகண்டம்

சாரண இயக்கத் தந்தை
கில்வெல் பிரபு, அண்ணல் பேடன்-பவலார்
உலகச் சாரணர்களுக்கு விடுத்துள்ள

# இறுதிச் செய்தி

## Last Message of BADEN-POWELL after his passing away at Nyeri in Kenya on January 8, 1941.

அன்புள்ள என் சாரணர்களே—

''பீட்டர் பான்'' என்ற நாடகத்தை நீங்கள் பார்த்திருந்தால் அதில் தோன்றும் கடல் கொள்ளைக்காரர் தலைவன் தன் மறைவு எப்பொழுது நேரிடும் என்று தனக்குக் கூற முடியாத நிலையில் ஒருவேளை திடீர் என்று அது நேர்ந்து விட்டால் என்ன பண்ணலாம், தன் மனதில் உள்ள எண்ணங்களை வெளிப்படுத்த முடியாது போய்விடுமே, என்று பயந்தவனாய் எப்பொழுது பார்த்தாலும் தான் ஆயத்தம் செய்து வைத்துள்ள தன் மறைவுச் சொற்பொழிவை ஆற்றிய வண்ணமாகவே இருந்து வந்தான் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். என்னுடைய நிலையும் அப்படியேதான். நான் இப்போது இறக்கும் தறுவாயில் இல்லை என்றாலும் அண்மையில் ஒரு நாள் அந்த நிலை எனக்கு ஏற்படும் என்பது உறுதி. அது ஏற்படும் முன் உங்களிடம் இருந்து பிரியா விடை பெற்றுக்கொள்ளும் முறையில் உங்கள் எல்லோருக்கும் சிறு அறிவுரை ஒன்று வழங்க விழைகிறேன்.

இந்தச் செய்தி என்னிடமிருந்து உங்களுக்கு வரக்கூடிய கடைசிச் செய்தியாக அமையும். இதை நீங்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

என் வாழ்க்கை மிக இனிமையாகவே அமைந்தது. அதுபோன்ற இனிய வாழ்க்கை உங்கள் ஒவ்வொருவருக்கும் வாய்க்க வேண்டும் என்பது என் அந்தரங்கப் பேரவா.

நம்மைச் சிருட்டித்து, இந்தக் குதூகலம் நிறைந்துள்ள உலகத்தில் நம் வாழ்க்கையை நடத்த நம்மைப் பணித்துள்ள இறைவன் நம் வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக அமைய வேண்டும், வாழ்க்கை நலன்களை நாம் நன்றாகத் துய்த்து அனுபவிக்க வேண்டும் என்ற விருப்பம் கொண்டவர் என்றே நான் நம்புகிறேன். ஆயின் உண்மை மகிழ்ச்சியானது, நிறைந்த செல்வம் படைத்துள்ளோம் நாம் என்பதால் வந்து விடாது, வாழ்க்கைக்குரிய நம் தொழிலில் வெற்றி கண்டுள்ளோம்

நாம் என்பதால் ஏற்பட்டுவிடாது. அனுபவிக்க ஆசைப்பட்ட அனைத்தையும் அனுபவித்து முடித்துள்ளோம் என்ற உணர்வினாலும் அமைந்து விடாது. சிறுவர்களாய் உள்ள பொழுதே உங்களை நீங்கள் நல்ல உடல் நலம் உள்ளவர்களாக, உடல் வலி பெற்றுள்ளவர்களாக ஆக்கிக்கொள்ள வேண்டும். சிறுவர்கள் என்ற நிலை தாண்டி முதிர்ச்சி பெற்றுள்ள நிலைக்கு நீங்கள் வரும்பொழுது மக்களுக்கு நற்பணி புரிய நிறைந்த ஆர்வமும் ஆற்றலும் உங்களிடம் காணப்படும். உங்கள் வாழ்க்கையை நல்ல முறையில் அனுபவிக்கவும் உங்களுக்கு முடியும்

இயற்கை அழகு நிறைந்துள்ள ஆச்சரியங்கள் மலிந்து காணப் படுகின்ற இந்த உலகத்தை உங்களுக்காகவே இறைவன் படைத் துள்ளான். இதை இயற்கையைப்பற்றிய உங்கள் ஆராய்வுகள் உங்களுக்கு உணர்த்தியிருக்கும். உள்ளதைக் கொண்டு திருப்தி அடைவதும், இருப்பதை எப்படி நல்ல முறையில் பயன்படுத்தலாமோ அப்படிப் பயன் படுத்துவதும் மிகமிக முக்கியமாக உள்ளன. வாழ்க்கையில் ஒளி இழந்து காணப்படும் உலகப் பகுப்பை ஒருபுறம் விட்டு விட்டு, ஒளி நிறைந்து காணப்படும் பகுப்பையே பார்த்து சிந்தித்துக் கொண்டிருப்பது மிக மிக நல்லது. அதைத்தான் நாம் செய்ய வேண்டும்.

உண்மையான மகிழ்ச்சி அடைவதற்கு உள்ள வழி பிறருக்கு நாம் மகிழ்ச்சி தேடித் தருவதே ஆகும்.

உலகத்தை நாம் அடைந்த காலையில் அதை எப்படி இருக்கக் கண்டோமோ, அதைவிட ஒரு சிறிதாவது சிறப்புள்ள நிலையில் உலகத்திலிருந்து நாம் மறையும்போது அதனை விட்டுச் செல்ல முடியு மானால், மறைவு ஏற்படும் அந்த நாளில், என் நாட்களை 'நான் வீணாக் கவில்லை; என்னால் இயன்ற அளவு நன்மையேதான் செய்துள்ளேன்' என்ற மன நிறைவுடன் மறைவது கூடும். இந்த விதம் நீங்கள் மகிழ்ச்சி யுடன் வாழவும், காலம் வரும்போது மகிழ்ச்சியுடன் மறையவும் உங்களை நீங்களே ஆயத்தம் செய்து கொள்ள வேண்டும். உங்கள் சாரண வாக்குறுதியை எப்பொழுதும்—அதாவது சிறுவன் என்ற நிலை மாறிய பின்னும்—நீங்கள் பேணிப்பாதுகாக்க வேண்டும். இறைவன் ஆசிகள் தந்து உங்களுக்குத் துணை புரிவாராக.

உங்கள் நண்பன்,

**கில்வெல் பிரபு பேடன்-பவல்**

# சிறுவர் சாரணியம்

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 21 | தகுதியற்ற | உடல் ஊனமுள்ள |
| 3 | 11 | இசைந்தும் | இசைந்ததும் |
| 10 | 20 | Stipes | Stripes |
| | 23 | அல்லது இரண்டு | அல்லது ஒன்று |
| | 24 | மற்றைய இரண்டு | மற்றையது |
| | 27 | இந்த வரி முடிவுக்குப்பின் ''தோள் சின்னம் விபூதி அணிவது போல் இடம் இருந்து வலமாக அமைய வேண்டும்'' என்பதைச் சேர்த்துக் கொள்க. | |
| 16 | 9 | Blu | Blue |
| 18 | 11 | Blue Yellow | Blue & Yellow |
| | 16 | Drak | Dark |
| 20 | 13 | குறிப்பிட்டுள்ளன | குறிப்பிடப்பட்டுள்ளன |
| 34 | 8 | இறைவ வணக்கம் | இறை வணக்கம் |
| | 17 | பக்திக்காக | பக்திக்கா |
| | 29 | தர்மஹோஸே | தர்ம ஹோஸேவா |
| | 34 | பபர் | பர் |
| 51 | 26 | ''(1) (2)''க்குப்பின் ''என்பன முதல் இரண்டு'' என்பதைச் சேர்த்துக் கொள்க. | |
| | 26 | விளக்கப்பட்டுள்ள | விளக்கப்பட்டுள்ளன |
| 56 | 29,30 | அலுவலங்களில் | அலுவலகங்களில் |
| 57 | 3 | அலகமும் | அகலமும் |
| 60 | 17 | அவர் | சாரண ஆசிரியர் |
| 61 | 7 | ''தொலேவில்'' என்றதன் பின் ''நின்று'' என்பதைச் சேர்த்துக் கொள்க | |
| 62 | 12 | ஓம் | ஓம்கி |
| 64 | 14 | மல்லின் | மஸ்லின் |
| 68 | 9 | பட்டிணங்களில் | பட்டணங்களில் |
| 72 | 25 | மனத்துக்கு | மனத்துக்குள் |
| 73 | 26 | Stand at Case | Stand at Ease |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 74 | படம் 19 | ''தண்டம்'' | ''தண்டம் சமநிலை'' |
| | படம் 21 | ''தண்டம்'' | ''தண்டம் தோள்மேல்'' |
| 75 | படம் 24 | தண்டம் மீதமர்தல். இதில் தண்டம் 45°யில் இருத்தல் வேண்டும். | |
| 76 | 17 | தொகுப்பு | தொடுப்பு |
| 77 | 30 | முடிந்து | முடித்துக் |
| 82 | 5 | தொகுப்பு | தொடுப்பு |
| 95 | 32 | இந்தவரி தொடக்கத்தில் ''வெப்பத்தையும் மிதமான'' என்று சேர்த்துக் கொள்க. | |
| 99 | 27 | அவன் | அந்த |
| 102 | 27 | ''நுனிகள்'' என்ற சொல் அடுத்தவரியில் உள்ள ''இரண்டையும்'' என்ற சொல்லுக்கு முன் வர வேண்டும். | |
| 103 | 12 | நீரடித்த | நீடித்த |
| 119 | 29 | ''அவைகளும்'' என்றதன் பின், ''மேலும் கீழுமாக'' என்று சேர்த்துக் கொள்க | |
| 197 | 7 | நுனியை | நுனியையும் |
| 206 | 28 | செல்லபட்டு | செல்லப்பட்டு |
| 247 | 2 | வேலைகளில் | வேளைகளில் |
| 249 | 8 | மேல் படத்தில் | எதிர் பக்கம் உள்ள படத்தில் |
| 265 | 23 | அது | அவை |
| 309 | 15 | அடி நாள் | அந்த நாள் |
| 311 | 2 | Aze | Axe |
| | 10 | Altor | Altar |
| 313 | 36 | முற் பாதியோடு | பிற் பாதியோடு |
| 326 | 2 | Spar | Span |
| 330 | 27 | தன் சாரணப் பயிற்சி | தன் முதற் சாரணப் பயிற்சி |
| 335 | 2 | என்ற | என்று |
| 337 | 12 | இடது | வலது |
| | 13 | இடது | வலது |
| 345 | 2 | சைகைப் பேசி | சைகைப் பேச்சுப் பேசி |
| 363 | 16 | ஒரு | ஒருவர் |
| 388 | 10 | அழைத்து | அமைத்து |
| | 31 | திரை படமாக | திரைப்படமாக |
| | 32 | மணக்கண் | மனக்கண் |
| 390 | 14 | தேர்தெடுப்பது | தேர்ந்தெடுப்பது |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 405 | 1 | விறகுப்பட்டை | விறகுப் பட்டரை |
| 410 | 5 | மட்டமாக | மட்டாக |
| | 10 | சமையல்கள் | சமையல்கள |
| 418 | 37 | Sight | Sign |
| 426 | 31 | கொங்கங்கரி | கொங்கங் கொங்கங்கரி |
| 427 | 3 | கிளக் கிளக் | கிளக் கிளக் கிளக்கரி |
| | 16 | டிரயனு | டிரம்னு |
| 434 | 18 | வரிந்து | வலிந்து |
| 452 | 27 | பிரிக்கப்பட்டுள்ளன | பிரிக்கப்பட்டுள்ளது |
| 455 | 14 | மந்தை | குழு |
| 471 | 1 | வந்து | வந்த |
| | 6 | சிறப்பு இதழை | சிறப்பு ஏட்டை |
| | 15 | குறிப்புக் ஏடு | குறிப்புக் கையேடு |
| | 27 | காட்ட வேண்டுக் | காட்ட வேண்டும் |
| 483 | 9 | நடந்துக் | நடந்து |
| 495 | 27 | ''கோபுர'' என்பதன் முன் ''இது'' என்ற சொல்லை சேர்த்துக் கொள்க. | |
| 500 | 4 | செய்ததற்கு | செய்வதற்கு |
| 503 | 4 | சொறிந்தனர் | சொரிந்தனர் |

# எங்கள் பாரதநாடு

பெற்ற தாயும் பிறந்த பொன்னுடும்
நற்றவவானினும் நனி சிறந்தனவே

*    *    *

பாருக்குள்ளே நல்ல நாடு– எங்கள் பாரத நாடு

1 ஞானத்திலே பர மோனத்திலே- உயர்
மானத்திலே அன்ன தானத்திலே
கானத்திலே அமுதாக நிறைந்த
கவிதையிலே உயர் நாடு– இந்தப் (பாருக்குள்ளே)

2. தீரத்திலே படை வீரத்திலே- நெஞ்சில்
ஈரத்திலே உபகாரத்திலே
சாரத்திலே மிகு சாத்திரங்கண்டு
தருவதிலே உயர் நாடு– இந்தப் (பாருக்குள்ளே)

3. நன்மையிலே உடல் வன்மையிலே- செல்வப்
பன்மையிலே மறத்தன்மையிலே
பொன்மயி லொத்திடும் மாதர்தம் கற்பின்
புகழினிலே உயர்நாடு- இந்தப் (பாருக்குள்ளே)

4. ஆக்கத்திலே தொழில் ஊக்கத்திலே– புய
வீக்கத்திலே உயர் நோக்கத்திலே
காக்கத்திறல் கொண்ட மல்லர் தம் சேனைக்
கடலினிலே உயர்நாடு- இந்தப் (பாருக்குள்ளே)

5. வண்மையிலே உளத் திண்மையிலே– மனத்
தண்மையிலே மதி நுண்மையிலே
உண்மையிலே தவருத புலவர்
உணர்வினிலே உயர்நாடு- இந்தப் (பாருக்குள்ளே)

6. யாகத்திலே தவ வேகத்திலே தனி
யோகத்திலே பல போகத்திலே
ஆகத்திலே தெய்வபக்தி கொண்டார் தம்
அருளினிலே உயர்நாடு- இந்தப் (பாருக்குள்ளே)

7. ஆற்றினிலே சுனை யூற்றினிலே- தென்றல்
காற்றினிலே மலைப் பேற்றினிலே
ஏற்றினிலே பயன் ஈந்திடுங்காலி
இனத்தினிலே உயர்நாடு– இந்தப் (பாருக்குள்ளே)

8. தோட்டத்திலே மரக்கூட்டத்திலே– கனி
ஈட்டத்திலே பயிர் ஊட்டத்திலே
தேட்டத்திலே அடங்காத நதியின்
சிறப்பினிலே உயர்நாடு- இந்தப் (பாருக்குள்ளே)

—அமரகவி பாரதியார்

# நம் தமிழ்த் திருநாடு

1

நீராரும் கடலுடுத்த நிலமடைந்தைக்கு எழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ் பரதகண்ட மிதில்
தக்கசிறு பிறை நுதலும் தரித்த நறும் திலகமுமே
தெக்கணமும் அதிற் சிறந்த திராவிட நல் திருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெரும் தமிழணங்கே!

—பேராசிரியர் பெ. சுந்தரம்பிள்ளை

2

செந்தமிழ் நாடெனும் போதினிலே– இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே– எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே– ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே

காவிரி தென்பெண்ணை பாலாறு – தமிழ்க்
கண்டதோர் வையைப் பொருனைநதி– என
மேவிய யாறு பல ஓடத் திரு
மேனி செழித்த தமிழ்நாடு

முத்தமிழ் மாமுனி நீள்வரையே– நின்று
மொய்ம்புறக் காக்கும் தமிழ்நாடு– செல்வம்
எத்தனை உண்டு புவி மீதே– அவை
யாவும் படைத்த தமிழ்நாடு

கல்வி சிறந்த தமிழ்நாடு– புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு– நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின்– மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு

வள்ளுவன் தன்னை உலகினுக்கே– தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு– நெஞ்சை
அள்ளும் சிலப்பதிகாரம் என்றோர்– மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு

—அமர கவி பாரதியார்

3

''யாதும் ஊர் எவரும் கேளிர்'' என்றுணர்ந்த நாடு
''எவ்வுயிர்க்கும் அன்பு செய்க'' என்றிசைத்த நாடு
''ஓதுகுலந் தெய்வம் ஒன்றே'' என்று கொண்ட நாடு
''ஒக்கும் உயிர் பிறப்பு'' என்னும் ஒருமை
கொண்டநாடு

''நாதன் அன்பு நீதி இன்பு நட்பு'' என்ற நாடு
''நாமார்க்கும் குடி அல்லோம்'' என்றிருந்த நாடு
தீதில்லா மொழி வளர்க்கத் தெளிவுபெற்ற நாடு
செந்தண்மை விருந்தளிக்கும் தெய்வத்தமிழ் நாடே

—திரு. வி. கலியாணசுந்தரனார்.

# உள்ளுறை

# Certificate

This is to Certify that this SIRUVAR SARANIYAM, Handbook on Scouting in Tamil, by Shri T. V. Nilakantam has been approved by the Publication Committee of Nationl Headquarters at its meeting held on 15th September 1971.

New Delhi
13, 1972

S. K. DAS,
National Secretary
Bharat Scouts & Guides



The Founder of the Movement
LORD BADEN-POWELL OF GILWELL
(Chief Scout of the World)
1857 — 1941



OLAVE LADY BADEN - POWELL
World Chief Guide
Vice-President of the Boy Scouts
International Committee.

# 1. சாரணியம் – விளக்கம்

**சாரணியம் அல்லது சாரணப் பயிற்சி** என்பது நாட்டின் எதிர் காலச் செல்வங்களாகிய நம் சிறுவர்கள் நல்ல பண்புகள் படைத்து நல்லொழுக்கம் உடையவர்களாகி நாட்டின் நற்குடிமக்களாகத் திகழ் வதற்குப் பெரிதும் பயன்படும் சிறப்பு வாய்ந்த ஒரு தனிப் பயிற்சி யாகும். நாட்டுக்கு மிகுந்த நன்மை பயக்கும் இப்பயிற்சித் திட்டத்தை உருவாக்கியவர் உலகப் புகழ் படைத்த உத்தமர்கில்வெல் பிரபு பேடன்-பவல் என்ற பெரியார் ஆவர். இப்பயிற்சித் திட்டத்தை நல்ல முறையில் வகுத்து உலகினுக்கு ஒரு அன்பளிப்பாகத் தந்துள்ள பெருமை அவருக்கு உண்டு.

சாரணியம் முதன் முதல் 1907ஆம் ஆண்டில் இங்கிலாந்து நாட்டில் தோற்றுவிக்கப்பட்டது. தோன்றிய ஒரு சில ஆண்டுகளுக் குள் பல நாட்டு ஆன்ருேர் பலரால் நல்ல வரவேற்பு அளிக்கப்பெற்று வெகு விரைவில் உலகெங்கும் பரவிய இப்பயிற்சிமுறை சாரண இயக்கம் என்ற பெயருடன் இன்று ஒரு உலகப் பேரியக்கமாகத் திகழ்கின்றது.

சிறுவர்களுக்குத் தங்கள் ஓய்வு நேரங்களைத் திறந்த வெளி வட் டாரங்களில் நல்ல பயனுள்ள முறையில் செலவு செய்யக் கற்றுத் தருகிற இந்தப் பயிற்சி சிறுவர்களின் உடல் நலம், உள நலம், ஆத்ம நலம் ஆகிய எல்லா நலன்களையும் ஒன்று போலவே பேணிப் பாது காக்கும் ஆற்றல் பொருந்தியது. அது உடல் நலத்துக்குரிய பயிற் சிகளை அளிப்பதோடு அவைகளுக்குரிய பழக்க வழக்கங்களையும் கற்பிக்கின்றது. நல்லொழுக்கத்தை அமைத்து நற்பண்புகளை வளர்க் கின்றது. நாட்டுக்கும், நாட்டினர்க்கும் நற்ருெண்டு புரியும் ஆர்வத் தையும் ஆற்றலையும் உண்டு பண்ணுகிறது. சிறுவர்களுக்கு வெளி வட்டாரங்களில் இயற்கையின் நடுவில் உல்லாசமாக ஆடவும் பாட வும் இயற்கையன்னையின் எழிலுறு தோற்றத்தைக் கண்டு மகிழவும் வாய்ப்பு அளிக்கிறது. இயற்கையைப் பற்றிய வியக்கத் தகுந்த உண்மைகள் பலவற்றை அறிந்துகொள்ளவும் அவற்றைப் பற்றிச் சிந்திக்கவும் அவ்வுண்மைகளின் அடிப்படையில் அவ்வியற்கையைப் படைத்த இறைவனுடைய பெருமையை ஒரு சிறிது அறிந்து கொள்ளவும், அவன் படைப்பாகிய சீவராசிகளிடம் அவனுக்குள்ள

இணையற்ற அன்புப் பெருக்கைச் சிந்தித்து உணர்ந்து கொள்ளவும் வாய்ப்புத் தருகின்றது.

இத்தகைய சாரணியம் மூன்று பிரிவுகளுடையது. அவை **குருளையர் பயிற்சி, சிறுவர் சாரணப் பயிற்சி, திரிசாரணர் பயிற்சி** என பயிற்சி பெறுவோரின் வயதுக்கும் மன நிலைக்கும் ஏற்ப அவை களுக்குப் பெயர் பொருத்தமான முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

இவற்றுள் (1) குருளையர் பயிற்சி (Cubbing) என்பது 7 வயது நிறைந்த ஆனால் 11 வயது நிறையாத இளம் சிறுவர்களுக்கு உரியது. (2) சிறுவர் சாரணப் பயிற்சி (Boy Scouting) என்பது 12 முதல் 17 வரையான வயதுள்ள இளைஞர்களுக்குரியது. (3) திரிசாரணர் பயிற்சி அல்லது பெருஞ்சாரணர் பயிற்சி (Rovering) என்பது 17 முதல் 23 வரையான வயதுள்ள இளைஞர்களுக்குரியது.

இங்கு இரண்டாவதாகக் கூறியுள்ள சிறுவர் சாரணப் பயிற்சி (1) சிறுசாரணர் பயிற்சி (Boy Scouting) (2) பெரிய சாரணர் பயிற்சி (Senior Scouting) என இரண்டு பிரிவுகளாக உள்ளது. சிறு சாரணர் பயிற்சி 12 முதல் 14 வரையான வயதுள்ள இளம் சிறுவர் களுக்கும் பெரிய சாரணர் பயிற்சி 15முதல் 18 வரையான வயதுள்ள சற்று வயது முதிர்ந்த சிறுவர்களுக்கும் உரியவை.

சாரணப் பயிற்சி இப்படி மூன்று முக்கிய பிரிவுகளைக் கொண்ட தாக அமைந்துள்ளது. இவை தவிர, கடல் சாரணியம் (Sea Scouting), ஆழ்கடல் சாரணியம் (Deep Sea Scouting) ஆகாயச் சாரணி யம் (Air Scouting) தகுதியற்றவர்களுக்காக உள்ள சாரணியம் (Scouting for the Handicapped) என்பன போன்ற சில பிற பிரிவுக ளும் உண்டு. ஆயின், அவை அனைத்தும் அடிப்படையில் ஒரே நோக் கத்தைக் கொண்டவை. அந்த நோக்கம் இன்றையச் சிறுவர்களை நாளைய நற்குடிமக்களாக ஆக்குதலேயாகும்.

## சிறுவர்களுக்கு நல்வாழ்க்கை

சாரணியம் இன்றைக்கு அறுபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன் தோன்றிய பயிற்சித் திட்டம். இம்மாபெரும் பயிற்சித் திட்டத்தை தோற்றுவித்த அண்ணல் பேடன்-பவல் பெரியார் அதைத் தோற்று வித்ததின் பயனைத் தன் மனத்தில் நெடுங்காலம் குடிகொண்டிருந்த பெருங் கவலை யொன்றைப் போக்கிக் கொள்ள வழி கண்டார். அவருக்கு இருந்த கவலை அக்காலத்திய அவர் தாய் நாட்டு சிறுவர் சமுதாயத்தைப் பற்றியது. அக்காலத்திய சிறுவர்களில் பெரும் பாலோர் கெட்ட பழக்க வழக்கங்களைப் பின்பற்றி உடல் நலம் குன்றி ஊக்கம் குறைந்து கட்டுப்பாடு எதுவும் இல்லாத வாழ்க்கையைக்

கடைப்பிடித்து உதவாக்கரைகளாகத் திகழ்வதைக் கண்ணுற்ற அவர் மனம் மிகவும் புண்பட்டது. அச்சிறுவர்களுக்காக அவர் பெரிதும் இரங்கினர். அவர்களை நல்ல வழிகளில் திருப்புவது எப்படி, அவர்களுக்கு நல்லொழுக்கத்தைக் கற்பிப்பது எப்படி, அவர்களுக்கு நாட்டுப் பற்று உண்டு பண்ணுவது எப்படி, அவர்களுக்கு நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் பணி புரியும் ஆர்வமும் ஆற்றலும் உண்டாகச் செய்வது எப்படி என்பது போன்ற சிந்தனை பலவற்றில் அது அவரை ஆழ்த்தியது. நெடுங்காலமாகத் தான் பணி புரிந்து வந்த இராணுவத் துறையில் தனக்கு இருந்த பல வகையான அனுபவங்களைப் பயன்படுத்தி அவற்றின் அடிப்படையில் சிறுவர்களின் மனப்பான்மைக்கு இசைந்தும் அவர்களுக்குப் பல வகையில் நன்மை பயக்க வல்லதுமான பயிற்சித் திட்டம் ஒன்றை அவர் உருவாக்கினர். அதுவே **சாரணப் பயிற்சி** என வழங்கப் பெறுகின்றது.

பேடன்-பவலார் வகுத்துத் தந்துள்ள சாரணப் பயிற்சி ஒழுக்கத்தை வளர்ப்பது; உடல் நலத்தைப் பெருக்குவது; பெரியோர்களிடம் பணிவுடனும் அன்புடனும் நடந்து கொள்ளப் பழக்குவது; இறைவனிடம் பக்தியை ஊட்டுவது; நாட்டுப் பற்றை வளர்ப்பது; நாட்டுக்கும் நாட்டினர்க்கும் தொண்டு செய்யும் ஆர்வத்தையும் ஆற்றலையும் அளிப்பது; தன்னலம் மறுத்தலைத் தூண்டுவது; தன்னம்பிக்கையை ஊட்டுவது; தன்னடக்கம் தருவது; பொறுப்புணர்ச்சியைப் பெருக்குவது; தலைவர்களுக்குரிய உயர் பண்புகளைப் புகட்டுவது; கையிலுள்ளவற்றைக் கொண்டு தன் அறிவுத் திறனல் தனக்கு அவசியமான ஒன்றை அமைத்துக் கொள்ளும் ஆற்றலைப் பெருக்குவது. சாரணப் பயிற்சி இத்தகைய நன்மைகளையும் இவை போன்ற பிற நன்மைகளையும் அளிக்கவல்ல பயிற்சியாகும்.

சாரணப் பயிற்சியின் முக்கிய சிறப்பு, அது சிறுவர்களின் ஓய்வு நேரத்தை இயற்கையின் நடுவில் எழில் பொருந்திய சூழ்நிலையில் நல்ல பயன் தரும் முறையில் செலவு செய்ய அவர்களைத் தூண்டுவதேயாகும். சிறுவர்களை தங்கள் ஓய்வு நேரங்களைப் பயனுள்ள முறையில் செலவு செய்யத் தூண்டுவது மிகுந்த நன்மை பயக்கும் செய்கை ஆகும். அது பாராட்டுக்கு உரியது. அத்தகைய ஓய்வு நேரங்களைத் திறந்த வெளி வட்டாரங்களில் பயன்படுத்தும்படி அவர்களைத் தூண்டுவது பாராட்டுக்கு மட்டுமல்ல, நம் போற்றுதலுக்கே உரியது. வெளி வட்டார வாழ்க்கை உயரிய மனிதப்பண்புகளைத் தோற்றுவித்து அவைகளை நன்கு வளர்க்கும் இயல்பு உடையது என்பது மிக மிக உண்மை.

இத்தகைய சிறப்புடைய சாரணப் பயிற்சி பள்ளிப் பயிற்சிக்கு உறுணதுயாயமைந்துள்ளது என்றும், அது பள்ளிப் பயிற்சிக்கு இயற்

கையான சில குறைபாடுகளுக்கு ஏற்ற பரிகாரமும் ஆகும் என்றும் கல்வி நிபுணர்கள் கருதுகிருர்கள். சாரணப் பயிற்சி, பள்ளிப் பயிற்சியோடு இணைக்கப் பெற்ருல், அதாவது பள்ளிகளில் பயிலும் மாணவர்கள் சாரணப் பயிற்சியையும் பெறுவார்களாளுல், அது நல்ல பலன் அளிக்கும் என்பது அக் கல்வி நிபுணர்களின் கருத்து.

சாரணப் பயிற்சித் திட்டம் இத்தகைய பெருமை வாய்ந்தது. சிறுவர்களை சமுதாய வாழ்க்கைக்கு ஏற்றவர்களாகச்செய்வதும் அவர்களை அதற்கு ஆயத்தம் ஆக்குவதும் அப்பயிற்சியின் அடிப்படை நோக்கம். சாரணப் பயிற்சி பெறுவதால் சிறுவர்கள் தங்கள் தங்கள் எதிர்கால வாழ்க்கையைப் பண்பும் பயனும் உடையதாக ஆக்கிக் கொள்கிருர்கள். சமுதாய வாழ்க்கைக்குரிய கடமைகளையும் பொறுப்புகளையும் அவைகளுக்குரிய காலம் வரும்பொழுது அவற்றைப் பண்புடன் நிர்வகிக்கக் கற்றுக் கொள்கிருர்கள். சாரணப் பயிற்சி அவர்களுக்குக் குடிமை உணர்ச்சியை ஊட்டுகிறது. எதிர் காலத்தில் அவர்கள் நாட்டின் நற்குடி மக்களாகத் திகழவும் வழி வகுக்கின்றது.

எனவே வருங்கால நற்குடிமக்களின் தரத்தை உயர்த்துவது சாரணியத்தின் அடிப்படை நோக்கம். இன்றையச் சிறுவர்களின் ஒழுக்கத்தையும், கட்டுப்பாட்டு உணர்ச்சியையும், அவர்கள் உடல் நலத்தையும் பேணி வளர்த்து அவர்களிடம் காணப்படும் தன்னல உணர்ச்சியை சிறிது சிறிதாகப் போக்கடித்து அவர்களைப் பிறர் நலம் பேணும் சமுதாயத் தொண்டர்களாகப் பழக்கி, ஒழுங்கும் கட்டுப்பாடும் கடமையுணர்ச்சியும் உள்ள நாட்டின் நற்குடி மக்களாகத் திகழச் செய்வது இந்த நோக்கத்தில் அடங்கும்.

## சாரணச் சின்னம்

திசைகாட்டும் கருவியில் உள்ள அம்புக்குறி எப்படி அக்கருவியைப் பயன்படுத்துகிறவர்களுக்கு வழிகாட்டியாய் அமைகிறதோ, அதுபோலவே சாரணியமும் தன்னைப் பின் பற்றும் சிறுவர் சிறுமிகளுக்கு வாழ்க்கை வழிகாட்டியாக அமையும் என்பது அண்ணல் பேடன்-பவலார் கருத்து. ஆகவே அந்த அம்புக் குறியையே அப்பெரியார் தம் சாரண இயக்கத்துக்கு உரிய மங்களச் சின்னமாகத் தேர்ந்துகொண்டுள்ளார். உலகில் உள்ள சாரணசங்கங்கள் அனைத்துமே இந்த அம்புக்குறியை அல்லது இதன் வேறுபாடு ஒன்றைத் தமக்குரிய சின்னமாகக் கொண்டுள்ளன.

இந்தச் சாரணச் சின்னம் ''ப்ளுர்-டி-லீ'' (Fleur-de-lis) அல்லது ''லில்லி மலர்'' எனப்படும்.

இதைப் போலவே பெண் சாரணிகளுக்கும் தனியான சின்னம் ஒன்றுண்டு. அது ''டிரிபாயில்'' (Trefoil) அல்லது ''மூவிதழ் மலர்'' எனப்படும்.

நம் நாட்டில் தற்போது சாரணர்கள் சங்கமும், சாரணிகள் சங்கமும் ஒன்றுபட்டு இணைந்து செயல்பட்டு வருகின்றன. இப்படி இணைப்புண்டு செயல்பட்டு வரும் சங்கம் **''பாரத சாரண சாரணிகள்''** என்று வழங்கப் பெறுகின்றது. சங்கத்துக்காக அமைக்கப்பட்டுள்ள சின்னமும் சாரணர்களுக்கும் சாரணிகளுக்கும் பொதுவாக அமைந்துள்ளது. அந்த இணைப்புச் சின்னத்தில் சாரண சங்கத்துக்குரிய லில்லி மலரும், சாரணிகள் சங்கத்திற்குரிய மூவிதழ் மலரும் ஒருங்கே இணைக்கப் பெற்றுள்ளன. நாம் பாரத நாட்டுச் சாரணர்கள் சாரணிகள் என்பதைக் குறிக்க சின்னத்தின் நடுவில் நம் நாட்டுக்குச் சிறப்பாக அமைந்துள்ள அசோக சக்கரமும் அமைக்கப்பட்டுள்ளது. இப்படி இணைக்கப்பட்டுள்ள சின்னத்திலுள்ள லில்லி மலரின் மூன்று இதழ்கள் சாரணர்களுக்குத் தங்கள் வாக்குறுதியின் மூன்று பிரிவுகளை நினைவூட்டும். அது போலவே மூவிதழ் மலரின் மூன்று இதழ்களும் சாரணிகள் செய்துள்ள வாக்குறுதியின் மூன்று பிரிவுகளை நினைவூட்டுவன ஆகும்.



1. சாரணச் சின்னம்

பச்சைத் துணியில் மஞ்சள் நூலால் பொறிக்கப்பட்டுள்ள இவ்விணைப்புச் சின்னத்தை நம் நாட்டுச் சாரணர்களும் சாரணிகளும் தங்கள் தங்கள் சீருடையில் அணிந்துக் கொள்ளுகிறார்கள். அந்தச் சின்னம் அவர்களைச் சாரணர்கள் சாரணிகள் என்று அறிமுகப் படுத்தும்.

## சாரண சமிக்ஞை

சாரண சமிக்ஞை என்பது வலது கையைத் தோள் மட்டத்திற்கு உயர்த்தி உள்ளங்கையை முன்புறமாக வைத்து சுண்டு விரல் நகத்தை பெருவிரலால் அழுத்தி மீதியுள்ள மூன்று விரல்களையும் மேல்நோக்கி நீட்டுவதாகும்.



2. சாரண சமிக்ஞை

சாரணப்படையில் சேர்ந்து கொள்ளும்பொழுது சின்னஞ் சூட்டு விழாவில் (Investiture Ceremony) புதிதாகச் சேர்கின்ற சாரணனும் ஏனைய சாரணர்களும் சாரண ஆசிரியரும் உதவி ஆசிரியர்களும் சாரண சமிக்ஞை செய்வார்கள்.

சாரணர்கள் ஒருவருக்கொருவர் அறிமுகம் ஆவதற்கும் சாரண சமிக்ஞை பயன்படுகிறது.

சாரண சமிக்ஞை சாதாரணமாக வலக்கையால் செய்யப்படும். சின்னஞ்சூட்டு விழாவில் சாரண தண்டம் வலக்கையில் உள்ள பொழுது சாரண சமிக்ஞை இடக்கையால் செய்யப்படும்.

## சாரண வணக்கம்

சாரண வணக்கம் என்பது சமிக்ஞை அமைக்கப்பட்டுள்ள வலது கையை நெற்றிக்குக் கொண்டு வருவதாகும். சமிக்ஞை அமைக்கப்பட்டுள்ள கையால் செய்யப்படும் வணக்கம் சாரண வணக்கம். சீருடை அணிந்திருக்கும்பொழுது செய்வதற்குரிய வணக்கம் இதுவே.

## செயல் முறை

நன்ருய் நிமிர்ந்து நின்றுகொண்டு, கையின் அடிப்பாகம் அதாவது தோளையொட்டிய மேல் கையை உயர்த்தி மட்டமாக வைத்து, சாரண சமிக்ஞை அமைத்துள்ள வலக்கையை விறைப்பாகவும் விரைவாகவும் நெற்றியை நோக்கித் தாழ்த்திக் கைவிரலால் நெற்றியை இலேசாகத் தொடவேண்டும். வணக்கம் செய்யும்போது கைவிரல்கள் நெற்றியை இலேசாகத் தொட்டுக் கொண்டிருக்கும். வணக்கம் முடிந்ததும் கையை விரைவாகவும் நேர்கீழாகவும் எடுத்து விட வேண்டும்.

வணக்கம் செய்கையில் வெகு விரைவாகக் கையை உயர்த்தி நெற்றியைத் தொட வேண்டும். ஒன்று இரண்டு மூன்று என்று மனதுக்குள் எண்ணிக் கொண்டு மூன்று ஆனதும் கை கீழே வந்துவிட வேண்டும்.



3. சாரண வணக்கம்

சாரண வணக்கம் வலது கையால் மட்டுமே செய்யலாம். இடது கையால் செய்வது கூடாது. சாரண தண்டம் கையில் உள்ளபோது அதை வலது கையில் வைத்துக் கொண்டு இடது கையால் சமிக்ஞை யும் வணக்கமும் செய்யவேண்டும்.

சாரணர்கள் சீருடை அணிந்துள்ளபோது ஒருவருக்கொருவர் செய்யவேண்டிய வணக்கம் இதுவே. சீருடை அணியாத நேரத் திலும் சாரண வணக்கம் செய்வதில் தவறேதும் இல்லை.

சாரண வணக்கம் தன்னைச் சாரணன் என்று உணர்த்தும். அது சாரண இளைஞனுக்கு அவன் செய்துள்ள வாக்குறுதியை நினைவூட்டும்.

முதலில் யார் வணக்கம் செய்ய வேண்டும் என்ற நிபந்தனை சாரணர்களுக்குள் இல்லை. முதலில் யார் பார்க்கிறார்களோ அவர்களே முதலில் வணக்கம் செய்ய வேண்டும் என்பது மரபு.

தேசியக் கொடியை அல்லது சாரணச் சங்கக் கொடியைப் பறக்க விடும்பொழுது சாரணர்கள் சாரண வணக்கம் செய்வார்கள். அது கொடிக்கு அவர்கள் செய்யும் மரியாதை ஆகும். கொடியை இறக்கும் பொழுது நேர்நிலையில் நிற்பதே கொடிக்குரிய மரியாதை.

## சாரண தண்ட வணக்கம்



4. நிற்கும்போது



5. நடந்து செல்லும்போது

சாரணன் தன் கையில் சாரண தண்டம் (Scout Staff) வைத்துக் கொண்டிருந்தால் சாரண வணக்கம் அந்த தண்டத்தைக் கையில் வைத்துக் கொண்டே செய்ய வேண்டும். சாரணன் நேர் நிலையில் நின்றுக் கொண்டு வலக்கையில் உள்ள சாரண தண்டத்தை நட்டுக் குத்துற உடம்போடு சேர்த்துக் கொண்டு சமிக்ஞை அமைத்துள்ள இடக்கையால் சாரண தண்டத்தைத் தொடுவது சாரண தண்ட வணக்கம் ஆகும் (Staff Salute). நடந்து செல்லும்பொழுது நடந்து கொண்டே வணக்கம் செய்ய வேண்டும். நிற்க வேண்டிய அவசியம் இல்லை. தண்டத்தைத் தரையில் படாமல் ஒரு சிறிது தூக்கிக் கொள்ள வேண்டும். யாருக்கு வணக்கம் செலுத்தப்படுகிறதோ அவர் பக்கம் கண் பார்வை இருத்தல் வேண்டும்.

## சாரணக் கைகுலுக்கல்

நண்பர்கள் சந்திக்கும் பொழுது தங்கள் மன மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் வகையில் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் குலுக்கு கிறார்கள். அப்பொழுது வலக்கை யைப் பிடித்து குலுக்குதல் மரபு. ஆயின் சாரணர்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் பொழுது இடது கையைப் பிடித்துக் குலுக்கு வார்கள்.



6. சாரணக் கைகுலுக்கல்

## சாரணக் குறிக்கோள்

''ஆயத்தமாய் இரு'' என்பது சாரணர்களின் குறிக்கோளை உணர்த்துகின்றது. சாரணர்கள் மனத்தாலும், காயத்தாலும் ஆயத்தமாய் இருப்பது அவசியம்.

**மனத்தால் ஆயத்தமாய் இருத்தல்:** சாரணன் தனக்குக் கொடுக்கப்பட்டுள்ள கட்டளை எத்தன்மையதாயினும் அதனைப் பணிவோடும் புன்முறுவலோடும் ஏற்றுக் கொண்டு அதனை நிறைவேற்றுவதில் உள்ள கஷ்டங்களையும் ஆபத்துக்களையும் முன் கூட்டியே சிந்தித்து அவைகளுக்கு ஏற்ற தடுப்பு முறைகளையும் பரிகாரங்களையும் பற்றி தன் மனதில் முடிவு செய்து வைத்துக் கொள்ளுதல் மனத்தால் ஆயத்தமாய் இருத்தல் ஆகும். இப்படி முன் கூட்டியே தன்னை ஆயத்தம் செய்துக்கொள்வதால் சாரணன் தனக்கு உரிய கடமையில் உடனே ஈடுபட்டு நேரத்தை வீணாக்காமல் தான் செய்ய வேண்டிய வேலைகளை உரிய முறையில் செய்து வெற்றி பெறும் ஆற்றல் பெறுகிறான்.

**காயத்தால் ஆயத்தமாய் இருத்தல் :** சாரணன் தனக்குக் கொடுக்கப்பட்டுள்ள கட்டளையை நிறைவேற்றுதற்கு அவசியமான சூழ்நிலையை அமைத்துக் கொள்வது காயத்தால் ஆயத்தமாய் இருத்தல் ஆகும். இது சாரணன் தன் உடல் நலத்தை நல்ல முறையில் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பையும் உணர்த்தும். உடல் நலம் நன்ருக இருப்பின் தான் செய்ய வேண்டிய எதையும் செய்ய வேண்டிய காலத்தில் செய்து முடிக்கும் ஆற்றல் அவனுக்கு உண்டாகும்

## சாரணச் சீருடை

சாரணர்களின் சீருடை இடத்துக்கும் காலத்துக்கும் பொருத்தம் உடையதாக இருக்கிறது. அவர்கள் கடமைகளையும், அவர்கள் சாரண அலுவல்களையும் செவ்வனே செய்ய மிக்க வசதியளிக்கிறது.

சாரணச் சீருடை பல பாகங்களைக் கொண்டது—

**(1) உடம்புக்கு அங்கி** அல்லது சட்டை (Shirt)

இரண்டு பை (Pockets) களையும் தோள்பட்டி (Shoulder Straps) களையும் உடையது. பைகளுக்கு மேல் மூடி (Flap) யும் நடுப் பட்டை (Pleat) யும் இருக்க வேண்டும். துணி காக்கி நிறம் அல்லது சாம்பல் நிறம்.

**(2) அரைக்கு குறுகிய கால் சட்டை** (Shorts) காக்கி, ஊதா அல்லது சாம்பல் நிறத்துணியில் செய்தது. கால் முட்டுவரை உள்ளது.

**(3) இடைக்கு இடைவார்** அல்லது **கச்சை** (Belt)

தவிட்டு நிறத்தோலால் ஆனது. அல்லது காக்கி நிறக்கெட்டி நாடாவில் செய்தது. சாரண இணைப்பு (Buckles) உடையது.

**(4) தலைக்குக் குல்லாய் (Beret)** இது கருநீல நிறம் (Dark Blue).

இது தேசிய சாரண சங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்டது. இதில் உலோகத்தால் செய்யப்பட்ட தனிச்சின்னம் பதிக்கப் பட்டிருக்கும்.

**(5) கழுத்துக்கு கழுத்துப்பட்டி** (Scarf)

முக்கோண வடிவாக உள்ளது. சதுரமான துணியை மூலைக்கு மூலை இரு துண்டாக வெட்டப்பட்டது. முக்கோணத்தின் இரண்டு பக்கங்களும் 27 அங்குலத்துக்குக் குறையாமல் இருத்தல் வேண்டும். 32 அங்குலத்துக்கு அதிகப்படக் கூடாது. ஒவ்வொரு சாரணத் தொகுப்புக்கும் ஒரு நிறம் அல்லது மாதிரி. கழுத்துப்பட்டியை மரத்தால் அல்லது தோலால் செய்யப்பட்ட குழையால் (Woggle) கழுத்தருகில் இறுக்கிக் கொள்ள வேண்டும்.

**(6) காலுக்குப் பாதரட்சையும் மேஜோடும் அல்லது செருப்பு**

பாதரட்சை மேல் நாட்டுப் பாணியில் இருப்பின் மேஜோடு அணிதல் வேண்டும். பாதரட்சை தோலால் அல்லது கித்தாலுல் செய்யப்பட்டது. தோலாலானதானுல் தவிட்டு நிறம் அல்லது கருமை நிறம். கித்தானுலானது எனில் தவிட்டு நிறமானது.

மேஜோடு கருமை நிறம் அல்லது காக்கி நிறம். மூட்டுக்குக் கீழே மடித்து விடப்பட்டிருக்க வேண்டும். மேஜோடு கீழே இறங்கி விடாமல் இருக்க நாடாவும் அதில் வெளிப்பக்கம் காணக் கூடிய விதத்தில் பச்சை நிறக் குஞ்சமும்.

பாதரட்சை, மேஜோடு, செருப்பு இவைகளை விரும்பினுல் அணியலாம். ஆயின் ஒரு சாரணப் படையிலுள்ள எல்லாச் சாரணர் களும் ஒன்றுபோல அவற்றை அணிதல் வேண்டும்; அல்லது அணியாமல் இருத்தல் வேண்டும். அணிவதானுல் அவை எல்லாம் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும்.

**(7) சாரணத் தண்டம்.** சாரணத் தண்டமும் சீருடையில் அடங்கும். சாரணத் தண்டம் மரத்தால் ஆனது. இது சாரணனின் தோள் உயரத்துக்கு மேல் அவன் காதளவு வரலாம். இதனை அடி களாக, அங்குலமாக அல்லது மீட்டர், சென்டி மீட்டராகப் பிரித்து அடையாளம் செய்திருத்தல் அவசியம்.

**(8) தோள் சின்னம்** (Shoulder Stipes) சீருடையில் இடது தோளில் தைக்கப்பட்டிருக்கும். மூன்று அங்குல நீளமும், அரை அல்லது முக்கால் அங்குல அகலமும் உடைய இரண்டு நாடாக்களாலானது. இரண்டு நாடாக்களும் ஒரே நிறமாக இருக்கலாம். அல்லது இரண்டு ஒரு நிறமாகவும் மற்றைய இரண்டு ஒரு நிறமாகவும் இருக்கலாம். தோள் சின்னத்தின் நிறம் அணிப் பிராணி அல்லது அணிப் பறவை யைப் பொறுத்தது. ''சிறுவர் சாரணியம்'' (Scouting for Boys) என்றநூல் தோள் சின்னத்துக்குரிய நிறங்களை விளக்குகின்றது.

**(9) சராணச் சின்னம்:** பச்சைத் துணியில் மஞ்சள் நூலால் பொறிக்கப்பட்டுள்ளது. அங்கியின் இடப்பக்கத்துப் பையின் மத்தியில் இதைத் தைக்க வேண்டும். இது அணிந்துள்ளவன் சாரண சங்கத்தின் அங்கத்தினன் என்பதை உணர்த்தும்.

**(10) சாரண தண்டம்.** இது நல்ல உறுதியான மரத்தால் அல்லது கெட்டி மூங்கிலால் ஆனது. நீளம் ஏறக்குறைய 1.65 மீட்டர் குறுக் களவு 3 அல்லது 3½ சென்டி மீட்டர்.



1. குல்லாய்

2. தோள் பட்டி

3. தோள் சின்னம்

4. இடை வார்

5. பச்சைப்பட்டி

6. கால் சட்டை

7. அங்கி

8. பெயர்ச் சின்னம்

9. கழுத்துப் பட்டி

10. குழை

11. சின்னம்

7. சாரணச் சீருடை



8. சீருடையைச் சேர்ந்த பிற பொருள்கள்—
1. சாரண தண்டம் 2. தோள்பை 3. ஊதலும் கயிறும் 4. சாரணர் கயிறு 5. சாரணர் கத்தி 6. முன் இருந்த தோள் குஞ்சம் — இப்பொழுது இது தோள் சின்னமாக மாறியுள்ளது.

**(11) பெயர்ச் சின்னம் :—**

வெள்ளைத் துணியில் சிவப்பு எழுத்துக்களால் சாரணப் படையின் எண், பெயர் முதலியவற்றைக் குறிப்பிடுவது. இதனை வலது தோளில் தோள் தையலை யொட்டி அணிய வேண்டும். இந்த பெயர்ச்சின்னம் மூன்று அங்குல நீளமும் அரை அல்லது முக்கால் அங்குல அகலமும் இருக்கலாம்.

**(12) விருப்பம் இருந்தால் சீருடை மேல் அணிந்துக் கொள்ளக் கூடியவை இன்னும் சில உண்டு. அவையாவன**

தோள்ப் பை (Haver Sack)
ஊதலும் கயிறும் (Whistle and Lanyard)
சாரணர் கத்தி (Scout Knife)
கைக் கோடரி (Hand axe)
கயிறு (Rope) இதனை இடைவாரில் தொங்க விடலாம்
மேல் அங்கி (Over Coat)
மழை அங்கி (Mackintosh)
குறுகிய அங்கி (Jacket)

## சாரண அணி

சாரணர்கள் அணி அணியாக அமைக்கப்படுவார்கள். ஆறு முதல் எட்டுச் சாரணர்களைக் கொண்டது ஒரு சாரண அணி.

சாரண அணிகள் பறவைகள், பிராணிகள் பெயரால் வழங்கப் பெறும். அணிகள் அந்தந்த இடத்துக்குரிய பறவைகள் அல்லது பிராணிகளின் பெயரை வைத்துக் கொள்வது நல்லது.

பிராணிகள் அல்லது பறவைகளின் பெயரை வழங்குவதனால் அணிகள் அந்தப் பிராணிகள் அல்லது பறவைகளைத் தமக்குரியன வாக எண்ணி அவைகளைப் பற்றித் தாங்கள் எவ்வளவு தெரிந்து கொள்ளக்கூடுமோ அவ்வளவு தெரிந்து கொள்ள வேண்டும். தங்கள் அணிப் பிராணியின் அல்லது பறவையின் உருவம் பொறித்துள்ள கொடி ஒன்றைச் சாரணர்கள் தங்கள் அணிக்கு உரிய சின்னமாகக் கொள்வர். நீண்ட முக்கோண வடிவில் உள்ள அந்தக் கொடியைத் தன் சாரண தண்டத்தில் கட்டிப் பறக்க விட்டு அணித் தலைவன் தன் அலுவல்களின்போது எடுத்துச் செல்வான்.

சாரணர்கள் தங்கள் தங்கள் அணிப் பிராணி அல்லது பறவைக்கு மிகுந்த மதிப்புத் தருவார்கள். அது போலவே தங்கள் அணிக்கொடியையும் மிகுந்த மதிப்புடன் கையாளுவார்கள்.

ஒவ்வொரு அணிப் பிராணிக்கும் அணிப் பறவைக்கும் உரிய அணிச்சின்னங்கள் உண்டு. இவை அங்கியில் இடது கையில் அதன் உச்சியில் தோளையொட்டித் தைக்கப்பட்டிருக்கும். இரண்டு நாடாக்களாலான இச்சின்னத்தில் நாடா ஒவ்வொன்றும் மூன்று அங்குல நீளமும் அரை அல்லது முக்கால் அங்குல அகலமும் உள்ளது. இரண்டு இதழ்களும் ஒரே நிறம் உடையனவாக இருக்கலாம், அல்லது இரண்டில் ஒன்று ஒரு நிறமும் இன்னொன்று வேறொரு நிறமுமாக இருக்கலாம். சாரணர்கள் தோள் சின்னங்களை தங்கள் சீருடையங்கியில் இடது தோளில் பட்டையை ஒட்டித் தைத்துக் கொள்வார்கள். தோள் சின்னம் அங்கியின் இடது பக்கம் உள்ள கையின் உச்சியில் அமையும்.

## சாரணப்படை

பல அணிகளைக் கொண்டது ஒரு சாரணப்படை. படைக்கு அறிகுறியாக உள்ளது சாரணர்கள் தங்கள் கழுத்தில் அணிகின்ற கழுத்துப்பட்டி. தொகுப்பைச் சேர்ந்த குருளையர் மந்தைக்கும் திரிசாரணர் குழுவுக்கும் கழுத்துப்பட்டி இதுவே.

அணிப் பிராணிகள், பறவைகளைப்பற்றிய விவரங்கள்

| உருவம் | பெயர், சின்னத்துக்குரிய நிறம்,<br>பிராணி - பறவைக்குரிய ஒலி |
|---|---|
| | அணில் (Squirrel)<br>சாம்பல் + இருண்ட சிவப்பு<br>(Grey and Dark Red)<br>நட் - நட் - நட் |
| | அண்டங்காக்கை (Raven)<br>கருமை (Black)<br>கா - கா |
| | அன்னம் (Swan)<br>சாம்பல் + இரத்தச் சிவப்பு<br>(Grey and Scarlet)<br>ஸ் - ஸ் - ஸ் |
| | ஆந்தை (Owl)<br>நீலம் (Blue)<br>(சீட்டி ஒலி) கீ-உக் |

| உருவம் | பெயர், சின்னத்துக்குரிய நிறம், பிராணி - பறவைக்குரிய ஒலி |
|---|---|
|  | எருமை (Buffalo)<br>இருண்ட சாம்பல்<br>(Dark Grey)<br>உம்-மா |
|  | கக்கூ (Cuckoo)<br>சாம்பல் (Grey)<br>கூக்கூ |
|  | கரடி (Bear)<br>தவிட்டுநிறம் + கருமை<br>(Brown and Black)<br>(உறுமல்) பூர்ர் |
|  | கழுகு (Eagle)<br>பச்சை + கருமை<br>(Green and Black)<br>கரீ-கி-கி |
|  | கரிக்கருவி (Blackbird)<br>கருமை + காக்கி<br>(Black and Khaki)<br>பா-ர்-பாரீ |
|  | கலைமான் (Stag)<br>கருப்பு + கத்திரிப்பூ நிறம்<br>(Black and Violet)<br>பா-உ |
|  | காட்டுப் பன்றி (Wild Boar)<br>சாம்பல் + இளஞ் சிவப்பு<br>(Grey and Pink)<br>(உறுமல்) புருப்-பருப் |
|  | கரும்புலி (Panther)<br>மஞ்சள் (Yellow)<br>கியூக் |

| உருவம் | பெயர், சின்னத்துக்குரிய நிறம், பிராணி - பறவைக்குரிய ஒலி |
|---|---|
|  | காட்டுப் புரு (Wood Pigeon)<br>நீலம் + சாம்பல்<br>(Blue and Grey)<br>புக் - ஹூ - றூ |
|  | காளை (Bull)<br>சிவப்பு (Red)<br>உம் - மா |
|  | கீரி (Mungoose)<br>தவிட்டு நிறம் + மஞ்சள் கலந்த சிவப்பு (Brown and Orange)<br>சீப் |
|  | குள்ள நரி (Fox)<br>மஞ்சள் + பச்சை<br>(Yellow and Green)<br>ஹா - ஹா |
|  | குதிரை (Horse)<br>கருமை + வெள்ளை<br>(Black and White)<br>ஹீ - ஹீ |
|  | நாரை (Stork)<br>நீலம் + வெள்ளை<br>(Blue and White)<br>கா - ர் - ர் |
|  | கோட்டான் (Night Jar)<br>கருமை + மங்கலான மஞ்சள் நிறம்<br>(Black and Buff)<br>சுர் - ர் - ர் |

| உருவம் | பெயர், சின்னத்துக்குரிய நிறம், பிராணி - பறவைக்குரிய ஒலி |
|---|---|
|  | சிங்கம் (Lion)<br>மஞ்சள் + சிவப்பு<br>(Yellow and Red)<br>(கர்ச்சணை) இ-உக் |
|  | சீமை நாய் (Bull dog)<br>நீலம் + தவிட்டு நிறம்<br>(Blu and Brown)<br>(உறுமல்) - கிராவ் |
|  | செம்மறி (Ram)<br>தவிட்டு நிறம் (Brown)<br>பா - அ - அ |
|  | சேவல்<br>சிவப்பு + தவிட்டு நிறம்<br>(Red + Brown)<br>கொக்கரக்கோ |
|  | புரு (Dove)<br>சாம்பல் + வெள்ளை<br>(Grey and White)<br>கூ - உ - உ |
|  | புலி (Tiger)<br>இருண்ட கத்திரிப்பூ நிறம்<br>(Dark violet)<br>கிரா - அ - உ |
|  | பூனை (Cat)<br>சாம்பல் + தவிட்டு நிறம்<br>(Grey and Brown)<br>மியாவ் |

| உருவம் | பெயர், சின்னத்துக்குரிய நிறம், பிராணி - பறவைக்குரிய ஒலி |
|---|---|
|  | மயில் (Peacock)<br>பச்சை + நீலம்<br>(Green and Blue)<br>மீ - ஆ - இக் |
|  | மரங்கொத்தி (Wood-pecker)<br>பச்சை + இருண்ட கத்திரிப்பூ<br>(Green and Dark Violet)<br>ஹர் - பில் - ஹார் - பிலா |
|  | மான் (Deer)<br>இருண்ட நீலம் + வெள்ளை<br>(Dark Blue and White)<br>மியாக் |
|  | மிளா (Springbok)<br>சிவப்பு + மஞ்சள்<br>(Red and Yellow)<br>இ - உக் - இ - உக் |
|  | மீன் கொத்தி (King-fisher)<br>பளப்பளப்பான நீலம்<br>(Bright Blue)<br>சிப் - சிப் - சிப் |
|  | முதலை (Alligator)<br>பச்சை + காக்கி (Green + Khaki)<br>ஹ - ஆ - கர் |

| உருவம் | பெயர், சின்னத்துக்குரிய நிறம், பிராணி - பறவைக்குரிய ஒலி |
|---|---|
|  | வேட்டை நாய் (Hound)<br>மஞ்சள் கலந்த சிவப்பு (Orange)<br>பௌ-வவ் |
|  | நாகம் (Cobra)<br>மஞ்சள் கலந்த சிவப்பு + கருமை<br>(Orange + Black)<br>ப்-ஸ்-ஸ்-ஸ் |
|  | நீர் நாய் (Beaver)<br>(நீலம் + மஞ்சள்) (Blue Yellow)<br>கைதட்டுவது போல |
|  | யானை (Elephant)<br>இருண்ட கத்தரிப்பூ + வெள்ளை<br>(Drak Violet & White)<br>டிர்-ஆர்-ஆர்-அம்பர் |
|  | ராஜாளி (Hawk)<br>பச்சை + கருமை (Green & Blue)<br>கிரீ-இ-இ |
|  | ரைநோ (Rhino)<br>இருண்ட ஊதா + மஞ்சள் கலந்த சிவப்பு (Dark Blue and Orange)<br>வர்-ர்-ரார் |
|  | ஹிப்போ (Hippo)<br>இளஞ்சிவப்பு + கருமை<br>(Pink & Black)<br>புர்-ர்-ர் |

# 2. சாரண விதியும் வாக்குறுதியும்

## 1. சாரண விதி (Scout Law)

சாரணனின் வாழ்க்கை கட்டுப்பாடுடைய வாழ்க்கை. அந்தக் கட்டுப்பாட்டின் தன்மையை உணர்த்துவது சாரணவிதி. சாரணன் எத்தன்மையானவன், எத்தகைய பண்பு படைத்தவன் என்பதை சாரண விதி உணர்த்தும்.

சாரண விதி பத்துப் பிரிவுகளைக் கொண்டது. அவை பின் வருமாறு :

1. **சாரணன் மானம் நம்பிக்கைக்கு உரியது**
2. **சாரணன் மாருப் பற்றுடையவன்**
3. **சாரணன் கடவுளுக்குப் பணிந்து நடக்கவும், தாய் நாட்டுக்குத் தொண்டு புரியவும், பிறருக்கு உதவி செய்யவும் கடமைப்பட்டவன்.**
4. **சாரணன் எல்லோருக்கும் நண்பன், நாடு, இனம், சமயம் என்ற பாகுபாடின்றி பிற சாரணர்பால் சகோதர உணர்ச்சி பூண்டவன்.**
5. **சாரணன் விநயமுள்ளவன்**
6. **சாரணன் விலங்குகளின் நண்பன்**
7. **சாரணன் கட்டுப்பாடுடையவன் ; கட்டளைகளுக்குக் கீழ்ப் படிபவன்.**
8. **சாரணன் இன்னல்களிலும் புன்முறுவல் புரிபவன்.**
9. **சாரணன் சிக்கனம் உடையவன்**
10. **சாரணன் மனம், மொழி, மெய்களில் தூய்மையானவன்.**

இந்தப் பிரிவுகள் பத்தும் பத்து ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டவை. இவற்றின் பொருளைச் சாரண ஆசிரியர் தன் சாரணர் களின் வயதுக்கும் மனநிலைக்கும் ஏற்றவாறு அவர்களுக்கு விளக்க வேண்டும். இப்பிரிவுகளில் அடங்கி உள்ள பண்புகளைச் சிறு சிறு கதைகளாக அமைத்து விளக்கலாம். அல்லது சிறுசிறு நாடகங்கள் மூலமாக விளங்கவைக்கலாம். அப்படிச் செய்வதால் சாரண விதியின் உட்கருத்துக்கள் சாரணர்களுக்கு நன்கு விளங்கும். அவர்கள் மனதிலும் நன்கு பதியும்.

சாரண இயக்கத்தில் சேரும் சிறுவன் ஒவ்வொருவனும் சாரண விதிகளுக்கு ஏற்ப, அவைகளுக்குப் பொருந்தும் முறையில், தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். இது அவனுக்குரிய முதற் கடமை. அப்படித் தன் வாழ்க்கையைக் கட்டுப்படுத்திக் கொண்டு சாரண வாக்குறுதி செய்தபின் அதைப் பேணிப் பாதுகாக்கும் முறையில் வாழ்க்கையை நடத்துவது அவனது இரண்டாவது கடமையாகும்.

## 2. சாரண வாக்குறுதி

சாரணர்கள் செய்யும் வாக்குறுதி மூன்று பிரிவுகள் உடையது.

**"நான் கடவுளுக்கும் தாய் நாட்டுக்கும் எனது கடமையைச் செய்யவும், பிறருக்கு எந்தநேரத்திலும் தொண்டு புரியவும், சாரண விதியைப் பின்பற்றி நடக்கவும் என்னால் இயன்றவரை முயல என் மானத்தின்மேல் வாக்குறுதி கூறுகிறேன்"** என்பது சாரண வாக்குறுதி ஆகும்.

வாக்குறுதியில் மூன்று கடமைகள் குறிப்பிட்டுள்ளன. தன்னால் இயன்ற அளவு அவற்றை நிறைவேற்றுவதாகச் சாரணன் வாக்குறுதி தருகின்றான். இந்த வாக்குறுதி அவனுக்குச் சாரணன் என்ற பதவிக்கு அருகதை அளிக்கிறது. இந்த வாக்குறுதியைத் தன் தோழர்களாகிய சாரணர்கள் முன்னிலையில் தன் சாரண ஆசிரியருக்கு அளிக்கின்றான். இந்தச் செய்கையால் தானும் தன் சாரண ஆசிரியரும் இணைப்புண்டு இருக்கிறார்கள். தான் செய்துள்ள வாக்குறுதியைக் காப்பாற்றும் பொறுப்பு சாரணனுடையதாயினும், சாரண ஆசிரியருக்கும் அதில் பங்கு உண்டு என்று ஏற்படுகிறது. இப்படிச் சாரண ஆசிரியரோடு இணைப்புண்டிருக்கும் உணர்ச்சி சாரணனின் ஆன்மீக வளர்ச்சிக்கு மிகவும் பயன்படுகிறது.

**சாரணன் கடவுளுக்குச் செய்ய வேண்டிய கடமைகள்:** காலையில் எழுந்த உடனும் உணவு அருந்தும்பொழுதும் இரவில் படுக்கைக்குப் போகும் முன்பும் ஏனைய நேரங்களிலும் சாரணன் இறைவணக்கம் செய்ய வேண்டும். எப்பொழுதும் கடவுளுக்கு அன்பு செலுத்த வேண்டும். கடவுள் தன் படைப்புக்களிடம் வைத்துள்ள எல்லையற்ற அன்பை உணர்ந்து அதைப்பற்றி சிந்திக்க வேண்டும். உலகில் நமக்கு அளித்துள்ள நன்மைகளுக்காக இறைவனுக்கு நன்றி செலுத்தத் தவறக்கூடாது. தான் செய்யும் செயல்களனைத்தையும் மனச்சாட்சி உருவத்தில் இறைவன் பார்த்துக் கொண்டேயிருக்கிறான் என்ற உணர்வு வேண்டும். தான் செய்யும் நற்செயல்களுக்கு ஆசி தந்து, தான் செய்ய எண்ணும் தீச்செயல்களினின்றும் தடுத்தாட்கொண்டு தன்னைக் காப்பாற்றுகின்றான் என்ற உணர்வும்

வேண்டும். தன் சமயக் கொள்கைப்படித் தனக்கு என்னென்ன கடமைகள் உண்டோ அவைகளைச் செய்யத் தவறலாகாது. ''அவனின்றி ஓர் அணுவும் அசையாது'' என்ற உண்மையில் சாரணனுக்கு நம்பிக்கை இருப்பதும் அவசியம்.

**சாரணன் தாய் நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமைகள்:** நாட்டின் சட்டங்களுக்குக் கீழ்ப்படிதல், நாட்டில் நியாயமாக அமைக்கப்பட்டுள்ள அதிகாரத்துக்குக் கீழ்ப்படிந்து நடப்பது, நாட்டின் பொது உடமைகளை அவைகளுக்குத் தீங்குவராமல் காப்பது, நாட்டின் அமைதியைப் பாதுகாப்பது, கட்டுப்பாட்டுடனும் ஒழுங்குடனும் வாழ்க்கை நடத்துவது முதலியன சாரணன் நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஆகும்.

தேசியக் கொடிக்கு வணக்கம் செய்தல், அதற்குரிய மரியாதைகளை அளித்தல், தேசிய கீதம் பாடப்படும் பொழுது அதற்குரிய மரியாதை செலுத்தல் ஆகியவையும் சாரணன் நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமைகளுள் அடங்கும்.

**சாரணன் பிறருக்கு உதவி புரிதல்:** தன் வீட்டில் உள்ளவர்களுக்கும், தான் குடியிருக்கும் பேட்டையில் உள்ளவர்களுக்கும், தன் அயல் வீட்டினர்களுக்கும், தன் பள்ளியில் உள்ள ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும், மற்றவர்களுக்கும் ஒரு சாரணன் செய்யக்கூடிய நற்றொண்டுகள் பலப்பல. இவற்றை ஆராய்ந்தறிந்து தன் திறமைக்கும் தனக்குள்ள அவகாசத்துக்கும் பொருந்தும் முறையில் நற்றொண்டாற்றும் நற்பணியில் ஈடுபடுவது சாரணனின் கடமையாகும். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பது சாரணன் குறிக்கோளாக அமைய வேண்டும். மக்களுக்குப் புரியும் தொண்டு இறைவனுக்குப் புரியும் தொண்டாகும் என்பதில் அவனுக்கு நல்ல நம்பிக்கை வேண்டும்.

**''சாரண விதிகளுக்கு ஏற்ப நடத்தல்'':** சாரண விதியின் பத்துப் பிரிவுகளும் சாரணன் எத்தன்மையானவன் என்பதை விளக்கும் இயல்புடையன. ஒவ்வொரு பிரிவும் ஒரு உயர்ந்த பண்பினைக் குறிக்க, பத்துப் பிரிவுகளும் பத்து முக்கிய பண்புகளை விளக்குகின்றன. சாரணனுக்குரிய கடமைகளுள் ஒன்று சாரண விதியின் உட்கருத்துகள் என்ன என்பதைப் பற்றி சிந்தித்து அறிந்து கொள்ளுதல் ஆகும். நெறியின் பிரிவுகள் குறிப்பிடுகின்ற பண்புகள் ஒவ்வொன்றையும் கண்ணும் கருத்துமாகப் பேணி வளர்த்துக் கொள்வதும், சாரண விதி காண்பிக்கும் நேர் பாதையை விட்டு ஒரு சிறிதும் பிறழாமல் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்வதும் சாரண விதிக்குப் பொருந்தும் முறையில் நடப்பதாகும்.

**மானத்தின் மேல் ஆணையாக :** மானம் என்பது கண்ணியம். உண்மை பேசுபவர்களும், சொன்ன சொல் தவருதவர்களும். கண்ணியம் உடையவர்கள் ஆவார்கள். வாய்மை உடையவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள். மானத்தின் மேல் அளிக்கப் படும் வாக்குறுதி மிகப் புனிதம் வாய்ந்தது. சாரணர்கள் உயிரைக் கொடுத்தும் தங்கள் வாக்குறுதியைக் காப்பாற்றுவார்கள். அது அவர்களுக்குரிய கடமை.

**''என்னுல் இயன்றவரை'' :** யாருக்கும் தன்னுல் இயன்ற வரை தான் எதனையும் செய்ய முடியும். 'இயன்ற வரை' என்பது ஒவ்வொருவருடைய திறத்தின் எல்லையையும் மனஉறுதியையும் குறிக் கும். சாரணன் தன்னுல் இயன்றவரை தன் கடமைகளைச் செய்தல் மிக அவசியம். அவற்றை வஞ்சகமில்லாமல் தன்முழு வல்லமையுடன் செய்யவேண்டும். தன் இளமை காரணத்தினுலோ அல்லது அறியாமை யினுலோ தன் கடமையிலிருந்து தான் வழுவ நேரிட்டால் உடனே தன் தவற்றினை உணர்ந்து கொண்டு மறுபடியும் தவறிவிடாமல் தன்னைத் தடுத்தாட்கொள்ள வேண்டும் என்று இறைவனை வேண்டிக் கொண்டு சாரணன் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். ''என்னுல் இயன்ற வரை'' என்ற சொற்ருெடர் சாரணர்களுக்கு இந்த மறுவாழ்வு வாய்ப்பு அளிக்கிறது.

## சாரண விதிகளுக்கு விளக்கம்

இது சாரணியத்துக்கு அடிப்படையாக அமைந்துள்ள **சிறுவர் சாரணியம்** (Scouting for Boys) என்று சிறப்பு வாய்ந்த தன்நூலில் **பேடன்-பவல் பெரியார்** சாரண விதியின் பத்துப் பிரிவு களுக்கும் தந்துள்ள விளக்கத்தைத் தழுவி எழுதப்பட்டுள்ளது.

### 1. சாரணன் மானம் நம்பிக்கைக்கு உரியது

சாரணன் ஒருவன் ''என் கண்ணியத்தின் மீது ஆணையிட்டுக் கூறுகின்றேன்'' என்று சொல்வது மிகவும் புனிதமான வாக்குறுதியே ஆகும். சாரணன் ஒருவனைப் பார்த்து ''இதைச் செய்வாய் என்று உன் கண்ணியத்தின் மீது ஆணையாக நம்புகிறேன்'' என்று சாரண ஆசிரியர் கூறினுல் அந்தக் கட்டளையைச் சிரமேற் கொண்டு சாரணன் அதை நிறைவேற்றும் பொழுது இடையூறு ஏதாவது நேர்ந்தாலும் அதை விலக்கிக் கொண்டு தன் திறமைக்கு ஏற்ற முறையில் அதைச் செய்து முடிக்கக் கடமைப்பட்டவன் ஆவான். சாரணன் ஒருவன் பொய் சொன்னுல், அல்லது ஒப்படைக் கப்பட்ட கட்டளையைச் செய்து முடிக்காமல் விட்டுவிட்டால் தன்னிடம் உள்ள சாரணச் சின்னத்தை அணியக்கூடாது என்று

கட்டளையிடப்படலாம். அதன் பின் அவன் சாரணஞக இருக்க முடியாது என்றும் தெரிவிக்கப்படலாம்.

மானம் என்பது சாரணனுக்குள்ள மிகப் புனிதமான உடமை. அவனுடைய ஒழுக்கத்தோடு இணைந்துள்ளது. சாரணனுக்குப் பெருமை அளிப்பது மானம் அல்லது கண்ணியம்.

சாரண ஆசிரியர்கள் தங்கள் சாரணர்களை நம்ப வேண்டும். நம்பிக்கை நம்பிக்கையை வளர்க்கும். சாரணனை நம்பிக்கைக்குப் பாத்திரனுகப் பண்ணுவதற்குரிய வழியும் இதுவே.

## 2. சாரணன் மாருப்பற்றுடையவன்

சாரணன் நாட்டுப்பற்றுடையவன். நாட்டினிடத்தில் பக்தி விசுவாசம் உடையவனுக இருப்பான். அதுபோலவே தன் பெற்ருேர் களிடம், தன்னை வேலைக்கு அமர்த்தியுள்ளவர்களிடம், தன்னிடம் வேலை பார்ப்பவர்களிடம், தன் சாரண ஆசிரியரிடம், ஏனைய ஆசிரியர் களிடம், தன் பள்ளித் தோழர்களிடம், தன் சாரணத் தோழர்களிடம், உண்மையான உறுதியான மாருப்பற்று உடையவனுக இருப்பான்.

மாருப் பற்றுள்ளவனுக இருப்பது என்பது வாழ்விலும் தாழ்விலும் ஒருவர் பக்கம் இருந்து அவர் எதிரிகளை அல்லது அவரை நிந்திப்பவர்களை எதிர்த்து நிற்பது, எந்த சந்தர்ப்பத்திலும் பாதுகாப் பளிப்பதும் விசுவாசமாயிருப்பதில் அடங்கும்.

## 3. சாரணன் கடவுளுக்குப் பணிந்து நடக்கவும், தன் தாய் நாட்டுக்குத் தொண்டு செய்யவும் பிறருக்கு உதவி செய்யவும் கடமைப்பட்டவன்.

கடவுளுக்கும் தாய்நாட்டுக்கும் உள்ள கடமைகளைப்பற்றி மேலே கூறப்பட்டுள்ளது.

ஒவ்வொரு நாளும் யாருக்காவது ஒரு நற்ருெண்டு செய்வது சாரணனின் கடமை. இந்தக் கடமையை மற்றக் கடமைகளுக்கு மேலாக மதித்து நடக்க வேண்டும். பிறருக்குத் தொண்டு புரிவதில் தனக்குள்ள சௌகரியங்களை அல்லது பாதுகாப்பைத் தான் இழக்க நேரிடினும் அதை அவன் பொருட்படுத்தக் கூடாது. இரண்டு கருமங்களில் எதைச் செய்ய வேண்டும் என்று தெரியாமல் திகைப் புறும்போது ''என் கடமை என்ன?'' என்று தன்னைத்தானே வினவ வேண்டும். ''எதனைச் செய்தால் பிறருக்கு அதிகமான நன்மை விளையும்?'' என்று சிந்தித்துப் பார்த்து தன் மனச்சாட்சி சொல்கிறபடி நடக்க வேண்டும்.

சாரணன் எந்த நேரத்திலும் பிறர் உயிரைக் காப்பாற்றத் தயாராக இருத்தல் வேண்டும். விபத்தில் அகப்பட்டுக்

கொண்டுள்ளவர்களுக்கு எந்த நேரத்திலும் உரிய உதவிபுரியவும் ஆயத்தமாக இருத்தல் வேண்டும். இப்படி உதவிபுரிவதற்கு எவ்வித கைம்மாறும் பெற்றுக்கொள்ளமாட்டான்.

**4. சாரணன் எல்லோருக்கும் நண்பன்; நாடு, இனம், சமயம் என்ற பாகுபாடின்றி பிற சாரணர்பால் சோதர உணர்ச்சி பூண்டவன்.**

நட்பு தானாகவே இயங்காது. நட்பினை இயங்கவைப்பது சாரணனுடைய பொறுப்பு. எல்லோரிடமும் நட்புக்கொண்டவன் என்ற பெயரைப்பெற சாரணன் ஆசைப்பட வேண்டும். அதற்கேற்ற வாறு நடந்து கொள்ளவும் வேண்டும். நட்பு சொந்தக் குழுவில் ஆரம்பமாகிப் படிப்படியாகப் பரவவேண்டும்.

பிறரிடம் உள்ள நல்ல பண்புகளைப் பாராட்டுதல், ஔவியம் பேசாதிருத்தல் ஆகிய இரண்டும் நட்பையும் சோதர உணர்ச்சியை யும் வளர்க்கும் இயல்புடையன. சாரணனின் சோதர உணர்ச்சி நாட்டை, வகுப்பைத் தாண்டி நிற்க வேண்டும். அணிகள் ஒன்றோ டொன்று, படைகள் ஒன்றோடொன்று ஆர்வத்தோடும் அன்புடனும் பழக வேண்டும். சாரணப் பெருங்கூட்டங்களில் பங்குகொள்வதும் சோதர உணர்ச்சியை காப்பதற்காகவே.

சாரணன் இன்னொரு சாரணனை சந்திக்க நேரிட்டால் அவன் தனக்கு அறிமுகம் இல்லாதவனாக இருந்தாலும் அவனோடு உரையாடி அப்பொழுது அவனுக்குத் தேவையாக உள்ள உதவியைச் செய்தல் வேண்டும். ஏதாவது பொருள் தேவைப்பட்டாலும் அதையும் கொடுத்துதவவேண்டும். பிறர் எவ்வளவு ஏழையாக இருப்பினும் சாரணன் தன்னை மேலாகவும் அவர்களைக் கீழாகவும் மதித்து நடத்த மாட்டான். அவர்களை இகழவும் மாட்டான்.

**5. சாரணன் விநயமுள்ளவன்**

சாரணன் எல்லோரிடமும் மிகவும் அடக்கமாகவும் மரியாதை யுடனும் நடந்துகொள்வான். மாதர்களிடமும் சிறு குழந்தை களிடமும் மிக்க மரியாதையோடு நடப்பான். முதியவர்களுடனும், அங்கவீனர்களுடனும் அன்புடனும் மரியாதையுடனும் நடந்து கொள்வான். இப்படி அன்பு பாராட்டி உதவியுள்ளவனாக இருப்ப தற்கு எவ்வித கைம்மாறும் விரும்பமாட்டான் ; ஏற்றுக்கொள்ளவும் மாட்டான்.

மரியாதை, விநயம், என்பன பேச்சாலும் செய்கையாலும் அமையும். சாரணனின் பேச்சும் செய்கையும் அவனைச் சாரணன் என எடுத்துக் காட்டும்.

## 6. சாரணன் விலங்குகளின் நண்பன்

சாரணன் பிராணிகளிடம் அன்பு பாராட்டுவான். யாவும் இறைவனுடைய படைப்புக்கள் என்பதை உணர்ந்து அவைகளை ஆதரிப்பான். பிராணிகளைத் துன்புறுத்தமாட்டான் துன்புறுத்துவோர் களிடமிருந்து அவைகளைக் காப்பாற்றுவான். பிராணிகளுக்கு நோவு உண்டாகாமல் தடுக்கத் தன்னால் இயன்ற உதவி செய்வான். பிராணிகள் உயிரைக் காப்பாற்றுவான். கொல்லாமையை மேற் கொள்வான். தீங்கிழைக்கும் பிராணிகளைக் கொல்வதும் உணவுக் காகக் கொல்வதும் அனுமதிக்கப்படக் கூடியவை.

## 7. சாரணன் கட்டுப்பாடுடையவன்; கட்டளைகளுக்குக் கீழ்ப் படிபவன்

சாரணன் தன் பெற்றோர்கள் சாரண ஆசிரியர் அணித்தலைவன் ஆகியோர் கட்டளைகளை ஒரு சிறிதும் தயக்கம் இன்றி முழுமனதுடன் நிறைவேற்றக் கடமைப்பட்டவன். தனக்கு சம்மத மில்லாத ஒரு காரியத்தைச் செய்ய அவர்கள் கட்டளையிட்டாலும் அதனைத் தன் கடமை என்றே எண்ணி நிறைவேற்றுவான். அப்படி நிறைவேற்றிவிட்டுப் பின்னர் அதைப் பற்றித் தனக்குள்ள ஆட்சேபணையைத் தெரிவிக்க வேண்டும். கட்டளை பிறந்த உடன் அதனை நிறைவேற்றுவது அவன் கடமையாகும். அது கட்டுப்பாடாகவும் அமையும். சாரணன் கட்டளை தரப்பட்டால் அதை முகமலர்ச்சியோடு ஏற்றுக்கொண்டு சுறு சுறுப்போடு நிறைவேற்ற வேண்டும். மெத்தனமாகவும் வேண்டா வெறுப் புடனும் அதை நிறைவேற்றலாகாது.

## 8. சாரணன் இன்னல்களிலும் புன்முறுவல் புரிபவன்.

தான் ஈடுபட்டுள்ள அலுவல்களில் எதிர்பாராத சங்கடங்கள் உண்டாகும்பொழுது சாரணன் அவைகளைப் பொருட்படுத்தக் கூடாது. ஒருவரையும் கடிந்து கொள்ளாமல், தானும் முணு முணுக் காமல் புன்முறுவலுடன் செயலில் ஈடுபட்டு, ஏற்பட்டுள்ள சங்கடங் களை விலக்கிக் கொள்ள வேண்டும். எவ்வளவு பெரிய இடை யூறுகள் தோன்றினாலும் அவன் முகத்தைவிட்டுப் புன்முறுவல் அகலக் கூடாது.

## 9. சாரணன் சிக்கனமுடையன்

எல்லாக் காரியங்களிலும் சாரணன் சிக்கனத்தைக் கையாள வேண்டும். தன் செலவுகளைக் குறைத்துக் கொண்டு எந்த அளவு சேமித்துவைக்க முடியுமோ அந்த அளவு சேமித்துவைக்க வேண்டும். பொருளைச் சேமித்துவைத்தால்தான் வரும்படி இல்லாத காலத்தில் தான் பிறருக்குப் பாரமாக இல்லாமல் இருக்க லாம். பிறர் யாருக்காவது பணம் கொடுத்து உதவ விரும்பினால்

அதற்கும் சேமித்துவைக்கப்பட்ட பணம் பயன்படும். தனக்கு வேண்டும்பொழுது தன் கையில் பணம் இருந்து வரும்.

சாரணன் பணத்தை வீணாக்காமல் இருப்பது போலவே தன்னுடைய மற்றப் பொருள்களையும் கவனமாகப் பயன் படுத்தவேண்டும். அது போலவே தன் நேரத்தையும் வீணாக்கக்கூடாது. நேரத்தைத் திட்டமிட்டுப் பயன்படுத்த வேண்டும்.

### 10. சாரணன் மனம் மொழி மெய்களில் தூய்மையானவன்.

சாரணன் நல்லதையே பேசி, நல்லதையே செய்வான். தீயது எதுவும் அவன் மனத்தில் புகாது. சாரணனுடை எண்ணம், பேச்சு, செயல் எல்லாம் தூய்மை உடையதாகவே இருக்கும். ஆபாசமான எண்ணங்களுக்கும் பேச்சுகளுக்கும் அவன் இடம் தரமாட்டான். அத்தகையை பேச்சுப் பேசுகிறவர்களை வெறுத்து அவர்கள் கூட்டத்தில் கலந்துகொள்ள மாட்டான். சாரணன் உள்ளத்தில் உதிக்கும் எண்ணங்கள் தூயன. அவனுடைய பேச்சு தூய்மையானது. அவனுடைய செயல்களும் அத்தன்மையானவை.

சாரண இயக்கத் தந்தை **பேடன்-பவலார்** தந்துள்ள இந்த விளக்கத்தின் அடிப்படையில் சாரண விதியைச் சாரணர்களுக்கு விளக்குவது நல்ல பயன் அளிக்கும்.

சாரணர்கள் சாரண விதியை மனப் பாடமாகக் கற்றுக் கொள்வது மிக அவசியம். விதியின் பத்துப் பிரிவுகளையும் வரிசையாக சொற்றொடர்கள் ஒரு சிறிதும் பிறழாமல் எடுத்துரைக்கும் ஆற்றல் மிக மிக முக்கியமானது.

சாரண விதியின் பத்துப் பிரிவுகளையும் வரிசையாய்க் கூற ஆங்கிலத்தில் ஒரு செய்யுளை மனப்பாடம் செய்து கொள்வதுண்டு. அது பின்வருமாறு :

Trusty, Loyal and Helpful,
Brotherly, Courteous, Kind,
Obedient, Smiling and Thrifty,
Pure as the rustling wind.

அது போலவே

‘‘நம்பிக்கை, விசுவாசம், உதவிபுரிதல்,
சோதரத்துவம், விநயம், பிராணி நட்பு,
கீழ்ப்படிதல், முகமலர்ச்சி, சிக்கனம்,
மனம் வாக்குக் காயங்களில் தூய்மை’’

என்ற இந்த நான்கு அடிகள் சாரண விதியின் பத்துப்பிரிவுகளை வரிசையாக நினைவூட்டும்.

சாரண விதியையும் அதன் பத்துப் பிரிவுகளையும் சொல்லளவில் சிறிதும் பிழையின்றி சொற்கள் பிறழாமல் அவைகளை ஒப்பிக்கும் ஆற்றல் முக்கியமானதே யாயினும் அத்தகையை ஆற்றல் மட்டும் பயன் தராது. அந்த ஆற்றல் சாரணன் உள்ளத்தில் உண்மையான ஆசை ஒன்றை வளர்க்க வேண்டும். தன் வாழ்க்கையைச் சீர்திருத்தி அமைக்க அவனைத் தூண்ட வேண்டும். சாரண விதியின் அடிப்படையாக உள்ள பத்துப் பண்புகளையும், அவைகளை உள்ள டக்கிய நல்லொழுக்கத்தையும் கண்ணும் கருத்துமாகப் பாது காக்க அவனைப் பழக்க வேண்டும்.

சாரண விதியைக் கற்பது என்பது விதியின் பத்துப் பிரிவு களுக்குப் பொருந்தும் முறையில் சாரணன் தன் வாழ்க்கையைத் திருத்தி அமைத்துக் கொள்வதாகும். சாரண விதியைக் கற்பது என்பது அதனைக் கசடறக் கற்றலையும் கற்றபின் அதற்குத் தக்கபடி நிற்றலையும் குறிக்கும்.

சாரணர்கள் தங்கள் சிறுவயதில் இருந்தே செய்யத்தக்கது ஒன்று உண்டு. முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி ஒருவர் சிறுவனாக இருக்கும் பொழுது ஒவ்வொரு நாளிரவும் படுக்கைக்குச் செல்லுமுன் தன்னுடைய அந்த ஒரு நாள் வாழ்க்கையில்தான் நடந்து கொண்ட முறையைத் தானாகவே அந்தரங்கமாகத் தணிக்கை செய்து பார்த்துத் தன் வாழ்க்கை முறையைச் சீர்த்திருத்தி வந்தார். பெஞ்சமின் பிராங்க்லின் என்ற அந்தப் பெரியார் நல்லொழுக் கத்துக்குரிய பண்புகளை தன் குறிப்புப் புத்தகத்தில் வரிசையாக எழுதி வைத்து, அவைகளுக்கு எதிராக ஒவ்வொரு தேதிக்கும் ஒரு பத்தியாக வாரத்தில் உள்ள ஏழுநாட்களுக்கும் ஏழு பத்திகள் அமைத்து, அந்தந்த நாள் இறுதியில் அன்று தான் நடந்து கொண்ட முறை என்ன, புத்தகத்தில் தான் குறித்து வைத்துள்ள பண்புகளைப் பாதுகாக்க முடிந்ததா முடியவில்லையா என்று தணிக்கை செய்து, பாதுகாக்க முடிந்த பண்புகளுக்கெதிரில் அடையாளம் எதுவும் போடாமல் பாதுகாக்க முடியாதனவற்றுக்கு எதிரில் × அடை யாளம் செய்து வந்தார். அவர் குறிப்புப் புத்தகத்தில் இப்படியான அடையாளங்கள் ஆரம்பத்தில் பல இருந்தன. ஆனால் நாளடைவில் அவை குறைய ஆரம்பித்து நாளாக நாளாக அவைகளைக் காண்பதே அரிதாயிற்று என்று அப்பெரியாரின் வாழ்க்கை வரலாறு ஒன்று கூறுகிறது.

சாரணர்கள் இந்த முறையைக் கையாளுவதானால் அவர்களுக்கு இது மிகுந்த நன்மை தரும். தங்கள் தங்கள் வாழ்க்கையைக் களங்கமற்றதாக அமைத்துக்கொள்ளும் வாய்ப்பு அளிக்க வல்லது

இந்த முறை. சாரணப் பண்புகள் பத்தையும் வரிசையாக எழுதி அவைகளுக்கு எதிரில் பத்திகள் அமைத்து, ஒவ்வொரு நாள் இரவும் படுக்கைக்குச் செல்லுமுன் தானகவே பண்புத் தணிக்கை செய்யும் பழக்கம் சாரணர்களுக்குப் பொருந்துவதாகும். சாரண ஆசிரியர்கள் இத்தகைய தணிக்கையின் முக்கியத்துவத்தை உணர வேண்டும். உணர்ந்து அதனை வற்புறுத்த வேண்டும்.

# 3. சாரணப் பயிற்சி முறை

## 1. நோக்கங்கள்

சாரணப் பயிற்சியின் முக்கிய நோக்கங்கள் நான்கு. அவை யாவன :

1. **ஒழுக்கத்தை ஓம்புவது**
2. **உடல் நலத்தைப் பேணுவது**
3. **கைத்திறனைப் பெருக்குவது**
4. **தொண்டு மனப்பான்மை உண்டு பண்ணுவது.**

இந்த நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டுள்ள பயிற்சிகள், ஒழுக்கப் பயிற்சி, உடல்நலப் பயிற்சி, கைத்திறப் பயிற்சி, தொண்டாற்றல் பயிற்சி என நான்கு வகைப்படும்.




சாரணப் பயிற்சி என்பது ஒழுக்கத்தை ஓம்பும் பயிற்சி; உடல் நலத்தைப் பேணிப் பாதுகாக்கும் பயிற்சி; கைத்திறனை வளர்க்கும் பயிற்சி; தொண்டு மனப்பான்மையைத் தோற்றுவிக்கும் பயிற்சி. இது புகட்டக்கூடிய பயிற்சி அல்ல. ஒருவன் விரும்பித் தானாகவே ஏற்றுக்கொள்ள வேண்டிய பயிற்சி. சாரணப் பயிற்சி பெற்றுப் பயனடைதலில் சாரணனுக்குள்ள பொறுப்பு மிகப் பெரியது. சாரண அணியும் சாரணப் படையும் இப்பயிற்சிக்குப் பொருத்தமுடைய சூழ்நிலையாக அமைகின்றன. சாரண ஆசிரியர் என்பவர் ஒரு அனுபவம் வாய்ந்த வழிகாட்டி. சாரணத் தோழர்கள் உற்ற துணைவர்களாவார்கள். ஆயின் சாரணன் தனக்குள்ள ஆர்வத்தையும் ஆற்றலையும் பயன்படுத்தித் தானாகவே கற்றுக் கொள்ளல் வேண்டும். சாரணப் பயிற்சி தன் முயற்சியாலேயே செய்முறையில் கற்றுத் தெரிந்துகொள்ள வேண்டிய பயிற்சி.

# ஒழுக்கப் பயிற்சி

ஒழுக்கப் பயிற்சிக்கு உறுதுணையாய் அமைந்துள்ளது சாரண விதி. இதன் பத்துப் பிரிவுகளும் ஒழுக்கத்துக்கு அடிப்படையான பத்துப் பண்புகளைக் குறிப்பன. நம்பிக்கை, உண்மையான விசுவாசம், தொண்டு புரியும் மனப்பான்மை, நட்பும் சோதர உணர்ச்சியும், விநயம், இரக்கம், கட்டுப்பாடும் கீழ்ப்படிதலும், தளரா உள்ளம், சிக்கனம், தூய்மை ஆகிய பண்புகளை சாரணன் தன் நடத்தையால், தன் செய்கைகளால் தன் வாழ்க்கை வழிகாட்டிகளாக அமைத்துக்கொள்வது அவசியம். இப்பண்புகளைத் தன்னிடம் பேணி வளர்த்துக் கொள்ளும் பொறுப்பு சாரணனுக்கே தரப்பட்டுள்ளது. நம்பிக்கை சாரணப் பயிற்சிக்கு அடிப்படை. சாரண ஆசிரியர் சாரணனை நம்புகிறார். நம்பப்படுதலால் சாரணன் நம்பிக்கைக்குப் பாத்திரனாகிறான். தன் ஒழுக்கத்தை நல்ல முறையில் காப்பாற்றுகிறான். நாளடைவில் அவன் நல்லொழுக்கமுடையவனாகவும், நல்ல பண்புகள் படைத்தவனாகவும் திகழ்கிறான்.

சாரண விதியைப் பின்பற்றுதல் ஒழுக்கப் பயிற்சியாக அமைகிறது. சாரண அலுவல்களில் சாரணனுக்குள்ள ஈடுபாடும் ஒழுக்கப் பயிற்சியாகவே பயன் தருகிறது. ஆர்வத்துடன் கையாளப்படும் அணிமுறை சாரணர்களிடையில் அரிய பண்புகளை வளர்க்க உதவுகிறது. அணித்தலைவனுக்கு அளிக்கப்படும் பொறுப்பு அவனுக்கு பொறுப்புணர்ச்சியை ஊட்டுகிறது. சாரணக் கலைகளைக் கற்றல் ஒழுக்கப் பயிற்சியாகவே அமைகிறது. உரிய கட்டுப்பாடுகளுடைய சாரண விளையாட்டுகளில் ஈடுபடுதலும், பாசறை அமைத்து பாசறை வாழ்க்கையில் சாரண நெறியைப் பின்பற்றலும் ஒழுக்கப் பயிற்சியாகவே அமைகின்றன. பாசறை வாழ்க்கையில் தலத்தில் கிடைக்கக்கூடிய பொருள்களைப் பயன்படுத்தி அந்த நேரத்தில் தனக்கு அவசியமான அமைப்புகளை அமைத்துக் கொள்ளுதலும் ஒழுக்கப் பயிற்சியாகவே முடிகிறது. இப்படி மக்கள் வாழ்க்கைக்கு மிகவும் அவசியமான பல நற்பண்புகளை வளர்க்க சாரணப்பயிற்சி உதவுகின்றது.

சாரண பயிற்சிக்குரிய இடம் திறந்தவெளி வட்டாரங்களே ஆகும். இயற்கையன்னையின் எழிலைக்கண்டு மகிழ்வுறும் வாய்ப்புகள் சாரணர்களுக்கு அவ்வப்போது கிட்டுகின்றன. இயற்கையில் உள்ள அதிசயங்களைக்கண்டு மகிழ்தல், இயற்கையைப் பயன்படுத்தல், இயற்கையைப்பற்றிச் சிந்தித்தல், அகில உலகங்களையும் படைத்துக் காக்கும் இறைவனுடைய பெருமையை உணர்தல், அவ்விறைவன் தன் படைப்புக்களிடம் வைத்துள்ள எல்லையற்ற அன்பினை உணர்ந்து

கொள்ளல் போன்ற அனுபவங்களும் ஒழுக்கப் பயிற்சியாகவே பயன்படும்.

## உடல் நலப் பயிற்சி

பற்பல விளையாட்டுகளில் பங்கு கொண்டு சாரணர்கள் தங்கள் உடல் நலத்துக்குரிய பயிற்சி பெறுகிறார்கள். சாரண அலுவல்களும், சாரணப் பயிற்சியும் திறந்த வெளியிடங்களிலேயே நடப்பதால் சுகாதார முறைப்படி வாழும் வாய்ப்பு சாரணர்களுக்குக் கிடைக்கிறது. சுகாதார முறைகளைக் கற்றுத் தெரிந்து கொண்டு அவற்றிற்கு பொருந்தும் முறையில் தங்கள் உணவையும் உடற் பயிற்சியையும் சாரணர்கள் கையாளுவதால் சாரணர்களிடையில் உடல் நலம் ஓங்கி வளர்கிறது. வெளி வட்டாரங்களில் இயற்கை எழில் நிறைந்த சூழ்நிலையில் சாரணர்கள் தங்கள் அலுவல்களை யும் பயிற்சிகளையும் கையாளுவதால் அவர்களுக்கு உடல்நலத்தோடு உளநலமும் உண்டாகிறது.

## கைத்திறப் பயிற்சி

கைகளால் பொருள்களை அமைத்துக் கொள்ளும் திறன் கைத் திறன் எனப்படும். கைத்திறனைப் பெருக்குவது சாரணப் பயிற்சியின் நோக்கங்களுள் ஒன்று. கைத்திறனை வளர்க்கவல்ல கலைகள் சாரண பயிற்சித் திட்டத்தில் சேர்க்கப் பட்டுள்ளன. இந்தக் கலைகளில் பங்கு கொள்வதால் கைத்திறன் பெருகுகிறது என்று கூறலாம். இப்படி யான கலைகளில் ஈடுபடுவது தவிர சாரணர் பலவிதமான பொருள் களைத் தங்கள் கையால் செய்து பழகுவதும் சாரணப் பயிற்சியில் அடங்கும்.

கைத்திறப் பயிற்சியாக அமைகின்ற சாரணக் கலைகளில் முக்கியமானது அமைத்தல் கலை (Pioneering). இதை ஆக்கல் கலை என்றும் கூறலாம். பாலம் அமைத்துப் பழகுதல், குடிசைகள் கட்டல், கூடாரம் அமைத்தல் போன்ற அலுவல்கள் கைத்திறப் பயிற்சியாக அமைகின்றன. பாசறை வாழ்க்கையில் பாசறை வசதிகளை (Camp gadgets) உருவாக்குதலும், தலத்தில் கிடைக்கக்கூடிய பொருள்களைக் கொண்டு தற்சமயம் தனக்கு அவசியமாயுள்ளவைகளை அமைத்துக் கொள்ளுதலும் கைத்திறனை வளர்க்கும் இயல்புடையது. பாசறையிலும் ஏனைய இடங்களிலும் நடைபெறுவனவற்றைச் சித்திரமாக எழுதல், ஓவியம் தீட்டல் முதலிய செயல்களும் கைத்திறனை வளர்ப்பனவே. இவை அனைத்தும் கைத்திறனைப் பெருக்குவதோடு, எதைச் செய்யினும் அதை அழகாகவும், ஒழுங்காகவும் செய்து முடிக்க வேண்டும் என்ற ஆர்வத்தையும் சாரணர்களுக்கு அளிக்கும் இயல்புடையன.

## தொண்டாற்றல் பயிற்சி

சாரணர்கள் நல்ல முறையில் நல்லமன எழுச்சியோடு தொண்டு புரியும் மனப்பான்மை உடையவர்களாய் இருத்தல் மிக அவசியம். தொண்டாற்றல் பயிற்சி நாளும் ஒரு நற்பணி என்ற பழக்கத்தில் ஆரம்பம் ஆகிறது. சாரணன் குருளையனாய் இருக்கும்போதே சாரணனுக்கு இந்தப் பழக்கம் ஏற்படுகிறது. குருளையன் செய்யும் நற்பணிகள் மிகச் சாதாரணமானவை. சாரணனே புதுப்புது மாதிரியான நற்பணிகள் செய்யும் வாய்ப்பு உடையவன். புதுப்புது நற்றொண்டுகள் செய்வதோடு சமுதாயத் தொண்டுகளிலும் அவன் பங்கு கொள்கிறான். தீ விபத்துக்களில் தண்ணீர் விபத்துக்களில் முதல் உதவி செய்ய முன் வருகிறான். சாரணட பயிற்சி சாரணனை அன்பர் பணிசெய்ய ஆளாக்கி விடுகின்ற சிறப்புடைய பயிற்சி.

சாரணப் பயிற்சி சாரணச் சிறுவர்களின் ஒழுக்கத்தையும், உடல் நலத்தையும் வளர்த்து, அவர்களது கைத்திறனைப் பெருக்கி, அவர்களுக்குத் தொண்டாற்றும் ஆர்வத்தையும் ஆற்றலையும் தந்து குடிமை உணர்ச்சியை (Citizenship) அளிக்கின்றது என்பது உண்மை.

## 2. நிபந்தனைகள்

சாரண இயக்கத்தில் சேர்வதற்கு இரண்டொரு நிபந்தனைகள் உண்டு.

(1) சாரண இயக்கத்தில் சேரும் சிறுவர்கள் ஆசிரியர்கள் ஆணையாளர்கள் எல்லோரும் இறை நம்பிக்கை உள்ளவர்களாய் இருக்க வேண்டும். சாரண இயக்கத்தில் நாத்திகர்களுக்கு இடமில்லை. சாரண வாக்குறுதி இறை நம்பிக்கையின் அடிப்படையில் உள்ளது.

சாரண இயக்கத்தில் உள்ள சாரணர்களும், ஆசிரியர்களும், ஆணையாளர்களும் தங்கள் தங்கள் சமயக் கொள்கைகளைப் முழு மனதுடன் பின் பற்றல் வேண்டும். அதோடு பிறசமயங்களையும், பிற சமயத்தார்களையும் நன்கு மதித்து நடத்தலும் வேண்டும்.

(2) சாரண இயக்கத்திலுள்ள சாரணர்களும், ஆசிரியர்களும், ஆணையாளர்களும் கட்டுப்பாடுடைய வாழ்க்கையைக் கடைபிடித்தல் வேண்டும். அவர்களுடைய வாழ்க்கைமுறை பொதுமக்கள் போற்றத் தகுந்ததாய் இருத்தல் வேண்டும். சாரணர்களைப் போலவே சாரண ஆசிரியர்களும், ஆணையாளர்களும் சாரண விதியைப் பின்பற்றி அதற்கேற்பத் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

(3) சாரண இயக்கத்தில் சேரும் ஒருவர் தம் முழுமனதுடன் சேர்ந்து கொள்ளல் வேண்டும். பிறர் எவருடைய கட்டாயத்துக்காக அல்லது தூண்டுதலுக்காகச் சேர்வது கூடாது.

(4) சாரணப் பயிற்சி அளித்தற்குரிய இடம் திறந்தவெளி வட்டாரங்களே. சாரணப் பயிற்சியை திறந்தவெளி வட்டாரங்களில் இயற்கைச் சூழ்நிலையில் நடத்துவது மிக அவசியம். வீட்டில் உள்ள அறைகளிலே, பள்ளிகளில் உள்ள கூடங்களிலே நடத்தப்படும் சாரணப் பயிற்சி பயன் அளிக்காது.

(5) பயிற்சி பெறுகிறவர்களின் வயதுக்கும் மனப்பான்மைக்கும் தகுந்த முறையில் சாரணப் பயிற்சி அளித்தல் வேண்டும். அந்தந்த வயதினர்க்கு ஏற்ற பயிற்சி அதற்குரிய முறையிலேயே அளிக்கப்பட வேண்டும்.

இவ்வைந்து நிபந்தனைகளும் மிக முக்கியமான நிபந்தனைகள். இவைகளைப் பின்பற்றுவது அவசியம்.

## சாரணப்பயிற்சியும் சமயக்கொள்கையும்

சாரணன் ஒவ்வொருவனும் இறை நம்பிக்கை உடையவனாக இருக்கவேண்டும். இறை நம்பிக்கை இருப்பதோடு அவனுக்கு இறைவனிடத்தில் பக்திவேண்டும். தனக்குரிய சமயக் கடமைகளை தன் பெற்றோர்கள் விருப்பத்திற்கிணங்க அவன் சரிவரச் செய்து முடிக்கவேண்டும். பிற சமயங்களை இகழ்தல் கூடாது. பிறசமயங்களையும் பிற சமயத்தார்களையும் மதித்து நடத்தவேண்டும். இது சாரணப் பயிற்சிபெறும் சாரணனுக்குரிய கடமை.

இறை நம்பிக்கையும் இறை பக்தியும் சாரணப் பயிற்சிக்கு அடிப்படையாக உள்ளது. சாரணக் கூட்டங்கள் நடைபெறும்பொழுதும் சாரணப் பாசறைவாழ்க்கை நடைபெறும் பொழுதும், மற்றைய நேரங்களிலும், சாரணர்கள் எதைச் செய்தாலும் அதைக் கடவுளுக்கே அர்ப்பணித்துச் செய்யக் கற்று பழகுகிறார்கள். எதைத் தொடங்கும் போதும் இறைவணக்கத்தோடுதான் தொடங்குவார்கள்.

இறைவணக்கம் என்பது இறைவனை நினைந்து கொள்ளுதல், இறைவனிடம் பக்தி கொண்டவர்களாய் இவ்வுலகத்தில் நாம் அடையும் நன்மைகளுக்காக இறைவனுக்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுதல், வாழ்க்கையில் வழிதவறுங்கால் நம்மைத்

தடுத்தாட்கொண்டு நல்லவழியில் திருப்பிவிடவேண்டும் என்று இறைவனை மன்றாடிக் கேட்டுக் கொள்ளுதலும் ஆகும்.

தனக்குள்ள வசதிக்கு இணங்க ஒவ்வொரு சாரணனும் ஒவ்வொரு நாளும் இறைவனை வணங்கி வழிபடவேண்டும். ஒரு சில சொற்களால் தனயன் தந்தையிடம் விண்ணப்பித்து கொள்வது போல விண்ணப்பித்து இறை வணக்கம் செய்யலாம். அல்லது சமய நூல்களில் பெரியோர்களால் இயற்றப்பட்டுள்ள பாடல்களைப் பாடி மனம் உருகி இறைவ வணக்கம் செய்யலாம்.

## தயாக்கர்தான்

என்ற இறை வணக்கப்

பாட்டு

சாரணர்களும் சாரணிகளும் பெருங்கூட்டமாக உள்ள பொழுது எல்லோரும் ஒன்று சேர்ந்து இறைவணக்கத்தில் ஈடுபட **தயாக்கர்தான்** என்று ஆரம்பமாகும் பாட்டை நம் பாரத சாரண சாரணிகள் சங்கத்தார் வகுத்தளித்துள்ளார்கள். அந்த இறைவணக்கப் பாடல் பின்வருமாறு

தயாக்கர் தான் பக்திக்காக
ஹமே பரமாத்மா தேனு
தயாக்கர்னு ஹமாரி ஆத்துமாமே
சுத்ததா தேனு (தயாக்கர்)

ஹமா ரா தியானமே ஆ ஓ
பிரபோ ஆங்கோ ங் மே பஸ்ஜாஓ
அந் தே ரே தில்மேஆக்கரக்கே
பரம ஜோதி ஜகா தேனு (தயாக்கர்)

பஹாதோ பிரேமகி கங்கா திலோம்மே
பிரேம் கா சாகர்
ஹமே ஆபஸ்மே மிலஜுல்கர்
பிரபு ரஹ்னு சிக்கா தேனு (தயாக்கர்)

ஹமாரா தர்மஹோஸே ஹமாரா கர்மஹோ சேவா
ஸதா இ மான்ஹோ சேவா, சேவகசர்
பனுதேனு (தயாக்கர்)

வதனுக்கே வாஸ் தே ஜீனு
வதனுக்கே வாஸ் தே மரனு
வதனு பபர் ஜான் பிதாகர்னு
பிரபு ஹம்கோ சிகா தேனு (தயாக்கர்)

**இந்தியில் உள்ள இந்தப் பாட்டின் கருத்து பின்வருமாறு :**

பரம் பொருளே ! இறை பக்தியாகிய தானத்தை எங்களுக்கு அருள வேண்டும். எங்கள் ஆத்துமாவில் பரிசுத்தம் நிலவச் செய்ய வேண்டும். எல்லாம்வல்ல இறைவனே ! எங்கள் சிந்தைகளை விட்ட கலாமல் எப்பொழுதும் அங்கு தங்கி இருக்கவேண்டும். எங்கள் பார்வைகளிலும் இருள் நிறைந்துள்ள எங்கள் இதயங்களிலும் அமர்ந்து உத்தமமான ஒளிவீசி எங்களை நல் வழியில் செலுத்த வேண்டும். எங்கள் உள்ளங்களில் அன்பு கங்கையாகப் பெருக் கெடுத்து ஓடட்டும். எங்கள் இதயங்களில் அருள் கடலாக விளங் கட்டும். நாங்கள் ஒருவரோடொருவர் ஒன்றுகூடி ஒற்றுமையாக வாழ எங்களுக்குக் கற்றுத்தர வேண்டுகிறோம். எங்கள் கடமையோ தொண்டுபுரிதல் ஆகும். எங்களுக்குரிய தருமமும் அதுவே. நாங்கள் சிறந்த தொண்டர்களாகத் திகழ எங்களுக்கு அருள்புரிய வேண்டுகிறோம். நாட்டுக்காக வாழவும் நாட்டுக்காக உயிர் துறக்கவும் பிரபுவே எங்களுக்குக் கற்றுத்தர வேண்டுகிறோம்.

## தமிழில் இறை வணக்கம்

இறை வணக்கம் இந்தியில் உள்ளது. தமிழ்நாட்டுச் சாரணர் களுக்காக இந்தப் பாட்டு 'தயாக்கர்தான்' வருண மெட்டிலேயே பாடக்கூடிய விதத்தில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. அது பின் வருமாறு :

''பரம் பொருளே ஞான பக்தி தா !
    பரமேச்வரனே தூய்மை தா !
நிரந்தரமாக எம் உள்ளத்தில்
    நிறைபிறழாத வரத்தைத் தா !
இருளே சூழ்ந்த எம் இதயத்தில்
    எழிலே நிறைந்த ஒளியே வா !
அருளே சுரந்த பரஞ்சோதி
    அன்பே உருவின் மலையே வா !    (பரம் பொருளே)

''ஒன்றுய்க்கூடி வாழ்கின்ற
    உயர்ந்த பண்பைக் கற்றுத்தா !
என்றும் கடமை நாட்டுக்கு
    இனிதாய்ச் செய்யக் கற்றுத்தா !
அன்பே எங்கள் நதியாக
    அருளே எங்கள் கடலாக
பண்பே எங்கள் செயலாக
    படித்துத் தருவாய் பரம்பொருளே    (பரம் பொருளே)

"எங்கள் தொழிலோ ஜன சேவை
எங்கள் அறமோ பொதுத் தொண்டு
எங்கள் உழைப்போ நாட்டுக்கு
என்றும் செய்ய உரிமை தா!

தாய் நாட்டுக்காக உழைத்திடவும்
சேவைபுரிந்து மாய்ந்திடவும்
வாய்மை உயிரும் உணர்வாக
வகையாய் நிற்க வரமருள்வாய்! (பரம் பொருளே)

குறிப்பு: தமிழ் நாட்டுச் சாரணர்கள் சாரணிகள் இறை வணக்கமாக இந்தப் பாடலைப் பாடலாம் என்று தமிழ் நாட்டுச்சாரண சாரணியர் சங்கம் தன் இசைவு தெரிவித்துள்ளது. **"தயாக்கர்தான்"** பாட்டு வருண மெட்டில் அமைந்துள்ளதால் அந்தப் பாட்டு பாடப்படும்போது அதோடு சேர்ந்து பாடவல்ல வசதியை இந்தத் தமிழாக்கம் அளிக்கின்றது.

## வேறு இறைவணக்கப் பாட்டுகள்

தேவாரம், நாலாயிரப் பிரபந்தம், தாயுமானவர் பாடல், இராமலிங்கவள்ளலார் பாடல், தேம்பாவணி, இரட்சணிய யாத்திரை, சீருப்புராணம் முதலிய சமய நூற்களிலிருந்து எடுக்கப் பட்டுள்ள சில இறை வணக்கப் பாடல்களும் இங்கு தரப்பட்டுள்ளன. இந்தப் பாடல்களையும் சாரணர்கள் இறை வணக்கமாகப் பாடலாம்.

### (1)

அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்தது எது? தன் அருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி எல்லாம்
தங்கும்படிக்கு இச்சைவைத்து உயிர்க்குயிராய்
தழைத்தது எது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றது எது?
சமய கோடிகள் எல்லாம் தம்
தெய்வம் எம் தெய்வம் என்று
எங்கும் தொடர்ந்து எதிர் வழக்கிடவும்
நின்றதெது? எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்ல ஒருசித்தாகி இன்பமாய்
என்றைக்கும் உள்ளது எது? மேல்
கங்குல் பகலற நின்ற எல்லை உளது எது?
அது கருத்திற் கிசைந்த அதுவே!
கண்டன வெலாம் மோன உருவெளியதாகவும்
கருதி அஞ்சலிசெய்குவாம் —தாயுமானவர்

## (2)

ஒருமையுடன் நினது திருமலரடி
நினைக்கின்ற உத்தமர் தம் உறவு வேண்டும்,

உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்;

பெருமை பெறு நினது புகழ் பேசவேண்டும்;
பொய்மை பேசாதிருக்க வேண்டும்;

பெரு நெறி பிடித் தொழுக வேண்டும்; மதமான
பேய் பிடியாதிருக்க வேண்டும்;

மருவு பெண்ணாசையை மறக்கவே
வேண்டும்; உனைமறவாதிருக்க வேண்டும்;

மதிவேண்டும்; நின்கருணை நிதிவேண்டும்;
நோயற்ற வாழ்வை நான் வாழவேண்டும்;

தருமம் மிகு சென்னையில் கந்த கோட்டத்துள் வளர்
தல மோங்கு கந்த வேளே!
சண்முகத்துய்ய மணி! உண்முகத் தெய்வமணி!
சண்முகத் தெய்வமணியே!

—இராமலிங்க வள்ளலார்

## (3)

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே!
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே!
வல்லார்க்கும் மாட்டார்க்கும் மதி கொடுக்கும் மதியே!
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் வரம் அளிக்கும் வரமே!
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நலமளிக்கும் நலமே!
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நடுநின்ற நடுவே!
எல்லார்க்கும் பொதுவில் நடம் ஈடுகின்ற சிவமே!
என்னரசே யான் புகலும் இசையும் அணிந்தருளே!

—இராமலிங்க வள்ளலார்

## (4)

ரகுபதி ராகவ ராஜாராம்!
பதித பாவன சீதாராம்!
ஈச்வர அல்லா தேரேநாம்,
சபுகோ சன்மதி தே பகவான்

—நரசி மேத்தா

[இது காந்திஅடிகளுக்கு மிகவும் பிடித்தமான பாட்டு]

## (5)

உயர்வற உயர்நலம் உடையவன் யவன்அவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவன்அவன்
அயர்வறும் அரக்கர்கள் அதிபதி யவன்அவன்
துயர்அறு சுடர்அடி தொழுதெழு என்மனனே

—நம்மாழ்வார்

## (6)

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா! உன்னடி என்மனத்தே
வழுவாதிருக்க வரம் தரவேண்டும்; இவ்வையகத்தே
தொழுவார்க்கு இரங்கிஇருந்து அருள்செய் பாதிரிப் புலியூர்ச்
செழுநீர்ப்புயல் கங்கை செஞ்சடைமேல் வைத்த தீவண்ணனே!

—தேவாரம்

## (7)

வானமும் பூமியும் மகிழ் கொண்டு ஓங்கிட
ஞானமும் நன்மையும் நனி சிறந்திட
ஊனமும் பாவமும் ஒழியத் தோன்றிய
தீன ரட்சகன் பதம் சிந்தித்து ஓதுவாம்

—H. A. கிருட்டின பிள்ளை

## (8)

இருவிழி சிவந்து கனல் பொறி தெறிப்ப
எடுத்த கைக் கதையினுல் உறுக்கி
வரும் அவர் எதிர் நின்று ஒருமொழி கேட்ப
மறுமொழி கொடுத்திட அறியேன்.
தருமமும் பொறையும் அறிவும் மற்றறிந்து
உன் தன்னையும் என்னையும் அறியப்
பெருவரம் தருவாய் ஆதிநாயகனே!
பேதியாச் சோதிமா முதலே!

—உமறுப்புலவர்

## (9)

அறக்கடல் நீயே, அருட்கடல் நீயே,
அரும் கருணுகரன் நீயே;
திறக்கடல் நீயே, திருக்கடல் நீயே,
திருந்து உளம் ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே, நிகர் கடந்து உலகில்
நிலையும் நீ, உயிரும் நீ, நிலைநான்
பெறக்கடல் நீயே, தாயும் நீ, எனக்கு
பிதாவும் நீ, அனைத்தும் நீயன்றே!

—வீரமாமுனிவர்

## (10)

திருவினும் திருவாய் பொருளினும் பொருளாய்த்
தெளிவினும் தெளிவாய்ச் சிறந்த
மருவினும் மருவாய் அணுவினுக் கணுவாய்
மதித்திடும் பேரொளி அனைத்தும்
பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்
பூதலத்துறை நத பல்லுயிரின்
கருவினும் கருவாய்ப் பெருந்தவம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே

—உமறுப் புலவர்

## (11)

காணும் கரணங்கள் எல்லாம் பேரின்பம் எனப்
பேணும் அடியார் பிறப்பு அகலக் காணும்
பெரியானை நெஞ்சே, பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப்பேசு.

—மாணிக்கவாசர்

### "ABIDE WITH ME"
### என்ற இறைவணக்கப் பாடலை
### ஒட்டிய கீதம்

1. என்னோடிரும், மா நேச கர்த்தரே,
வெளிச்சம் மங்கி இருட்டாயிற்றே;
மற்றோர் சகாயம் அற்ற போதிலும்,
நீங்கா ஒத்தாசை நீர், என்னோடிரும்.

2. நீர்மேல் குமிழிபோல் என் ஆயுசும்,
இம்மையின் இன்ப வாழ்வும் நீங்கிடும்;
கண் கண்ட யாவும் மாறி வாடிடும்,
மாறுத கர்த்தர் நீர், என்னோடிரும்.

3. நியாயம் தீர்ப்போராக என்னண்டை
வராமல், சாந்தம், தயை, கிருபை
நிறைந்த மீட்பராக சேர்ந்திடும்,
நீர் பாவி நேசரே, என்னோடிரும்.

4. நீர் கூடநின்று அருள் புரியும்;
பிசாசின் கண்ணிக்கு நான் தப்பவும்,
என் துணைநீர், என் தஞ்சமாயிரும்,
இக்கட்டில் எல்லாம் நீர் என்னோடிரும்.

5. நீர் ஆசீர்வதித்தால் கண்ணீர் விடேன்;
நீரே என்னோடிருந்தால் அஞ்சிடேன்;
சாவே, எங்கே உன் கூரும் ஜெயமும்?
நான் உம்மால் வெல்லநீர் என்னோடிரும்.

6. நான் சாகும் அந்தகார நேரத்தில்
உம் சிலுவையைக் காட்டும்; சாகையில்
விண் ஜோதி வீசி, மருள் நீக்கிடும்;
வாழ்நாள் சாங்காலிலும் என்னோடிரும்.

[குறிப்பு-இந்த இறைவணக்கப் பாட்டு கிறித்துவக் கோயில்களில் பாடப்படுகிறது. வசனங்கள் அங்கு பாடபப்படும் முறையில் உள்ளன.]

## "LEAD KINDLY LIGHT"
என்ற இறைவணக்கப் பாடலை
ஒட்டிய கீதம்

காரிருளில் என் நேச தீபமே,
நடத்துமேன்;
வேறொளியில்லை, வீடும் தூரமே,
நடத்துமேன்;
நீர் தாங்கின், தூரக்காட்சி ஆசியேன்!
ஓர் அடிமட்டும் என் முன்காட்டுமேன்.
என் இஷ்டபடி நடந்தேன் ஐயோ!
முன்னாளிலே;
ஒத்தாசை தேடவில்லை; இப்போதோ
நடத்துமே;
உல்லாசம் நாடினேன், திகிலும்
வீம்பு கொண்டேன், அன்பாக மன்னியும்.
இம்மட்டும் என்னை ஆசீர்வதித்தீர்;
இனி மேலும்
காடாறு சேறு குன்றில் தேவரீர்
நடத்திடும்;
உதய நேரம் வர, களிப்பேன்;
மறைந்து போன நேசரைக் காண்பேன்.

[குறிப்பு—இந்த இறைவணக்கப் பாட்டு கிறித்துவக் கோயில்களில் பாடப்படுகிறது. வசனங்கள் அங்கு பாடப்படும் முறையில் உள்ளன.]

இவைகளையும் இவை போன்ற பிறபாடல்களையும் இறை வணக்கமாகப் பாடலாம். கூடியிருக்கும் சாரணர்கள் எல்லோரும் ஒன்றுகச் சேர்ந்து பாடுவது நல்லது. அல்லது ஒவ்வொரு அடியாக ஒருவர் பாட அவரைப் பின்பற்றி மற்றவர்கள் பாடலாம். ஒவ்வொரு சாரணனுக்கும் தானும் சேர்ந்து பங்கு கொள்ளும் உணர்ச்சி உண்டாவது மிகவும் விரும்பத்தக்கது.

இறைவணக்கம் பாடி முடிந்ததும் ஆசிரியர், அல்லது அணித் தலைவர்களுள் ஒருவர், அல்லது பிறர் யாராவது, சிந்தனைக்குரிய வாசகம் ஒன்றைப் படிக்கலாம். நீதி நூல்களில் இருந்து அல்லது சமய நூல்களில் இருந்து சாரண வாழ்க்கைக்குப் பொருந்தும் சிறப்பு வாய்ந்த பாடல்களை அல்லது வாக்கியங்களைப் படித்தலும் பொருந்தும்.

இறைவனுக்கு விண்ணப்பம் செய்து கொள்ளும் முறையில் சாரண ஆசிரியர் இரண்டொரு வார்த்தைகள் இறை வணக்கமாக கூறுவதும் பொருத்தமுடையதே.

சாரணர்களை உண்மையான சாரணர்களாக்க, மக்களுக்குத் தொண்டு புரியும் ஆர்வத்தையும் ஆற்றலையும் அளிக்க, பிராணிகளுக்கும் பறவைகளுக்கும் தொண்டு புரியும் ஆர்வத்தையும் ஆற்றலையும் அளிக்க, சாரண விதிப்படித் தங்கள் வாழ்க்கையை நடத்தி வெற்றியடைய, நாட்டுக்கும் நாட்டினர்க்கும் உண்மையோடு உழைத்தற்குரிய மனப்பான்மை அளிக்க இறைவனை வேண்டிக் கொள்ளலாம். இதுவும் இறைவணக்கம் ஆகும்.

# 4. சேர்ந்து பங்கு கொளல்

சாரணப் படையில் சேர்ந்து பங்கு கொள விரும்பும் சிறுவன் 11 வயது நிறைந்தவனாக இருக்கவேண்டும், ஆனால் 17 வயது நிரம்பியவனாக இருக்கக்கூடாது.

சாரணப் படையில் சேர்வதால் தான் அடையப் போகும் புதுமையான அனுபவங்களைப் பற்றி அவன் தெரிந்திருப்பது அவசியம். சாரண இயக்கத்தின் வரலாற்றைப் பற்றி ஒரு சிறிது தெரிந்திருத்தலும் வேண்டும்.

இவை தவிர அவனைச் சாரணப் படையில் சேர்த்துக் கொள்வதற்கு வேறு சில தகுதிக் கட்டுப்பாடுகளும் உண்டு. அவைகளைப் பெற்றிருந்தால் சாரணச் சின்னம் சூட்டி அவனைச் சாரணனாக ஏற்றுக்கொள்ளப்படும். சின்னம் சூட்டுதல் ஒரு சடங்காக அமையும்.

## சின்னம் சூட்டல்

சாரண வாழ்க்கையில் சாரணனுக்கு ஏற்படுகின்ற சாரணச் சடங்குகளுள் முக்கியமானது சின்னம் சூட்டல் ஆகும். இளம் பாதப் பயிற்சியை வெற்றிகரமாக முடித்துக் கொண்டுள்ள சிறுவன் முதன் முதல் சாரணச் சீருடை அணிந்து தன் சாரணப்படை முன்னிலையில் சாரண வாக்குறுதி அளிக்கும் மகத்தான பேற்றினைப் பெறுகிறான். தன் சோதரச் சாரணர்கள் முன்னிலையில் சாரண வாக்குறுதி செய்ததும் அவன் சாரணன் என்ற உயர்ந்த பதவியை அடைகிறான். அது முதல் எல்லோரும் அவனைச் சாரணன் என்று அழைப்பார்கள். அவனுடைய சாரண வாழ்க்கை அன்று முதல் ஆரம்பமாகிறது. சாரணர்களுக்குரிய எல்லாப் பொறுப்புகளும் அது முதல் அவனுக்கு உண்டாகின்றன. அவற்றுள் மிக முக்கியமானது சாரணன் என்ற பெயரைக் காப்பாற்றிக் கொள்வது ஆகும்.

சின்னம் சூட்டலுக்காகத் தனியாக ஒரு படைக் கூட்டம் கூட்டலாம் அல்லது சாதாரண படைக் கூட்டம் நடைபெறும் பொழுது அதைத் தொடர்ந்து சின்னம் சூட்டலும் நடைபெறலாம்.

சின்னம் சூட்டலில் கலந்து கொள்ளும் சாரணர்கள், சாரண ஆசிரியர்கள் எல்லோரும் சீருடை அணிந்திருத்தல் வேண்டும். புதிதாகச் சேரும் சிறுவனும் சீருடை அணிந்திருத்தல் வேண்டும். ஆனால் சாரணச் சின்னம், கழுத்துப்பட்டி, அணிச்சின்னம் ஆகிய வைகளை மட்டும் அணியக் கூடாது. சடங்கு நடக்கும் பொழுது இவைகள் அவனுக்குக் கொடுக்கப்படும்.

சின்னம் சூட்டல் நடைபெறும் பொழுது மக்கள் கூட்டம் இருத்தல் கூடாது. பொதுமக்களாவது, சாரணர்களின் பெற்றோர் களாவது வரவேண்டுவதில்லை. புதுப்பையன் விரும்பினால் அவனு டைய பெற்றோர்களை அழைக்கலாம். சாரணத் தொகுப்பு ஆசிரியர் இருப்பின் அவரைக் கட்டாயம் அழைக்கவேண்டும். பெரிய கூட்டம் புதுப்பையனுக்கு வீண் பயத்தை உண்டு பண்ணும். சின்னம் சூட்டல் சடங்கின் புனிதத் தன்மையையும் கெடுத்துவிடும்.

## சின்னம் சூட்டல் அணி வகுப்பு

சாரணப் படைக் கூட்டங்கள் பொதுவாக குதிரை லாட வட்டத்தில் அமையும். சின்னம் சூட்டலுக்கும் அந்த அணிவகுப்பு பயன்படுத்தப்படும்.

குதிரை லாட அணிவகுப்பில் சாரண அணிகள் குதிரை லாட உருவத்தில் நிற்கும். குதிரை லாடத்தின் புகு முகத்தில் கொடிக் கம்பம் நட்டு அதன் உச்சியிலிருந்து கொடி பறக்க விடப்பட்டி ருக்கும். கொடிக்கம்பத்துக்கு சிறிது பின்னால் மூன்று தப்படி தொலைவில் ஒரு வரிசையாக சாரண ஆசிரியரும், உதவி ஆசிரியர் களும், பார்வையாளர்கள் இருப்பின் அவர்களும் நிற்பர்.

இந்த அணிவகுப்பில் ஏனைய அணிவகுப்புகளில் போல அணித் தலைவர்கள் தங்கள் தங்கள் அணியின் வலது கோடியில் நிற்பார்கள். உதவித்தலைவர்கள் அணியின் இடது கோடியில் நிற்பார்கள். மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது சாரணர்கள் அணித்தலைவனுக்கு இடது பக்கமாக தங்கள் எண் வரிசையில் நிற்பார்கள். புதிதாய்ச் சேர இருக்கும் சிறுவனும் தான் சேரப்போகும் அணியில் நிற்பான்.

கொடிக்கம்பத்தின் பின் பக்கம் உள்ள வரிசையில் வலது பக்கம் கடைசியில் சாரண ஆசிரியரும் அவருக்கு இடப்புறம் ஏனைய ஆசிரியர்களும் இருப்பார்கள்.

கொடிக்கம்பத்தை ஒட்டி ஒரு மேஜை மேல் சாரணச் சின்னம், கழுத்துப்பட்டி, சாரணத் தண்டம் ஆகியவை வைக்கப்பட்டிருக்கும்.

சாரணத் தண்டத்தில் கட்டப்பட்டுள்ள ஒரு சாரணக் கொடியும் அங்கு வைக்கப்பட்டிருக்கும்.

ஒரே நாளில் ஒன்று அல்லது இரண்டு சிறுவர்களுக்கு மட்டுமே சின்னம் சூட்டலாம்.

## சின்னம் சூட்டல் சடங்கு

சடங்கு ஆரம்பத்தில் சாரண ஆசிரியர் தவிர மற்றெல்லா ஆசிரியர்களும் அணித்தலைவர்களும் சாரணர்களும் தாங்கள் நிற்க வேண்டிய இடங்களில் நிற்பார்கள். எல்லோரும் தங்கள் தங்கள் இடங்களில் ஒழுங்காய்ச் சீருடை அணிந்து நிற்கின்றார்களா என்பதை உதவி ஆசிரியர் சரிபார்க்க வேண்டும். உதவி ஆசிரியர் இல்லையானால் அணித்தலைவர்களுள் ஒருவருக்கு அந்தப் பொறுப்பு கொடுக்கப்படலாம்.

ஒவ்வொரு அணியும் நிற்கவேண்டிய இடத்தில், நிற்க வேண்டிய முறையில் நின்றபின் உதவி ஆசிரியர் (அல்லது அணித்தலைவன்) சாரணப் படையை தளர் நிலையில் விட்டுவிட்டு சாரண ஆசிரியர் பக்கம் சென்று அறிவித்தல்வேண்டும். சாரண ஆசிரியர் படையை நோக்கி வருவார். உதவி ஆசிரியர் முன் சென்று படைக்கு நேர்நிலைக் கட்டளை தந்து ஆசிரியரை வரவேற்று சாரண வணக்கம் அளிப்பார். சாரண ஆசிரியரும் வணக்கம் செய்வார். அதற்குப் பிறகு படைக்குரிய கட்டளைகளைச் சாரண ஆசிரியர் தாமே கொடுப்பார்.

சாரண ஆசிரியர் வட்டத்துக்குள் ஒன்று அல்லது இரண்டு தப்படி முன் சென்று நின்று கொண்டு குறிப்பிட்ட அணித்தலைவனை அழைத்து புதிதாகச் சேர இருக்கும் சிறுவனைத் தன் முன் கொண்டுவரக் கட்டளை கொடுப்பார். அணித்தலைவனும் அந்தச் சிறுவன் நிற்கும் இடம் சென்று அவனுடன் முறையான நடைபோட்டு இருவரும் ஆசிரியர் பக்கம் வருவார்கள். வந்ததும் அணித்தலைவன் சிறுவனை ஆசிரியர் முன் நிறுத்திவிட்டுத் தான் அவனுக்குப் பின் சென்று நிற்பான்.




9. சின்னஞ் சூட்டலுக்குரிய அணிவகுப்பு

இதற்குமேல் ஆசிரியர் சிறுவனிடம் கேள்விகள் கேட்பார். சிறுவன் அக்கேள்விகளுக்கு உரிய விடையிறுப்பான்.

சாரண ஆசிரியர் :- (சிறுவனை அவன் பெயரிட்டு அழைத்து) கண்ணப்பா! நீ சாரணன் ஆக விரும்புகிறாயா?

சிறுவன் :- ஆம். விரும்புகிறேன்.

சா. ஆ :- உன்னுடைய கண்ணியம் அல்லது மானம் என்ன என்று உனக்குத் தெரியுமா?

சி : ஆம், தெரியும். நான் நம்பிக்கையாகவும் உண்மையாகவும் நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் நான் நம்பிக்கைகுக் உரியவனாக இருக்கவேண்டும் என்பதையும் குறிக்கிறது.

சா. ஆ : ''கண்ணப்பா! சாரண வாக்குறுதி செய்வாயாக.''

கண்ணப்பன் தன் வலது கையால் சாரண சமிக்ஞை அமைக்கிறான். உதவி ஆசிரியர் அங்கு வைக்கப்பட்டுள்ள சாரணக் கொடியை எடுத்துக் கண்ணப்பன் பக்கம் நீட்டுகிறார். கண்ணப்பன் அதன் மீது தன் கையை வைக்கிறான். சாரண ஆசிரியர், உதவிஆசிரியர், சாரணர்கள் எல்லோரும் சாரண சமிக்ஞை அமைக்கிறார்கள். கண்ணப்பன் வாக்குறுதி செய்கிறான்.



10. சின்னஞ் சூட்டல்-சிறுவன் சாரணக் கொடிமேல் கைவைத்துக் கொண்டு வாக்குறுதி செய்கிறான்.

''நான் கடவுளுக்கும் என் நாட்டுக்கும் எனது கடமையைச் செய்யவும் பிறருக்கு எந்த நேரத்திலும் தொண்டு செய்யவும், சாரண விதிகளைப் பின்பற்றி நடக்கவும் என்னால் இயன்றவரை முயல என் மானத்தின்மேல் வாக்குறுதி அளிக்கின்றேன்''.

இது முடிந்ததும் எல்லோரும் நேர் நிலைக்கு வருகிறார்கள்.

சா.ஆ: ''சாரணன் கண்ணப்பா! நீ செய்துள்ள இந்த வாக்குறுதியை உன் மானமே சாட்சியாக நீ நன்கு காப்பாற்றுவாய் என்று நம்புகிறேன். உலகெங்கும் பரவியுள்ள சாரணச் சோதரக் கூட்டத்தில் நீயும் இப்பொழுது ஒருவன்'' என்று கூறிக் கொண்டு அவன் இடது கையைப் பிடித்துக் குலுக்குவார். அப்புறம் பச்சைத் துணியில் மஞ்சள் நூலால் பொறிக்கப்பட்டுள்ள சாரணச் சின்னத்தை அவனிடம் கொடுப்பார். தொகுப்பு ஆசிரியர் இருப்பின் அவர், அவர் இல்லையானால், சாரண ஆசிரியர் அல்லது உதவி ஆசிரியர் சாரணனின் கழுத்துப்பட்டியை அணிவிப்பார். உதவி ஆசிரியர் சாரணனின் குல்லாவையும் அவனுடைய சாரணதண்டத்தையும் அவனிடம் கொடுப்பார். அப்புறம் ஆசிரியர் கட்டளையிட சாரணன் கண்ணப்பன் படைக்கு வணக்கம் செய்கிறான். படையும் அவனுக்கு வணக்கம் செய்யும். பின்னர் ஆசிரியர் கட்டளையிட அவன் படையில் தனக்குரிய இடத்துக்கு தன் அணித்தலைவனால் அழைத்துச் செல்லப்படுவான்.

சின்னம் சூட்டல் சடங்கு இதோடு முடிவடையும். படை கலைந்ததும் சாரணர்கள் எல்லோரும் புதுச்சாரணனுக்குத் தங்கள் வாழ்த்துக்களைத் தெரிவிப்பார்கள். அவனோடு கைகுலுக்கி அவனை வரவேற்பார்கள். சின்னம் சூட்டலை ஒட்டி சிறு சிற்றுண்டி விருந்து அளித்தலும் பொருந்தும்.

சின்னம் சூட்டலில் மிக முக்கியமாகக் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. புதிதாய்ச் சேரும் சிறுவன் தன் சாரண ஆசிரியரிடமே வாக்குறுதி அளித்தல் வேண்டும். வாக்குறுதி செய்த பிறகு அவனைக் கண்காணிக்கும் வாய்ப்பு அவர் ஒருவருக்கே உண்டு. அவனுடைய வாழ்க்கைப் பாதையில் உறுதுணையாய் இருப்பவர் அவனுடைய சாரண ஆசிரியர். சாரண வாழ்க்கையில் இருவரும் பிணைப்புண்டு இருப்பது சாரணனின் முன்னேற்றத்துக்கு மிக அவசியம் என்பதை நன்குணராத சில சாரண ஆசிரியர்கள், தங்களுக்குள்ள இந்தக் உரிமையை பிறருக்கு விட்டுக்கொடுத்து விடுகிறார்கள். சாரண ஆணையாளர்களை அல்லது தலைமை ஆசிரியர்களை சின்னம் சூட்டலுக்கு அழைத்து அவர்களை கௌவரப் படுத்துவதாக எண்ணிப் புதிதாகச் சேரும் சிறுவர்களிடமிருந்து வாக்குறுதி பெறும் பொறுப்பை அவர்களுக்குத் தருகிறார்கள். இது தவறு. அந்தப் பொறுப்பைத் தங்களைத் தவிர வேறு யாருக்கும் கொடுத்தல் கூடாது.

# 5. சாரணப் பயிற்சித் திட்டம்

சாரணப் பயிற்சித் திட்டத்தை வகுத்துத் தந்த பேடன்-பவல் பெரியார் அதனை விளையாட்டு உருவத்திலேயே அமைத்துத் தந்துள்ளார். அப் பயிற்சியைப்பற்றிக் கூறுகையில் அதைச் சாரண விளையாட்டு என்று கூறுவது அவர் வழக்கம். அதனை ஒரு உத்தமமான விளையாட்டு என்றும் பெரியவர்களும் சிறியவர்களும் மனம் ஒத்து உண்மையான சகோதர உணர்ச்சியுடன் கலந்து கொண்டு மிக அன்னியோன்னியமாகப் பங்கு எடுத்துக் கொள்ளத் தகுந்த பெருமை பொருந்திய விளையாட்டு என்றும் கருதுகிறார். அப் பெரியாரின் உட்கருத்து என்ன ?

விளையாட்டு என்பதைப்போல சிறுவர்கள் உள்ளத்தைக் கவரக் கூடியது வேறெதுவும் இல்லை. அதைப்போல மகிழ்ச்சி அளிக்கத் தகுந்ததும் இல்லை. இதை எண்ணியே சாரணப் பயிற்சிக்கு விளையாட்டுருவம் தரப்பட்டுள்ளது என்று நாம் உணர வேண்டும். சாரணப் பயிற்சி மிகப் பெரிய நோக்கத்தைக் கொண்டது. அந்த நோக்கம் பெரியவர்கள் மனதில் இடம் பெற வேண்டுவது அவசியம். அந்த நோக்கங்களை சாரணப் பயிற்சி அளித்தலில் ஈடுபட்டுள்ள பெரியவர்கள் மறந்துவிடக் கூடாது. இது அவசியமாக உள்ளதாயினும் சிறுவர்கள் கண்ணுக்கு சாரணப் பயிற்சி எப்பொழுதும் விளையாட்டுருவத்திலேதான் காட்சி அளித்தல் வேண்டும். அந்த உருவத்தில் அதனை அமைத்தால்தான் அது வெற்றி அடையும். சிறுவர்களுக்கு வேண்டுவது மகிழ்ச்சியும் மன உற்சாகமும்; அவர்கள் விரும்புவது இரைச்சலிடும் வாய்ப்பு; கூத்தாடும் வாய்ப்பு; ஓடி ஆடித்திரியும் வாய்ப்பு. இவைதாம் சிறுவர்கள் மனதில் அந்தரங்கமாக உள்ள விருப்பங்கள். இவையும் இவைபோன்ற பிறவும் அவர்களின் உள்ளக் கிடக்கையை உணர்த்தும். சிறுவர்களுக்கு அளிக்கப்படும் பயிற்சி இத்தகைய வாய்ப்புக்களைத் தருவதாக இருத்தல் வேண்டும். சாரணப் பயிற்சியில் ஈடுபட்டுள்ள ஆசிரியர்கள் இதனை நன்குணர்தல் அவசியம். உணர்வதோடு அதற்கு ஒத்த முறையில் பயிற்சியையும், பயிற்சி முறைகளையும் திருத்தி அமைத்துக்கொள்ளுதல் மிக முக்கியமானது. சாரணப் பயிற்சி, பள்ளிப் பயிற்சி மாதிரி அதிகார தோரணையில் அமைத்துக் கையாளத் தகுந்ததல்ல. அதனை விளை

யாட்டுகள் போலவே சுதந்திரத்தோடு இணைக்கப் பெற்ற கட்டுப் பாட்டுடன் அதற்குரிய சூழ்நிலையில் சிறுவர்களுக்கு இயல்பாக உள்ள விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ப கையாளப்படுமானால் அது நிச்சய மாக நல்ல வெற்றி அளிக்கும். இதுவே சாரணப் பயிற்சிக்கு விளை யாட்டுருவம் அளித்துள்ள சாரணத் தந்தையின் உட்கருத்து ஆகும்.

சிறுவர்களுக்கு மகிழ்ச்சி அளிக்கும் சாரண விளையாட்டு வெறும் விளையாட்டல்ல. அது அரும் பெரும் ஆற்றல் பலவற்றைத் தன்னுள் அடக்கி வைத்துள்ள சிறப்பு வாய்ந்த ஒரு ஒப்பற்ற பயிற்சித் திட்டம். சாரணியம் என்ற விளையாட்டு சிறுவர்களுக்கு உடல் நலம் அளிப்பது, உளநலம் தருவது, அவர்களின் ஆன்மிக நலனில் உண்மை அக்கறை கொண்டது. சிறுவர்கள் உள்ளத்தில் குடிமை உணர்ச்சியை வேரூன்றச் செய்வது, அவர்களிடையில் குடிமைப் பண்புகளை வளர்க்கவல்லது. இதனைச் சிறுவர்களுக்கு மட்டுமல்ல, நாட்டிற்கே நன்மை பயக்கவல்ல அருமையான விளையாட்டு என்று கூறுவது ஒரு சிறிதும் மிகையாகாது.

பயிற்சி பெறுகின்ற அடிப்படையில் சாரண இளைஞர்கள் கற்றுக் கொள்கின்ற கலைகள் பலப்பல. குடிசைகள் கட்டுகிறார்கள். கூடாரங்கள் அமைக்கிறார்கள். முடிச்சுகள் போடுகிறார்கள். சமையல் செய்கிறார்கள். பாலங்கள் அமைக்கிறார்கள். சிறு கொடிகளைக் கையில் கொண்டு தொலைவில் உள்ள தம் நண்பர்களுடன் சைகைப் பேச்சுப் பேசிப் பழகுகிறார்கள். விபத்தில் அகப்பட்டுக் கொண்டுள்ள வர்களுக்கு முதல் உதவிபுரியக் கற்றுக் கொள்ளுகிறார்கள். தண்ணீரில் தவறி விழுந்து தத்தளிப்பவர்களைத் தப்பவைக்கும் முறைகளையும் தீ விபத்தில் அகப்பட்டுக்கொண்டவர்களைத் தப்ப வைக்கும் முறைகளையும் முறையாகவே கற்கின்றனர். இவை அனைத்தும் சிறந்த பயனுள்ள கலைகளாகும்.

மரங்கள், செடி கொடிகள் போன்ற தாவரங்களைப் பற்றியும், மிருகங்கள், பறவைகள் போன்ற ஊர்வன பறப்பனவற்றையும், நட்சத்திரங்கள், கிரகங்கள் போன்ற விண்வெளி உலகங்களைப் பற்றியும் சாரணர்கள் மிகுந்த ஆர்வத்துடன் கற்றுக்கொள்வது மிகவும் பாராட்டுக்குரியது. கடவுள் படைப்பில் காணப்படும் வியத்தகு சிறப்புக்களைப்பற்றிய சிறுசிறு ஆராய்ச்சிகளின் அடிப் படையில் அச் சிறுவர்களுக்கு கடவுள் பக்தி உண்டாக அவ் விறைவன் பெருமையையும் தன் படைப்புகளிடம் அவன் வைத்துள்ள அன்பின் பெருமையையும் உணர்ந்துகொள்வதற்கு அவர்களுக்குக் கிடைக்கின்ற வாய்ப்பையும் பாராட்டுதல் பொருந்தும்.

இவை தவிர சென்ற நாட்களில் செழிப்புடன் வளர்ந்து இப் பொழுது மங்கிக் கிடக்கின்ற பல கிராமக் கலைகளையும் சாரணர்கள் கற்கின்றனர். அவற்றுள் திசையறிதல் கலை, நேரம் அறிதல் கலை, சுவடு பிடித்தல் கலை, அனுமானித்தல் கலை, கண் மதிப்பால் உயரம், நீளம், எண்ணிக்கை முதலியவற்றை அறிந்து கொள்ளும் கலை, மரம் வீழ்த்தல் கலை, மரம் பேணற் கலை போன்றவை சில ஆகும்.

இத்தகைய கலைப் பயிற்சி ஒருபுறம் இருக்க, சாரண இளைஞர்கள் ஒவ்வொருவரும் உடல் நலப் பயிற்சி, உள நலப் பயிற்சி, ஆத்தும நலப் பயிற்சி என்று மூவகை நலன்களையும் அளிக்கக் கூடிய பயிற்சிகளையும் பெறுகின்றனர். அது போல நல்லொழுக்கம், நற்பண்புகள், உண்டாவதற் கான பயிற்சி, தன்னலம் மறுத் துப் பிறர் நலம் பேணும் தொண்டு மனப்பான்மை வளர் வதற்குரிய பயிற்சி, பிறர்க்குத் தொண்டு புரிதலில் உண்மை ஆர்வமும் ஆற்றலும் உண்டா வதற்கான பயிற்சி என்ற பல வகைப் பயிற்சிகளையும் சார ணர்கள் பெறுகின்றார்கள்.



இளம்பாதன்




இரண்டாம் தரச் சாரணன்




முதல்தரச் சாரணன்

### பயிற்சிவகை

சாரணப் பயிற்சி பொதுப் பயிற்சி, சிறப்புப் பயிற்சி என இருவகைப்படும். எல்லாச் சார ணர்களும் கட்டாயமாகப் பெற வேண்டிய பயிற்சி பொதுப் பயிற்சி ஆகும். இது இளம் பாதன், இரண்டாந்தரச் சார ணன், முதல்தரச் சாரணன், ஜனா திபதி சாரணன் என்ற படிகளைக் குறிக்கும். சிறப்புப் பயிற்சி என்பது சாரணன் தனக்கு இயற் கையாக உள்ள நாட்டத்துக்குப் பொருத்தமான கலைகளில் அல் லது தொழில்களில் தன்னை ஈடு படுத்தற்குரிய பயிற்சி. இது தனக்கு எந்தக் கலைகளில்




ஜனதிபதி சாரணன்

11. தரச்சின்னங்கள்

அல்லது தொழில்களில் இயற்கையாக நாட்டம் இருக்கிறதோ அதில் பயிற்சி பெற்று நல்ல தேர்ச்சி அடைதல் ஆகும். சிறப்புப் பயிற்சிக்குரிய கலையைச் சாரணன் தானுகவே தேர்ந்து கொள்கிருன். சாரண ஆசிரியர் அந்தப் பயிற்சிக்குரிய வசதிகளை அளிப்பார்.

சிறப்புப் பயிற்சியாக சாரணர்கள் கற்றுக் கொள்ளும் கலைகளுள் ஒரு சில ஊதியம் தரும் வாழ்க்கைத் தொழிலாக அமையினும் அமையலாம். ஒரு சில பயனுள்ள பொழுது போக்காக அமைந்து வாழ்க்கையை அழகு பெறச் செய்யலாம்.

# 6. இளம் பாதன்

சாரணப் படையில் இளம்பாதனுகச் சேர விரும்பும் சிறுவன் தெரிந்திருக்க வேண்டியவை:—

1. சாரண விதி, சாரண வாக்குறுதி, சாரணக் குறிக்கோள் ஆகியவை.

2. சாரண சமிக்ஞை சாரண வணக்கம் செய்யும் முறை, சாரணச் சின்னத்தின் அமைப்பு.

3. தேசியக் கொடி சாரணக் கொடிகளின் அமைப்பு, அவைகளைப் பறக்க விடும் முறை, அவைகளுக்குரிய மரியாதை.

4. தேசிய கீதம், வந்தே மாதர கீதம், தயாக்கர்தான் என்ற இறை வணக்கப் பாட்டு, ஆகிய பாட்டுக்களைப் பாடத் தெரிந்திருப்பது.

5. ஆற்றுப்படைக் குறிகள் (Woodcraft Trail Signs).

6. சாரணதண்டத்தைத் தாங்கிச்செல்லும் முறையும் தண்டத்தின் உபயோகங்களும்.

7. கயிற்றைக்கொண்டு சதுரமுடிச்சு (Reef Knot), தூளி முடிச்சு (Sheet Bend), யானைக் கொலுசு (Clove Hitch), வளைய முடிச்சு (Bowline), முழுச்சுற்றும் இரண்டு அரைக் கொலுசும் என்ற முடிச்சு (Round Turn and Two Half Hitches), ஆட்டிடையர் முடிச்சு (Sheep Shank), மீனவர் முடிச்சு (Fisherman's Knot). என்ற முடிச்சுகள் கட்டுதல்.

8. கயிற்றுக்கு நுனிவரிதல் (Whipping) முறை.

9. தன் அணியில் உள்ள சாரணர்களோடு நான்கு மைல் ($6\frac{2}{5}$ கிலோ மீட்டர்) தொலைவு சென்று அங்கு அரைநாள் தங்கி அதனுல் உண்டாகும் அனுபவம் பெற்றிருத்தல்.

இவற்றுள் (1) (2) அத்தியாயங்களில் விளக்கப்பட்டுள்ள (3) முதல் உள்ளவைகள் இங்கு விளக்கப்படும்.

## 3. தேசியக் கொடி சாரணக் கொடிகளின் அமைப்பு, அவைகளைப் பறக்கவிடும் முறை, அவைகளுக்குரிய மரியாதைகள்.

### தேசியக் கொடி

நம் இந்தியநாடு பழம் பெரும் நாடு. நம்முடைய நாகரிகமும் ஐயாயிரம் ஆண்டுகள் பழமையானது. நம் நாட்டு மக்கள் பேசும் மொழி பதினெட்டாயினும் அவர்களின் பழக்க வழக்கங்கள் ஒரே நாகரி கத்தின் அடிப்படையில் உள்ளவை. நம் நாட்டு மக்கள் பல்வேறு சமயத்தைச் சேர்ந்தவர்களாயினும், எல்லோரும் இந்திய மக்கள், ஒரே தாயின் புதல்வர் என்ற உணர்ச்சி உள்ளவர்கள். வேற்றுமை யில் ஒற்றுமை காண்பது நம் நாட்டினர்க்குரிய இயல்பு. ''செப்பு மொழி பதினெட்டுடையாள் எனிற் சிந்தனை ஒன்றுடையாள்'' என்றார் பாரதியார்.

சென்ற 1947ஆம் ஆண்டு நாம் பூரண சுதந்திரம் அடைந்த பிறகு நம் தேசியக்கொடி, நம் தேசிய கீதம், நம் நாட்டிற்குரிய சின்னம் ஆகியவை மூன்றும் குமரி முதல் இமயம் வரை, காஷ்மீரம் முதல் அஸ்ஸாம், நாகாலாந்து வரையுள்ள நம் நாட்டு மக்களை ஒன்றாக இணைத்து ஒருமைப்பாட்டுணர்ச்சி ஊட்டுகின்றன. இம் மூன்றும் நம்நாட்டுக்குரிய புனிதமான அடையாளங்கள். அவை பெரும் மதிப்புக்குரிய சின்னங்களாகத் திகழ்கின்றன.

சுதந்திரம் பெற்றுள்ள ஒவ்வொரு நாட்டுக்கும் இத்தகைய புனிதச் சின்னங்கள் உண்டு.

### தேசியக்கொடியின் அமைப்பு

நம் இந்தியக் கொடி ஒரே அகலமுள்ள மூன்று பட்டைகளால் அமைக்கப்பட்டது. இவை ஒன்றின் கீழ் ஒன்றாக உள்ளன. மேல் பட்டை காவி (Deep Saffron) நிறம் உடையது. நடுவில் உள்ள பட்டை வெண்மை நிறம் (White). அடியில் உள்ளது பசுமை (Dark Green) நிறம். நடுவில் உள்ள வெண்ணிறப் பட்டையின் மத்தியில் நீல (Blue) நிறத்தில் இருபத்து நான்கு ஆரைகளுள்ள அசோக சக்கரம் பொறிக்கப்பட்டுள்ளது. சக்கரத்தின் விட்டமும் வெள்ளைத்துணியின் அகலமும் அநேகமாக ஒத்து இருக்கும்.

கொடியின் நீளமும் அகலமும் 3:2 என்ற அளவில் இருக்கும். முழு அளவுள்ள கொடி ஆறு அடி நீளமும் நான்கு அடி அகலமும் உடையது.



 காவி நிறம் (Saffron)

 வெள்ளை நிறம் (White)

 பசுமை நிறம் (Green)

12. தேசியக் கொடி

## தேசியக் கொடி அமைப்புக்கு விளக்கம்

கொடி என்பது நாட்டிற்குரிய ஒரு புனிதமான அடையாளம். அது நாட்டின் கண்ணியத்தையும், நாட்டு மக்களின் பெருமையையும் குறிக்கின்ற புனிதச்சின்னம். நம் நாட்டிலுள்ள கோடானுகோடி மக்களும் ஒரு குடும்பத்தினர் என்ற உணர்ச்சியை நமக்கு அளிக்கும் தன்மை வாய்ந்தது. நாட்டின் சுதந்திரத்தை அது உணர்த்துகின்றது. நாட்டு மக்கள் யாருக்கும் தலை வணங்காத தன்மையை உடையவர்கள் என்றும் உணர்த்துகின்றது. மேலும் நாட்டின் உயர்ந்த நோக்கங்களையும், உன்னதமான குறிக்கோள்களையும் குறிப்பிடுகின்றது.

தேசியக் கொடியில் உள்ள காவி நிறம் தைரியத்தையும் தியாகத்தையும் குறிக்கும். நடுப்பட்டையின் வெண்ணிறம் தூய்மையையும் வாய்மையையும் குறிக்கும். அடியில் உள்ள பசுமை நிறம் நாட்டின் செல்வத்தையும் செழிப்பையும் குறிக்கும். வெண்ணிறப்பட்டையிலுள்ள அசோகச்சக்கரம் உயர் நெறியையும் நாட்டின் முன்னேற்றத்தையும் குறிக்கும்.

கொடியில் உள்ள காவி நிறம் தியாக உணர்ச்சியுடனும் மனே தைரியத்துடனும் நாம் நம் கடமைகளைச் செய்ய வேண்டும் என்று நம்மைத் தூண்டுகிறது. வெண்மை நம் மனே வாக்கு காயங்களில் நாம் தூய்மை உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்பதை வற் புறுத்துகிறது. பசுமை நிறம் நம் நாட்டின் இயற்கை வளங்களை நல்ல முறையில் பயன் படுத்தி நம் உழைப்பினல் நாட்டைச் செழிப் படையச் செய்ய வேண்டுமென்று நம்மைத் தூண்டுகிறது. அசோகச் சக்கரம் நெறி தவருத வாழ்க்கையை நாம் பின்பற்ற வேண்டும் என்றும் நாட்டின் முன்னேற்றத்திற்காக உழைக்க வேண்டும் என்றும் வற்புறுத்துகின்றது.

தேசியக் கொடி நம் சுதந்திரத்திற்கும், நம் ஒருமைப் பாட்டிற் கும் நம் தேசிய கண்ணியத்துக்கும் அறிகுறியாய் விளங்குகிறது.

இக்கொடியை உபயோகிக்கும் பொழுது அதற்குரிய மதிப்புட னும் மரியாதையுடனும் அதனை உபயோகித்தல் வேண்டும்.

## தேசியக் கொடியை மலர விடுதல்

தேசியக் கொடியின் கண்ணியத்தை உணர்ந்து அதற்கு நல்ல மதிப்புக் கொடுத்து அதனைப் பயன்படுத்த வேண்டும். கொடியை மிகுந்த மரியாதையுடன் பறக்கவிடவேண்டும்.

கொடியைப் பறக்க விடும்பொழுது கொடியின் காவி நிறப் பட்டை கொடிக்கு மேல் பாகத்தில் இருக்க வேண்டும். பச்சை நிறப்பட்டை கொடிக்குக் கீழ்ப் பாகத்தில் இருக்கும். கொடி, கொடிக் கம்பத்தின் உச்சியில் பறக்க வேண்டும்.

கொடியைப் பறக்க விடும்பொழுது சாரணப்படை அணிவகுத்து நேர்நிலையில் நின்றுகொண்டு வணக்கம் செலுத்த வேண்டும். கொடிக்கம்பத்தின் உச்சியில் இருந்து பறக்க விடப்படுமானல் கொடிக் கயிற்றை இழுக்கக் கொடி பறக்க ஆரம்பிக்கும்போது வணக்கம் செய்ய வேண்டும்.

கொடியை நாள் முடிவில் அல்லது அன்றையக் கூட்டத்தின் முடிவில் இறக்கும் பொழுது கொடியை இறக்கும் சாரணன் நேர் நிலை யில் நின்று கொண்டு மெதுவாக இறக்க வேண்டும். கொடியை இறக் கும் பொழுது வணக்கம் செய்யத் தேவையில்லை.

தேசியக் கொடியும் ஏனைய கொடிகளும் ஏற்ற வேண்டி இருந் தால் முதன் முதலாக ஏற்றப்பட வேண்டியது தேசியக் கொடியாகும். கொடிகளை இறக்கும் பொழுது கடைசியாக இறக்கப்படவேண்டியதும்






















12. a கொடியை மலர விடுவது

1. முதல் மடிப்பு 2. இரண்டாவது மடிப்பு 3. மூன்ருவது மடிப்பு 4. நான்காவது மடிப்பு. நான்கு மடிப்புகளுக்குப்பின் கொடியை இலேசாகச் சுருட்டி கொடிக் கயிற்ருல் ஒரு சுற்றுப் போட்டு அதை எளிதில் அவிழக்கூடிய முறையில் தொடுத்து வைக்கவேண்டும். 5 கொடிக்கம்பத்தின் உச்சியில் கொடி வைக்கப்படும். 6. கொடியை மலரவிடக் கொடிக் கயிற்றை கவனமாய் இழுத்தல் வேண்டும். 7. நாள் முடிவில் அல்லது நிகழ்ச்சி முடிவில் கொடியை இறக்கும் பொழுது கொடி தரையில் பட்டுவிடக்கூடாது.

தேசியக் கொடியே. ஓரே கூட்டத்தில் அல்லது விழாவில் நம் தேசியக் கொடியும் ஏனைய நாட்டுக் கொடிகளும் இருப்பின் எல்லாக் கொடிகளும் ஓரே உயரத்தில் பறக்க வேண்டும்.

கொடியை மலரவிட அதனை முறையாக மடித்தல் வேண்டும். மடித்து அதனை அழகாகச் சுருட்டி கொடிக்கம்பத்தின் உச்சியில் அமையும்படி வைத்துப் பின் குறித்த நேரத்தில் மலரவிட வேண்டும்.

பல கொடிகளை ஒரே வரிசையாக எடுத்துச் செல்வதானல் நம் தேசியக் கொடி அந்த வரிசைக்கு வலது கடைசியில் இருக்கவேண்டும். அல்லது நம் தேசியக் கொடியைத் தனியாக அந்த வரிசைக்கு முன் அதன் நடுவில் ஒரு தனி வரிசையாகக் கொண்டு செல்லலாம்.

கூட்டம் நடைபெறும் பொழுது நம் தேசியக் கொடியை மேடைக்குப்பின்னல் சுவரில் பதித்து வைக்கலாம். அது மேடையில் நிற்பவர்களைவிடப் போதுமான உயரத்தில் பதிக்கப்படவேண்டும். தேசியக் கொடிக்கு உயரமாக வேறு கொடிகளோ, சின்னங்களோ இருத்தல் கூடாது.

## சுதந்திர தினம், குடியரசு தினம்.

நம்முடைய தேசியக் கொடி முதன் முதலாக 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 14-15ஆம் நாள் நள்ளிரவில் நம் நாட்டின் தலைநகராகிய புது டில்லியில் அப்பொழுது பிரதம மந்திரியாக இருந்த அமரர் ஜவாஹர்லால் நேரு என்ற உத்தமரால் பறக்க விடப்பட்டது. அதுமுதல் ஆகஸ்ட் திங்கள் 15ஆம் நாள் இந்திய சுதந்திர நாளாகக் கொண்டாடப்படுகிறது. தேசியக் கொடியை அன்று பொதுமக்கள் தங்கள் தங்கள் வீடுகளிலும் பொது இடங்களிலும் பறக்கவிடுகிறார்கள்.

அதுபோலவே நம் நாடு குடியரசுப்பதவி மேற் கொண்ட ஜனவரித் திங்கள் 26ஆம் நாள் அன்றும் நம் மக்கள் தேசியக்கொடியைப் பறக்க விட்டு குடியரசு தினத்தையும் கொண்டாடுகிறார்கள்.

தேசியக் கொடி சாதாரணமாக அரசினர்களின் முக்கிய அலுவலங்களில் மட்டுமே பறக்க விடப்படும். குடியரசு தினத்தன்றும் சுதந்திர தினத்தன்றும் பொது மக்கள் தங்கள் வீடுகளிலும் பொதுக் கூட்டங்களிலும் தேசியக் கொடியைப் பறக்க விட அனுமதிக்கப் பட்டுள்ளார்கள்.

## சாரணக்கொடி

சாரணக்கொடி சாரண சங்கத்துக்குரிய கொடி. ஏனைய கொடிகளைப் போலவே இதன் நீளமும் அலகமும் 3:2 என்ற அளவில் இருக்கும். முழு அளவு உள்ள சாரணக்கொடி 6 அடி நீளமும் 4 அடி அகலமும் உடையது. சாரணத் தொகுப்புக்களுக்குரிய கொடி $4\frac{1}{2}$ அடி நீளமும் 3 அடி அகலமும் உடையது. சாரணத் தொகுப்பின் பெயர் சின்னத்தின் கீழ் மஞ்சள் நிறத்தில் பொறிக்கப்பட வேண்டும். தொகுப்புக் கொடிகளில் தொகுப்பின் பெயர் பொறிக்கப்படுவது நல்லது. எழுத்துக்கள் மஞ்சள் நிறத்தில் பொறிக்கப் பட வேண்டும். ஏனைய நிறங்களில் பொறித்தல் கூடாது.

சாரணக்கொடி இருண்ட நீலத்துணியாலாயது. கொடியின் நடுவில் சாரணச்சின்னம் மஞ்சள் நிறத்தில் பொறிக்கப் பட்டிருக்கும். முழு அளவுள்ள கொடியில் சாரணச்சின்னம் $1\frac{1}{2}$ அடி உயரமும் 1 அடி அகலமும் இருக்கும்.

**கொடியை பறக்க விடுதல் :** பொறிக்கப் பட்டுள்ள சாரணச் சின்னம் நேராக இருக்கும்படி பறக்கவிடுதலே சாரணக் கொடியைப் பறக்க விடும் முறை.

சாதாரணமாக கொடிகள் கொடிக்கம்பத்தின் உச்சியிலிருந்தே மலர விடப்படுகின்றன. இப்படிப் பறக்க விடுவதற்குக் கொடியைச் சரியான முறையில் மடித்தல் வேண்டும். முதன் முதலாக கொடியின் மேல் பக்கம் எது என்பதைப் பார்த்துக் கொள்ள வேண்டும். பிறகு கொடியின் மேல் பாகத்தை மேலாக வைத்து கொடியை நீளவாட்டில் நான்காக மடித்தல் வேண்டும். அப்புறம் மடித்துள்ள கொடியை அதன் நுனியிலிருந்து முன்னும் பின்னுமாக மடிக்கவேண்டும். மடித்துக் கொண்டு கொடியின் அடிப்பாகத்தில் உள்ள கயிற்றினுல் கொடியை இரண்டு தடவை இலேசாகச் சுற்றிப் பின் கயிற்றைச் சுற்றுக்குள் செருகி வைக்க வேண்டும். அதன் பிறகு கட்டப்பட்டுள்ள கொடியை மேல் கயிற்றினுல் கொடிக்கம்பத்து உச்சிக்கு கொண்டு வந்து அங்கே கொடிக்குரிய இடத்தில் அது அமையும்படி விட்டுவிடவேண்டும். கொடிக்குக் கீழ்பாகத்தில் உள்ள கயிறு ஒரு சிறிது தொய்வாக இருக்க வேண்டும். கொடி வணக்கத்துக்காகக் கொடிக் கம்பத்தின் உச்சிக்குக் கொண்டு போய் கொடியை வைக்கும் முறை இதுவே. பின் கொடி வணக்கத்துக்கு சாரணப் படை தயாரானதும் தொய்வாக உள்ள கயிற்றைப் பிடித்து இழுக்க கொடியானது மலர்ந்து பறக்கும்.

# கொடி அமைப்பின் விளக்கம்

கொடியில் உள்ள சாரணச்சின்னம் சாரண சாரணியர்களின் முப் பிரிவுள்ள வாக்குறுதியைக் குறிக்கும். சின்னத்தில் இணைக்கப் பட்டுள்ள லிலிமலர் (Fleur-de-lis) சாரண சங்கத்தையும், மூவிதழ் மலர் (Trefoil) சாரணிகள் சங்கத்தையும் குறிக்கும்.



13. சாரண சாரணியர் கொடி

சின்னத்தில் உள்ள அசோக சக்கரம் சாரணர்களும் சாரணி களும் இந்தியாவைச் சேர்ந்த சாரண சாரணிகள் என்பதைக் குறிக்கும். சாரணக் கொடி சாரணர்கள் சாரணிகள் கண்ணியத் தையும் அவர்களின் உயரிய நோக்கங்களையும் உணர்த்தும்.

சாரணக்கொடி சாரண அலுவல் நிலையங்களில் ஒவ்வொருநாள் காலையிலும் பறக்கவிடப்படும். சாரண விழாக்கள் நடைபெறும் பொழு தும் சாரணத் தொகுப்புக் கூட்டங்கள் சாரணப் படைப்பயிற்சிக் கூட்டங்கள் முதலியன நடைபெறும் பொழுதும் சாரணக்கொடி பறக்கவிடப்படும். பாசறைகளில் காலைமுதல் மாலைவரை பறக்கும்.

சாரணக் கொடியைப்பறக்க விடும்பொழுது சாரணர்கள் அணி வகுத்து நின்று மிகுந்த கண்ணியத்துடனும் உரிய மரியாதையுடனும் அதனை பறக்கவிட வேண்டும்.

நாள் முடிவில் அல்லது கூட்டத்தின் முடிவில் கொடியை இறக் குகின்ற சாரணன் நேர் நிலையில் நின்று கொண்டு கொடியை இறக்க வேண்டும். அப்பொழுது சாரண வணக்கம் தேவை இல்லை.

கொடி ஏற்றும் பொழுதும், கொடி இறக்கும் பொழுதும் மற்ற காலங்களிலும் கொடியைக் கையாளும் பொழுதும் அது தரையில்

பட்டுவிடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். உபயோகத்தில் இல்லாத பொழுது தேசியக் கொடியையும் சாரணக் கொடியையும் தனி ஒரு மரப்பெட்டியில் வைத்துப் பாதுகாத்தல் முக்கியம்.

## உலகச் சாரணக் கொடி (World Scout Flag)

இது 6 அடி நீளமும் 4 அடி அகலமும் உள்ள ஊதா (Purple) துணியில் அடியில் உள்ளபடி சின்னம் பொறித்துள்ள கொடி.



14 உலகச் சாரணர் கொடி

சின்னம் வெண்மை நிறத்தது. பெருந்திரள்களில் இந்தக் கொடியை உபயோகப்படுத்துவார்கள்

இந்த மாதிரியான சின்னத்தையும் சாரணர்களும் ஆசிரியர்கள் ஆணையாளர்கள் முதலியவர்களும் அணியலாம். அது வலது பை மத்தியில் அணியப்படும்.

## கொடி வணக்கம் செயல் முறை

(Flag Salute Procedure)

கொடி வணக்கம் செய்வதற்குச் சாரணப்படை அணிவரிசையில் (Patrol Order) குதிரைலாட வட்ட அமைப்பில் (Horse Shoe Formation) கொடிக்கு முன்பக்கமாக நிற்றல் வேண்டும்.

அணிகளில் அணியின் வலது கோடியில் அணித்தலைவனும் அணியின் இடது கோடியில் அணி உதவித் தலைவனும் நிற்க ஏனைய சாரணர்கள் தங்கள் அணி எண்ணின் (Patrol Rank) படி மூன்று, நான்கு, ஐந்து என்ற வரிசையில் அணித்தலைவனுக்கு இடது பக்கமாக நிற்றல் வேண்டும். அணிவரிசை என்பது இதுவே.

வட்டத்தின் புகுமுகத்தில் கொடிக் கம்பம் இருக்கும். கொடிக் கம்பத்தை யொட்டி ஓர் நேர் வரிசையில் கொடிக் கம்பத்துக்குப் பின்னால் மூன்று தப்படி (Paces) தொலைவில் சாரண ஆசிரியரும் ஏனைய ஆசிரியர்களும் நிற்பார்கள்.

இந்தப் படைத்திரளை (Rally) முதலில் உதவி ஆசிரியரும் பின்னால் சாரண ஆசிரியரும் கண்காணிப்பார்கள். உதவி ஆசிரியர் முதலில் கொடிக் கம்பத்தின் அருகே சென்று அதற்கு ஒரு தப்படி தொலைவில் நின்றுகொண்டு படையில் உள்ள அணிகளும் அணியில் உள்ள சாரணர்களும் தங்கள் தங்கள் இடங்களில் முறையாக நிற்கின்றார்களா என்பதைச் சரிபார்ப்பார். திருத்தம் ஏதாவது தேவையாயின் அதை நிறைவேற்றிவிட்டு படை அமைப்பு சரியாக உள்ளது என்றால் படையை நேர்-நிலையில் நிற்கவைத்து, அவர் பக்கம் திரும்பி அவருக்குச் சாரண வணக்கம் செய்வார். அவரும் பதில் வணக்கம் செய்வார். இது முடிந்ததும் உதவி ஆசிரியர் நின்று கொண்டு கண்காணித்த இடத்துக்குச் சாரண ஆசிரியர் செல்ல, உதவி ஆசிரியர் படையை நேர்–நிலைக்குக் கொண்டு வந்து மறுபடியும் ஆசிரியருக்கு வணக்கம் செலுத்துவார். ஆசிரியரும் வணக்கம் செலுத்துவார். அப்புறம் கொடிக்கம்பத்தின் பின் உள்ள வரிசையில் தன்னிடத்துக்குச் செல்வார். இப்பொழுது கொடி வணக்கம் ஆரம்பம் ஆகும். படைக்குரிய கட்டளைகள் இதுமுதல் சாரண ஆசிரியரே தருவார்.

**"படை-நேர்நிலை"** (Troop Savdhan—or Atention) என்ற கட்டளை பிறந்ததும், எல்லோரும் நேர்நிலைக்கு வருவார்கள்.

**"இறைவணக்கம் ஆரம்பம்"** (Prayer-Begin) என்ற கட்டளை பிறந்ததும் "தயாக்கர்தான்" என்ற இறைவணக்கப் பாட்டு பாடப் பெறும். இல்லையானால் அந்தப் பாட்டுக்குரிய வர்ணமெட்டில் அமைக்கப்பட்டு மாநில சங்கத்தினர் அங்கீகாரம் பெற்றுள்ளதுமான தமிழ்ப் பாட்டு பாடப் பெறும்.

அப்புறம் **"படை-தளர்நிலை"** (Troop Stand-at-Ease) என்ற கட்டளை பிறந்ததும் எல்லோரும் தளர் நிலையில் நிற்பார்கள்.

அப்பொழுது, விரும்பினால், "இன்றைய சிந்தனை" (Thought for the Day) படிக்கப் பெறலாம்.

அதன்பிறகு, "படை-நேர்நிலை" (Troop-Savdhan or Attention) என்ற கட்டளை தந்து பிறகு, "பொறுப்புத் தலைவன்-கொடிக்குச் செல்க" (Duty Leader – To the Flag) என்ற கட்டளை இடப்படும்.

இந்தக் கட்டளை பிறந்ததும் கொடியைப் பறக்கவிடும் பொறுப்புடைய அணித்தலைவன் கொடியை நோக்கிச் சென்று கொடிக் கம்பத்தருகில் இரண்டு தப்படித் தொலைவில் நின்றபடி கொடிக் கயிற்றை (Halyard) எவ்வளவு உயரத்தில் தொடலாமோ அவ்வளவு உயரத்தில் அதனைப் பிடித்துக்கொண்டு ஆசிரியர் கட்டளையை எதிர்பார்த்து நிற்க வேண்டும்.

இப்பொழுது "சாரணர்களே—வணக்கம்" (Troop Salute) என்ற கட்டளை பிறக்கும். பிறந்த உடன் எல்லோரும் வணக்கம் செய்ய வேண்டும். பொறுப்பு அணித்தலைவன் கொடிக் கயிற்றைப் பற்றி இழுத்துக் கொடியைப் பறக்கவிடுவான். கொடிக் கயிற்றைக் கொடிக் கம்பத்தில் அமைக்கப் பட்டுள்ள "இருமுனை முளையில்" (cleat) மிக விரைவாகச் சுற்றித் தொடுத்துவிட்டு, பின்னுக்கு ஒரு தப்படி சென்று, அப்புறம் கொடிக்கு வணக்கம் செய்வான். இது முடிந்ததும் ஆசிரியர் "முன்னிருந்தபடி" (As You Were) என்று கட்டளை இடுவார். எல்லோரும் முன்னிருந்த நிலைக்கு வந்து விடுவார்கள்.

"கொடிப்பாட்டு—ஆரம்பம்" (Jhanda Song Begin) என்ற கட்டளை பிறந்ததும் "பாரத ஸ்கவுட்டு கயிடு" என்ற கொடிப் பாட்டு பாடப் பெறும். அல்லது அந்தப் பாட்டுக்குப் பதிலாக அங்கீகாரம் செய்யப்பட்டுள்ள கொடிப் பாட்டு பாடப்படும். கொடி வணக்க நிகழ்ச்சிகளில் பாடும்போது அவற்றின் முதற் செய்யுளை மட்டும் பாடுவது போதுமானது.

பாடி முடிந்ததும் ஆசிரியர் கட்டளையிட பொறுப்பு அணித் தலைவன் தனக்குரிய இடம் செல்வான். சாரணப் படையும் தளர் நிலைக்கு (Stand – at –Ease) க் கொண்டு வரப்படும். இதோடு கொடிவணக்க நிகழ்ச்சி முடிவு பெறும்.

குறிப்பு: இந்தச் செயல் முறை தேசியத் தலைமைச் செயலகத்தாரின் சுற்றறிக்கை, எண் 32/1648— 1-9-71இல் வெளிவந்துள்ளது.

# கொடிப்பாட்டு (Jhanda Song)

அகில் இந்திய சாரண சாரணியப் பெருந்திரள்களில் பாடப்படுகிற இக்கொடிப்பாட்டு சாரணக்கொடியைப் பற்றியது—அது இந்தியில் பாடப்படுகிறது:

பாரத ஸ்கவுட்டு கயிடுஜண்டா
ஊஞ்சா சதா ரஹேகா
ஊஞ்சா சதா ரஹேகா ஜண்டா
ஊஞ்சா சதா ரஹேகா —(பாரத)

நீலா ரங்க கனஸா விஸ்ருத
ப்ரத்ரு பாவ பயிலாதா
த்ரிதள கமல னித்தீன
ப்ரதிக்ஞா ஓம் யாத்திலாதா
ஔர் சக்ர கஹத்தாஹை
பிரதிபல ஆகேகதம் படேகா
ஊஞ்சா சதா ரஹேகா ஜண்டா
ஊஞ்சா சதா ரஹேகா —(பாரத)

தமிழ்நாட்டுச் சாரண சாரணியர்கள் இதே வர்ண மெட்டில் தமிழில் ஒரு பாட்டு அமைத்துள்ளார்கள். அது பின் வருமாறு:

பாரத சாரண சாரணியக்கொடி
பண்பாய்ப் பறக்கிறதே
பரந்த வான நீலம் தரப்
பாரம் வளர்கிறதே —(பாரத)

சீருடன் மூன்று நல்வாக்கினை மூவிதழ்த்
தாமரை காட்டிடுதே
சுற்றிடும் சக்கரம் நீதியின் பாதையைத்
தெளிவாய்க் காட்டிடுதே —(பாரத)

இது தவிர, மகாகவி பாரதியார் பாடியுள்ள "தாயின் மணிக் கொடி பாரீர்" என்ற பாடலும் சாரணர்கள் பாடுவதற்குப் பொருத்த முடையது.

தாயின் மணிக்கொடி பாரீர்-அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீர் —(தாயின்)

ஓங்கி வளர்ந்ததோர் கம்பம்-அதன்
உச்சியின் மேல் வந்தேமாதரம் என்றே
பாங்கின் எழுதித்திகழும்-செய்ய
பட்டொளி வீசிப் பறந்தது பாரீர் —(தாயின்)

கம்பத்தின் கீழ் நிற்றல் காணீர்-எங்கும்
காணரும் வீரர் பெருந்திருக் கூட்டம்
நம்பற்குரியர் அவ்வீரர்-தங்கள்
நல்லுயிர் ஈந்தும் கொடியினைக் காப்பர் —(தாயின்)

தேசியக் கொடியைப் பறக்கவிடும்போது இப்பாட்டையும் பாடலாம்.

# வழிநடைப் பாட்டு

சிற்சில வேளைகளில் சாரணக்கொடியை எடுத்துக் கொண்டு சாரணர்கள் ஊர்வலம் வருவார்கள். அப்பொழுது வழி நடைப் பாட்டுகள் தேவைப்படும்.

அடியில் தரப்பட்டுள்ள பாட்டு அன்னி பெஸன்ட் அம்மையார் நிறுவிய சாரண இந்திய சங்கத்துச் சாரணர்கள் பாடிப் பிரபல மடைந்தது. மதுரை மாநகரில் சாரண அமைப்பாளராகப் பல ஆண்டு கள் பணியாற்றிய காலம் சென்ற உயர் திரு B. S. சுப்பிரமணியம் இயற்றியது

இந்தப் பாட்டு வழிநடைக்கு மிகவும் பொருத்தமுடையது, நாட்டின் வளத்தையும் நாட்டிற்குரிய பல மகத்தான சிறப்புகளையும் நினைவூட்டக்கூடியதாகவும் அமைந்துள்ளது.

கங்கை சிந்து பிரம்மபுத்திர
கோதாவரி சரஸ்வதி
துங்கபத்திரா யமுனை கிருஷ்ணை
காவிரி பினாகினி
பாய்ந்துலாவும் புண்ணிய நதிகள்
எண்ணிலாத தானதோர்
இந்த நாடெம் சொந்த நாடென்
றேத்துவோம் அதை வாழ்த்துவோம்.

இமய விந்திய சித்திரகூட
ஹேமகூட பர்வதம்
மாயா மதுரா காசிகாஞ்சி
அவந்தி துவாரகா அயோத்தி
சந்ததமும் சீர் பெற்றோங்கும்
சப்த முக்தி நகருள
இந்த நாடெம் சொந்த நாடென்
றேத்துவோம் அதை வாழ்த்துவோம்.

சந்தனுதி தேவதாரு

பில்வ ஜோதி விருட்சங்கள்

கந்தம் வீசும் பாரிஜாத

மல்லிசாதி புஷ்பங்கள்

ஈந்து வாழை மா பலாவும்

அமிர்தமாகக் கொண்டதோர்

இந்த நாடெம் சொந்த நாடென்

றேத்துவோம் அதை வாழ்த்துவோம்.

ஆணிமுத்து பவளம் நீலம்

புஷ்பராகம் மரகதம்

மாணிக்கங்கள் கோமேதக

வைடூரிய வஜ்ர கற்களும்

தந்தம் தங்கம் மஞ்ஞையினமும்

மல்லின் துணியும் நிறைந்ததோர்

இந்த நாடெம் சொந்த நாடென்

றேத்துவோம் அதை வாழ்த்துவோம்.

கரடி புலியும் பிளிறும் களிறும்

கர்ஜித்தோடும் சிங்கமும்

வெருவிப்பாயும் காண்டாமிருகமும்

வீரமா மிருகங்களும்

மந்த மாருதத்தி லாடும்

மயிலும் மேவும் குயிலும் கூவும்

இந்த நாடெம் சொந்த நாடென்

றேத்துவோம் அதை வாழ்த்துவோம்.

ராம கிருஷ்ணர் புத்தர் போன்ற

எண்ணிலாத ஞானிகள்

காந்தி நேரு போஸு போன்ற

தலைசிறந்த தியாகிகள்

வீர ஜான்ஸி ராணி போன்ற

புனித மணிகள் வாழ்ந்ததோர்

இந்த நாடெம் சொந்த நாடென்

றேத்துவோம் அதை வாழ்த்துவோம்.

## 4. தேசிய கீதம், வந்தேமாதர கீதம், ஆகிய கீதங்களைப் பாடத் தெரிந்திருப்பது

தேசிய கீதம் தேசியக் கொடியைப் போல நம் நாட்டுக்குரிய புனிதமான அறிகுறி. நம் நாட்டின் பெருமையை விளக்குவதோடு நம் நாட்டின் கண்ணியத்தையும் நம் நாட்டினர்க்குள்ள உயர்ந்த நோக்கங்களையும் குறிப்பிடுகின்றது.

### தேசிய கீதம்

**ஜன கண மன அதி நாயக ஜயஹே**
**பாரத பாக்கிய விதாதா**
**பஞ்சாப சிந்து குஜராத மராட்ட**
**திராவிட உத்கல வங்க**
**விந்திய ஹிமாசல யமுனு கங்கா**
**உச்சல ஜலதி தரங்கா**
**தவ சுப நாமே ஜா ஹே**
**தவ சுப ஆசிச மா கே**
**காஹே தவ ஜெய காதா**
**ஜன கண மங்கள தாயக ஜெயஹே**
**பாரத பாக்கிய விதாதா**
**ஜெய ஹே, ஜெய ஹே, ஜெய ஹே**
**ஜய ஜய ஜய ஜய ஹே :**

இந்த தேசிய கீதம் 1911ஆம் ஆண்டில் கவியரசர் அரவீந்திர நாத தாகூர் மகாகவியால் இயற்றப் பெற்றது. இந்திய நாட்டு அரசியல் நிர்ணய சபையால் 1950ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 24ஆம் நாள் நம் நாட்டுக்குரிய தேசிய கீதமாகத் தேர்ந்து எடுக்கப் பெற்றது.

### தேசிய கீதத்தின் கருத்து

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிருய்.

நின் திருநாமம் பஞ்சாபையும், சிந்துவையும், குஜராத்தையும் மகாராட்டிரத்தையும், திராவிடத்தையும், ஓரிசாவையும், வங்கத்தையும் உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய இமய மலைகளில் எதிரொலிக்கிறது. யமுனை கங்கை நதிகளின் நாதத்தில் கலக்கிறது. இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப் படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன.
அவை நின் புகழைப் பாடுகின்றன
இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி! வெற்றி! வெற்றி!

குறிப்பு :- தேசிய கீதம் விரைவு நடையில் பாடப்பட வேண்டும். அது ஏறக்குறைய 52 வினுடிகளில் முடிவடைய வேண்டும்.

## வந்தே மாதர கீதம்

சுஜலாம் சுபலாம் மலையஜ சீதலாம்
சஸ்ய சாமளாம் மாதரம்
வந்தே மாதரம்!
சுப்ரஜ் யோஸ்த்ந புலகித யாமினீம்
புல்ல குசுமித த்ருமதல சோபினீம்
சுகாசினீம் சுமதுா பாஷிணீம்
சுகதாம் வரதாம் மாதரம்—வந்தே மாதரம்

இந்த கீதம் சுதந்தரப் போராட்டத்தின் பொழுது நம்முடைய மக்களுக்குத் தாரக மந்திரமாக விளங்கிற்று. இந்த கீதம் பங்கிம் சந்திர சட்டோபாத்யாய என்ற புகழ்பெற்ற வங்க எழுத்தாளரால் இயற்றப் பெற்றது. 1907ஆம் ஆண்டு அவர் வெளியிட்ட ''ஆனந்த மடம்'' என்ற வங்க நூலில் இந்த கீதம் வெளிவந்தது.

அரசியல் நிர்ணய சபையார் இந்தக் கீதத்தையும் தேர்ந்தெடுத்து அது தேசிய கீதத்துக்கு அடுத்தபடியாக மதிக்கப் படவேண்டும் என்று குறிப்பிட்டுள்ளனர்.

## இதன் பொருள்

மகா கவி பாரதியார் இந்த வந்தே மாதர கீதத்தின் பொருளைச் செய்யுள் உருவத்திலேயே அளித்துள்ளனர். அது

நளிர் மணி நீரும், நயம் படு கனிகளும்,
குளிர் பூந் தென்றலும், கொழும் பொழிற் பசுமையும்
வாய்ந்து நன்கிலகுவை, அன்னை!
—வந்தே மாதரம்

தெண்ணில வதனில் சிலிர்த்திடும் மேனியும்
தண்ணியல் விரிமலர் தாங்கிய தருக்களும்
புன்னகை ஒளியும், தே மொழிப் பொலிவும்
வாய்ந்தனை, இன்பமும் வரங்களும் நல்குவை!
—வந்தே மாதரம்

இளம்பாத சாரணன் இவ்விரண்டு கீதங்களையும் பாடிப் பழக வேண்டும்.

தேசிய கீதம் பாடப்படும் பொழுது, அல்லது வாத்தியங்களில் இசைக்கப்படும் பொழுது, சாரணன் நேர் நிலையில் நின்று அதற்கு மரியாதை செய்ய வேண்டும். கீதம் பாடப்படும் பொழுது அல்லது இசைக்கப்படும் பொழுது பேசுவது அல்லது இடம் விட்டுப் பெயர்தல் கூடாது. அப்படிச் செய்வது கீதத்தை அவமதிப்பது ஆகும்.

சாரணர்கள் கீதத்தின் சொற்களை அல்லது அதன் இசையை மாற்றுதல் கூடாது.

நிறைந்த பக்தியோடு அவைகளைப் பாடுவது நம் கடமையாகும்.

## 6. ஆற்றுப்படைக் குறிகளை (Wood Craft Signs) பயன் படுத்தும் முறை தெரிந்திருப்பது

ஆற்றுப்படை என்பது ஒரு சில சாரணர்கள் முன்னதாகச் சென்று பின்னல் வரும் சாரணர்களுக்குத் தாம் சென்றுள்ள பாதையை அடையாளங்கள் அமைத்துத் தெரிவித்தல்.

இளைஞர் சாரணியத்தில் (Scouting for Boys) ஆற்றுப் படுத்தலுக்குப் பயன்படும் அடையாளங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.



போக வேண்டிய பாதை இது.
இவ்வழியே செல்க.



இந்தப் பாதையில் செல்ல வேண்டாம்.




அம்புக்குறி காண்பிக்கும் திசையில் மூன்று தப்படி தொலைவில் உங்களுக்காக கடிதம் ஒன்று வைக்கப்பட்டுள்ளது.



என் வேலையை முடித்துக் கொண்டு நான் வீடு சென்றுள்ளேன்.





செல்ல
வேண்டிய
பாதை
இதுவே.





வலம் திரும்ப வேண்டும்.




மரங் கொத்தி அணியில் மூன்ருவது சாரணனுடைய அணிக் கையெழுத்து.

சாரணன் ஒருவன் தரையில் ஆற்றுப் படைக் குறிகளை வரையும் பொழுது முதன் முதலில் தன் அணிக் கையெழுத்தையும் வரைய

வேண்டும். அதுபோலவே கடைசி அடையாளத்திலும் அணிக் கையெழுத்து இருக்கவேண்டும்.

போக வேண்டிய பாதையைக் குறிப்பது போல அதையொட்டி உள்ளே போகவேண்டாத பாதைகளையும் குறிப்பிடவேண்டும். முந்தியதை அம்புக் குறியாலும் பிந்தியதை அடித்தல் குறியாலும் குறிப்பிட வேண்டும். அடையாளங்களைத் தரையில் போடும் வசதி இல்லாத இடங்களில் கற்கள், குறுகிய செடி, புல் கத்தை ஆகியவை களை உபயோகிக்கலாம்.

பட்டிணங்களில் திருத்தி அமைத்துள்ள தெருக்களில் அல்லது பாதைகளில் வலக்கை ஓரத்தில் மக்கள் நடப்பதால் அழிபடாத விதத்தில் அடையாளங்களைக் குறிப்பிட வேண்டும். குச்சிகளால் தரையில் போடலாம். 20 தப்படிக்கு ஒரு முறை வரைதல் வேண்டும். வெள்ளை மண் கட்டியால் (Chalk piece) வரைவது நல்லதல்ல.

வெளிவட்டாரங்களில் அடையாளங்கள் கற்களாலும் புல் கத்தை களாலும் அமைக்கப்படவேண்டும். 50 தப்படிக்கு ஒரு முறையாவது அடையாளங்கள் அமைத்தல் அவசியம்.

ஆற்றுப்படைப் பயிற்சிக்காக சாரணர்களை அடிக்கடி வெளி யிடங்களுக்கு அழைத்துச் செல்லல் அவசியம். அப்படி அரை மைல் ஒரு மைல் செல்லலாம். இரண்டு சாரணர்கள் அல்லது ஒரு சாரணன் முன்னே சென்று ஆற்றுப்படைக் குறிகளைப் போட்டுக்கொண்டுபோக வேண்டும். பத்து அல்லது பதினைந்து நிமிடங்களுக்கு அப்பால் ஏனைய சாரணர்கள் பின்பற்றிச் செல்லலாம்.

முன் சென்றவர்கள் உரிய முறையில் அடையாளங்கள் அமைத்துச் செல்லவேண்டும். அந்த வேலை முடிந்ததும் அதற்கு அறிகுறியாக ஒரு சிறுவட்டமும் வட்டத்தின் நடுவில் ஒரு புள்ளியும் வைத்துவிட்டு அருகில் 50 தப்படிக்குள் எங்காவது ஒளிந்து கொள்ள வேண்டும். பின்னால் வந்த சாரணர்கள் அவர்களைக் கண்டு பிடிக்க வேண்டும். கண்டுபிடிப்பதற்கு ஒரு கால வரையறை வைத்துக் கொள்ள வேண்டும். அதற்குள் பிடிபட்டால் பிடித்தவர்களுக்கு வெற்றி. அதற்குள் பிடிபடாவிட்டால் ஒளிந்தவர்களுக்கு வெற்றி.

சாதாரணமாக சிறுவட்டமும் மத்தியில் ஒரு புள்ளியும், ''நான் என் வேலையை முடித்துக் கொண்டு என் வீடு சென்றுள்ளேன்'' என்று பொருள்படுமாயினும் மேற் கூறப்பட்டுள்ள விளையாட்டுக்காக அதற்குப் புதுப்பொருள் தரப்பட்டுள்ளது.

ஆற்றுப்படைப் பயிற்சியின் (Following Trail) முக்கிய நோக்கம் சிறுவர்களை அவர்களுக்கு மன நிறைவு அளிக்கவல்ல வெளிவட்டாரங்களுக்கு அடிக்கடி அழைத்துச் செல்வதாகும்.

அப்படி அழைத்துச் செல்வது அவர்களைச் சாரண வாழ்க்கைக்குப் பழக்கம் பண்ணுவதாக அமையும். வெளிவட்டாரச் சூழ்நிலைகளே சாரணப் பயிற்சிக்கு மிகப் பொருத்தமுடைய சூழ்நிலை என்பதை இது வற்புறுத்தவும் பயன்படும்.

## 6. சாரண தண்டம் தாங்கிச் செல்லும் விதம், அதன் உபயோகம் தெரிந்திருத்தல்.

சாரண தண்டம் காட்டு மரத்தினால் அல்லது கெட்டி மூங்கிலால் ஆயது. அது 3 அல்லது 3.5 செ. மீ. குறுக்களவு உடையதாக இருக்கலாம். சாரணன் நேர்நிலையில் நின்று தண்டத்தை நட்டுக்குத்தாக வைத்துள்ள பொழுது அது அவன் தோளுக்கு மேல் காதளவு வரலாம். பொதுவாக சாரண தண்டத்தின் நீளம் 1.65 மீட்டர் இருக்கும்.

ஒரு படையில் உள்ள சாரண தண்டங்கள் எல்லாம் ஒரே நீளமுடையதாக இருத்தல் நல்லது.

சாரண தண்டம் மிகப்பளு உடையதாக இருத்தல் கூடாது. தண்டத்தில் அதன் நடுவைக் குறிக்கும் வகையில் ஒரு சிறு அடையாளம் செய்து கொண்டால் அது தண்டத்தை சமநிலையில் எடுத்துச் செல்லப் பயன்படும். சாரண தண்டத்தை ஒரு அளவு கோலாக உபயோகப் படுத்தலாம். ஆயின் அதற்காக அதனை மீட்டர், சென்டிமீட்டர்களாக வகுத்துக் கொள்ளவேண்டும்.

சாரண தண்டம் சாரணச் சீருடையின் ஒரு முக்கிய அம்சம் ஆகும். அதன் உபயோகங்கள் மிகப் பல. சாரணர்களிடம் இருக்கும் கயிறுகளையும் போர்வைகளையும் இரண்டு சாரணத் தண்டங்களையும் பயன்படுத்தி போலிக் கூடாரங்கள் (Improvised Tent) அமைத்துக் கொள்ளலாம். சாரண தண்டங்களையும் மரத் தழைகளையும் பயன்படுத்திச் சிறு குடிசைகள் கட்டலாம். உண்மையான கூடாரங்களுக்குச் சாரண தண்டங்களை இணைத்து கூடாரக் கம்பங்களாக அமைக்கலாம். நடந்து செல்கையில் சாரண தண்டம் ஊன்று கோலாக அமையும். கல் நிறைந்த அல்லது கரடுமுரடான இடங்களில் கஷ்டமில்லாமல் நடந்து செல்லச் சாரண தண்டம் பயன்படும். சேற்று நிலத்தைக் கடக்கவும் அது பயன்படும். நோயாளியை மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்ல சாரண தண்டத்தைப் பயன்படுத்தி டோலி (Stretcher) அமைக்கலாம். இதற்கு இரண்டு சாரணத்தண்டமும் இரண்டு அங்கிகளும் அல்லது இரண்டு கோணிப்பைகளும் தேவைப்படும். சாரணத்தண்டம் ஜனக் கூட்டத்தைக் கட்டுப்படுத்த, இருட்டில் வழி நடக்க, சுவர் ஏற, சதுப்பு நிலத்தைத் தாண்ட, தண்ணீரின் ஆழத்தை அளவிட, மரங்களின்


















15. சாரண தண்டத்தின் சில உபயோகங்கள்

1. போலிக்கூடாரம் அமைக்கலாம். 2. படகு தள்ளலாம். 3. கூட்டத்தைத் தடுக்கலாம். 4. தண்ணீர் ஆழம் அறியலாம். 5. உடல் பயிற்சிக்குப் பயன் படுத்தலாம். 6. குடிசை கட்டலாம். 7. உயர்ந்த சுவரைக் கடக்கலாம். 8. நோயாளிக்குரிய தொட்டில் அமைக்கலாம்.

உயரத்தை அளந்து மதிப்பிட, ஆறுகளின் அகலத்தைக் கணக்கிட பயன்படும். எலும்பு ஒடிய நேரிடில் சாரண தண்டம் முதலுதவி மட்டையாகப் பயன்படும். ஆறு ஆறு சாரண தண்டங்களைப் பயன்படுத்தி பாலத்தட்டிகள் (Trestles) அமைத்துக் கொண்டு அப்படியே ஒரு சிறு பாலத்தைக் கட்டலாம். சாரண தண்டத்தை முக்காலிகளாக அமைக்கலாம். கடிக்க வரும் நாய்களை அல்லது முட்டவரும் மாடுகளை சாரண தண்டத்தால் ஓட்டலாம். சாரண தண்டங்களால் சாரணக் கொடியைப் பறக்கவிடக் கொடிக் கம்பம் கட்டலாம். மிகுந்த இருட்டில் அணியில் உள்ள சாரணர்கள் வழி தவறி விடாமல் ஒருவரோடொருவர் இணைப்புண்டு செல்ல சாரண தண்டம் பயன்படும். சாரண தண்டம் சாரணனுக்கு உறுதுணையாக அவன் செல்லும் இடம் எல்லாம் செல்லும்.

சாரணன் சாரண தண்டத்தைக் கையில் எடுத்துச் செல்லும் பொழுது அதனை ஒரு பாரமாக எண்ணுமல் நண்பனுக எண்ணி மன எழுச்சியுடன் எடுத்துச் செல்லவேண்டும். அதைச் சம நிலையில் எடுத்துச் செல்வது பொருத்தம் உடையது. தான் போகும் சூழ்நிலைக்குப் பொருந்தும் முறையில் ஏனைய முறைகளையும் கையாள வேண்டும்.

## சாரண தண்டத்துக் குரிய கவாத்து

சாரண தண்டத்துக்குரிய கவாத்து (Drill) எப்படிச் செய்ய வேண்டும் என்பதை ஒவ்வொரு சாரணனும் நன்கு தெரிந்திருப்பது அவசியம்.

**நேர்நிலை நிற்றல் :-** "நேர்நிலை நிற்க" (Alert or Attention) என்ற கட்டளை பிறந்ததும் சாரணன் நேராக நிமிர்ந்து நின்று கொண்டு வலக்கையால் சாரணத் தண்டத்தை நட்டுக்குத்துற உடம்பின் வலப் பக்கத்தோடு சேர்த்துப் பிடித்துக் கொள்ள வேண்டும். இரண்டு கைகளும் விறைப்பாகத் தொங்குவதோடு வலது கை விரல்கள் தண்டத் தைச் சுற்றி அமர்ந்திருக்கும். இடது கை விரல்கள் இறுக மூடப்பட்டுப் பெருவிரல் சாரணனின் கால் சட்டையின் இடப்பக்கத் தையலைத் தொட்டுக் கொண்டிருக்கும். (படத்தில் இதைக் காண்பிக்க வில்லை) குதிங்கால்கள் ஒன்றையொன்று தொட்டுக் கொண்டும் கால்களின் முன் பக்கம் 30° அளவு பிரிந்தும் இருக்கும். சாரண தண்டத்தின் பருமனுன நுனி தரையில் வலது காலுக்கு அருகில் அதன் வலப்பக்கத்தில் அமர்ந் திருக்கும். தண்டத்தின் மேல்பாகம் தோளோடு ஒட்டிக்கொண்டிருக்கும்.



16. தண்டம் நேர் நிலை



17. தண்டம் தளர் நிலை

**தளர் நிலை நிற்றல் :-** ''தளர் நிலை நிற்க'' (Stand at Ease) என்ற கட்டளை பிறந்ததும் சாரணன் தண்டத்தை முன் பக்கமாய் சாய்த்துப் பிடித்துக்கொண்டு இடது காலை விலக்கி இடது கையை முதுகின் மேல் வைக்க வேண்டும். சாரண தண்டம் வலது கையில் எவ்வளவு தொங்கலாகப் பிடிக்கலாமோ அப்படித் தொங்கலாகப் பிடிக்க வேண்டும். தளர்ந்த நிலை நிற்றல் (Stand Easy) ஆகும்.

**வணக்கம் செய்தல் :-** சாரண தண்டம் கையில் உள்ளபொழுது சாரண வணக்கம் அந்தத் தண்டத்தின் மீது செய்யப்பட வேண்டும்.



17a. தளர் நிலை

## சாரண வணக்கம்

நிலையில் நிற்கும்பொழுது சாரண வணக்கம் செய்ய சாரணன் நேர் நிலையில் நிற்க வேண்டும். அப்படி நின்று கொண்டு வலக் கையிலுள்ள தண்டத்தின் மீது சமிக்ஞை அமைக்கப் பட்டுள்ள இடக் கையால் விரைவாகவும், விறைப்பாகவும் தொடவேண்டும். முன்னங் கை தரைக்கு மட்டமாக (Horizontal) இருக்க வேண்டும். அப்படி மனத்துக்கு மூன்று எண்ணுவது வரை வைத்திருந்து விட்டு கையை விரைவாக எடுத்து விடவேண்டும். இதுவே நிலையில் உள்ள பொழுது செய்யத் தக்க சாரண தண்ட வணக்கம்.



18. நேர் நிலை வணக்கம்

சாரணன் நடந்து சென்று கொண்டிருக்கும் போது வணக்கம் செய்ய அவன் நிற்க வேண்டியதில்லை. நடந்து கொண்டே, நேர் நிலை வணக்கத்தைப் போலவே, வணக்கம் செய்ய வேண்டும். தண்டத்தைத் தரையில் படாதபடி சற்று தூக்கிக் கொள்வது அவசியம். யாருக்கு வணக்கம் செய்ய வேண்டுமோ அவர்கள் இருக்கும் இடத்துக்கு மூன்று தப்படி அளவு நெருங்கினதும் வணக்கத்தை

ஆரம்பித்து, அவர்கள் இருக்கும் இடத்தி லிருந்து மூன்று தப்படி செல்லும் வரை வணக்கம் செய்யும் கை தண்டத்தின் மீது இருக்க வேண்டும். அப்படி மூன்று தப்படி சென்றதும் விரைவாகக் கையை எடுத்துவிட வேண்டும். இதுவே நடந்து கொண்டிருக்கும் பொழுது செலுத்த வேண்டிய சாரண தண்ட வணக்கம். யாருக்கு வணக்கம் செலுத்தப் படுகிறதோ அவர் பக்கம் கண்பார்வை இருக்க வேண்டும்.

**தண்டத்தைச் சமநிலையில் கொண்டு செலல் :-** ''தண்டம் சமநிலை'' (Trail staves) என்ற கட்டளை பிறந்ததும் தொங்க விட்டுள்ள வலக்கையால் தண்டத்தின் மத்தி யைத் தளர்த்திப் பிடித்து தண்டத்தை மட்ட மாகத் தொங்கவிட வேண்டும்.



18a. நடந்து செல்கை யில் வணக்கம் செய்தல்

| | |
|---|---|
| தண்டத்தை உறுதியாகப் பிடித்தல் | (Secure staves) |
| தண்டத்தை தோள்மேல் கொளல் | (Slope staves) |
| தண்டத்தை தோளோடு சேர்த்தல் | (Shoulder staves) |
| தண்டத்தை தாங்குதல் | (Support staves) |
| தண்டத்தின் மீது அமர்தல் | (Sit at ease) |
| தண்டத்தின் மீது தலைசாய்த்தல் | (Rest on staves) |

**கவாத்துக்களுக்கு உரிய கட்டளைகள்**

| | |
|---|---|
| ''தண்டம் உறுதி'' | "Secure staves" |
| ''தண்டம் நேர் நிலை'' | "Order staves" or "Alert" |
| ''தண்டம் தளர் நிலை'' | "Stand at case" |
| ''தண்டம் சம நிலை'' | "Trail staves" |
| ''தண்டம் தோள்மேல்'' | "Slope staves" |
| ''தண்டம் தோளோடு'' | "Shoulder staves" |
| ''தண்டம் தாங்குக'' | "Support staves" |
| ''தண்டம் மீது அமர்க'' | "Sit at ease" |
| ''தண்டம் மீது தலைசாய்க்க'' | "Rest on staves" |



19. தண்டம்



20. தண்டம் உறுதி



21. தண்டம்



22. தண்டம் தோளோடு



23. தண்டம் தாங்குதல்





24. தண்டம் மீதமர்தல்  25. தண்டம் மீது தலைசாய்த்தல்

**கயிற்றைக் கொண்டு சதுரமுடிச்சு, தூளிமுடிச்சு, யானைக் கொலுசு, வளைய முடிச்சு, முழுச்சுற்றும் இரண்டு அரைக் கொலுசும் என்ற முடிச்சு, ஆட்டிடையர் முடிச்சு, மீனவர் முடிச்சு என்ற முடிச்சுகள் கட்டுதல், அவற்றின் உபயோகங்களைத் தெரிந்து கொள்ளுதல்.**

நம்முடைய தினசரி வாழ்க்கையில் கயிற்றினால் முடிச்சுகள் கட்டும் அவசியம் அடிக்கடி உண்டாகிறது. அப்படி ஏற்படும் சந்தர்ப்பங்களை ஆறு வகையாகப் பிரிக்கலாம். அவை :—

(1) ஒரு கயிற்றின் இரு நுனிகளையும் இணைத்தல்

(2) இரண்டு வேறு கயிறுகளை இணைத்து ஒன்று சேர்த்தல்

(3) கயிற்று நுனியில் வளையம் அமைத்தல்

(4) கயிற்றை மரத்தில், அல்லது கம்பத்தில், அல்லது ஒரு இரும்பு வளையத்தில் தொடுத்தல்

(5) நீளமாக உள்ள கயிற்றினைத் தாற்காலிகமாக குறுக்குதல்

(6) கயிற்றின் நுனியில் தடுப்பு முடிச்சுகள் அமைத்தல்

### பயிற்சி

முடிச்சுகள் கட்டக் கற்றுக் கொள்ளும் சாரணர்கள் முடிச்சுகள் கட்டுவதில் நல்ல தேர்ச்சியுள்ள ஒருவரிடம் அவர்கள் கட்டுவதை நேரில் பார்த்தே கட்டும் முறையைக் கற்றுக்கொள்ள வேண்டும்.

அப்படிப் பார்த்துத் தெரிந்து கொள்வதற்கு அவருக்குப் பக்கத்தில் அவர் பார்வை எந்தத் திசையில் உள்ளதோ அந்தத் திசையைத் தானும் பார்த்துக்கொண்டு உட்கார்ந்துக் கொள்ள வேண்டும். எதிர்ப் பக்கமாக உட்கார்ந்து பார்ப்பது குழப்பம் தரும். மேலும் அவரைப் போலவே தானும் கையில் கயிற்றை வைத்துக் கொண்டு அவருடைய கையைக் கவனித்து அவர் செய்வது போலவே தானும் செய்தல் வேண்டும். இப்படிச் செய்வது நல்ல பயிற்சிமுறை ஆகும்.

கயிற்றை முடிச்சுகள் கட்டப் பயன்படுத்துகையில் அக்கயிற்றின் வெவ்வேறு பாகங்களை "கட்டும் நுனி" (Working End), "நீட்டுப் பாகம்" (Standing Part), "வளைவு" (Bight) என்று குறிப்பிடப் படும். இவை படத்தில் விளக்கப்பட்டிருக்கின்றன.










26. கயிற்றின் பாகங்கள்













உள் இருப்பது முடிச்சு கயிற்றையும் வளையத்தையும் இணைப்பதும்




27. முடிச்சு வகைகள்

முடிச்சுகளில் ஒரு சில "இணைப்புகள்" (Bends); வேறு சில "தொடுப்புகள்" (Hitches); இன்னும் சில "வளையங்கள்" (Loops) ஆகும். ஒரு சில தனி முடிச்சுகளாகவும் உள்ளன. இவைகள் படத்தில் விளக்கப்பட்டிருக்கின்றன.

## இளம் பாதன் கற்றுக்கொள்ள வேண்டிய முடிச்சுகள்:

### படிமுடிச்சு அல்லது சதுரமுடிச்சு (Reef Knot)

பல பொருள்களை ஒரு மூட்டையாகக் கட்டுதற்குரிய முடிச்சு, முதல் உதவி செய்யும்பொழுது பான்டேஜ் துணியின் இரு நுனிகளையும் இணைத்தற்குரிய முடிச்சு, துண்டுத் துணியில் துணி மூட்டை கட்டுதற்குரிய முடிச்சு.

பான்டேஜ் கட்டவும் பல புத்தகங்களை அல்லது வேறு பொருள்களை ஒரு கட்டாக (Parcel) கட்டவும் இந்த முடிச்சு பயன்படும்.

**செயல் முறை**

கயிற்றின் இரு நுனிகளையும் கையில் எடுத்து முதல் படத்தில் உள்ள மாதிரி வைத்துக் கொண்டு இரண்டாவது படத்தில் காண்பித்துள்ளது போலக் கொண்டு வந்து மூன்றாவது படத்தில் உள்ளது போல முடிந்து கொள்க. பிறகு கட்டப்பட்ட முடிச்சை இறுக்கிக் கொள்ள வேண்டும்.







28. சதுர முடிச்சு கட்டுதல்
(Reef Knot)

### முடிச்சை உலேத்தல்

சதுர முடிச்சை படத்தில் காண்பித்துள்ளபடி உலேக்கலாம்.





29. சதுர முடிச்சை உலேத்தல்

ஒரு நுனியையும் அதைச்சேர்ந்த நீளக்கயிற்றையும் வெவ்வேறு திசையில் இழுக்க வேண்டும். அப்படி இழுத்தால் இரண்டாவது படத்தில் உள்ளதுபோல் முடிச்சு உலேந்து தளரும். இப்பொழுது முடிச்சை எளிதில் அவிழ்த்து விடலாம்.

### முடிச்சின் உபயோகம்

புத்தகங்கள் அல்லது துணிகளை மூட்டையாகக் கட்டுவதற்கு சதுர முடிச்சு பயன்படும். முதல் உதவி செய்யும் பொழுதும் சதுர முடிச்சு பயன்படும். எலும்புடைந்து மட்டை வைத்துக் கட்டவும் தலே, கை, காலில் மருந்து போட்ட பிறகு அந்த மருந்துக்கு மேல் பஞ்சுத் துணி (lint) பஞ்சு இவைகள் வைத்துள்ள பொழுது அவற்றைப் பாது காக்க அமைக்கப்படுகின்ற பான்டேஜ் கட்டுகளுக்கும் இந்தச் சதுர முடிச்சு பயன்படுகிறது. அதுபோலவே கையைத் தொங்கவிடத் தொட்டில் கட்டுவதற்கும் சதுர முடிச்சு பயன்படும். பான்டேஜ் துணியைப் பட்டையாக மடித்துக் கட்டுவதற்கும் சதுர முடிச்சு பயன் படுகிறது.

## மருத்துவர் முடிச்சு

சதுரமுடிச்சு ஒரு சிறு மாறுதலுடன் மருத்துவர் முடிச்சு (Surgeon's Knot) ஆகும். பார்வைக்கு இது சதுரமுடிச்சு போலவே தோன்றலாம். ஆனல் இது கயிற்றின் நுனியை மறு கயிற்ருேடு ஒரு தரம் சுற்றுவதற்குப் பதில் இரண்டு தரம் சுற்ற வேண்டும். இந்த முடிச்சை மருத்துவர்கள் தையல் போடும்போது பயன்படுத்து கிருர்கள். பார்சல்கள் கட்டும்போதும் இதனைப் பயன்படுத்தலாம்.



ஆரம்பம்



முடிவு

30. மருத்துவர் முடிச்சு
(Surgeon's Knot)

## சுருக்குச் சதுர முடிச்சு

எளிதில் அவிழ்த்துவிடும் நோக்கத்தோடு சதுர முடிச்சை சுருக்குச் சதுர முடிச்சாக (Slipped Reef) கட்டலாம். முடிச்சை முடிக்கும்பொழுது ஒரு நுனியை மடித்து வைத்துக் கட்டி விட்டால் அந்த நுனியைப் பிடித்து இழுத்தால், முடிச்சு அவிழ்ந்து விடும். அது போலவே இரண்டு நுனிகளையும் மடித்துக் கட்டலாம்.



ஒற்றை (Single)



இரட்டை (Double)

31. சுருக்குச் சதுரமுடிச்சு (Slipped Reef)

## தூளி முடிச்சு

இரண்டு கயிறுகளை ஒன்ருய் இணைத்து நீளமுள்ள ஒரு கயிறு தயார் பண்ணிக் கொள்வதற்கு உரிய இந்த முடிச்சை தூளி முடிச்சு (Sheet Bend) என்பர்.

**செயல் முறை :** படத்தில் உள்ளதுபோல இரு கயிற்றின் நுனிகளை வைக்க வேண்டும். ஒரு நுனியை மறுகயிற்றைச் சுற்றி எடுக்க வேண்டும். இரண்டாவது படத்தில் உள்ளதுபோல கயிற்றைக் கொண்டுவர வேண்டும். இப்பொழுது மூன்ருவது படத்தில் உள்ளபடி இருக்கும். நான்காவது படத்தில் காண்பித்துள்ளதுபோல முடிக்க வேண்டும்.









32. தூளி முடிச்சு (Sheet Bend) கட்டுதல்

இதே தூளி முடிச்சை புத்தகம் கட்டுகிறவர்கள் உபயோகப் படுத்துகிருர்கள். நெசவுத் தொழிலாளர்களும் உபயோகப்படுத்து



33. நெசவுத் தொழிலாளர் தூளி முடிச்சு (Weaver's Knot)

கிருர்கள். கட்டுகிற மாதிரியில் இவை மாறுபடு கின்றனவேயொழிய தோற்றத்தில் மாறுபாடு இல்லே. புத்தகம் கட்டுதற்குப் பயன் படுத்தப்படும் தூளி முடிச்சும் சாதாரணமான தூளி முடிச்சே ஆகும்.

மிகப்பருமனுன கயிறுகளே இணைக்கும்போது கயிறு விரைப்பாக உள்ளதால் முடிச்சு அடங்கி இருக்காமல் பிரிந்து வந்துவிடக் கூடும். இதைத் தவிர்ப்பதற்கு கயிற்றின் நீளப்பாகத்தோடு (Standing part) கட்டும் நுனியை (Working end) யும் பிணைத்து வரிதல் (Seizing) அவசியம்.



34. பிணைத்து வரிதல் (Seizing)

## இரட்டைத் தூளி முடிச்சு

இரட்டைத்தூளி முடிச்சு தூளி முடிச்சை விட உறுதியானது. தூளிமுடி கட்டுவது போலவே தான் கட்டவேண்டும். ஆயின் படத்தில் காண்பித்துள்ள மாதிரி இரண்டு சுற்றுகள் இருக்க வேண்டும்.





35. இரட்டைத் தூளி முடி (Double Sheet Bend) கட்டுதல்

இரண்டு கயிறுகளை இணைப்பதற்கு இன்னும் வேறு சில முடிச்சுகள் பயன்படும். ஆனால் இளம் பாதப் பயிற்சிக்குத் தேவை இல்லை.

## யானைக் கொலுசு

ஒரு மரத்தில் அல்லது ஒரு கொம்பில் கயிற்றைக் கட்டுவதற்குப் பயன்படும் தொகுப்பு (Clove Hitch) யானைக் கொலுசு எனப்படும்.

வீட்டில் ஒரு தூணில் இருந்து இன்னொரு தூணுக்கு கயிற்றால் கொடி கட்டவேண்டும் என்றால் இந்த யானைக் கொலுசு பயன்படும்.

**செயல் முறை.** கயிற்றின் நுனியைத் தூணைச் சுற்றிக்கொண்டு வர வேண்டும். சுற்றிக் கொண்டு வரும்போது கயிற்றின் நீளப் பாகம் மேலாகவும் நுனிப்பாகம் கீழாகவும் இருக்க வேண்டும். கயிற்றின்




36. யானைக் கொலுசு (Clove Hitch)

மறுசுற்றில் நுனிக்கயிற்றினை மேலுக்குத் தூக்கி ஒரு கையால் பிடித்துக்கொண்டு கயிற்றை அதே ரீதியில் (வலமாகச்சுற்றிக் கொண்டு வந்தால் வலமாக, அல்லது இடமாகச் சுற்றிக் கொண்டு வந்தால் இடமாக) சுற்றிக் கொண்டு நுனிக்கயிறு நீளக்கயிற்றின் அடியில் வரும்படி செய்ய வேண்டும். இந்த யானைக் கொலுசுத் தொகுப்பு இங்கு கூறியுள்ளது போல் கட்டினால் கட்டுவதில் தவறுதல் வராது.

பிறகு தொடுப்பை இறுக்க வேண்டும். இறுக்கின பிறகு ஒரு அரைக் கொலுசு அமைத்தால் கட்டு நெகிழ்ந்து அவிழ்ந்து விடாது.

நடுவில் உள்ள படத்தில் காண்பித்துள்ளது போலக் கயிற்றை அமைத்துக் கொண்டு கம்பத்தின் உச்சியிலிருந்து போட்டால் அதுவும் யானைக் கொலுசு ஆகும்.

## வளைய முடி

தண்ணீரில் விழுந்து தத்தளிப்பவர்களைக் காப்பாற்றக் கயிற்று நுனியில் ஒரு வளையம் அமைத்தல் நல்லது. வளையம் அமைத்த முடிச்சை வளையமுடிச்சு (Bow line) என்பர். வளையத்தை அமைக்கும் முடிச்சு நழுவிவிடாத முடிச்சாக இருத்தல் வேண்டும்.



37. வளைய முடிச்சு (Bow line) கட்டுதல்

இத்தகைய வளையம் மாடுகளைக் கட்டுவதற்காகப் பயன்படும். அவைகளின் கழுத்தளவுக்குப் பொருந்தும் முறையில் முடிச்சு கட்டப் படவேண்டும்.

கயிற்றின் ஒவ்வொரு நுனியிலும் ஒரு வளையம் அமைத்தால் அது ''இழுவை'' எனப்படும். இது தீ விபத்துக்களில் பயன்படும்.



37a. இழுவை

இழுவையின் ஒரு பக்கம் உள்ள வளையத்தை முதல் உதவி செய்பவர் தன் கழுத்தைச் சுற்றியும் இன்னொரு பக்கம் உள்ள வளையத்தை மயக்கமாய் உள்ளவர் உடம்பைச் சுற்றியும் அணிவித்துத் தன் கையால் முன்னோக்கி நகர்ந்து தீ விபத்தில் அகப்பட்டுக் கொண்டவரை வெளிக் கொண்டு வரலாம். மயக்கமாய் உள்ளவர் தலை வளையத்தைக் கட்டப்பட்டுள்ள முடிச்சின்மேல் இருக்க வேண்டும்.

## முழுச்சுற்றும் இரண்டு அரைக்கொலுசும்

இன்னொரு பக்கம் கட்டப்பட்டுள்ள கயிற்றினை இழுத்து, இழுத்தபடியே ஒரு மரத்தில் அல்லது ஒரு தூணில் கட்டுவற்குப் பயன்படுவது **இந்த ஒருமுழுச்சுற்றும் இருஅரைக் கொலுசும்** என்ற தொடுப்பு.

ஒரு தூணை அல்லது கம்பத்தை இரண்டு தரம் சுற்றிக் கயிற்றைக் கொண்டு வருவது முழுச்சுற்று எனப்படும்.

முழுச்சுற்று ஆனதும் நுனிக் கயிற்றால் நீளக் கயிற்றினைச் சுற்றி இரண்டு தரம் அரைக் கொலுசு போட்டால் கயிறு உறுதியாகக் கட்டப்பட்டிருக்கும்.

இப்படி உள்ள தொடுப்பு உறுதியாய் இருத்தற்கு நாம் கட்டியுள்ள இரண்டு அரைக் கொலுசுகளும் உதவுகின்றன. கயிற்றின் நுனியையும் நீளப்பாகத்தையும் பிணைத்து வரிதலும் செய்யலாம்.



38. முழுச்சுற்றும் இரண்டு அரைக் கொலுசும் (Round Turn and Two Half Hitches) என்ற முடிச்சு

## ஆட்டிடையர் முடிச்சு

கட்டுத்தறியில் பிணைக்கப்பட்டுள்ள நீளக் கயிற்றில் ஆடுமாடு களைக் கட்டி அவைகளை மேய விடுவது வழக்கம். தரையில் உள்ள



39. ஆடு மேய்த்தல்

புல்லுக்கும் செடி கொடிகளுக்கும் ஏற்ற வகையில் கயிறு நீள மாகவோ அல்லது குறுகலாகவோ பயன்படுத்தப்படும்.

நீளத்தைக் குறைத்துக் கொள்ள அதனைத் துண்டு பண்ணத் தேவையில்லை. அவசியமில்லாத பாகத்தை மூன்றாக மடித்துக் கொண்டு அந்த மடிப்பின் இரு மருங்கிலும் நீளப் பாகத்துக்

### ஆட்டிடையர் முடிச்சு கட்டும் முறை



ஆரம்பம்



40. ஆட்டிடையர் முடிச்சு



முடிவு
குச்சிச்செருகல்
நீளக்கயிற்றை உருவி
பிணைத்துவரிதல்

கயிற்றினுல் அரைக் கொலுசு அமைத்தல் போதுமானது. இது **ஆட்டிடையர் முடிச்சு** (Sheep Shank) எனப்படும்.

அவசியமில்லாத பாகத்தை மடித்துக் கட்டுவதோடு முடிச்சு உலேயாமல் இருப்பதற்கு (1) பிணைத்து வரியலாம், (2) குச்சி செருகலாம், (3) நீளக் கயிற்றையே மடிப்பு வழியாக உருவிவிடலாம். அல்லது இறுக்கிக் கட்டிவிடலாம்.



41. ஆட்டிடையர் முடிச்சு நைந்து போன இடத்தைக் காப்பாற்றும்

ஆட்டிடையர் முடிச்சு மிகவும் முக்கியமான ஒரு சந்தர்ப்பத்தில் பயன்படும். இதுவே அதன் முக்கிய உபயோகம் ஆகும். கயிறு நைந்து பல வீனம் அடைந்துள்ளதானுல் அந்தப் பாகத்தை தாற்காலிகமாக ஒதுக்கிவிட இந்த முடி வாய்ப்புத் தருகிறது.

நைந்து போன இடத்தையும் அதற்கு முன் உள்ள பாகத்தையும் பின்உள்ள பாகத்தையும் மூன்று மடிப்பாக மடித்து ஆட்டிடையர் முடி அமைத்தால் நைந்துள்ள பாகத்தினுல் இடைஞ்சல் உண்டாகாது.

இப்பொழுது கயிற்றை எவ்வளவு பலமாக இழுத்தாலும் நைந்துள்ள இடத்தில் கயிறு அறுபடாது.

## செம்படவர் முடிச்சு

வழவழப்பான அல்லது தண்ணீரில் நனேந்துள்ள இரு கயிறுகளே இணைக்க வேண்டுமானுல் செம்படவர் முடிச்சைப் பயன் படுத்தலாம்.

இந்த முடிச்சு கட்டுவதற்கு இரண்டு கயிறுகளேயும் தரையில் போடவேண்டும். போடும் பொழுது இரண்டு நுனிகளும் ஒன்றுக்கொன்று எதிராக இருத்தல் வேண்டும். கயிற்றின் கனத்துக்கு ஒத்தவாறு ஆறு அங்குலம் அல்லது ஒரு அடி நீளத்துக்கு இரு கயிறுகளும் பக்கத்தில் பக்கத்தில் இருக்கவேண்டும். இப்பொழுது இடது பக்கம் உள்ள நுனியைக் கொண்டு இடது பக்கம் ஒரு முடிச்சும், வலது பக்கம் உள்ள நுனியைக் கொண்டு வலது பக்கம் ஒரு முடிச்சும் படத்தில் காண்பித்துள்ள மாதிரி கட்டவேண்டும். அப்புறம் முடிச்சுகளே இறுக்கி நீளக்கயிறுகளேப் பிடித்து இழுத்தால் முடிச்சுகள் இரண்டும் நெருங்கிக் கொள்ளும். முடிச்சை அவிழ்க்கும்பொழுது நுனியையும் பிடித்து எதிர் எதிராக இழுக்க வேண்டும். இப்படி



42. மீனவர் முடிச்சு (Fisherman's Knot)

இப்படி இரண்டு முடிச்சுகளையும் அகற்றிக் கொண்டு எளிதாய் அவிழ்த்து விடலாம்.

**குறிப்பு:** இடது பக்கம் உள்ள முடிச்சின் நுனி இடது பக்கமாக இருக்கும். வலது பக்கம் உள்ள முடிச்சின் நுனி வலப்பக்கமே செல்லும். தரையில் கயிறு இரண்டினையும் போட்டுக்கொண்டு முடிச்சைக் கட்டுவதானல் தவறு ஏற்படாது.

## நுனிவரிதல்

கயிறு பல புரிகளாலாயது. இப் புரிகள் முறுகி அமைந்திருப்பின் கயிறு பலம் உடையதாக இருக்கும். கயிற்றை வெட்டித்துண்டாக்கப்படும் போது நுனிகளை அப்படியே விட்டுவிடுவது கயிற்றுக்குக் கெடுதி விளைவிக்கும். வெட்டித் துண்டாக்கி அப்படியே விட்டு

43. சாதாரண நுனிவரிதல் (Ordinary Whipping)

விட்டால் புரிகள் பிரிந்துவிடும். கயிறும் கொஞ்சம் கொஞ்சமாகச் சிதைந்து அழிவடையும். இதைத் தடுக்க கயிற்று நுனிகளை வரிந்து கட்டுதல் வேண்டும்.

வரிந்து கட்டுவதற்கு கெட்டி நூல் (twine) தேவைப்படும். கயிற்றின் நுனிப்பாகத்தில் முதல் படத்தில் காண்பித்துள்ள மாதிரி கெட்டி நூலை மடித்து வைத்துக்கொள்ள வேண்டும். கயிற்றின் கனம் எவ்வளவோ அதற்குச் சற்று அதிகமான தொலைவிலிருந்து வரிந்து கட்டுதலை ஆரம்பிக்கவேண்டும். மடித்து வைத்துள்ள கெட்டி நூல் கயிற்று நுனி அருகில் வளையம் போல இருக்கும். வரிந்து கட்டுதல் முடிவடைந்ததும் கெட்டி நூலின் நுனியை இந்த வளையத்துக்குள் தொடுத்துக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு கீழ் இருக்கும் எதிர் நுனியைப் பிடித்து மெதுவாக இழுக்க வேண்டும். கெட்டி நூலின் இறுதி நுனி வரிந்து கட்டலுக்குள் அடங்கிவிடும். தொங்கிக் கொண்டிருக்கும் கெட்டி நூல் நுனிகளைக் கத்தரித்து அழகு பண்ண இரண்டாவது படத்தில் உள்ளது போல அது காணப்படும்

இது சாதாரணமான நுனிவரிதல். இதை விட நல்லது கப்பல் பாய் செய்வோர் நுனிவரிதல். இது படத்தில் விளக்கப்பட்டுள்ளது.



43a. கப்பல் பாய் செய்வோர் நுனி வரிதல் (Sailmaker's Whipping)

**(9) தன் அணியில் உள்ள சாரணர்களோடு நான்கு மைல், நடந்து சென்று அங்கு அரை நாள் அளவாயினும் செலவு செய்துள்ள அனுபவம் பெறல்.**

இந்த அனுபவம் பெறுவதற்கு அணித் தலைவன் ஏற்பாடு செய்ய வேண்டும். அணித்தலைவன் ஏனைய சாரணர்களோடு சென்று அவனுக்கு யாவற்றையும் விளக்கிக் கூறவேண்டும். இப்படிப் போவதைச் சாரண ஆசிரியருக்கு முன்னதாகத் தெரிவித்து, அவர் அனுமதி பெற்றுச் செல்லவேண்டும்.

காலையில் சென்று மாலைவரைத் தங்கிவிட்டு வரலாம். அவசியமான உணவு அல்லது சிற்றுண்டியைச் சாரணர்களே செல்லும் இடத்தில் தயாரித்தல் வேண்டும்.

சாரண முறையில் தெரிந்து கொள்ளவேண்டியவைகளை அணித் தலைவன் சிறுவனுக்கு விளக்கிக் கூறவேண்டும். சுற்றுலாச் செல்லும் சாரணர்கள் தாங்கள் தங்கும் இடங்களை எப்படி துப்புரவாகவும் ஒழுங்காகவும் வைத்துக் கொள்கிறார்கள் என்பதை உணர்த்துவது அணித்தலைவனுக்குள்ள கடமை.

## இளம்பாதச் சின்னம் பெற்ற பிறகு

இளம்பாதச் சின்னம் பெறுவதற்குச் சிறுவர்கள் கற்றுத் தெரிந்து கொள்ள வேண்டியவைகள் இதுவரை விளக்கப்பட்டன. சிறுவன் சாரணனானதும் தன் பயிற்சியை அதோடு விட்டுவிடாமல் தான் கற்றுக் கொண்டுள்ள சாரணக் கலைகளை இன்னும் தெளிவாகப் புரிந்து கொள்ளவும் அவற்றில் இன்னும் நல்ல தேர்ச்சி அடையவும் முழு ஊக்கத்துடன் பாடு படவேண்டும்.

சாரணனுக்கு மிகவும் முக்கியமாக உள்ளது அவனுடைய ஒழுக்கம். தான் கற்றுக் கொண்டுள்ள சாரண நெறி பத்தும் ஏட்டுச் சுரைக்காயாக இருந்து விடாதபடி அவைகளைத் தன் தினசரி வாழ்க்கையோடு பிணைத்துத் தான் செய்யும் காரியங்கள் ஒவ்வொன்றும் சாரண நெறிக்குப் பொருத்தமாக உள்ளதா என்று ஆராய்ந்து பார்த்துத் தன் வாழ்க்கையைச் சீர்திருத்தி அமைத்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்வதால் சாரணன் தன் ஆசிரியருக்கு அளித்த வாக்குறுதியைக் காப்பாற்றியவனாகிறான்.

தன் ஒழுக்கத்தைப் பேணிப் பாதுகாப்பது போலச் சாரணன் தான் கற்றுள்ள கலைகளையும் பேணிப் பாதுகாக்கவும் கடமைப் பட்டவன். கற்றுக்கொண்ட கலைகளை வாய்ப்புக் கிடைக்கும் பொழுது பழக்கத்தில் கொண்டுவருதல் அவனுக்குள்ள கடமை. தேசியக் கொடி, தேசியகீதம், சாரணக் கொடி முதலியவற்றைப் பற்றித் தான் கற்றுக் கொண்டுள்ளவையைப் படைக்கூட்டநாட்களிலும், சுதந்திர

தினம், குடியரசு தினம் போன்ற கோலாகல நாட்களிலும் பயன்படுத்த வேண்டும். படைக்கூட்ட நாட்களில் கொடியை முறையாக மடித்துக் கட்டி, கொடிக்கம்பத்தின் உச்சியில் தயாராக வைப்பதில் தன் அணித் தலைவனுக்கு உதவிபுரிய வேண்டும். கொடிக்குரிய மரியாதைகளை கொடி வணக்கம் செய்யும் போது நினைவு படுத்திக் கொள்ளலாம். தேசியகீதம் பாடும் போது அதற்குரிய கால வரையறையோடு பாடிப் பழகலாம். சுதந்திர நாட்களிலும் குடியரசு நாட்களிலும் தான் குடியிருக்கும் பகுதியில் கொடிகளைப் பறக்கவிடுவதில் அண்டை வீட்டினர்களுக்கு உதவிபுரியலாம்.

அது போலத் தான் கற்றுக்கொண்டுள்ள முடிச்சுகளையும் வாய்ப்புக் கிடைக்கும்போது மறுபடியும் கட்டிப் பழகலாம். இது தவிர சிக்கலான சூழ்நிலையிலும் (உதாரணமாக, இருட்டாக உள்ள அறைகளில், அல்லது ஒரு கையால் மட்டுமே கட்டவேண்டும் என்ற நிர்பந்தம் உள்ளபொழுது) ஒவ்வொரு முடிச்சையும் கட்டிப் பழகலாம். நுனிவரிதலின் முக்கியத்துவத்தை உணர்த்துகின்ற முறையில் அணியில் உள்ள கயிறுகளை நுனிவரிதல் செய்து காப்பாற்ற முன் வரலாம். ஆற்றுப்படைக் குறிகளை அழகாகவும் உரிய முறையிலும் அமைத்து அணியில் உள்ள சாரணர்களையும் படையில் உள்ள சாரணர்களையும் இயற்கை எழில் நிறைந்த திறந்த வெளிகளுக்கு அழைத்துச் செல்ல உதவி புரியலாம். தன் சாரண தண்டத்துக்கு பித்தளைப் பூண் கட்டி, மீட்டர், சென்டி மீட்டர் அடையாளங்கள் செய்து, கண் உயரத்தில் ஒன்றுக் கொன்று 90° விலகி உள்ள இரண்டு துவாரங்கள் போட்டு அழகுபடுத்தலாம். இந்தத் துவாரங்கள் 90° கோணங்கள் அமைக்கப் பயன்படும். மீட்டர், சென்டி மீட்டர் வரைகள் தண்டத்தை அளவு கோலாக உபயோகிக்க உதவும். பூண்கள் தண்டத்தின் அளவு குறைந்து விடாதபடி அதனைக் காக்கும். தண்டத்தில் படம் வரையப்பட்டு குறிப்பிடப்பட்டுள்ள சாரண நிகழ்ச்சிகள் தண்டத்தின் மதிப்பை அதிகரிக்கும்.

தன் வீட்டிலும் தன் பள்ளியிலும் பிற இடங்களிலும் தான் நடந்து கொள்ளும் முறை தன்னைச் சாரணன் என்பதையும் ஒழுங்கும் கட்டுப்பாடும் உடையவன் என்பதையும் உணர்த்தவேண்டும் வீட்டில் தன் புத்தகங்களை, தன் ஆடைகளை, தனக்குரிய பிற பொருள்களை ஒழுங்காக அடுக்கி வைத்திருக்கும் முறையில், வீட்டில் உள்ள பெரியோர்களிடமும் பள்ளியில் உள்ள ஆசிரியர்களிடமும் பணிவன்புடன் நடந்துகொள்ளும் முறையில், எல்லோரிடமும் அன்புடனும் விநயத்துடனும் பேசிப் பழகுகின்ற முறையில் அவன் சாரணன், சாரணப் பயிற்சி பெறுகிறவன் என்று எல்லோரும் உணர்ந்து கொள்ளும்படி இருக்கவேண்டும். அப்படியான நல்ல பெயரை அவன் பெற முயன்றால் சாரண இயக்கத்துக்கே நல்லபெயர் வாங்கித்தந்த பெருமை அவனுக்கு உண்டாகும்.

# 7. இரண்டாந்தரச் சாரணன்

இரண்டாந்தரச் சின்னம் பெற விரும்பும் சாரணன் சில தேர்வுகளில் வெற்றி பெற வேண்டும். இவற்றுள் (1) முதலாவதாக உள்ளது முதல் உதவி (First Aid), (2) சைகைப்பேச்சு (Signalling), (3) உற்றுநோக்கும் ஆற்றல் (Observation), (4) சாரண வேகம் (Scout Pace), (5) ஆக்கல் அல்லது அமைத்தல் கலை (Pioneering), (6) தீ மூட்டுதல் (Fire-Lighting), (7) சமையல் செய்தல் (Cooking), (8) திசையறிதல் (Direction Sense), (9) முற்காப்பு விதிகள் (Safety Rules), (10) கவாத்து (Drill), (11) உழைப்புத் தானம், (12) இயற்கை அறிவு, (13) தன் அணிச் சாரணர்கள் ஆசிரியர் வீடுகளைத் தெரிந்திருத்தல்.

## 1. முதல் உதவி

வெட்டுக் காயம்; சிராய்தல் காயம்; கணுப் பிசகு; சூட்டுப் புண்; கொதி நீர்ப் புண்; மூக்கில் இரத்தப் பெருக்கு; பூச்சிக்கடி; சூரிய வெப்ப மயக்கம்; தீ வெப்ப மயக்கம் ஆகியவைகளுக்குரிய சிகிச்சை.

வெட்டுக் காயம், சிராய்தல் (Cuts and Seratches)

காயங்களை உடனுக்குடன் சுத்தம் செய்ய வேண்டும். சுத்தம் செய்யாவிட்டால் அவை சீழ் வைக்கும். காயத்துக்குள் நுழைந்துள்ள விஷக் கிருமிகளை கிருமி நாசினி மருந்துகளை உபயோகித்து உடனுக்குடனேயே கொன்று விடவேண்டும். வெளியில் இருந்து கிருமிகள் நுழைவதையும் தடுக்க வேண்டும்.

சிகிச்சை :- (1) சாரணன் தன் கையைச் சுத்தம் செய்த பின்னரே முதல் உதவிசெய்ய முற்பட வேண்டும். டெட்டால் (Dettol) போன்ற கிருமிநாசினி கலந்த தண்ணீரால் தன் கைகளைச் சுத்தம் செய்ய வேண்டும். கிருமி நாசினி எதுவும் இல்லாது போனல் நல்ல சவர்க்காரத்தால் (Soap) கைகளைச் சுத்தம் செய்யலாம்.

(2) காயத்தில் காணப்படும் வெளிப்பொருள்களை அகற்றி விட வேண்டும்.

(3) டெட்டால். ஐயோடின், மெர்க்கியு ரோகிரோம் போன்ற கிருமிநாசினி கலந்த நீரால் காயத்தைச் சுத்தம் செய்ய வேண்டும்.

காயத்தை உள் பக்கத்திலிருந்து வெளிப்பக்கமாக சுத்தம் செய்ய வேண்டும். சுத்தம் செய்யக் கிருமி நாசினித் தண்ணீரில் (Antiseptic Lotion) போட்டு வைத்துள்ள மருத்துவப்பஞ்சைப் பயன்படுத்த வேண்டும். ஒவ்வொரு தடவையும் சுத்தமாக உள்ள பஞ்சைப் பயன்படுத்த வேண்டும்.

(4) சுத்தமான பஞ்சுத்துணிகளை (Lint) உபயோகித்து மருந்துக்கட்டு (Dressing) போடவேண்டும்.

## கணுப் பிசகு (Sprain)

ஒரு கணு (Joint) வைச்சுற்றியுள்ள தசையும் தசை நார்களும் கிழிபட்டால் கணுப் பிசகு (Sprain) எனப்படும்.

கணுப்பிசகு உள்ள பொழுது வலி இருக்கும். கணுவை அசைத்தால் அதிகவலி உண்டாகும். வீக்கம் இருக்கும். சிறிது நேரத்திற்குப் பிறகு நிற மாற்றம் உண்டாகலாம்.

**சிகிச்சை :-** (1) அவயவத்தைச் சிறிது உயர்த்தி அசைவில்லாது வைக்கவேண்டும்.

(2) கணுவின் மேல் உறுதியான பேண்டேஜ் கட்டுப் போட வேண்டும்.

(3) பேண்டேஜ் கட்டைத் தண்ணீரில் நனைத்துப் போட வேண்டும். ஈரம் வாடாமல் அதை நனைத்துக் கொண்டே இருக்க வேண்டும்.

குறிப்பு : வீக்கம் அதிகரிக்குமானால் பாண்டேஜ் கட்டைத் தளர்த்த வேண்டும். குளிர்ந்த நீரால் நனைப்பது நோவு தருமானால் பொறுத்துக் கொள்ளக்கூடிய அளவு சூடுள்ள வெந்நீர் உபயோகப் படுத்தலாம்.

கரண்டைக்கால் பாதிக்கப் பட்டால் கால் அணியை அகற்றி விடவேண்டும். அப்படிச் செய்ய முடியாது போனால் கால் அணியோடேயே வாளித் தண்ணீரில் காலைவிடச் செய்யலாம்.

## சூட்டுப்புண், கொதிநீர்ப் புண் (Burns & Scalds)

சூட்டுப் புண் சூடுள்ள வாணலி, தோசைக்கல் முதலியவற்றால் உண்டாகக்கூடிய புண். இது மின்சாரத்தினாலும், மின்னலாலும் உண்டாகலாம். மிக விரைவாக ஒரு கயிற்றை இழுத்து உருவினாலும் சூட்டுப் புண் உண்டாகலாம். சூட்டுப் புண், நீர் அல்லது நீராவி கலப்பு இல்லாத சூட்டினால் உண்டாவது.

கொதிநீர்ப்புண் கொதிக்கும் தண்ணீர், எண்ணெய் முதலிய திரவப் பொருள்களால் உண்டாவது. இதுமூன்று படிகளாக அமைய லாம். முதல் படியான புண்ணில் புண்ணின் தோல் சிவந்துபோ யிருக்கும். இரண்டாவது படியாக உள்ளதில் கொப்புளங்கள் தோன்றி இருக்கும். மூன்ருவது படியாக உள்ளதில் சதை கருகி இருக்கும். அல்லது அழிவடைந்திருக்கும்.

சிகிச்சை : சூட்டுப் புண்ணுக்கும் கொதிநீர்ப் புண்ணுக்கும் பொது.

(1) மயக்கம் வந்தால் அதற்குரிய சிகிச்சை செய்யவேண்டும். விபத்தில் அகப்பட்டுக் கொண்டவரை நல்ல கம்பளியால் போர்த்து வைக்கவேண்டும். பருகுவதற்கு சுடச்சுடத் தேநீர் கொடுக்கலாம்.

(2) கொப்புளங்கள் இருந்தால் அவற்றை உடைத்தல் கூடாது. தசையில் படிந்திருக்கும் துணிகளை பிய்த்துவிட முயற்சி செய்தல் கூடாது. திரவங்களால் உண்டாகிய சூட்டுக் காயமானுல் மட்டுமே ஒட்டிக் கொண்டிருக்கும் துணிகளை அகற்றிவிடுவது அவசியம்.

(3) எண்ணெயையோ, எண்ணெய் கலந்த தண்ணீர் மருந்து களையோ போடக்கூடாது. சூடுபட்டுள்ள இடத்தை சுத்தமான கட்டுத்துணியால் மூடிவைக்க வேண்டும். முதலுதவி அளிப்ப வருடைய கை சூட்டுப் புண்கள் மீது படக் கூடாது. அவற்றின் மேல் உள்ள துணிகளிலும் படக் கூடாது.

(4) பாண்டேஜ் கட்டு இறுக்கமாக இருத்தல் வேண்டும். கொப்புளங்கள் இருப்பின் ஒரு சிறிது தளர்ந்திருக்கலாம்.

(5) சூட்டுப் புண், கொதிநீர்ப் புண் இருக்கும் அவயவங்கள் அசைவின்றி இருத்தற்கு வேண்டுவன செய்தல் வேண்டும்.

## மூக்கில் இருந்து இரத்தப் பெருக்கு
(Bleeding from the Nose)

**சிகிச்சை:** (1) நோயாளியை நல்ல காற்ரேட்டமுள்ள இடத்தில் உட்கார வைக்கவேண்டும். நோயாளி தலையைச் சற்றுப் பின்புற மாகச் சாய்த்து வைத்து அவருடைய கைகளையும் மேனேக்கித் தூக்கி வைக்க வேண்டும்;

(2) கழுத்தைச் சுற்றியும் உடம்பிலும் உள்ள ஆடைகளை நெகிழ்த்தி விடவேண்டும்.

(3) வாய் திறந்த வண்ணம் இருக்க வேண்டும். நோயாளி மூக்கு வழியாக சுவாசம் செய்வது நல்லதல்ல.

(4) குளிர்ந்த தண்ணீரை நோயாளியின் மூக்கின் மேலும் அவருடைய முதுகு எலும்பின் மேலும் தாரையாக விட வேண்டும்.

(5) மூக்கை சிந்தக் கூடாது என்று நோயாளிக்கு அழுத்த மாகக் கட்டளை தரவேண்டும்.

மண்டையோட்டின் அடிப்பாகம் உடைபட்டிருக்குமானால் மூக்கிலிருந்து இரத்தப் பெருக்கு உண்டாகலாம். அப்படி இருக்குமாயின் நோயாளியைப் படுக்க வைத்து அவருடைய தலையையும் தோள்களையும் உயரமாகத் தூக்கிவைக்க வேண்டும். தலையின் இரு பக்கங்களிலும் சிறுதுணி மெத்தைகளை (Pads) வைக்க வேண்டும். ஒரு சிறிதும் அசைவு கூடாது.

## பூச்சிகள் கொட்டுதல் (Stings of Insects)

(1) பூச்சிகள் கொட்டினால் முதன் முதலாக அந்தக் கொடுக்கை எடுத்துவிடவேண்டும். விளக்கு ஜ்வாலையில் சுத்தம் செய்யப்பட்ட ஊசியால், கொடுக்கை எடுத்துவிடலாம்.

(2) பை-கார்பொனேட் ஆஃப் சோடா (Bi-carbonate of Soda) என்ற மருந்தினால் கொட்டுண்ட இடத்தைக் கழுவவேண்டும். குளவி கொட்டுக்கு சமையல் காடி (Vinegar) யைப் பயன் படுத்தலாம்.

(3) விஷம் உள்ள சிலந்திப் பூச்சியால் கடிக்கப் பட்டால் பாம்புக் கடிக்குள்ள சிகிச்சை செய்யவேண்டும்.

## பாம்புக்கடி (Snake Bite)

பாம்பு தன் விஷத்தைத் தன் இரண்டு பற்களிலும் உள்ள ஆழமான ஓடை போன்ற பள்ளங்கள் வழியாக மிக சீக்கிரத்தில் செலுத்திவிடும். கடிபட்ட ஒரு சில நிமிடங்களுக்குள்ளேயே விஷம் ஏறி கடிபட்டவரின் இரத்த ஓட்டத்தோடு கலந்து விடும். முதல் உதவியின் முக்கியமான பாகம் விஷத்தை இரத்தத்தோடு கலக்க விடாமல் தடுப்பதே ஆகும்.

**சிகிச்சை :** (1) விஷம் இரத்த ஓட்டத்தோடு கலந்து விடாமல் செய்யக் கிட்டி (Tourniquet) நன்கு பயன்படும். கை அல்லது காலில் கடிபட்டால் இதயத்துக்கும் கடிவாய்க்கும் மத்தியில் (அதாவது கடிவாய்க்கு மேலே) கிட்டி போட்டு இரத்த ஓட்டத்தை நிறுத்த வேண்டும்.

(2) கடிவாய்க்குப் பக்கத்தில் பொட்டாசியம் பெர்மாங்கனெட் (Potassium Parmanganate) நீரியத்தால் நன்றாக் கழுவ வேண்டும்.

கடிவாய்க்கு அருகில் சிதறுண்டுள்ள விஷத்தைப் போக்குவதற்கு இப்படிக் கழுவுதல் அவசியம்.

(3) கடிவாயை ஒரு கத்தியால் அல்லது சவரபிளேட் (Shaving Blade) டினுல் ஆழமாகக் கிழிக்கவேண்டும். இப்படிச் செய்வது விஷம் கலந்த இரத்தத்தை சீக்கிரமாக வெளிக் கொண்டுவரும். அப்படிக் கிழிப்பது 1.9 செமீ ($=\frac{3}{4}$ அங்குல) ஆழம்வரை, கைகாலுக்கு குறுக்காக இல்லாமல் நேராக இருத்தல் அவசியம். நேராக இல்லாமல் குறுக்காகக் கிழித்தால் நல்ல பயன் தராது. குறுக்கே வெட்டுவதானல் இரத்தக்குழாய் முழுவதும் வெட்டுப்படும். நேரே வெட்டுவதால் இரத்தக்குழாய்க்குப் பெருஞ் சேதமின்றி விஷம் கலந்த இரத்தம் வெளிப்பட வசதியளிக்கும். கிழித்த பிறகு பொட்டாஸியம் பர்மேங்கனேட் மருந்தை நிறையப் போட்டுக் கைவிரலால் அழுத்த வேண்டும். ஒரு சில துளி தண்ணீரையும் மருந்துக்கு மேல் விடவேண்டும்.

(4) விஷம் பரவுவதற்கு அசைவு அனுகூலம் ஆகையால் கடிபட்டவர் அசைவின்றி இருப்பது அவசியம்.

(5) கடிபட்டவரைக் குளிர் தாக்கக் கூடாது. கம்பிளியால் அவரைப் போர்த்தி வைக்கவேண்டும். ஞாபகசக்தி இருந்தால் அவருக்கு சிறிது சூடுள்ள தேநீர் கொடுக்கலாம்.

(6) பாம்புக்கடி மருந்துள்ள மருத்துவ மனைக்குக் கடிபட்டவரை அழைத்துச் செல்வது அவசியம்.

(7) மூச்சு நின்று விட்டால் செயற்கை மூச்சுக்குள்ள ஏற்பாடுகளைக் கையாள வேண்டும்.

## வெறிநாய்க்கடி (Mad Dog Bite)

நாய், நரி, ஓநாய், குதிரை போன்ற பிராணிகளுக்குச் சிற்சில வேளைகளில் வெறி உண்டாவது உண்டு. அவைகளின் எச்சில் வழி விஷம் கடிபட்டவர்களுக்குப் பரவும்.

நாய்களுக்கு வெறிபிடித்தால் உஷ்ணமான சுவாசம், உணவில் வெறுப்பு, அமைதியின்மை, பழக்க வழக்கங்களில் மாறுதல் உண்டாகும். இவை இந்த நோய்க்குரிய முன் அடையாளங்கள். மிகப் பயங்கரமான குறிகள் பின்னல் வரக்கூடும். வெறிநாய்கள் மனிதர்களைக் கண்டால் அவர்களை எதிர்க்கும். கடைசிக் கட்டத்தில் நாயின் குரல் மாறுபடும். பின்கால்கள் பயனற்றுப் போகலாம். கை கால்களில் இழுப்பு உண்டாகலாம். அதன் பிறகு ஐந்து முதல் பத்து நாட்களில் நாய் இறந்துவிடும்.

வெறிநாய் மனிதர்களைக் கடித்தால் கடிபட்ட 15 நாளுக்குப்பின் 8 மாதங்கள் வரை கடிக்குண்டான அறிகுறிகள் தோன்றலாம். இவ்வறிகுறிகளில் முதலாவதாகத் தோன்றுவன அமைதியின்மை, ஜுரம், தூக்கமின்மை, மனதில் துடிதுடிப்பு, வெளிச்சத்தால் கூச்ச மடைவது, சத்தத்திற்குப் பயப்படுவது, தொண்டையில் அடிக்கடி அடைப்பு என்பன.

**சிகிச்சை :** (1) கடிவாய்க்கு மேல், கடிவாய்க்கும் இருதயத்துக்கும் நடுவில் இறுக்கமான கட்டு போடவேண்டும். ஆனால் அது இரத்த ஓட்டத்தை (Arterial circulation) தடை செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

(2) கடிவாயிலிருந்து இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

(3) கடிபட்ட இடம் கீழாகவே இருத்தல் அவசியம்.

(4) கடிபட்ட இடத்தை பொட்டாஸியம் பர்மாங்கனேட்டால் கழுவுதல் வேண்டும்.

அந்த மருந்து இல்லையானால் தண்ணீரும் சவர்க்காரமும் போதுமானது.

(5) கடிவாயில் பதிந்துள்ள பல்லடையாளம் ஒவ்வொன்றையும் கார்பாலிக் (Corbolic acid) திராவகத்தினால் அல்லது நைட்ரிக் திராவகத்தினால் (Nitric acid) சுட்டுவிட வேண்டும். ஆனால் கடிபட்ட ½ மணி நேரத்துக்குள் இது செய்யப்பட வேண்டும். இந்த திரவங்கள் இல்லையானால் பின்னல் ஊசி (Knitting needle) போன்ற இரும்புக் கம்பியைப் பழுக்கக் காய்ச்சி சுட்டுவிடலாம்.

(6) சூடான தேத்தண்ணீர் அல்லது சூடான கடுங்காபி (பாலில்லாதது) கொடுக்கலாம்

(7) கடிவாயின் மேல் பஞ்சுத்துணி (lint) முதலியன போட்டு பாண்டேஜ் செய்து வைக்கவேண்டும்.

(8) மருத்துவ மனைக்கு அழைத்துச் சென்று வெறிநாய்க் கடிக்குரிய சிகிச்சை செய்ய ஏற்பாடு செய்வது அவசியம்.

## தீ வெப்ப மயக்கம், சூரிய வெப்ப மயக்கம்
(Heat stroke, Sun stroke)

**தீ வெப்ப மயக்கம் :** (Heat stroke) மனித உடம்பு மிதமான குளிரையும் தாங்கும் இயல்புடையது. ஆயின் மித மிஞ்சிய சூட்டைத் தாங்காது. மித மிஞ்சியசூடு மதிமயக்கத்தை உண்டு

பண்ணும். திடீரென்று சூடு 104° க்கு வந்துவிடலாம். அதற்கு மேலும் போகலாம். தோல் ஈரமில்லாமல் காய்ந்து காணப்படலாம். அமைதியின்மை, வாந்தி எடுத்தல், தசைகளிற் பிடிப்பு (Muscular cramps) உண்டாகலம்.

சூட்டின் நிலைமையைத் தணிப்பதற்கு ஆவன செய்யவில்லை யானல், மூச்சு பிடிப்புண்டு நோயாளி இறக்க நேரிடும்.

**சிகிச்சை :** (1) குளிர்ந்த காற்றோட்டமுள்ள ஒரு இடத்துக்கு நோயாளியைக் கொண்டுபோக வேண்டும்.

(2) நோயாளியின் ஆடைகளை அகற்றவேண்டும்.

(3) குளிர்ந்த தண்ணீரை உடம்பு முழுவதும் ஊற்றவேண்டும். ஊற்றி விட்டு நன்ருய் விசிறவேண்டும். ஐஸ் பையைத் தலையிலும் முதுகெலும்பின் மேலும் வைக்கவேண்டும்.

(4) நன்ருக மலம் கழிய எனிமா கொடுக்க வேண்டும்.

(5) உடம்பின் சூடு 102° க்குக் கீழ் இறங்கி ஞாபகம் வந்த உடன் குளிர்ச்சி உண்டுபண்ணும் முயற்சிகளை நிறுத்தி விடவேண்டும். நோயாளியின் உடம்பை நன்ருய்த் துடைத்துவிட்டு இலேசாகப் போர்த்தி வைத்து, மலங்கழித்தலுக்குள்ள மருந்துகளைக் கொடுக்கலாம்.

## வெப்பச் சோர்வு
## (Heat Exhaustion)

வெப்பச் சோர்வு வெப்ப மயக்கத்துக்கு மாறுபட்டதும் பல மடங்கு எளிதில் குணப்படுத்தக் கூடியதுமான ஒரு வியாதி. சூரிய வெப்ப மிகுந்த நாட்களில் ஒரு அறையில் அடைபட்டுக் கிடப்பதால் இது உண்டாகலாம். உடம்பின் சூடு மிதமாகவே இருக்கும். தோல் குளிர்ச்சியாகவும் ஈரமாகவும் காணப்படும்.

சிகிச்சை : நோயாளியை நிழலுக்கு எடுத்துச் செல்லவேண்டும். அவரை நன்ருய் விசிறவேண்டும், குளிர்ந்த தண்ணீரை அவர் முகத்திலும் முதுகெலும்பின் மீதும் தெளிக்கவேண்டும்.

## சூரிய வெப்பமயக்கம்
## [Sun stroke]

சூரிய வெப்ப மயக்கம் கடுமையான வெய்யிலில் நெடுநேரம் நிற்ப தால் உண்டாகும். இது உடம்பில் எரிவையும் (burns), கொப்பளங் கங்களையும் (blisters) உண்டு பண்ணலாம். தலைவலி தோன்றினல், அல்லது வாந்தி எடுக்க நேர்ந்தால் ஐஸ் பையை நோயாளியின்

தலையில் வைக்கவேண்டும். சூரிய வெப்ப மயக்கம் முன் கூறிய இரண்டினெடும் காணப்படலாம். பின்னர் கூறியுள்ள சிகிச்சைகளைச் செய்வது நன்மை தரும்.

# முதல் உதவி 2

## காயங்கள்

காயம் ஏற்பட்டால் அதைச் சுத்தம் செய்ய வேண்டும். அதன் மேல் சுத்தமான மருந்துக்கட்டு (dressing) அமைக்க வேண்டும்

காயங்களை மூன்ருகப் பிரிக்கலாம் : (1) சிறிய இரத்தப் பெருக்குடன் கூடிய காயம், (2) எலும்பு முறியலோடு கூடிய இரத்தப் பெருக்குக் காயம், (3) மயக்கத்தோடு கூடிய காயம்.

காயம் உள்ளவருக்கு முதல் உதவி செய்பவர் தன் கைகளை டெட்டால் நீரியத்தால் நன்ருகச் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். காயத்தைச் சுத்தம் செய்யும் முறை முன் விவரிக்கப்பட்டுள்ளது.

சிறிய இரத்தப் பெருக்குடன் கூடிய காயத்துக்குச் சிகிச்சை :

காயம் பட்டிருக்கிற இடத்தில் உள்ள ஆடைகளை அகற்றி காயத்தை எளிதில் கண்டு கொள்ளும்படி செய்யவேண்டும்.

இரத்தம் உறைந்து காணப்படும் இடத்தை தொடுதல் கூடாது.

காயத்தில் புறப்பொருள் எதுவேனும் இருந்து அவற்றை எளிதில் அகற்றி விடக்கூடுமானல் கொதித்து ஆறிய நீரால் கழுவி அவற்றை அகற்றிவிடவேண்டும்.

வீஷக் கிருமிகளை அகற்றக் கூடிய மருந்து (antiseptic) எதையாவது போடவேண்டும்.

மருந்துக்கட்டு (dressing) அமைத்து அதற்குமேல் இறுகிய பாண்டேஜ் கட்டுப் போடவேண்டும்.

எலும்பு முறிதலோடு கூடிய இரத்தப் பெருக்கு இரண்டாம் தரச் சாரணப் பயிற்சிக்கு அவசியமில்லை. இது பின்னல் முதல் தர சாரணப் பயிற்சியில் வரும்.

காயத்தோடு மயக்கம். இது பெரிய காயங்கள் ஏற்பட்டால் உண்டாகக் கூடியது. இதைப் பற்றியும் பின்னல் படிக்கலாம்.

# முதல் உதவி 3.

முக்கோண வடிவமுள்ள பான்டேஜ் துணியைப் பயன்படுத்தி பெரும் தொட்டில், சிறுதொட்டில் அமைத்தல். முழங்கால், தலை, கை, பாதம் ஆகிய இடங்களில் சிறந்த பான்டேஜ் அமைத்தல் ஆகியவை.



முக்கோண பான்டேஜ் துணி
(Triangular Bandage)



ஒரு மடிப்பு பான்டேஜ் துணி
(Once Folded)



அகலப் பட்டை
(Broad fold Bandage)



ஒடுக்கப் பட்டை
(Narrow Bandage)



நடுத்தரப் பட்டை
(Medium fold Bandage)

45. பான்டேஜ் துணிகள்

முதல் உதவிக்கு மிகவும் பயன்படுத்தப்படும் பான்டேஜ் துணி முக்கோணப் பான்டேஜ் துணி எனப்படும் நீளமும் அகலமும் 40 அங்குலம் உள்ள சதுரமான துணியை மூலைக்கு மூலை குறுக்காக இரண்டு துண்டாக வெட்டப்பட்டுள்ளது முக்கோண பான்டேஜ் துணியாகும். 40 அங்குல அகலம் இல்லையானாலும் 36 அங்குலமாவது வேண்டும்.

**மடித்த பான்டேஜ் கட்டுத்துணி**

பான்டேஜ் துணியைப் படத்தில் கோடிட்டுக் காண்பித்துள்ள வரியில் மடித்தால் அதனை ஒரு மடிப்பு பான்டேஜ் என்பர் (Bandage once folded) அது பக்கத்தில் உள்ள படத்தில் காண்பித்துள்ளபடி இருக்கும். அதனை இருமடிப்பாகக் கோடிட்டுள்ள இடத்தில் மடிந்தால் அது கட்டுப் போடுவதற்குப் பயன் படுத்தப்படும் பான்டேஜ் பட்டை எனப்படும். இது அகலப்பட்டை (Broad fold Bandage) என்றும், இதனை

இரண்டாக மடித்தால் அதனை ஒடுங்கிய பட்டை (Narrow Bandage) என்றும் கூறுவர். இரண்டுக்கும் நடுத்தரமாயுள்ளதை நடுத்தர பான்டேஜ் (Medium fold Bandage) என்றும் வழங்குவர்.

இந்தப் பட்டைகள் மூன்று வகையும் எலும்பு முறிவு உள்ள பொழுது மட்டை வைத்துக் கட்ட உதவுகின்றன.

## திறந்தபடியுள்ள பான்டேஜ்

திறந்தபடியுள்ள முக்கோண பான்டேஜ் துணியால் (1) கையைத் தொங்கப் போடத் தொட்டில் கட்டலாம். இவை பெருந் தொட்டில், சிறு தொட்டில் என இரண்டுவகை. (2) முழங்கால், தலை, கை, பாதம், போன்ற இடங்களை மூடும் வகையில் மேற்கட்டு கட்ட உபயோகப்படுத்தலாம்.

## பெருந் தொட்டில் (Large Arm Sling)

பெருந்தொட்டில் கட்டுவதற்குத் திறந்த முக்கோணத் துணியை துணியின் நுனி இடது கையிலும் துணியின் 90° கோணம் வலது கையிலுமாக எடுத்துக் கொள்ள வேண்டும். துணியை அப்படியே நோயாளியின் மார்பில் போடவேண்டும். 90° கோணத்தை நோயாளியின் இடுப்புக்கு நேர் அவர் இடது பக்கத்திலும் நுனியை அவர் வலது தோள்மேலும் வைத்து அதை நோயாளியின் கழுத்தைச் சுற்றிக் கொண்டு வரவேண்டும். கீழ்ப் பக்கத்துத் துணியை அக்குளுக்கு கீழ்க்கொண்டு வந்து கையைத் தூக்கி மட்டமாக துணியின் மேல் வைக்க வேண்டும். அதன் பிறகு தொங்கிக் கொண்டிருக்கும் நுனியை மேலே கொண்டு போய் அவன் நுனியை மறு நுனியோடு சேர்த்துச் சதுரமுடி போட்டுக் கட்டவேண்டும். அதற்குப் பிறகு கோணத்தை மடித்து காப்பு ஊசி [Safety pin] யால் தைத்து விடவேண்டாம்



47. பெருந்தொட்டில்
(Large Arm Sling)

துணியின் நுனி இடது கையிலும் துணியின் கோணம் வலது கையிலும் ஆக எடுத்து அணிவிக்கப்பட்ட தொட்டில் நோயாளியின் இடது கைக்குப் பொருத்தமானது.

## சிறுதொட்டில் (Small Arm Sling)



48. சிறுதொட்டில்
(Small Arm Sling)

சிறுதொட்டில் கட்டுவதற்கு அகல மடிப்புப் பட்டையை பயன்படுத்த வேண்டும். பெருந் தொட்டிலுக்குச் செய்தது போலவே நுனி ஒரு கையிலும் மடிப்பு ஒரு கையிலுமாக எடுத்துக் கொண்டு நுனியை நோயாளியின் தோள் மேல் வைத்துப் பட்டையைத் தொங்க விடவேண்டும். பிறகு கையை எடுத்து பட்டைமேல் வைத்து நுனியை மேல் பக்கமாகக் கொண்டு போய் இருநுனிகளையும் சதுரமுடியால் இணைக்க வேண்டும்.



49. கழுத்துப் பட்டை
மணிக்கட்டுத் தொட்டில்
(Cuff and Collar Sling)

இந்த சிறுதொட்டில் முன் கைப்பக்கம் கைக்கு ஆதரவு தரும். இப்படி ஆதரவு தரக்கூடிய அமைப்பு இன்னொன்றும் உள்ளது. அதனை கழுத்துப் பட்டை மணிக்கட்டுத் தொட்டில் (Cuff and Collar Sling) எனக் கூறுவர். இது மடிக்கப் பட்டுள்ள பட்டையால் அமைக்கப்படுவது. ஊனமுள்ள கையில் மணிக்கட்டைச் சுற்றி யானைக் கொலுசு போட்டு பட்டையின் இரு நுனிகளையும் கழுத்தைச் சுற்றி கழுத்துப் பட்டை மாதிரி கட்டுவது ஆகும்.

### மேற்கட்டு

திறந்த படியுள்ள முக்கோணப் பான்டேஜ் துணியை மருந்துக் கட்டுக்கு (Dressing) மேற்கட்டு (Bandage) ஆகப் பயன்படுத்தலாம்.

மேற்கட்டுப் போட முக்கோணத் துணியின் அடிப்பக்கத்தில் ஒரு அங்குல அகலத்துக்கு ஹெம் மடிப்பு (hem) மடித்துக் கொண்டு எந்த இடத்துக்கு மேற்கட்டுப் போட வேண்டுமோ அந்த இடத்தில் மடிப்பு உள்பக்கமாக வைக்கவேண்டும்: பிறகு துணியை இடமும் வலமும் ஆகச்சுற்ற வேண்டும். கடைசியில் இருநுனிகளையும் சதுர முடியால் இணைக்க வேண்டும். கோணத்தை இழுத்து மடித்து காப்பு ஊசியால் குத்தி வைக்கவேண்டும்.

## முழங்காலுக்கு மேற்கட்டு



50. முழங்காலுக்கு மேற்கட்டு (Knee Bandage)

முக்கோணத் துணியை அடியில் மடித்துக்கொண்டு மடிப்பின் மத்தியை முழங்காலுக்கு மேல் வைக்க வேண்டும். முக்கோணத் துணியின் கோணம் கீழ் நோக்கித் தொங்கிக் கொண்டிருக்கும். மடிப்பு உட்புறமாக, அதாவது தொடையை நோக்கி இருக்கும். முக்கோணத் துணியை இடமும் வலமுமாக கீழே கொண்டு வந்து ஒன்றன் மேல் ஒன்று ஏறும்படி செய்து, பிறகு காலை வலமும் இடமுமாகச் சுற்றி அப்படி இரண்டு மூன்று தடவை 8 என்ற வடிவில் கட்டு போட்டு கடைசியில் நுனிகளை சதுரமுடியால் இணைக்க வேண்டும். அதற்குப் பிறகு கோணத்தை கீழ்நோக்கி இழுத்து பின் மேல் நோக்கி மடித்து காப்பு ஊசியால் அதைக் குத்தி வைத்துவிட வேண்டும்.

**குறிப்பு :** மேற்கட்டு என்பது அடியில் உள்ள மருந்துக் கட்டை அது கீழே விழுந்து விடாதபடியும் அதன்மேல் தூசுபடியாமல் இருக்கும்படியும் அதனைக் காக்கும் இயல்புடையது. காயம் முதலியன பட்டுள்ள இடத்தில் மருந்துக்கட்டு (Dressing) போட்ட பிறகு அந்த மருந்துக்கட்டைப் பாதுகாக்கும் முறையில் மேற்கட்டு கட்டப்படும்.

## தலைக்கு மேற்கட்டு

முக்கோணத் துணியின் அடியோரமாக ஒரு ஹெம் மடிப்பு மடித்து மடிப்பின் மத்தியபாகம் நெற்றிக்கு மேல் கீழ் நோக்கி இருக்கும்படிக்கும் முக்கோணத் துணி தலையை மூடிக் கொண்டிருக்கும் படிக்கும் வைக்க வேண்டும். துணியைச் சுருக்கில்லாமல் இழுத்துவிட்டுக் கொண்டு மடித்துள்ள பாகத்தை இடமும் வலமுமாக மாறி மாறி தலையைச் சுற்றிக் கொண்டு வந்துத் துணியின் நுனிகளைச் சதுரமுடி யால் இணைக்க வேண்டும். அதன்பின் துணி யின் கோணத்தை கீழ்நோக்கி இழுத்து சரிசெய்து கொண்டு பிறகு அதை மேல் நோக்கி மடித்துக் காப்பு ஊசியால் குத்தி விட வேண்டும்.



51. தலைக்கு மேற்கட்டு (Head Bandage)

## கைக்கு மேற்கட்டு



51. கைக்கு மேற்கட்டு (Hand Bandage)

ஹெம் மடிப்பு மடிக்கப்பட்டுள்ள முக்கோணத் துணியை ஹெம் மேலாக வரும்படிக்கும் கோணம் நமக்குத் தொலையில் உள்ள பக்கம் வரும்படிக்கும் விரித்துக் கொள்ள வேண்டும். பின்னர் நோயாளியின் கையை முக்கோணத் துணியின் மேல் வைக்க வேண்டும். வைக்கும் போது மடிப்பின் மத்தியில் உள்ள பாகம் நோயாளியின் கை மணிக்கட்டை ஒட்டி இருக்க வேண்டும். அதற்குப் பிறகு கோணத்தை முன்னுக்கு இழுத்துவிட்டுக் கொண்டு நுனிப்பக்கம் இரண்டையும் சுருக்கி மணிக்கட்டைச் சுற்றி கடைசியாக இரு நுனிகளையும் சதுர முடியால் இணைக்க வேண்டும். அதற்குப் பிறகு கோணத்தை மடித்து காப்பு ஊசியால் குத்தி வைக்க வேண்டும்.

## காலுக்கு மேற்கட்டு

ஹெம் மடித்துள்ள் முக்கோணத் துணியை ஹெம் மேல்பக்கம் இருக்கும்படி தரையில் விரிக்க வேண்டும். அந்தத் துணியின் மேல் நோயாளியின் பாதத்தை வைக்க வேண்டும். வைக்கும்பொழுது கால் ஏறக்குறைய மூன்று அங்குல அளவுக்கு உள்ளடங்கி இருக்க வேண்டும். இப்பொழுது கோணம் உள்ள பாகத்தை மடித்துக் கொண்டு துணியில் உள்ள மடிப்பு கரண்டைக்கு மேல் வரும் படிக்கு கோணம் உள்ள பாகத்தைக் நுனிகள் கொண்டு காலை மாறிமாறிச் சுற்ற வேண்டும். இரண்டையும் சதுர முடியால் இணைத்து அதற்குப் பிறகு கோணத்தை மடித்து காப்பு ஊசியால் குத்தி வைக்க வேண்டும்.



52. காலுக்கு மேற் கட்டு (Foot Bandage)

## வேறு மேற் கட்டுகள்

இது போலவே தோளுக்கு, மார்புக்கு, இடுப்புக்கு என்று மேற் கட்டுகளும் உண்டு. அவைகள் இரண்டாம் தரப் பயிற்சிக்கு அவசிய

மில்லையாயினும் இரண்டாந்தரச் சாரணன் அவைகளைக் கற்றுத் தெரிந்து கொள்ளுதல் நல்லது.

## முதல் உதவி 4

(பொதுவான அதிர்ச்சிக்குரிய சிகிச்சை)

அதிர்ச்சி உண்டாவதற்குள்ள காரணங்களுள் முக்கியமானவை இரண்டு :—

(1) இரத்தப் பெருக்கு: இது வெளிப்படையான இரத்தப் பெருக்காக இருக்கலாம் அல்லது உடம்பிற்குள் தோன்றியுள்ள இரத்தப் பெருக்காக இருக்கலாம்.

(2) தீப்பட்டதால் அல்லது கை கால்கள் நசுங்கினதால் உண்டான இரத்தப் பெருக்கு (Loss of Plasma). இத்தகைய அதிர்ச்சி குளிர் காற்றினால், நீரடித்த வியர்வையினால் அல்லது மிகுதியான வலியால் அதிகரிக்கலாம்.

அதிர்ச்சிக்குரிய அறிகுறிகள் :

1) தலை சுற்றல், ''கிறுகிறு'' என்று வருவது

2) தோல் குளிர்ந்தும் ஈரமுள்ளதாகவும் இருப்பது

3) முகம் வெளிறிக் காணப்படுவது

4) வாந்தி எடுத்தல், வாந்தி எடுக்க வேண்டும்போலத் தோன்றுதல்

5) நாடி மிக மெதுவாகவும் பிறகு மந்தமாகவும் விரைவாகவும் இருத்தல்

**சிகிச்சை :** இரத்தப்பெருக்கை உடனடியாக நிறுத்தவேண்டும்.

நோயாளியைப் படுக்க வைக்க வேண்டும். நோயாளியின் தலை ஒரு சிறிது தாழ்வாகவும் ஒரு பக்கம் சாய்வாகவும் இருக்கவேண்டும்.

நோயாளியின் ஆடைகளைத் தளர்த்த வேண்டும்.

நோயாளியை நன்றாகப் போர்த்து வைக்க வேண்டும்.

நோயாளி சுயநினைவோடிருந்தால் தேநீர் அல்லது தண்ணீர் கொடுக்கலாம்.

நோயாளி கவலையற்றிருப்பது நல்லது.

## முதல் உதவி 5

## கண்ணில் தூசி விழுதல்

கண்ணில் தூசி விழுவது இரயில் பிரயாணம் செய்கிறவர்களுக்கு அடிக்கடி நேரக்கூடியது. அதற்கேற்ற முதல் உதவிச் சிகிச்சை தெரிந்திருப்பது நல்லது.

### சிகிச்சை

நோயாளி கண்ணைக் கசக்கக்கூடாது. அவர் தன் கண்ணைக் கசக்காமல் தடுக்கப்படுவது முக்கியமானது.

நோயாளியின் மேல் வெளிச்சம் படும்படி வைத்துக் கொண்டு அவருக்கு முன்னால் முதல் உதவி செய்யும் சாரணன் நிற்க வேண்டும். நோயாளியின் கீழ் இமை இழுத்துப் பார்க்கத் தூசு தென்படலாம். கண்ணில் உள்ள தூசு தென்பட்டால் சுத்தமான கைக்குட்டை ஒன்றை எடுத்து அதன் நுனியைச் சற்று நனைத்து முறுகப் பிழிந்து விட்டு, நனைந்துள்ள நுனியின் உதவியால் தூசியை எடுத்துவிடல் கூடும்.

தூசி மேல் இமையின் கீழே இருக்குமானால் தண்ணீருக்குள் கண்களை மூடிமூடித் திறக்கச் செய்ய வேண்டும். இது ஒரு முறை. இன்னொரு முறை ஒரு நெருப்புக் குச்சை மேல் இமைக்கு அரை அங்குலத்துக்கு மேலாகவும் இமைக்கு மட்டமாகவும் பிடித்துக் கொண்டு மெல்ல அமுக்க வேண்டும். இமையைக் கையால் பிடித்துச் சற்று முன் நோக்கி இழுத்துக் கொண்டு முன் கூறியுள்ளபடிக் கைக் குட்டை நுனியால் தூசியை அகற்றி விடலாம்.

தூசி கண்ணில் அமிழ்ந்திருக்குமாயின் தூசினை நாமாகவே அகற்றும் முயற்சியை விட்டு விட்டு மெதுவான சிறுமெத்தை (Pad) அமைத்து அதற்கு ஒரு மேற்கட்டும் கட்டி நோயாளியை மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

## முதல் உதவி 6

## முதியவர்கள் உதவி நாடல்

விபத்து நேர்ந்துள்ளபொழுது முதியவர்கள் உதவியை நாடிப் பெறுவது எப்படி என்பதைச் சாரணர்கள் தெரிந்திருத்தல் வேண்டும்.

விபத்து தீயால் உண்டாகலாம், அல்லது தண்ணீரால் உண்டாக லாம், அல்லது இரயில் விபத்தாக இருக்கலாம், அல்லது போக்கு வரத்து சம்மந்தமான விபத்தாக இருக்கலாம். அல்லது வேறுவகை யான விபத்தாகவும் இருக்கலாம். இந்த விபத்துகள் உண்டாகும் நேரத்தில் அந்த இடத்தில் பிற மக்கள் இருக்கலாம், அல்லது இல்லா மலும் இருக்கலாம்.

தொலைபேசி உதவியால் காவல் நிலையம் (Police Station), தீப்படை நிலையம் (Fire Station), முதலியவற்றோடு தொடர்பு கொண்டு அவர்களுக்கு விவரத்தைக் கூற வேண்டும். பதட்டம் இல்லாமல், மன அமைதியும், நேர்ந்துள்ள சம்பவத்தை நன்றாய் ஆராய்ந்து உணர்ந்து, மிகுதிப் படுத்தாமல், குறைக்காமல், உள்ளதை உள்ளபடி தெரிவிக்க வேண்டும். கையில் குறிப்பு எழுதி வைத்துக் கொண்டு தொலைபேசியை அணுகுவது நல்லது.

தொலைபேசி இல்லையானால் தம் தோழ சாரணர்களில் ஒருவரை எழுதின குறிப்புடன் அனுப்பலாம்.

அப்படிச் செய்ய வசதி இல்லாமல் போனால் தன்னுடைய சொந்த முயற்சியினால் தான் இருக்கும் இடத்தில் இருந்து கொண்டே ஏதாவது செய்து பொது மக்களின் கவனத்தை இழுக்க வழிபண்ண வேண்டும் ஒரு துணியை நீண்ட ஒரு கொம்பில் கட்டிக்கொண்டு அதை அசைத்துக் கொண்டிருக்கலாம். தன் கையில் உள்ள ஊதலை (Whistle) ஊதி ஒலி எழுப்பி பொதுமக்களின் கவனத்தை இழுக்க லாம். அல்லது முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்று இருக்குமாயின் சூரிய வெளிச்சம் அதில் விழும்படி செய்து, அதனால் உண்டாகும் வெளிச்சத்தைப் பயன்படுத்தி பொது மக்களின் கவனத்தை இழுக்க லாம். சைகைப் பேச்சுக்குரிய கொடிகள் (Signalling flags) இருக்கு மாயின் தான் அனுப்ப எண்ணிய விவரத்தை சைகைப் பேச்சு மூல மாகத் தெரிவிக்க முயற்சி செய்யலாம்.

விவரங்களைச் சுருக்கமாகவும் சந்தேகத்துக்கிடமில்லாமலும் தெளிவாகவும் எடுத்துச் சொல்லும் வல்லமை மிக முக்கியமானது. இதற்குப் பயிற்சி வேண்டும்.

## சுகாதார முறைகள்

''சிறுவர் சாரணீயம்'' என்ற நூலில் தரப்பட்டிருக்கும் சுகாதார முறைகளையும் கட்டுப்பாடுகளையும் அறிந்திருத்தல் அவசியம்.

''நல்ல உடல் நலத்தோடு இருப்பது எப்படி?'' என்ற கேள்விக்கு விடை அளிக்கும் வகையில் தன்னுடைய பாடித்தீப்பனுவல் 18இல்

பல அருமையான குறிப்புகளை நம் சாரணத் தந்தை பேடன்—பவலார் நமக்குத் தந்துள்ளார்.

### வெளியிட ஆகாயம் உடற்பயிற்சி

அவர் தந்துள்ள அறிவுரைகளில் மிகவும் முக்கியமானது நம்மை வெளியிட ஆகாயத்திலும், உடற்பயிற்சியிலும் நம்பிக்கை கொள்ளு மாறு அவர் கேட்டுக் கொள்வதே ஆகும். வெளியிட ஆகாயத்தில் நம் அலுவல்களைச் செய்ய நாம் பழகிக்கொள்ள வேண்டும். நாள் தவருமல் நாம் உடற்பயிற்சி செய்ய வேண்டும்.

### சுத்தமாக இருத்தல்

வெட்டுக் காயம் அல்லது வேறு மாதிரியான காயம் எதுவும் ஏற்படும்பொழுது நம் கை அல்லது உடம்பு அழுக்குப் படிந்திருந்தால் காயம் எளிதில் சீழ் கோத்து கடும் புண்ணுகி விடும். காயம் ஏற்படும் போது சுத்தமாக இருப்பின், அது எளிதில் குணமாகி விடும் என்பதை எடுத்துக் காட்டி சுத்தமான வாழ்க்கையின் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்துகிருர்.

நம் உடம்பின் தோல் பாகத்தை சுத்தம் செய்வது நம் இரத்தத் தையே சுத்தம் செய்வதாகும். உடற்பயிற்சியால் உண்டாகும் நன்மையை முற்றிலும் நாம்பெற வேண்டுமானல் உடற்பயிற்சி முடிந்ததும் நாம் நம் உடம்பை நன்ருகத் தேய்த்துக் குளித்தல் வேண்டும் என்கிருர்.

உடம்பை சுத்தமாக வைப்பது போலவே நம் ஆடைகளையும் சுத்தமாக வைத்தல் வேண்டும் என்கிருர்.

### ஆழ்ந்த சுவாசம்

பலவானுகவும் நல்ல உடல் நலனுமுடையவனுகவும் இருப்பதற்கு நம் உடலுக்குள்ளிருக்கும் இரத்தம் சுத்தமாகவும், ஆரோக்கியமுள்ள தாகவும் இருக்க வேண்டும். சுத்தமான ஆகாயத்தை சுவாசிப்பது, ஆழ்ந்த சுவாசம் விட்டுப் பழகுவது, உண்ட உணவு சீரணமான பின் கழிவாக உள்ளனவற்றை உடம்பிலிருந்து நாள்தோறும் வெளி யேற்றுவது முதலியன மிக முக்கியமான பழக்கங்கள் என்னும் உடற் பயிற்சி மிக அவசியமான பழக்கம் என்றும் பேடன் பவலார் கூறுகிருர்.

### புகைப் பிடித்தல்

''சாரணன் மடையன் அல்லன்'' என்பது எழுதப் படாது அனுஷ் டானத்தில் மட்டும் இருந்து வரும் சாரண விதிகளுள் ஒன்று என்றும் இதைப்பின்பற்றியே சாரணர்கள் புகைப் பிடிப்பதில்லை என்றும் கூறு கிருர். புகைப் பிடிக்கும் பழக்கத்தால் சிறுவர்கள் தங்கள் இதயத்தை

பலவீனமடையச் செய்கிருர்கள். இதயம் வலுக்குறைந்தால் தன் வேலையைச் செய்ய முடியாமல் தோல்வியுறும். உடம்பில் எல்லாப் பாகங்களுக்கும் இரத்தத்தைச் செலுத்தும் முக்கிய வேலையில் இதயம் ஈடுபட்டுள்ளது. அதற்காகவே பகல் இரவு என்று இல்லாமல் எப்பொழுதும் இடைவிடாமல் இயங்கிக் கோண்டே இருக்கிறது. அது ஒரே ரீதில் இயங்கிக் கொண்டிருப்பதால் ஒரே நிதானமாக இரத்தம் பல இடங்களுக்கும் போய்க் கொண்டிருக்கிறது. இரத்தம் அப்படிப் போய்க்கொண்டிருப்பதால் உடம்பில் உள்ள தசைகளும், எலும்புகளும் வளர்ச்சி அடைகின்றன. இதயம் தனக்குரிய வேலையைச் சரிவரச் செய்யவில்லையானல் சிறுவனுடைய வளர்ச்சி தடைபடும். சாரணன் அறிவுடையவன் ஆகையால் அறிவற்ற செயல்களின் அவன் ஈடுபடமாட்டான் என்று அவர் கூறுகிருர்.

மேலும் புகைப்பிடித்தால் மணமறியும் ஆற்றலைக் கெடுத்துவிடும் என்பதையும் வற்புறுத்துகிருர்.

## மது அருந்தல்

உலகத்தில் உள்ள வறுமைக்கும் இன்னல்களுக்கும் காரணம் பலப்பல. அவற்றுள் முக்கியமானது மது அருந்தல் என்ற கெட்ட பழக்கம். பணத்தையும் உடல் நலத்தையும் பாழாக்கச் செய்கின்ற இந்தக் கொடிய பழக்கம், கொலை முதலிய பாதங்களையும் தூண்டும் இயல்புடையது, கொடிய வியாதிகளுக்குக் காரணமாகவும் உள்ளது.

அருந்துவதற்குத் தண்ணீர், தேநீர், காப்பி என்று பல உண்டு. தாகம் தணிய எலுமிச்சம்பழரசம் முதலியன மிக நல்லது. இவைகளை எல்லாம் விட்டு விட்டு சாரணன் கெடுதி தரும் மதுவை மனத்தாலும் எண்ணுன் என்கிருர்.

நெடுந்தூரம் நடந்து செல்லும் பொழுது, அல்லது ஓட்டத்தில் ஈடுபட்டுள்ள பொழுது ஒரு சிறு கூழாங்கல்லை வாய்க்குள் போட்டுக் கொள்ளவேண்டும். இது நாம் நம் வாயை மூடிக்கொள்ள நம்மை வற்புறுத்துகிறது. தவிர நமக்கு தாகம் உண்டாகாமலும் தடுக்கிறது. நல்ல உடற்பயிற்சி பெற்றுள்ள சாரணன் நடந்து செல்லும் பொழுது அடிக்கடி நீர் அருந்த மாட்டான்.

## மன வாக்குக் காயங்களில் தூய்மை

அறிவில்லாத சிறுவர்கள் சிலர் அறிவற்ற சில பெரியவர்கள் பேசும் ஆபாசப் பேச்சுகளைக் கேட்டு மகிழ்ச்சி அடைவார்கள். சாரணர்களுக்கு இது ஒரு சிறிதும் பொருத்த முடையதல்ல. கெட்ட

பேச்சுக்கள் கெடுதியான செயலைத் தூண்டும். பேச்சில் சுத்தம் இருந்தால், செயலில் சுத்தம் ஏற்படும். எண்ணத்திலும் சுத்தம் உண்டாகும் என்கிறார்.

## வைகறைத் துயில் எழுதல்

சாரணன் அதிகாலையில் துயில் எழுந்து தன் வேலைகளைச் செய்ய வேண்டும். காலையில் துயில் எழுவது ஆரம்பத்தில் சிறிது கஷ்டமாகத் தோன்றலாம். ஆயின் இந்த நல்ல பழக்கம் ஆரம்பித்தபிறகு எளிதாகவே தோன்றும்.

இரவு காலந்தாழ்த்தாமல் சீக்கிரமாகவே படுக்கைக்குச் செல்வதும், நேரம் தாழ்த்தாமல் அதிகாலையில் படுக்கைவிட்டு எழுந்து தன் அலுவல்களைப் பார்ப்பதும் ஒருவனை ஆரோக்கியமுள்ளவனாகவும், ஐசுவரியவானாகவும் அறிவாளியாகவும் ஆக்க வல்லது.

அதிகாலையில் ஒரு மணி நேரத்துக்கு முன் எழுந்தால் ஒரு வருடத்தில் 365 மணி நேரம் அதிகமாக நம் பங்குக்குக் கிடைக்கிறது. முப்பது பகல் அதிகமாக நமக்குக் கிடைப்பதால் ஏனையோர்க்கு வருடம் பன்னிரண்டு மாதம் என்றால் நமக்குக் பதின்மூன்று மாத அளவு என்று பேடன் பவலார் எடுத்துக் காட்டுகிறார்.

## புன்முறுவல்

நகை உடல்நலத்தைத் தருவது. நகை இல்லையானால் உடல் நலம் இல்லை. எவ்வளவு நகை ஆடலாமோ அவ்வளவு நகையாடுவது நலம் தரும். நாமும் நகைக்க வேண்டும். மற்றவர்களையும் நகைக்கச் செய்ய வேண்டும்.

நாம் வருத்தத்தில் உள்ளபோது அதனைப் பொருட்படுத்தாது புன்முறுவலுடன் அதனை எதிர்க்க வேண்டும். இது ஒரு நிரந்தரமான பழக்கமாக ஏற்பட வேண்டும்.

சாரணர்கள் எங்கு போகப் புறப்பட்டாலும் இரண்டு பொருட்களைத் தம்முடன் எடுத்துச் செல்ல மறந்து விடக் கூடாது என்கிறார் பேடன் பவல் பெரியார். ஒன்று சாரணதண்டம். இன்னொன்று தன் முகத்தில் புன்முறுவல் என்று கூறுகிறார்.

பாடித்தீப்பனுவல் 17இல் பேடன் பவலார் கூறியுள்ள வேறு சில குறிப்புகளும் மிக முக்கியமானவை.

## மூக்கு, காது, கண்கள்

ஐம்பொறிகள் ஐந்தும் முக்கியமானவையே ஆயினும் அவற்றுள் மூக்கு, காது, கண்கள் ஆகியவற்றைப் பற்றிச் சில முக்கிய கருத்துகளைக் கூறியுள்ளார்.

## மூக்கு

சாரணனுக்கு மணம் அறியும் வல்லமை மிக முக்கியமானது. எப்பொழுதும் மூக்கு வழியாகவே சுவாசம் செய்யும் பழக்கம் இருப்பது நல்லது. இது வியாதிகளைத் தடுக்கும். வியாதிக்கிருமிகள் உடம்புக்குள் புகுந்து கொள்ளாமல் தடைபட்டு நின்றுவிடும்.

மூக்கு வழியாக சுவாசம் செய்வது நாவறட்சியைத் தடுக்கும். தாகத்தை மட்டுப்படுத்தும். இரவில் குறட்டை விடுவதையும் தடுக்கும் என்கிறார்.

சாரணன் மூக்கு வழியாகவே சுவாசம் செய்ய வேண்டும் என்று பேடன் பவலார் சொல்கிறார்.

## காது

சாரணர்கள் தங்கள் காதுகளைப் பற்றி மிகுந்த அக்கறை உள்ளவர்களாக இருக்கவேண்டும். காதை கைக்குட்டையால், குச்சுகளால், ஏனைய பொருள்களால் குடைதல் கூடாது. அது தவிர பஞ்சு சுருளால் காதை அடைத்து வைத்தலும் நல்லதல்ல. முதியவர்கள் சில வேளை கோபத்தால் சிறு குழந்தைகளைக் கன்னத்தில் அறைந்து விடுகிறார்கள். அது மிகுந்த கெடுதி செய்யும் என்பதை அவர்கள் உணரவேண்டும். சாரணர்கள் தங்கள் காதுகள் எவ்வளவு முக்கியமானவை என்பதை உணர்ந்து அதற்குப் பொருந்தும் முறையில் அவற்றைப் பாதுகாக்க வேண்டும் என்கிறார்.

## கண்கள்

சாரணனுக்கு நல்ல கூர்மையான பார்வை அவசியம். சாரண அலுவல்களை அவற்றைச் செய்ய வேண்டிய முறையில் செய்வதற்கு அத்தகைய கூரிய பார்வை இன்றியமையாதது.

தொலைவில் உள்ள பொருள்களை கூர்ந்து பார்த்துப் பழகுவதால் பார்வை பலமுறுகிறது. கண்ணையும் கண்பார்வையையும் பாதுகாக்க வேண்டியது சாரணனுக்குள்ள முக்கிய பொறுப்பு. நல்ல வெளிச்சம் இல்லாத இடத்தில் உட்கார்ந்து பாடங்களைப் படித்தல் கெடுதி செய்யும். பகல் வெளிச்சத்தில் வேலை செய்யும் பொழுது வெளிச்சத்துக்கு நேர் எதிராக உட்காருவது கெடுதி செய்யும். வெளிச்சம் இடது பக்கத்தில் இருந்து வரும்படி உட்கார்ந்து கொள்வது நல்லது.

நல்ல கண்பார்வையோடு நிறங்களை சரியாகத் தெரிந்து கொள்ளும் ஆற்றலும் சாரணனுக்கு இன்றியமையாதது. இதற்குரிய தனிப் பயிற்சிகளையும் குறிப்பிட்டுள்ளார்.

ஐம்பொறிகளைப் பற்றிய இந்தக் குறிப்புகள் தவிர பற்களைப் பற்றியும் நகத்தைப் பற்றியும் சில குறிப்புகளும் தந்துள்ளார்.

### பற்கள்

சிறுவயதில் பற்களை நன்ருகக் கவனித்தல் அவசியம். நல்ல புருஷ் உபயோகித்து பல்லைத்துலக்க வேண்டும். பல் துலக்கும் புருஷ்ஷை பக்கத்துக்குப் பக்கமும், மேலும் கீழும், உள்ளும் புறமுமாக பயன் படுத்த வேண்டும். புருஷுடன் பற்பசை அல்லது பற்பொடி உபயோகித்தல் இன்றியமையாதது. காலையில் எழுந்த உடனும் மாலையில் படுக்கைக்கு முன்னும், ஆக ஒவ்வொரு நாளும் இரண்டு தடவை பல் துலக்க வேண்டும். ஆலம் விழுது, வேலம்குச்சு முதலியன கிராமங்களில் பயன்படுத்தப் படுகின்றன. பற்பொடியைக் கைவிரலால் தேய்ப்பதும் உண்டு. இவைகளை எல்லாம்விட மேலானது புருஷ் என்று சாரணர்கள் உணர வேண்டும்.

### நகம்

கைவிரலில் உள்ள நகம் அவ்வப் பொழுது திருத்தப்படாவிட்டால் அபாயகரமாக தன்னுள் அழுக்குகளை அடக்கி வைத்துக்கொண்டு தேக ஆரோக்கியத்துக்கே கெடுதி பண்ணும். நகத்தில் அடையும் அழுக்கு உணவொடு உட்சென்று வியாதியை உண்டு பண்ணும். வாரம் ஒரு முறை கையில் உள்ள நகத்தை திருத்துதல் முக்கியம்.

கால் நகங்களையும் மாதம் ஒரு முறையாகிலும் திருத்துதல் அவசியம். உடல் பலத்தை வளர்த்தற்குரிய பல விளையாட்டுக்களையும் இதே பாடித்தீப் பனுவலில் குறிப்பிட்டுள்ளார்.

1. **மணிக்கட்டு உந்தல்** — இரு கைகளும் இடை மட்டத்தில் ஒரு மணிக்கட்டு மேலாகவும் மறு மணிக்கட்டு கீழாகவும் இருக்கும்படி கைகளை வைக்கவேண்டும். இப்பொழுது அடியிலுள்ள கையை மேலாகவும் மேலுள்ள கையைக் கீழாகவும் அமுக்குதல் வேண்டும் இரண்டையும் முழுப் பலத்துடன் அமுக்க வேண்டும். மிகுந்த அழுத்தத்துடன் அடியில் உள்ள மணிக்கட்டை சிறிது சிறிதாக நெற்றிவரைப் போகவிடவேண்டும். அது போலவே மிகுந்த அழுத்தத்துடன் மேல் உள்ள மணிக்கட்டைக் கீழ் நோக்கித் தள்ள வேண்டும். இதை வெகுநேரம் செய்தல் கூடாது. அவ்வப்போது 1 நிமிடம் செய்யலாம்.

2. **தண்டம் எறிதல்**—சாரண தண்டத்தின் அடியைப் பிடித்துக்கொண்டு அதனை நட்டுக்குத்துற வைத்துக் கொண்டு உயர நோக்கி எறிந்து மறு கையால் பிடிக்க வேண்டும். அந்தக் கையால் எறிந்து முன்னெறிந்த கையால் பிடிக்க வேண்டும். இப்படிப் பல

முறை எறிதல் வேண்டும். எறியும் உயரத்தையும் படிப்படியாக அதிகரித்துக் கொண்டே போகவேண்டும்.

3. **தலைவனைப் பின்பற்று**—இந்த ஆட்டத்தில் தலைவன் தான் விரும்புகிற உடற்பயிற்சிகளை ஒவ்வொன்ருய்ச் செய்ய, மற்றவர்கள் தலைவன் செய்தது போல அப்பயிற்சிகளைக் செய்து காண்பிப்பார்கள்.

4. **ஆலிங்கன குஸ்தி**—இருவர் எதிர் எதிராக நின்று கொண்டு கைகளை இறுகப் பிடித்துக் கொள்வார்கள். பிறகு தங்கள் மார்புகள் ஒன்றையொன்று தொட அவர்கள் ஒருவரை ஒருவர் பின்னுக்குத் தள்ளுவார்கள். யார் பின்னுக்கு வாங்க வேண்டியதாக வருகிறதோ அவர் தோல்வி அடைகிருர். மற்றவருக்கு வெற்றி

**மணிக்கட்டு உந்தல்**—இந்த ஆட்டத்தை இரண்டு சாரணர்களும் விளையாடலாம். ஒருவர் மணிக்கட்டை ஒருவர் உந்தல் இவ்வாட்டையின் செயல்முறை. யார் பின்னுக்குத் தள்ளப்படுகிருர்களோ அவர் தோல்வி அடைகிருர். மற்றவருக்கு வெற்றி.

இத்தகைய ஆட்டங்கள் அவ்வப்போது ஆடக்கூடியவை. ஆனால் ஒவ்வொரு நாளும் குறித்த நேரத்தில் தத்தம் இல்லங்களில் ஒழுங்காகச் சாரணர்கள் செய்யக்கூடிய உடற்பயிற்சி ''பேடன்-பவலாரின் ஆறு பயிற்சிகள்'' என்று வழங்கப் பெறுகின்றன.

## உடற்பயிற்சி 1.

இது தலைக்கும் கழுத்துக்கும் உரியது. உள்ளங்கைகளாலும் இரு கைவிரல்களாலும் தலையையும் முகத்தையும் கழுத்தையும் அழுத்தித் தேய்க்க வேண்டும். இரு கட்டை விரலால் கழுத்தையும் தொண்டையையும் தடவி விட வேண்டும்.

இதன் பிறகு தலையை வாரிக் கொண்டு, பின் பல் துலக்கி, வாய் மூக்கு இரண்டையும் சுத்தி செய்து அப்புறம் ஒரு தம்ளர் குளிர்ந்த நீர் பருக வேண்டும். அதற்குப்பின் பயிற்சிகள் செய்து முடிக்க வேண்டும்.

## உடற்பயிற்சி 2.

இது மார்புக்குரிய பயிற்சி. நிமிர்ந்த நிலையில் இருந்து முன்னுக்குச் சாய்ந்து கைகளை முன்னுக்குக் கொண்டுவந்து புறங்கைகளைச் சேர்த்து வைத்தல் இதன் ஆரம்பம். இப்படிச் செய்யும்போது முதுகு வளைதல் கூடாது. உள்ளடங்கி இருக்கவேண்டும். சுவாசத்தை வாய் வழியாக விட்டுக் கைகளை மேல் நோக்கி உயர்த்தி உயர



54. உடற்பயிற்சி 2

இருக்கும்போது மூக்கினுல் சுவாசம் உள் இழுத்து, அப்புறம் கைகளை பின்னுக்குக் கொண்டு போகவேண்டும். முடிவில் வாய் வழியாக சுவாசம் வெளிவிடவேண்டும். இப்படி பன்னிரண்டு முறை செய்ய வேண்டும்.

தோள், மார்பு, இதயம், சுவாசத்துக்குரிய நுரையீரல்கள் ஆகிய வற்றை வலுவுறச் செய்வது இந்தப் பயிற்சியின் நோக்கம். பயிற்சி செய்கையில் இதை நினைவில் வைத்தல் வேண்டும்.

## உடற்பயிற்சி 3.

இது வயிற்றுக்கு வலு அளிக்கக்கூடிய பயிற்சி. நிமிர்ந்து நின்றுகொண்டு இரு கைகளையும் ஒன்று போலவே வலம் இருந்து இடம் கொண்டு போக வேண்டும். அப்பொழுது உடம்பை சிறிது முறுக்க வேண்டியதாக வரும். இடப்பக்கம் எவ்வளவு போகலாமோ அவ்வளவு போக வேண்டும். இடது கடைசிவரைப் போன பிறகு ஒரு சிறிது நிற்க வேண்டும். நின்று மூச்சை வாய் வழியாக வெளிவிட வேண்டும். அப்புறம் மூக்கு வழியாக மூச்சை இழுத்துக்கொண்டு வலப்பக்கமாகச் சுழல வேண்டும். வயிற்றுப் பாகத்தில் முறுகுவது தெரியும். வலது பக்கம் கடைசிவரைச் சென்றதும் ஒரு சிறிது நின்று மூச்சை வெளிவிடவேண்டும். மறுபடியும் மூச்சை உள்ளிழுத்துக் கொண்டு இடது பக்கமாகப் போக வேண்டும்.

பக்கத்துக்கு ஆறு ஆக இரு பக்கத்துக்கும் பன்னிரண்டு முறை இதைச் செய்யவேண்டும்.

## உடற்பயிற்சி 4.

இது மேல் உடம்புக்குரிய பயிற்சி, அதாவது இடைமுதல் கழுத்து வரை உள்ள பாகத்துக்குரியது.



55. உடற்பயிற்சி 3





56. உடற்பயிற்சி 4

இரண்டு கைகளையும் நன்ருக உயர நீட்டிக் கோத்துக் கொண்டு பின்புறமாகச் சாய்ந்து இடைப்பாகத்தை நான்கு பக்கமும் அசைப்பது இப்பயிற்சியின் செயல்முறை.

கையைத் தலையோடு சேரவைத்துக் கை, தலை, உடம்பு எல்லாம் ஒன்றுபோல அசையவேண்டும்.

கை கீழே வரும்பொழுது மூச்சை வெளிவிடவேண்டும். கை மேலே போகும்போது மூச்சை உள்ளே இழுத்து கை கீழ் வரும்போது மூச்சை வெளியே விட வேண்டும்.

பக்கத்துக்கு ஆருக இரண்டு பக்கத்துக்கும் சேர்ந்து பன்னிரண்டு முறை செய்யவேண்டும்.

இது இடைப்பக்கத்துத் தசைகளுக்கும் வயிற்றுப் பக்கமுள்ள தசைகளுக்கும் நல்ல பயிற்சியாகும்.

## உடற்பயிற்சி 5.

அடி உடலுக்கும் காலின் பின்பாகத்துக்கும் உரிய பயிற்சி. நிமிர்ந்து நின்று கைகளை மேலே நீட்டி உடம்பை முன்னும் பின்னுமாக வளைப்பது இதன் செயல்முறை.



57. உடற்பயிற்சி 5

கால்களைச் சற்று அகலமாக வைத்து நின்று கொண்டு தலையைக் கைகளால் தாங்கிக் கொண்டு பின்னுக்குச் சாய்ந்து, அப்புறம் கைகளை நீட்டி முன்பக்கமாக வளைய வேண்டும். வளைந்து கை விரல்களால் கால் விரல்களைத் தொட முயற்சி செய்யவேண்டும்.

முதுகு கூன் வளைவு வளையக்கூடாது. அக (Concave) வளைவாக வளைய **வேண்டும்.** கீழ்நோக்கிச் செல்லும் பொழுதும் அக வளை

வாகவே காணப்பட வேண்டும். இது பன்னிரண்டு முறை செய்ய வேண்டும்.

## உடற்பயிற்சி 6.


58. உடற்பயிற்சி 6

கால், தொடை, அடிக்கால் இவைகளில் உள்ள தசைகளை வளரச் செய்யவும் கால் விரல் நரம்புகள் வலுவுறச் செய்யவும் ஏற்பட்டுள்ள பயிற்சி.

இதற்கு நேர்நிலையில் நிற்க வேண்டும். கைகளை இடையின் இரு பக்கங்களிலும் வைக்க வேண்டும். அப்புறம் கால் விரல்கள்மேல் நின்று கொண்டு முழங்கால்களை வெளிப்பக்கமாகத் திருப்பி மெதுவாக உட்கார வேண்டும். உடம்பின் பாரம் முற்றிலும் கால் விரல்களின் பேரில் இருக்கவேண்டும். முழங்கால் இரண்டும் வெளிப்பக்கமாக இருப்பதால் நாம் அசைந்து விழுந்துவிடாதபடி நம்மைக் காத்து கொள்ளலாம். இப்பயிற்சியை பன்னிரண்டு முறை செய்ய வேண்டும்.

## கயிறு ஏறுதல்

பேடன்—பவலார் இப் பலவிதமான உடற்பயிற்சிகளோடு கயிறு ஏறுதலையும் மரமேறிப் பழகுதலையும் நல்ல உடற்பயிற்சி என்றும் அவை இதயத்தை வலுவடையச் செய்யும் என்றும் கூறியுள்ளார்.


59. கயிறு ஏறுதல்

மரங்களிலிருந்து வடங்களைத் தொங்கவிட வேண்டும். அப்படித் தொங்குவது அடிமரத்தை யொட்டியே இருத்தல் வேண்டும். வடக்கயிற்றைப் பிடித்துக் கொண்டு கையாலே மரமேறிச் செல்லவேண்டும். அடிமரத்தில் காலை ஊன்றியும் ஏறலாம். ஊன்றாமலும் ஏறலாம். இது மிக நல்ல பயிற்சி

இப்படிப் பலவகையான குறிப்புகள் பேடன்—பவலாரின் ''சிறுவர் சாரணீயம்'' என்னும் நூலில் உள்ளது. அவற்றைத் தெரிந்து கொண்டு அவற்றைப் பின்பற்ற வேண்டும்.

## 2. சைகைப் பேச்சு

இரண்டாம்தரச் சாரணன் தேர்ச்சி பெறவேண்டியவற்றுள் இரண்டாவதாக உள்ளது சைகைப் பேச்சு (Signalling).

சைகைப் பேச்சு என்பது சிறு கொடிகளைக் கையில் வைத்துக் கொண்டு அவைகளை அசைக்கவேண்டிய முறையில் அசைத்து தொலைவில் உள்ள தம் சாரணத் தோழர்கட்குச் செய்தி தெரிவிப்பது ஆகும்.

சைகைப் பேச்சு (1) மார்ஸ் முறை சைகைப் பேச்சு (2) செமபோர் முறை சைகைப் பேச்சு என இருவகைப்படும். செமபோர் முறை அவ்வளவு பயன் உள்ளதல்ல.

### மார்ஸ் முறை (Morse)

மார்ஸ் முறை சைகைப் பேச்சில் ஆங்கில எழுத்துக்களும் ஒன்று, இரண்டு, மூன்று போன்ற எண்களும் ''புள்ளி''களால், அல்லது ''கோடு''களால் அல்லது இரண்டும் கலந்துள்ள அடையாளங்களால் குறிப்பிடப்பட்டுள்ளன.

''புள்ளி'' ''கோடு'' என்பனவற்றைக் கொடிகளைக் கொண்டு விளக்கலாம். அதுபோலவே ஓசையைக் எழுப்பியும் விளக்கலாம். அதுபோலவே கண்ணுக்குத் தெரியக்கூடிய விளக்கொளியாலும் விளக்கலாம்.




60. மார்ஸ் சைகை பேச்சுக் குரிய கொடி (Morse Flag)

மார்ஸ் சைகைப் பேச்சுக்கு, உரிய கொடி 24 அங்குல நீளமும் 24 அங்குல அகலமும் உள்ள துணியால் செய்து $2\frac{1}{2}$ அடி அளவுள்ள கொம்பில் மாட்டப்பட்டிருக்கும். கொம்பு நுனியில் $\frac{1}{2}$ அங்குல கனமும் அடியில் $\frac{3}{4}$ அங்குல கனமும் இருக்கும். கனம் குறைந்த மரத்தினால் செய்யப்பட்டிருக்கும்.

மார்ஸ் கொடி வெண்மையான துணியில் செய்யப்பட்டிருப்பின் அதன் நடுவில் 3" அகலத்தில் நீலப்பட்டி அல்லது கருப்புப்பட்டி இருக்கவேண்டும். இத்தகைய கொடி இருண்ட பின்னணி (dark back-ground) க்குப் பொருந்துவது.

இலேசான பின்னணி (Light Background)க்குப் பொருத்தமான கொடி ஊதாத் துணியில் செய்யப்பட்டு வெள்ளைப் பட்டி நடுவில் உடையதாக இருக்கும்.

## கொடி அசைத்தல்

கொடியின் அடிப்பாகத்தை இடது கையில் எடுத்துக் கொடியை நேராக வைத்துக்கொண்டு கொடியைப் பிடித்துக் கொண்டிருக்கும் கையை தாடைமட்டத்துக்கு தாடைவரை இழுத்துக்கொள்ள வேண்டும் பிறகு வலது கையை இடது கைக்குமேல் பிடித்துக்கொண்டு கொடியை இடப் பக்கம் 30° அளவில் சாய்த்துப் பிடிக்கவேண்டும். இதுதான் ஆரம்ப நிலை.




61. கொடி அசைத்தல்

கொடி இயங்கும் பொழுது தாடைக்கு முன்னால், தாடையை ஒட்டி, தாடை மட்டத்திலே நின்று, இயங்கவேண்டும். இந்நிலை மாறலாகாது. கொடியை 8 என்ற உருவத்தில் முன்னும் பின்னும் இயக்க வேண்டும். கொடிக்கொம்பு இடதுபக்கம் 30° அளவில் இருப்பது ஆரம்ப நிலையாகும். இந்த நிலையிலிருந்து வலதுபக்கம் 30° அளவுக்கு வந்து நிற்காமல் திரும்பினால் அது "புள்ளி" எனப்படும். ஆரம்ப நிலையில் கொடிக்கொம்பு இடதுகண்ணுக்கு நேராக இருக்கும். வலது கண்வரை கொடியைக் கொண்டுவந்து அதை மறுபடியும் இடக்கண் நிலைக்கு கொண்டு செல்வது "புள்ளி".

கொடிக்கொம்பை வலப்பக்கம் கொடிக்கொம்பு தரைக்கு மட்டமாக (90° வரை)க் கொண்டுவந்து அங்கு ஒரு சிறிது நிறுத்திப் பின் பழையபடி ஆரம்ப நிலைக்குகொண்டு போவது ''கோடு'' எனப்படும்.

## எழுத்துக்களும் சைகைகளும்

அ. பிரிவு எழுத்துக்கள்

E •  T —
I • •  M — —
S • • •  O — — —
H • • • •

ஆ. பிரிவு எழுத்துக்கள்

A • —  N — •
U • • —  D — • •
V • • • —  B — • • •

இ. பிரிவு எழுத்துக்கள்

F • • — •  L • — • •
G — — •  W • — —
Q — — • —  Y — • — —

ஈ. பிரிவு எழுத்துக்கள்

K — • —
R • — •
P • — — •
X — • • —

உ. பிரிவு எழுத்துக்கள்

C — • — •  J • — — —
Z — — • •

## எண்களும் சைகைகளும்

1 • — — — —  6 — • • • •
2 • • — — —  7 — — • • •
3 • • • — —  8 — — — • •
4 • • • • —  9 — — — — •
5 • • • • •  0 — — — — —

# எழுத்துக்கள்

மார்ஸ் முறையில் பயன்படுத்தப்படும் எழுத்துக்கள் ஆங்கில எழுத்துக்களே. சைகைச் செய்தி ஆங்கில வாசகமாக இருக்கலாம். அவசியமானுல் அது ஆங்கில எழுத்தின் உதவியால் எழுதப்பட்ட தமிழ் வாசகமாகவும் இருக்கலாம்.

மார்ஸ் எழுத்துக்கள் ஐந்து பிரிவாகத் தரப்பட்டுள்ளன. இப் பிரிவின் அமைப்பு எளிதில் புலப்படும்.

(அ) 'அ' பிரிவில் உள்ள எழுத்துக்கள் ஏழு. அவற்றுள் நான்கு 'புள்ளி' களாலானவை. அவை E, I, S, H, என்பன. மீதி யுள்ள மூன்று எழுத்துக்களும் 'கோடு' களாலானவை. அவை T, M, O, என்பன.

(ஆ) 'ஆ' பிரிவில் உள்ள எழுத்துக்கள் ஆறு. அவற்றை இரண்டு பத்தியாய் காட்டப்பட்டுள்ளன. 'புள்ளி' களாலும் 'கோடு' களாலும் ஆகியவை. முதல் பத்தியிலுள்ளவை A, U, V என்பன. ஒரு புள்ளி ஒரு கோடு A. இரண்டு புள்ளி ஒரு கோடு U. மூன்று புள்ளி ஒரு கோடு V. இரண்டாவது பத்தியில் உள்ள எழுத்துக்கள் N, D, B என்பன. ஒரு கோடும் ஒரு புள்ளியும் N. ஒரு கோடும் இரண்டு புள்ளியும் D. ஒரு கோடும் மூன்று புள்ளிகளும் B.

(இ) 'இ' பிரிவில் ஆறு எழுத்துக்கள். இவைகளும் இரண்டு பத்தியாக உள்ளன. முதல் பத்தியில் உள்ளவை. F, G, Q. இரண்டாவது பத்தியில் உள்ளவை L, W, Y. F என்பது இரண்டு புள்ளி, ஒரு கோடு ஒரு புள்ளி. L என்பது ஒரு புள்ளி, ஒரு கோடு, இரண்டு புள்ளிகள். இவை ஒன்றுக்கொன்று "எதிர்" ஆகத் தோன்று கின்றன. அதுபோலவே G இரண்டு கோடு, ஒரு புள்ளி என்பதும் W ஒரு புள்ளி இரண்டு கோடு, என்பதும் "எதிர்" எனலாம். Q இரண்டு கோடு, ஒரு புள்ளி, ஒரு கோடு, என்பதும் Y ஒரு கோடு, ஒரு புள்ளி, இரண்டு கோடு என்பதும் "எதிர்" ஆகும்.

(ஈ) 'ஈ' பிரிவில் நான்கு எழுத்துக்கள் உள்ளன. அவை களும் இரண்டு பத்தியாய் காட்டப்பட்டிருக்கின்றன. K. R என்பன முதற்பத்தியில் உள்ளன. P, X என்பன இரண்டாவது பத்தி. K என்பது ஒரு கோடு, ஒரு புள்ளி, ஒரு கோடு, R என்பது ஒரு புள்ளி, ஒரு கோடு, ஒரு புள்ளி இவ்விரண்டு எழுத்துக்களும் ஒன்றை யொன்று நினைவுறுத்தும் தன்மையுடையன.

P என்பது ஒரு புள்ளி, இரண்டு கோடு, ஒரு புள்ளி, X என்பது ஒரு கோடு, இரண்டு புள்ளி, ஒரு கோடு, இவ்விரண்டு எழுத்துக் களும் ஒன்றையொன்று நினைவூட்டும் தன்மை உடையன.

(உ) 'உ' பிரிவில் உள்ள எழுத்துக்கள் மூன்று. C என்பது ஒரு கோடு, ஒரு புள்ளி, ஒரு கோடு, ஒரு புள்ளி. J என்பது ஒரு புள்ளி, மூன்று கோடுகள். Z என்பது இரண்டு கோடுகள், இரண்டு புள்ளி. இவைகளைத் தனித்தனியாகவே கற்றல் வேண்டும்.

கற்றுப் பழகும் போது மார்ஸ் எழுத்துக்களை பிரிவு பிரிவாகக் கற்றல் எளிதாகக் காணப்படும். முதல் நாள் இரு பிரிவுகளைக் கற்கலாம். கற்றதும் அந்த எழுத்துக்களாலான வார்த்தைகளையும் சைகை செய்து பழகலாம். அடுத்த நாள் மூன்ருவது பிரிவைக் கற்பதோடு முதல் மூன்று பிரிவுகளில் உள்ள எழுத்துக்களால் அமைக்கக்கூடிய வார்த்தைகளையும் சைகை செய்து பழகலாம். அப்படி படிப்படியாய் 26 எழுத்துக்களையும் சைகை செய்யப் பழகுவது எளிது.

## எண்கள்

எண்களுக்குரிய மார்ஸ் அடையாளங்களை நினைவூட்டிக் கொள்ளல் எளிது. ஒன்று முதல் ஐந்து வரையான எண்கள் புள்ளி களில் ஆரம்பமாகின்றன.

1 என்பது ஒரு புள்ளியும் நான்கு கோடுகளும்.

2 என்பது இரண்டு புள்ளியும் மூன்று கோடுகளும்.

3 என்பது மூன்று புள்ளியும் இரண்டு கோடுகளும்.

4 என்பது நான்கு புள்ளியும் ஒரு கோடும்.

5 என்பது ஐந்து புள்ளிகள்

ஆறு முதல் பூஜ்யம் வரையான எண்கள் கோடுகளில் ஆரம்பம்.

6 என்பது ஒரு கோடும் நான்கு புள்ளிகளும்

7 என்பது இரண்டு கோடுகளும் மூன்று புள்ளிகளும்.

8 என்பது மூன்று கோடுகளும் இரண்டு புள்ளிகளும்.

9 என்பது நான்கு கோடுகளும் ஒரு புள்ளியும்.

10 என்பது ஐந்து கோடுகள்.

குறிப்பு — எண்கள் ஐந்து அடையாளங்களை (five elements) உடையன. எழுத்துக்களுக்கு நான்கு அடையாளங்களுக்கு மேல் இல்லை.

## சைகைக் குழூஉக் குறி
(Miscellaneous Signals)

மார்ஸ் முறையில் சைகைப் பேச்சு நிலையங்களுக்குரிய அலுவல்கள் ஒழுங்காக நடை பெறுவதற்குச் சில குழூஉக் குறிகள் (Miscellaneous Signals) தேவைப்படும்.

அவை பின்வருமாறு :

| எண் | நோக்கம் | குழுஉக்குறி | செயல் முறை. |
|---|---|---|---|
| 1. | சைகைப் பேச்சுக்காக இன்னெரு சைகைப் பேச்சுக் குழுவினரை அழைத்தல். ["Calling up"] | . . . — .<br>VE | VE VE VE என்று சைகை செய்து கொண்டே இருக்கவேண்டும் |
| 2. | VE அழைப்பைப் பார்த்த பிறகு அந்தக் குழு "நாங்கள் தயார். சைகைப் பேச்சு பேசுங்கள் என்று கூற ["Ready; Go on"] | — . —<br>K | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |
| 3. | "பேசுங்கள்" என்று சொல்வதற்கு பதில் "சற்றுப் பொறுங்கள். நாங்கள் தயாராகிரும்" என்று கூற [Wait, we are getting ready] | — — . —<br>Q | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |
| 4. | "சற்றுப் பொறுங்கள்" என்று சொன்னவர்கள் "இப்பொழுது பேசலாம்" என்று கூற [Go on] | — — .<br>G | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |
| 5. | பொது பதில் "General Answer" | —<br>T | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |
| 6. | "நீங்கள் அனுப்பிய சைகைப் பேச்சை சரிவரப் பெற்றுக்கொண்டோம்" என்று கூற "Read correctly" | . — .<br>R | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |
| 7. | "நாங்கள் அனுப்பும் சைகைப்பேச்சு முடிவடைந்தது" என்று கூற "Message ended" | . — . —.<br>AR | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |
| 8. | "நாங்கள்எங்கள்நிலையத்தை மூடுகிரும்" என்று கூற "We are closing down" | — — . — . .<br>GB | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |
| 9. | முற்றுப்புள்ளி "Full stop" | . — . — . —<br>AAA | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |
| 10. | "பெரிய எழுத்தில் எழுதவும்" என்று கூற "Write in Capitals" | . . — — . —<br>UK | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும் |
| 11. | "இந்த வார்த்தைக்கு முந்தின வார்த்தையைத் திருத்தவும்" என்று கூற "Word before" | . — — — . . .<br>WB | இந்த எழுத்தை சைகை செய்ய வேண்டும். |

| எண் | நோக்கம் | குழூஉக்குறி | செயல் முறை. |
|---|---|---|---|
| 12. | "இந்த வார்த்தைக்கு பிந்தின வார்த்தையைத் திருத்தவும்" என்று கூற "Word after" | . — — . —<br>WA | இந்த எழுத்தைச் சைகை செய்ய வேண்டும். |
| 13. | "இப்பொழுது சைகை செய்த வார்த்தை தவறு. அழித்து விடுங்கள்" என்று கூற "Error; cancel the Group" | ........ | எட்டுப் புள்ளிகளைச் சைகை செய்ய வேண்டும். |
| 14. | "மறுமுறை சைகை செய்யுங்கள்" என்று கூற "Repeat" | . . — — . .<br>IMI | இந்த எழுத்துக்களைச் சைகை செய்ய வேண்டும். |

இப்படியான குழூஉக் குறிகளை பயன்படுத்தி சைகைப் பேச்சு செய்வது சைகைப் பேச்சை சுறு சுறுப்பாக்கும். அலுவலும் நல்ல பயனுறு முறையில் நடைபெறும்.

## மார்ஸ் பொதுக் குறிப்பு

மார்ஸ் முறை சைகைப் பேச்சு கொடிகளை வைத்துக் கொண்டு செய்வதைப்போலவே மின் கைவிளக்கு (Torch) வைத்துக் கொண்டு செய்யக்கூடிய முறை. ஒரு விநாடி நேரம் விளக்கை அமுக்கினால் தெரியும் வெளிச்சத்தைப் புள்ளி என்றும் மூன்று விநாடி நேரம் அமுக்கினால் தெரியும் வெளிச்சத்தை கோடு என்றும் கொள்வது மரபு. இந்த விதமாகப் புள்ளியையும் கோட்டையும் பயன்படுத்தி மின்சார கைவிளக்கின் உதவியால் மார்ஸ் சைகைப் பேச்சு செய்தல் கூடும். அது போலவே தந்திக் கட்டையை (Signalling Key) மின்சார இரைப்பான் (Buzzer) உடன் இணைத்துக் கொண்டும், சைகைப் பேச்சு செய்தல் கூடும். "கர்ர்ர்" என்ற குறுகிய ஒலி புள்ளி என்றும், புள்ளியைப் போல் மூன்று பங்கு நீண்ட ஒலியாக இருக்குமாயின் அதனைக் கோடு என்றும் கொள்ள வேண்டும்

மார்ஸ் சைகைப் பேச்சு பல வகையில் சிறப்புடையது. தந்தி நிலையங்களில் பயன் படுத்தப்படும் முறை மார்ஸ் முறை. கப்பல்களிலும் ஆகாய விமானங்களிலும் உபயோகப் படுத்தப்படும் முறை மார்ஸ் முறை. சைகைப் பேச்சுக் கற்கையில் தந்திக்கட்டை (Telegraph Key) யைப் பயன்படுத்திக் " கட்டு " " கட " என்ற ஓசைகளை எழுப்பிக் கற்றுக் கொள்ளலாம். மின் கைவிளக்கு

(Electric Torch) களைப் பயன்படுத்தி நீண்ட அளவு வெளிச்சம், குறுகிய அளவு வெளிச்சம் என்ற அடிப்படையிலும் மார்ஸ் சைகைப் பேச்சுக் கற்றுக் கொள்ளலாம். மார்ஸ் சைகைப் பேச்சுக் கொடியை அசைத்து ஓசைகளுக்கும் ஒளிகளுக்கும் பதிலாக பெரிய கோணம், குறுகிய கோணம் என்ற அடிப்படையில் கற்கலாம். கற்பதோடு மட்டுமல்லாமல் இந்த மூன்று முறையின் அடிப்படையில் சைகைப் பேச்சைத் தொலைவில் உள்ளவர்களோடு பேசிப் பழகலாம். தந்தி நிலையங்களிலும் தந்தியில்லா ரேடியோ நிலையங்களிலும் மார்ஸ் முறை கையாளப்பட்டு வருவது இந்த முறையின் தனிச்சிறப்பு.

சைகைப் பேச்சுச் சின்னங்களை காகிதத்தில் குறிப்பிடும்போது பல வகையில் குறிப்பிடலாம்.

## தந்தி எழுத்து முறைகள்

(1) எழுத்துக்களைப் புள்ளிகள் கோடுகளாக எழுதலாம். இது ''புள்ளிக் கோடுகள்'' என்ற முறை.

(2) எழுத்துக்களைப் புள்ளிக்கோடுகளால் குறிப்பிடுவதற்குப் பதில் உயரமான மலைகளாகவும் உயரம் குறைந்த சிறு குன்று களாகவும் பள்ளத்தாக்குகளாகவும் குறிப்பிடலாம்.

இது '' மலையும் மடுவும் '' என்ற முறை

புள்ளிக் கோடுமுறை



இது 'He is going Today' என்பதாகும்.

மலையும் மடுவும் முறை



இது 'He is Coming today' என்பதாகும்.

# சைகைப் பேச்சுக்குப் பதில் வேறு பயிற்சி

சங்கவிதிகள் அடங்கிய A. P. R. O. என்ற புத்தகத்தில் 456 என்ற எண் உள்ள விதி சைகைப் பேச்சு கற்றுக் கொள்ளும் திறமையும் வாய்ப்பும் இல்லாத சாரணர்களுக்கு சலுகை ஒன்று தந்துள்ளது. குறிப்பிட்ட கலைச் சின்னங்களில் ஏதாவது ஒன்றைப் பெற்றால் அது சைகைப் பேச்சு பயின்று கொள்வதற்குப் பதிலாக ஒப்புக் கொள்ளப்படும் என்பது அந்தச் சலுகை. உண்மையில் இந்தக் கலைச் சின்னங்களைப் பெறுவது சைகைப் பேச்சுப்பயிற்சிக்கு ஈடாகும்என்று கூற முடியாது. இரண்டாம்தரச் சாரணச் சின்னத்தைப் பெறவேண்டும் என்று விரும்பும் சாரணன் ஒவ்வொருவனும் சைகைப் பேச்சைக் கற்றுக் கொள்ள முழு ஊக்கத்தோடு முயற்சி செய்யவேண்டும். அது அறவே முடியாதுபோனால், அதற்குரிய ஆற்றல் அவனுக்கு இல்லையானால் மட்டுமே இங்கு கூறிய சலுகையைப்பற்றி அவன் எண்ணுவது பொருந்தும். ஊக்கத்தோடு முயற்சி பண்ணாமல் எடுத்த எடுப்பிலேயே சலுகையை ஏற்றுக் கொள்வது ஒரு சிறிதும் பொருந்தாது. அது கோழைத்தனத்தைக் குறிக்கும்

சைகைப் பேச்சுப் பயிற்சி ஆரம்பத்தில் ஒரு சிறிது கடினமாகத் தோன்றலாம். ஆயின் முறையாகப் பயிற்சி பெறுவதானால் சைகைப் பயிற்சியால் எவ்வித மலைவும் ஏற்படவேண்டிய அவசியமில்லை.

A முதல் Z வரையான எழுத்துக்களையும் அவைகளுக்குரிய சைகைச் சின்னங்களையும் படிப்படியாக உள்ள ஐந்து படிகளாகப் பிரித்து, பயிற்சியை ஐந்து வாரங்களில் முடித்துக் கொள்ளுதல் கூடும்.

முதல் வாரத்தில் '' அ ''பிரிவாகிய E, I, S, H, T, M, O, என்ற எழுத்துக்களை கற்று அவைகளைக் கொண்டுள்ள வார்த்தைகளையும் வாக்கியங்களையும் பழகவேண்டும். எழுத்துக்களை ஆசிரியர் கொடியாலும் ஊதலாலும் குறிப்பிட எழுத்துக்களையும், வார்த்தைகளையும், வாக்கியங்களையும் சாரணர்கள் எழுதிப்பழக வேண்டும். பிறகு தரப்பட்டுள்ள எழுத்துக்களை, வார்த்தைகளை, வாக்கியங்களைச் சாரணர்கள் புள்ளிக் கோடுகளால் தங்கள் கைப்புத்தகங்களில் எழுதிப் பழக வேண்டும். எழுதும்போது எழுத்துக்களைப் பிரிக்க மேலிருந்து கீழாக ஒரு சிறுகோடும், வார்த்தைகளைப் பிரிக்க அதுபோல இரண்டு கோடுகளும் போடலாம். இந்த முறையில் இந்தப் பாடத்தை சாரணர்கள் முதல் வாரத்தில் தங்கள் ஓய்வு நேரத்தில் வீட்டிலும் கற்றுக்கொள்ள வேண்டும்.

இந்த முறையில் முன் ' அ ' பிரிவில் தரப்பட்டுள்ள எழுத்துக்களை நன்கு கற்றபின் இரண்டாவது வாரத்தில் ' ஆ ' பிரிவில் உள்ள

A, U, V, N, D, B, என்ற எழுத்துக்களையும், முதல் வாரத்தில் கற்ற ஏழு எழுத்துக்களைம் கற்றுக் கொள்ளவேண்டும்.

இது போல மூன்ருவது வாரத்தில் ' இ ' பிரிவு எழுத்துக்களையும் அதுவரைக் கற்ற பதின்மூன்று எழுத்துக்களையும் கற்க வேண்டும். பின் நான்காவது வாரத்தில் ' ஈ ' பிரிவு எழுத்துக்களையும் அதுவரைக் கற்ற பத்தொன்பது எழுத்துக்களையும் கற்க வேண்டும். அது போலவே ஐந்தாவது வாரத்தில் ' உ ' பிரிவு எழுத்துக்களையும் அது வரை கற்றுள்ள ஏனைய எழுத்துக்களையும் கற்றல் வேண்டும்.

இதோடு கூட எண்களுக்குரிய சின்னங்களையும் சைகைப் பேச்சுக் குழூஉக்குறிகளையும் கற்றுக் கொள்ளுதல் கூடும். அப்படி முடியாவிட்டால் ஆருவது வாரத்தில் இவைகளைக் கற்றுக்கொள்ள லாம்.

சாரணர்கள் தந்திக்கட்டை அல்லது மின்சார இரைப்பானைப் (Buzzer)பயன் படுத்திச் சின்னங்களை " கட்டு " " கட " என்றும் " கிர்ர் " " கிர்......" என்றும் நினைவுபடுத்திக் கொள்ளவும் வேண்டும். புள்ளிக்குரிய " கிர் " குறுக்கமாகவும் கோட்டுக்குரிய " கிர்ர் " நீண்டும் இருக்கவேண்டும்.

முறையான பயிற்சி சைகைப் பேச்சுப் பயிற்சியைச் சுலபமாக்க வல்லது.

## 3. உற்று நோக்கும் ஆற்றல்
### (Observation)

இரண்டாம் தரச் சாரணன் தேர்ச்சிபெற வேண்டியவற்றுள் மூன்ருவதாக உள்ளது ஊன்றிப் பார்த்தல் ஆகும். ஊன்றிப் பார்த்தல் சாரணர்களுக்கு நல்ல பயனளிக்க வல்ல பழக்கம். ஊன்றிப் பார்த்த லுக்குரிய பயிற்சி மிகவும் முக்கியமானது.

தன் " சிறுவர் சாரணீயம் " (Scouting for Boys)என்ற நூலில் பற்பல இடங்களில் பேடன் பவல் பெரியார் ஊன்றிப் பார்த்தலின் முக்கியத்துவத்தைப் பற்றி வற்புறுத்தியிருக்கிருர். சாரணன் என் பவன் எந்த இடத்திலும், எல்லோருக்கும் முன்னதாகவே எதையும் பார்த்து அறிந்து கொள்ளும் திறமை உடையவன். பிறர் கண்ணுக்குத் தெரியாதனவற்றையும் சாரணன் கண்டுகொள்ளும் வல்லமை உடையவன் என்று கூறுகிருர். கூர்மையான அறிவும், கூர்மையான பார்வையும், சாரணனுக்கு இன்றியமையாதன என்றும் அவைகளுக் கான பயிற்சி சாரணர்களுக்கு அளிக்கப்படவேண்டும் என்றும் கூறி யுள்ளார். ஆகவே சாரணப் பயிற்சி திட்டத்தில் ஐம்புலப் பயிற்சிக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

## ஊன்றிப் பார்த்தலுக்குரிய பயிற்சி

ஊன்றிப் பார்த்தல் என்பது கண்ணுலும், அறிவினுலும் ஒரு பொருளை நுட்பமாய் உணர்ந்து கொள்ளுதல் ஆகும். அந்தப் பொருளைப்பற்றிய எல்லா விவரத்தையும் உணர்ந்து கொள்வதே ஊன்றிப் பார்த்தலின் நோக்கம். அப்படிச் செய்வதில் நேரத்தை மிகுதியாகச் செலவு செய்தல் ஆகாது. தெரிந்து கொள்ள வேண்டியனவற்றை விரைவாக உணர்ந்து கொள்ளவேண்டும். மேலும் ஒன்றை நாம் ஆழ்ந்து கவனிக்கிறோம் என்பதையும் பிறர் யாரும் தெரிந்து கொள்ளாமல் நாம் எதனையும் ஊன்றிப்பார்த்தல் வேண்டும்.

இரண்டாம்தரச் சாரணர்கள் தேர்ச்சி பெறவேண்டியதாகிய தேர்வு மூன்று வகையாக உள்ளது.

(1) தடங்களை அல்லது ஆற்றுப் படைக்குறிகளை, 25 நிமிடங்களில் $\frac{1}{2}$ மைல் தூரம் பின்பற்றல், (அரை மைல் = 0.8 கிலோ மீட்டர் ஆகும்.)

(2) கடைகளில் விற்பனைச் சாளரங்களில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ள விற்பனைப் பொருள்களை நான்கு வெவ்வேறு இடங்களில் ஒவ்வொரு நிமிடநேரம் பார்வையிட்டுப் பிறகு அவற்றுள் ஒன்றிலுள்ள பொருள்களை வருணித்தல்.

**(3) கிம் விளையாட்டு**

இம்மூன்றில் ஏதாவதொன்று போதுமானதாயினும் மூன்றிலும் பயிற்சி பெறுவது நல்லது. மூன்றிலும் பயிற்சி பெற்றுக்கொண்டு தேர்வில் ஏதாவது ஒன்றைச் செய்தல் நல்லது.

## தடம் பிடித்தல்
## (Following Trail)

இங்கு கூறியுள்ள தடம் இயற்கையாக உள்ள தடம் அல்ல, செயற்கையாக அமைக்கப்பட்டுள்ளவை. தடங்களை ஒருவர் ஆக்க வேண்டும். அவை எளிதில் கண்டு கொள்ளக் கூடியதாய் இருத்தல் கூடாது. தடங்களை ஆக்குபவர் திறமையுடன் ஆக்குதல் வேண்டும். கூர்மையான பார்வை உடைய ஒருவருக்கே புலப்படக் கூடிய முறையில் அவை ஆக்கப்படல் வேண்டும்.

செயற்கைத் தடங்களை அம்புக்குறி, அடித்தல் அடையாளம் முதலியவற்றுல் அமைக்கலாம். பல நிறக் கம்பளி நூலால் அமைக்கலாம். இலைகளில் நீண்ட முள் அல்லது தீக்குச்சிகளைக் குத்தி வைத்து அமைக்கலாம். கண்ணுடி மணிகளை கருப்பு நூலில் கட்டி

மரக்கிளைகளில் இருந்து தொங்க விட்டு அமைக்கலாம். இவைகளுள் பலவற்றைக் கலந்து பயன்படுத்தலாம். இவை தவிர சிறுசிறு கற்களால் ஆற்றுப்படைக் குறிகள் அமைத்துத் தடம் அமைக்கலாம். ஒரு மரத்துக்குரிய இலை கிளைகளை இன்னொரு வேறு வகையான மரத்தில் குத்திவைத்துத் தடம் அமைக்கலாம்.

இத்தகைய அடையாளங்கள் சற்று ஊன்றிப்பார்த்தால் கண்டு கொள்ளக்கூடிய விதம் அமைக்கப் படவேண்டும்.

தடம் பிடித்தல் பயிற்சி அடிக்கடி நடக்க வேண்டிய பயிற்சி.

## கடைச் சாளரங்களை விவரித்தல்
## (Describing Shop Windows)

பெரிய கடைகளில் விற்பனைக்குரிய பொருள்களில் சிலவற்றை சுவரொட்டி அலமாரியில் அழகுபட அடுக்கி வைத்து பொது மக்கள்



62 கடைச்சாளரம் (Shop Window)

பார்வைக்காக வைக்கிறார்கள். சாளரங்களில் வைப்பதும் உண்டு. அவ்வப்போது இவைகளில் உள்ள பொருள்களை எடுத்துவிட்டு பதிலுக்கு வேறு பொருள்களை அந்த அலமாரிகளில் வைப்பார்கள்.

இத்தகைய ''ஷாப்புச் சன்னல்'' உதவியைக் கொண்டு சாரணர்களுக்குரிய ஊன்றிப்பார்த்தல் பயிற்சி அளிக்கலாம்.

சாரணர்களை இப்படியான அலமாரிகள் வைக்கப்பட்டிருக்கும் கடைகளுக்கு அழைத்துச் சென்று அங்கு வைத்திருக்கும் அலமாரியில் அல்லது சாளரங்களில் உள்ளவையை ஒரு நிமிடம் கூர்ந்து பார்க்கச் செய்யவேண்டும். அதுபோல மூன்று நான்கு கடைகளுக்கு அழைத்துச் சென்று ஒவ்வொரு இடத்திலும் ஒரு அலமாரியில் உள்ளனவற்றை கூர்ந்து பார்க்கச் செய்யவேண்டும். அப்புறம் வேறு இடம் சென்று அங்கு அந்த பல கடைகளிலும் தாம் கண்டவற்றை வருணிக்கச் செய்யவேண்டும்.

நான்கு அலமாரியைக் கண்டு அவற்றில் உள்ள பொருள்களைக் கூர்ந்து கவனித்த பிறகு அவற்றுள் சோதனையாளர் விருப்பத்துக் கிணங்க ஏதாவது ஒரு அலமாரியில் கண்டவற்றைப் பிழையின்றி வருணித்தல் இந்தத் தேர்வில் வெற்றி பெறல் ஆகும்.

## கிம் விளையாட்டு (Kim's Game)

பலதரப்பட்ட 24 பொருள்களை ஒரு தட்டில் (மேசை மேல்) அடுக்கி வைத்து ஒரு துணியால் மூடிவிடவேண்டும். சாரணர்களை




63. கிம் விளையாட்டு (Kim's Game)

அழைத்து அதைச் சூழ்ந்து நிற்கவைத்துப் பிறகு மூடியிருக்கும் துணியை எடுத்துவிட்டு பொருள்களைத் திறந்துவைக்க வேண்டும். இப்பொழுது சாரணர்கள் அந்தப் பொருள்களைக் கூர்ந்து கவனிக்க 1 நிமிட அவகாசம் கொடுக்கவேண்டும். 1 நிமிடமானதும் முன்போல அவைகளைத் துணியால் மூடிவிட்டு தாம் கண்ட பொருள்களைச் சாரணர்கள் தங்கள் தங்கள் புத்தகத்தில் எழுதும்படி சொல்லவேண்டும். ஒவ்வொரு சாரணனும் தான் பார்த்த 24 பொருள் களில் 16க்குக் குறையாமல் எழுதவேண்டும். இப்படிப் பயிற்சி அடிக்கடி கொடுக்கப்படவேண்டும். பயிற்சியால் சாரணர்கள் ஊன்றிப்பார்த்தல் எனும் கூர்ந்து கவனிக்கும் சக்தியை பெறுவார்கள்.

கிம் விளையாட்டை இந்த முறையில் சிலதடவை விளையாடிவிட்டு அப்பால் அதன் தன்மையை சிறிது சிறிதாக மாற்றி விளையாட வேண்டும். என்னென்ன பொருள்கள் என்பதோடு நின்றுவிடாமல் அவைகளைப் பற்றின முக்கிய விவரங்களை அறிய விரும்புவது அடுத்தபடியான பயிற்சியாக அமையும்.

ஊன்றிப்பார்த்தல் பயிற்சி இன்னும் அநேக விதமாகவும் அளிக்கலாம். எடுத்துக்காட்டாக, ஒருவர் குறிப்பிட்ட ஆடைகளுடன் பிற அலுவல்களில் ஈடுபட்டிருக்கும் சாரணர்கள் முன் காட்சி அளிக்கலாம். சாரண ஆசிரியரிடம் ஏதோ காரியத்தைப் பற்றிப் பேசும் எண்ணத்தோடு ஒரு நிமிடம் பேசிவிட்டுப் போய்விடலாம். சாரணர்களுக்கு இதை முன்னதாகச் சொல்ல வேண்டியதில்லை. ஊன்றிப் பார்த்தல் பயிற்சி என்று அவர்கள் அதைத் தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. அப்படி வந்தவர் போய் ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு அவரையும் அவர் ஆடைகளையும் அவர் நின்ற நிலையையும் வருணித்தல் சாரணர்களுக்கு நல்ல பயனுள்ள பயிற்சியாக அமையும்.

அதே மனிதரைத் தன் உடைகளில் சிறிது மாற்றம் செய்து கொண்டு மறுபடியும் ஒரு நிமிடம் வந்துபோகச் சொல்லலாம். சாரணர்கள் அவர் உடையில் இப்பொழுது உள்ள வித்தியாசங்களை எடுத்துச் சொல்லவேண்டும்.

இப்படி ‘‘கிம் விளையாட்டு’’ படிப்படியாக மாற்றி அமைத்து விஸ்தரிக்கப்படலாம். பயிற்சி பெறும் சாரணர்கள் நாளடைவில் நன்ருக, ஊன்றிப் பார்க்கும் திறனைப் பெறுவார்கள்.

## 4. சாரண வேகம் (Scout Pace)

இரண்டாம்தரச் சாரணன் தேர்ச்சிபெற வேண்டியவற்றுள் நான்காவதாக உள்ளது ‘‘சாரண வேகம்’’ என்பது ஆகும்.

சாரண வேகம் சாரணனுக்கு நேரத்தை அளக்கும் ஒரு கடியாரமாகவும் தொலைவை அளக்கும் ஒரு அளவு கோலாகவும் அமையும். ஓட்டமும் நடையுமாக ஒரு மைல் தூரத்தை 12 நிமிடங்களில் கடப்பது சாரண வேகம் ஆகும். ஒரு மைலை சரியாக 12 நிமிடங்களில் கடக்க வேண்டும். சற்றுக் கூடுதலோ குறைவோ கூடாது.

தேர்வின்போது 12 நிமிடத்துக்கு $\frac{1}{2}$ நிமிடம் கூடலாம். அல்லது குறையலாம். அதற்கு மிகுதியான வித்தியாசம் கூடாது.

ஒரு கிலோ மீட்டர் தூரத்தை $7\frac{1}{2}$ நிமிடங்களில் கடப்பது 1 மைல் தூரத்தை 12 நிமிடங்களில் கடப்பதை ஒக்கும்.

மாறிமாறி நடப்பதும் ஓடுவதும் சாரண வேகத்தின் அடிப்படை. சிறுவர்கள் 20 தப்படி (Pace) நடந்து அதற்குப்பின் 20 தப்படி ஓடி, பின் 20 தப்படி நடந்து பின் 20 தப்படி ஓடி அப்படி நடப்பதும் ஓடுவது மாகச் சென்றால் களைப்படையாமல் ஒரு மைல் அல்ல இரண்டு மூன்று மைல் தொலைவுகூட எளிதில் செல்வார்கள்.

இப்படி பன்னிரண்டு நிமிடங்கள் சாரண வேகத்தில் சென்றதும் தான் வந்துள்ள தொலைவு ஒரு மைல் என்று சாரணன் அறிந்து கொள்வான். அதுபோல ஒரு மைல் தொலைவு வந்த உடன் புறப் பட்ட நேரத்திலிருந்து 12 நிமிட நேரமாய் விட்டது என்பதையும் உணர்வான்.

சாரண வேகம் பயிற்சியாலேயே அடையக்கூடிய ஒன்று. சாரணர்கள் இந்தப் பயிற்சியை அடிக்கடி பெற வேண்டியது மிக அவசியம்.

## 5. ஆக்கல் கலை (Pioneering)

இரண்டாம்தரச் சாரணன் ஆவதற்குமுன் (1) சதுரக்கட்டு (Square lashing) குறுக்குக்கட்டு (Diagonal Lashing) ஆகிய இரு வகைக் கட்டுகளும் தெரிந்திருக்க வேண்டும். (2) பருமரத் தொடுப்பு (Timber Hitch) வடக்கயிற்றுத் தொடுப்பு (Rolling Hitch) கொள்ளைக் காரன் தொடுப்பு (Highwayman's Hitch) ஆகியவைகளைக் கட்டத் தெரிந்திருக்க வேண்டும்.

### சதுரக்கட்டு, குறுக்குக்கட்டு

இரண்டு மூங்கில்கள் ஒன்றன் மேல் ஒன்று நன்றாகப் பொருந்தி இருப்பின் அவற்றைப் பலமாகச் சேர்த்துக் கட்டுவதற்குச் சதுரக்கட்டு (Square lashing) பயன்படுகிறது. இரண்டு மூங்கில்களும் ஒன்றை யொன்று தொட்டுக் கொண்டிருக்கும் பொழுது சதுரக்கட்டுதான் கட்டவேண்டும். மூங்கில்கள் எந்தக் கோணத்தில் இருப்பினும் இந்தக் கட்டினைப் பயன்படுத்தலாம். மூங்கில் தவிர ஏனைய மரங்களுக்கும் இந்தக் கட்டு பொருந்தும்.

இரண்டு மூங்கில்கள் ஒன்றோடொன்று பொருந்தி இராமல் இரண்டும் பிரிவுபட்டுள்ள பொழுது அவைகளை இழுத்து இறுக்கி அதற்குப்பின் அவற்றைக் கட்டவேண்டும். இதற்குப் பயன்படும் கட்டு குறுக்குக்கட்டு (Diagonal lashing) என வழங்கும்.

ஆறு சாரண தண்டங்களைப் பயன்படுத்தி மாதிரிப் பாலத்தட்டி (Model Trestle) அமைக்கும்போது தட்டியின் ஓரத்தில் உள்ள எட்டுக் கட்டுகளும் சதுரக்கட்டுகள் ஆகும். நடுவில் இரண்டு குறுக்கு

மூங்கில்கள் ஒன்றோடொன்று சேருமிடத்தில் உள்ள கட்டு குறுக்குக் கட்டு ஆகும்.




64. பாலத்தட்டி (Trestle)

## சதுரக்கட்டு

இரண்டு மூங்கிலும் எந்த இடத்தில் சேர்கின்றன, கட்டு எந்த இடத்தில் வரும் என்று நிதானம் பண்ணிக்கொண்டு, காலாக உள்ள அடி மூங்கிலில் ஒரு யானைக் கொலுசு அமைத்து அந்தக் கொலுசின் நுனியை நீளக்கயிற்றோடு பக்குவமாக முறுக்குதல் வேண்டும். பிறகு கயிற்றை நன்றாய் இழுத்துப் பிடித்துக் கொண்டு மறு மூங்கிலுக்கு மேலாகவும் காலாக உள்ள மூங்கிலைச் சுற்றியும் சதுரமாக மேலும் கீழுமாக மூன்று முறை சுற்றவேண்டும்.

இஇ என்பது மூங்கில் கால். அஅ என்பது இஇ-யின்மேல் வைக்கப்பட்டுள்ள குறுக்கு மூங்கில். 1,2,3,4 என்பன இரண்டு மூங்கில்களால் ஏற்பட்டுள்ள நான்கு கோணங்கள். இஇ மூங்கிலைச் சுற்றி 4, 1 என்னுமிடத்தில் யானைக் கொலுசு போட்டு அதன் நீட்டுப் பாகத்தையும் நுனிக் கயிற்றையும் பிரியாதபடிக்கு முறுக்க வேண்டும். பின்னர் கயிற்றை இழுத்துப் பிடித்துக் கொண்டு 1,2, என்ற இடத்தில் அஅ-வுக்கு மேலாகக் கொண்டுபோக வேண்டும். அப்புறம் இஇ-க்குக் கீழாக அதைச் சுற்றிக்கொண்டு வந்து 3 என்கிற இடத்தில் கயிற்றை மேலுக்கு வாங்கி, இழுத்து அஅ-வுக்கு மேலாக 3, 4 என்ற இடத்தில் எடுத்து அப்புறம் இஇ-க்கு அடியில் 4-லிருந்து 1-க்கு கொண்டுபோக வேண்டும். இந்த விதமாக இன்னும் இரண்டு தரம்

சுற்ற வேண்டும். இரண்டாவது சுற்று எடுக்கும்போது 2,3—1,4 என்ற இடங்களில் கயிற்றை கட்டுக்கு வெளியாகவும், 1,2—3,4 என்ற இடங்களில் கட்டுக்கு உள்ளாகவும் கயிறு எடுக்கப்பட




65. சதுரக் கட்டு (Square lashing)

வேண்டும். இப்படி மூன்று முறை வரிந்து கட்டின (Wrapping) பிறகு இரண்டு முறை இடை இறுக்கல் (Frapping) செய்ய வேண்டும். இடை யிறுக்கல் என்பது கழிகளுக்கிடையாக கயிற்றை இறுக இழுத்துக் கட்டுவதாகும். இப்படிச் செய்தால் நாம் போட்ட கட்டு நன்ருய் இறுகும். கடைசியாக குறுக்குக்கழியில் ஒருபக்கத்தில் இரண்டு அரைக் கொலுசு போட்டு கட்டை முடித்து விடலாம். கயிறு மிச்சம் இருந்தால் அதை அந்த இடத்தில் வரியவரியச் சுற்றிக் கடைசியாக இரண்டு அரைக் கொலுசுபோட்டு முடித்துவிட வேண்டும். இங்கு உள்ள படம் சதுரக் கட்டை விளக்கும். ஆயினும் இதனை நல்ல தேர்ச்சி பெற்றவர்களிடம் நேர்முகமாகக் கற்றுக் கொள்ளுதல்தான் சரியான முறை.

## குறுக்குக் கட்டு

ஒன்ருேடொன்று சேராமல் விலகி நிற்கும் இரண்டு மூங்கில்களை இறுக்கிச் சேர்த்துக் கட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் கட்டு குறுக்குக் கட்டு என்று வழங்கப் பெறும்.

அஅ மூங்கிலையும் இஇ மூங்கிலையும் குறுக்குக் கட்டுப்போட்டு அமைப்பதற்கு முதன் முதலாக 1,3 என்ற இடத்தில் ஒரு பரு மரத் தொடுப்பு போட்டு இரு மூங்கிலையும் ஒன்று சேர்க்க வேண்டும்.




66. குறுக்குக் கட்டு (Diagonal lashing)

பின்னர் கயிற்றை 2,4 என்ற இடத்தில் இரண்டு அல்லது மூன்று சுற்றுகள் வரிதல் சுற்றுகள் (Wrapping) சுற்ற வேண்டும். அடுத்த படி 1,3 இடத்திலும் இரண்டு அல்லது மூன்று சுற்றுகள் போட வேண்டும். அப்புறம் இரு மூங்கிலுக்கும் நடுவில் இரண்டு இறுக்குச் சுற்று (Frapping) போட வேண்டும். அதன் பிறகு கயிற்றை அரைக் கொலுசுபோட்டு அஅ மூங்கில் அல்லது இஇ மூங்கிலில் கட்டி முடித்து விட வேண்டும்.

சதுரக் கட்டு அல்லது குறுக்குக் கட்டுப்போடும்போது கயிறு நன்ருக இழுத்து இறுக்கப்பட வேண்டும். கயிற்றைப் பலமாக இழுத்துப் பிடித்துக் கொண்டே சுற்றுக்களைப் போடவேண்டும். போடும்பொழுது சுற்றுக்களை ஒரு சிறு குறுகிய மரக் கட்டையால் தட்டிப் பதிய வைக்க வேண்டும்.

## பருமரத் தொடுப்பு (Timber Hitch)

மரத்தை வெட்டி வீழ்த்தி அப்புறம் அடி மரத்தைத் துண்டு போடுவார்கள். அடிமரத் துண்டினை இழுத்துச் செல்ல பருமரத் தொடுப்பு பயன்படும். கயிற்றை முடிபோட்டு வைக்காமல் அதைத்



67. பருமரத் தொடுப்பு (Timber Hitch)

தொடுத்து வைத்திருப்பது இந்தத் தொடுப்பின் இயல்பு. மரத்தை இழுக்கும்பொழுது பருமரக்கட்டு போட்டுத் தொலைவில், கட்டையின் நுனியில் ஒரு அரைச் கொலுசும் போட வேண்டும். அதைக் கில்லிக் ஹிச் (Killick Hitch) என்பர். இது மரத்தை இழுத்துச் செல்ல வசதி யாக இருக்கும்.

செயல்முறை—மரத்தைச் சுற்றிக் கயிற்றை கொண்டு வந்து பிறகு கயிற்றை மடித்துக்கொள்ள வேண்டும். அப்புறம் நுனியையும் கயிற்றையும் ஒன்றுக்குள் ஒன்றைப் பிணைத்து முறுக்க வேண்டும். இது பருமரத் தொடுப்பு எனப்படும்.

## வடக்கயிற்றுத் தொடுப்பு (Rolling Hitch)

இழுத்துக் கட்டப்பட்டுள்ள வடக்கயிற்றினை வேறொரு கயிற்றின் உதவியால் அதே திசையில் இழுக்க வேண்டியதாக உள்ளபொழுது வடக்கயிற்றுத் தொகுப்பு பயன்படும்.



68. வடகயிற்றுத் தொடுப்பு (Rolling Hitch)

செயல்முறை—கயிற்றை ஒரு கையால் பிடித்துக் கொண்டு கயிற்றின் நுனிப்பாகத்தை மறுகையால் வடத்தைச் சுற்றிக்கொண்டு வர வேண்டும். வடத்தை எந்தப் பக்கமாக இழுக்க எண்ணு கிறோமோ அந்தப் பக்கம் இரண்டு சுற்றும் மறுபக்கம் ஒரு சுற்றும் போட வேண்டும். இது வடக்கயிற்றுத் தொடுப்பு எனப்படும்.

## கொள்ளைக்காரன் தொடுப்பு
## (Highwayman's Hitch or Draw Hitch)

இது வேடிக்கையான ஒருவகை முடிச்சு. கட்டின பிறகு கட்டின முடிச்சிலிருந்து தொங்கும் இரண்டு நீட்டுக் கயிறுகளுள் ஒன்றினைப் பற்றி இழுத்தால் கட்டப்பட்டுள்ள முடிச்சு அப்படியே இருக்கும். மறு கயிற்றைப்பற்றி இழுத்தால் முடிச்சு திடீரென்று உலைந்து அவிழ்ந்து விடும்.

இந்த முடியை ஒரு கழியைச் சுற்றிக்கட்ட: கயிற்றை இரண்டாக மடித்துக்கொண்டு மடிப்பைக் கழியைச் சுற்றிக் கொண்டுவர வேண்டும். முதல் படத்தில் உள்ளதுபோல நீட்டுக் கயிற்றைப்பிடித்து இழுத்து இரண்டாவது படத்தில் உள்ளபடிக் கழியின் மறுபுறத்துக்கு மடித்துள்ள அந்த பாகத்தைக் கொண்டு வரவேண்டும். அதன் பிறகு மூன்ருவது படத்தில் உள்ளதுபோல வேருெரு மடிப்பு அமைத்து நான்காவது படத்தில் உள்ளதுபோல முடிச்சை சிறிது சிறிதாக இறுக்க வேண்டும்.




69. கொள்ளைக்காரன் தொடுப்பு
(Highwayman's Hitch or Draw Hitch)

இப்பொழுது முடிச்சில் இருந்து தொங்கும் இரண்டு நீட்டுக் கயிறுகளுள் ஒன்றனைப் பிடித்து இழுத்தால் முடி இறுகும். மற்ருென்றைப் பிடித்து இழுத்தால் முடி உலைந்து அவிழ்ந்து விடும்.

கொள்ளையடிக்கக் குதிரை ஏறிச்செல்லும் கொள்ளைக்காரர்கள் வழியில் எங்காவது தங்கினுல் தங்கள் குதிரையைக் கட்டி வைக்க இந்த முடியைப் பயன்படுத்துவார்கள். தங்களுக்குத் தெரியாத யாராவது வரக்கண்டால், இழுக்க வேண்டிய கயிற்றைப் பிடித்து வெடுக்கென்று இழுத்துக் குதிரை ஏறித் தப்பித்துக்கொள்வார்கள். இந்த முடிக்கு ஏற்பட்டுள்ள பெயரே இதை விளக்கும்.

## 6. தீ மூட்டல் (Fire Lighting)

இரண்டாம் தரச் சாரணன் தேர்ச்சி பெற வேண்டியவற்றுள் ஆருவதாக உள்ளது தீ மூட்டல். இந்தத் தேர்வுக்குரிய நிபந்தனைகள் சில (1) தீ மூட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் பொருள்கள் இயற்கைப் பொருள்களாயிருத்தல் வேண்டும். (2) இரண்டு தீக்குச்சிக்கு மேல் உபயோகித்தல் கூடாது.

தீ மூட்டிச் சமையல் செய்த பிறகு அந்தத் தீயை அணைக்கும் முறையும் அவனுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

சாரணப் பயிற்சி சிறந்த வெளி வட்டாரங்களில் நடைபெறும் பயிற்சி. ஆகையால் இந்தத் தீ மூட்டுதல் பயிற்சியும் அப்படியான வெளியிடங்களிலேயே நடக்க வேண்டும். இடம் பிறருக்குச் சொந்தமானல் சொந்தக்காரரிடமிருந்து அனுமதி பெறுதல் முதற்கடமை.

### தீ மூட்டுதலுக்கு இடம் தயாரித்தல்

முன்னுல் தரையில் உள்ள புல்லை அகற்றிவிட வேண்டும். புல் செழிப்பாக வளர்ந்திருந்தால் அந்தப் புல்லை அடிமண்ணோடு கரண் கரணகை வெட்டி எடுத்து அந்தக் கரண்களை நிழலில் பத்திரப்படுத்தி வைக்க வேண்டும். நம் அவசியத்துக்கு எவ்வளவு இடம் தேவைப்படுமோ அதற்குச் சற்று அதிகமாகவே புல்தரையைத் தயார் பண்ணிக்கொள்ள வேண்டும். நம் தேவை முடிந்ததும் புல் கரண்களை முன்போல் பதித்து விடவேண்டும்.

தரை ஈரமாகக் காணப்பட்டால் பழைய தகரத் தகட்டின் மேல் தீ மூட்டலாம். தகரத்தகடு இல்லையானுல் கற்களைக் கொண்டு சிறிய தளம் தயார் பண்ணிக்கொண்டு அதன் மேல் தீ மூட்டலாம். அல்லது சுள்ளிகளைத் தரையில் அடுக்கித் தீ மூட்டலாம்.

### சுள்ளிகளை அடுக்குதல்

தீ மூட்டுதற்கு சுள்ளிகளால் ஒரு அடிப்படையும் அதற்கு மேல் சுள்ளிகளால் கட்டப்பட்ட ஒரு கூம்புக் கோபுர (Pyramid)மும் தேவை. சுள்ளி அடிப்படை 22.5 செ.மீ. நீளமும் 22.5 செ.மீ. அகலமும் இருக்கலாம். சுள்ளிகளைத் தரையில் ஒன்றன் பக்கத்தில் ஒன்ருய் அடுக்கி இதை அமைக்கலாம்.

இந்த அடிப்படையின் மேல் 22.5 செ.மீ. உயரமுள்ள கூம்புக் கோபுரம் அமைக்க வேண்டும். இதற்கு மூன்றுக் கவட்டைக்குச்சுகளால் ஒரு முக்காலி அமைக்க வேண்டும். கவட்டைக் குச்சுகள் 22.5 செ.மீ. நீளமுடையதாக இருக்கவேண்டும். முக்காலியில் காற்று நுழைவதற்குரிய இடத்தை விட்டுவிட்டு மீதியுள்ள பக்கங்களில் 20 அல்லது 22 செ.மீ. நீளமுள்ள குச்சுகளை முக்காலியோடு சாய்ந்து







70. தரை ஈரமாக இருந்தால் இப்படிச் செய்யலாம்

நிற்குமாறு அடுக்க வேண்டும். அப்படி ஐந்து அல்லது ஆறு செ.மீ. கனத்துக்கு அடுக்க வேண்டும்.

எளிதில் தீப் பிடிக்கக்கூடிய பொருள்களைக் கொண்டு கூம்புக் கோபுரத்தின் உட்பக்கத்தை நிரப்ப வேண்டும். எளிதில் தீப்பிடிக்கும் பொருள்கள் என்பன ஒன்றிரண்டாய் பிளக்கப்பட்ட மெல்லிய குச்சுகள் மிக மெல்லியதாய்க் கிழிக்கப்பட்ட தேங்காய் நார், மெல்லிய அகல துண்டுகளாய் சீவப்பட்ட கட்டைகள் போன்றவை.



1

எளிதில் எரியும் எரிபொருள்



2

மெல்லிய சுள்ளிகள்



3

சற்றுப் பருமனான சுள்ளிகள்



4

விறகுக் கட்டைகள்

71. தீ மூட்டல் எரிபொருள்

## எரிய விடுதல்

இந்த விதமாக அடுக்கப்பட்டுள்ள கூம்புக் கோபுரம் ஒரு நெருப் புக் குச்சாலேயே எரியத் தொடங்கும். நெருப்புக் குச்சைக் காற்று அணைத்து விடாதபடி பத்திரமாக உரசி, நெருப்புக் குச்சில் நன்ருய் நெருப்பு எரிய ஆரம்பித்த பிறகு, கூம்புக் கோபுரத்தில் உள்ள எரி பொருள்மேல் அல்லது அதற்கு உள்ளே, எரியும் தீக்குச்சை பக்குவமாக வைத்தல் வேண்டும். எரி பொருளில் நெருப்புப் பிடிக்க




72. தீ மூட்டல் கோபுரம்



73. தீ முக்கோணம்

கோபுரத்தில் உள்ள குச்சுகள் எரியும். இப்பொழுது கட்டப்பட்டுள்ள 22.5 செ.மீ. கூம்புக் கோபுரத்துக்கு மேல் 30 செ.மீ. வெளிக் கோபுரம் ஒன்று கட்டப்பட்டிருந்தால் அதுவும் தீப்பிடிக்கும். அப்படி அமைக்கப்பட்ட நெருப்புப் பாடித் தீயாகப் பயன்படும்.

22.5 செ.மீ. கூம்புக் கோபுரத்தின் இரு மருங்கிலும் செங்கல் அடுக்கினுல் சமையல் செய்ய அடுப்பாக அமையும். மூன்று பக்கம் செங்கல் அடுக்கினுல் இன்னும் நல்ல அடுப்பாகப் பயன்படும்.

## தீ முக்கோணம்

தீ எரிவதற்கு அவசியமாக உள்ளவை மூன்று அவை—எரி பொருள், காற்று, வெப்பம், இந்த மூன்றும் தீஎரிவதற்குத் தேவை யாக உள்ள வசதிகள். இவைகளைத் **தீ முக்கோணம்** (Fire triangle) என்பர்.

இந்த வசதிகள் மூன்றையும் நாம் தேடி அமைத்தால் தீ தோன் றும். தோன்றிய தீ நமக்கு அனுகூலம் செய்யும்.

இம் மூன்று வசதிகளும் எதிர்பாராத விதமாக ஒன்று சேர்ந்தால் தீ விபத்து ஆகமுடியும்.

தீ மூட்ட விரும்பும் சாரணன் இவைகளைத்தேடி இணைக்கும் அலுவலை மேற் கொள்கிருன்.

கூம்புக் கோபுரம் அமைப்பதற்கு ஈரம் இல்லாத இடம் தேவை. நன்ருகக் காய்ந்து உலர்ந்துள்ள தரையாக இருந்தால் அப்படியே தரையில் கூம்புக் கோபுரம் (Pyramid) அமைக்கலாம். படம் கோபுர அமைப்பை விளக்குகின்றது.

நன்ருக உலர்ந்த தரையாக இல்லாமல் சிறிது ஈரமாகக் காணப் பட்டால் கோபுரத்தை அமைக்க சுள்ளிகளை ஒரு அடிப்படை (Platform)யாகப் பரப்ப வேண்டும். அந்த அடிப்படை மீது எளிதில் எரியக்கூடிய பொருள்களைக் கொட்டி, அவைகளுக்கு மேல் கோபுரத்தை எழுப்ப வேண்டும்.

தீ மூட்டுவது சமையலுக்காக இருக்கலாம். அல்லது குளிர்காயும் நோக்கத்தோடு மூட்டப் படலாம். அல்லது வேறு ஏதாவது நோக்கம் இருக்கலாம். மூட்டிய தீ வளர்க்க எரிபொருளையும் சேகரித்தல் அவசியம்.

## தீ மூட்டல்—வேருெரு முறை

மூன்று கட்டைகளை ப-வடிவத்தில் அடுக்கி, படத்தில் காண்பித்துள்ள மாதிரி எளிதில் எரியும் பொருள்களைக் கொட்டி அப்புறம் சுள்ளிகளை அவைகளுக்கு மேல் அடுக்க வேண்டும். இப்படி மூன்று முறை அடுக்கி அப்புறம் தீ மூட்டலாம். இந்த முறைக்கு சுள்ளிகள் மிகுதியாகத் தேவைப்படும். சுள்ளிக்குப் பஞ்சமில்லாதபோது இந்த முறையைக் கையாளலாம்.













74. தீ மூட்டல்—வேறுமுறை

1. எளிதில் எரியும் எரி பொருள்.

2. சுள்ளிகள் முதல் அடுக்கு.

3. சுள்ளிகள் இரண்டாவது அடுக்கு.

4. சுள்ளிகள் மூன்ருவது அடுக்கு.

## மூட்டிய தீயை அணைத்தல்

சாரணர்கள் வெளியிடங்களில் தீ மூட்டும் பொழுது மிகுந்த கவனமாகத் தீ மூட்டவேண்டும். மூட்டின தீயை மிகக் கவனத்துடன்

பயன்படுத்த வேண்டும். பயன் படுத்தும்போது போதிய பாது காப்புகளை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். தன்வேலை முடிந்ததும் மூட்டியதீயை முறையாக அணைத்தலும் அவசியம். தீயைப் பாது காப்பின்றி விடக்கூடாது. தீயை முறையாக அணைத்த பின்னரே சாரணன் அவ்விடம் விட்டுப்பெயரலாம்.

தீயால் மிகுந்த சேதம் உண்டாகலாம். வீடுகள் முதலியன தீக்கு இரையாகலாம். மரங்கள், செடி, கொடிகளும் அழியலாம்.

''ஒரு மரம் ஆயிரம் தீக்குச்சுகள் தரலாம். ஆயினும் ஒருதீக் குச்சால் ஆயிரம் மரங்கள் அழியலாம்'' என்பது சிந்தனைக்குரியது.

தீ முக்கோணத்தின் பக்கங்கள் **எரிபொருள், காற்று, வெப்பம்** என்பவையாகும். காற்று பிராண வாயுவைக் குறிக்கும்.

இவை மூன்றும் ஒன்றோடொன்று ஒத்துழைத்தால் நெருப்பு உண்டாகிறது. அவை மூன்றும் குறையாமல் இருக்கும் வரை நெருப்பு இருந்து வரும். அவைகளில் ஏதாவது ஒன்று குறையுமானால் எரிந்து கொண்டிருக்கும் நெருப்பு அணைந்துவிடும். தீ அணைக்கும் தொண்டர்கள் தாங்கள் செய்யும் தொழிலுக்குரிய குறிக்கோள் ''தீ முக்கோணத்தை நொறுக்குதல்'' என்பார்கள்.

எரியும் குடிசைகளில் தண்ணீரை ஊற்றுவது, பக்கத்துக் குடிசை களில் உள்ள கூரையைப் பிரித்துத் தள்ளுவது, ஆடையில் தீப்பற்றிக் கொண்டால் விபத்துக்குள் இருப்பவரைத்தரையில்படுத்துக்கொள்ளச் செய்து கம்பளத்தில் சுருட்டுவது போன்ற செயல்கள் இந்த ''நொறுக்குதலை'' விளக்கும்.

தீயை அணைக்கத் தண்ணீரை நிறைய உபயோகித்தல்வேண்டும். தண்ணீரை நெருப்பின்மேல் ஊற்றிவிட்டு சாரணத் தண்டத்தால் அல்லது வேறு கொம்பினால் கிளறித் தீயை அணைக்க வேண்டும். கரியும் சாம்பலும் தவிர ஒரு தீப்பொறிகூட அங்குக் காணப்படக் கூடாது.

தண்ணீரால் நன்ருக அணைத்து விட்டபிறகு கரியையும் சாம்பலை யும் அப்புறப் படுத்தவேண்டும். அவைகளை எங்காவது கொட்டி விடக்கூடாது. போதுமான அளவு ஆழமுள்ள குழிதோண்டி கரியை யும் சாம்பலையும் அதில் கொட்டி நன்ருய் மூடிவிடவேண்டும்.

தீ எரிந்த இடத்தில் நிறைய மண் அல்லது மணலைத்தூவி தீ எரிந்த அடையாளம் தெரியாமல் பண்ணிவிட வேண்டும்.

பத்திரப் படுத்தி வைத்திருந்த புல் கரண்களை மறுபடியும் அவை இருந்த இடத்தில் பதித்து தண்ணீர் தெளித்து வைக்க வேண்டும்.




75. வாளித் தொடர் முறைத் தீ அணைத்தல்

சாரணர்கள் எந்த இடத்தில் தீயை எரிய விட்டார்கள் என்று கண்டுபிடிக்காத முறையில் மூட்டிய தீயை அணைக்கும் பொறுப்பு அவர்களுக்கு உண்டு. இது மிகவும் முக்கியம். இது சாரணனுக் குரிய நல்ல பெயரைக் காப்பாற்றும் இயல்புடையது.

## வாளித் தொடர் முறைத் தீயணைப்பு
## (Bucket-chain Method of Fire Fighting)

இந்தத் தீயணைப்பு முறை ''தீ முக்கோணத்தை'' நொறுக்கு வதற்கு ஒரு நல்ல எடுத்துக் காட்டு. வீடு தீப்பிடித்து எரிகிறது. தீயை எப்படி அணைக்கலாம் என்ற பிரச்னை அடிக்கடி கிராமாந்தரங் களில் எழுகிறது. பக்கத்தில் உள்ள கிணற்றிலிருந்து தண்ணீரைக் கொண்டு வந்து எரியும் கூரைமேல் கொட்டுவதும் அப்படிக் கொட்டித் தீயை அணைப்பதும் கிராமத்தார்களுக்கு கை வந்த கலை.

முதலில் கிணற்றையும் தீ பிடித்துள்ள வீட்டையும் இணைக்கும் முறையில் சாரணர்கள் இரண்டு வரிசையாக, ஒத்த இடைவெளி விட்டு, நிற்க வேண்டும். கிணற்றில் தண்ணீர் இறைத்துத் தொட்டியை நிரப்புவதற்கு நான்கு அல்லது ஐந்து பேர் வேண்டும். அவர்கள் இறைத்துக் கொட்டும் தண்ணீரை குடங்களில் அல்லது வாளிகளில் எடுத்து அவசர அவசரமாகத் தீ பிடித்து எரியும் வீட்டை நோக்கி அனுப்ப வேண்டும். ஒரு வரிசையில் உள்ள சாரணர்கள் தண்ணீர் குடத்தை அல்லது வாளியை ஒருவர் பெற்று அடுத்தவரிடம் ஓடிச் சென்று கொடுத்தல் வேண்டும். அப்படித் தண்ணீர் வாளிகள் ஒன்றன் பின் ஒன்ருய்ச் சென்று கொண்டிருக்க, தீ எரியும் வீட்டுப் பக்கத்தில் இரண்டொருவர் அந்தக் குடத்தை அல்லது வாளியை வாங்கி அதில்உள்ள தண்ணீரைக்கூரைமேல் தீஎரிகின்ற இடத்தைப் பார்த்து வீச வேண்டும். அப்படிச் செய்யத் தீ அணையும். தீ அணைய அரைமணி நேரம் ஒருமணி நேரம், அல்லது அதற்கு அதிகமாகவும் ஆகலாம். சாரணர்களின் ஒரு வரிசையில் தண்ணீர் வந்த வண்ணம் இருக்க, மறு வரிசையில் காலிப்பாத்திரங்கள் கிணற்றை நோக்கிச் சென்று கொண்டிருக்க வேண்டும். இப்படித் தீ அணைப்பதை **வாளி வரிசை** அல்லது **வாளித் தொடர் தீ அணைத்தல்முறை** என்பர்.

கிராமாந்தரங்களுக்கும் தீயணைப்புப்படை இல்லாத ஊர்களுக் கும் மிகப் பொருத்தமுடையது இந்த முறை. கிராமத்தில் உள்ள சாரணர்கள் ஒன்று சேர்ந்து இந்தத் தீயணைப்பு முறையை அடிக்கடி செய்து பழக வேண்டும். பல முறை பழகினுல் இந்த முறையைத் திறம்பட செயல்படுத்த ஆற்றல் உண்டாகும்.

இந்தத் தீயணைப்பு முறை இரண்டாந்தரச் சாரணச்சின்னம் பெற விரும்பும் சாரணர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய பயிற்சிகளில் ஒன்று.

தீயால் உண்டாகும் விபத்தைப்பற்றிச் சற்று விரிவாக அத்தியாயம் 9இல் கூறியிருப்பதைப் பார்க்க.

## 7. சமையல் செய்தல் (Cooking)

இந்த இரண்டாம் தரச் சாரணத் தேர்வுக்காகச் செய்யப்படும் சமையல் வெளியிடங்களில் அமைக்கப்பட்டுள்ள அடுப்பில் கட்டைகளை எரித்துச் செய்தல் வேண்டும். சமையல் செய்யப்படும் உணவு ஒருவருக்குப் போதுமான அளவு இருக்கவேண்டும்.

சாதம், பருப்பு, குழம்பு, கறி அல்லது துவட்டல் ஆகியவற்றை சமைக்கவேண்டும்.

### சாதம்

200 அல்லது 250 கிராம் அரிசியை நன்ருகக் கழுவி சுத்தம் செய்து வைத்துக் கொள்ளவேண்டும். வேண்டுமளவு தண்ணீரை ஒரு பாத்திரத்தில் கொதிக்க வைத்து, கொதிவந்ததும் அரிசியை அதில் போட்டுக் கிளறிவிடவேண்டும். அரிசி சாதம் ஆகும் வரை அடிக்கடி கிளறி விடுவது அவசியம். சாதத்தைப் பதம் பார்த்து அது நன்ருக மசிகிற பக்குவம் வந்ததும் கஞ்சியை வடித்து விட வேண்டும். கஞ்சியை வடிப்பது பாத்திரத்தின் மூடியின் உதவியால் செய்யலாம். கஞ்சியை வடிக்கும் போது இருகைகளிலும் போதுமான அளவு கைப்பிடித்துணி வைத்தக் கொள்ள வேண்டும். கஞ்சி வடிப்பதால் சோற்றில் உள்ள சில முக்கிய சத்துப் பொருள்கள் வீணுகின்றன. கஞ்சியை வடிக்கமால் தண்ணீரை அளவாக வைத்து சாதத்தைப் பொங்கி இறக்குவது நல்லது.

### பருப்பு

அவசியமான அளவு பருப்பை கழுவி சுத்தம் செய்து கொண்டு நன்ருய்க் காய்ந்துள்ள தண்ணீரில் போட்டு அடுப்பில் வைக்கவும். சற்று நேரத்துக்குப்பின் பருப்பு நன்ருய் வெந்து விடும். கையில் எடுத்துப் பார்த்தால் பருப்பு நன்ருக மசிய வேண்டும். அந்தப் பக்குவம் அடைவது வரை பருப்பு வேகவேண்டும்.

வெந்த பருப்பை குழம்போடு கலந்து விடலாம். அல்லது தனியாக வைத்துக் கொள்ளலாம். தனியாக வைத்துக் கொள்வதானுல் ஒரு சிறிது உப்பு சேர்த்துக்கொண்டு தாளிதம் செய்து கொள்ள வேண்டும்.

### குழம்பு

கறிகாய்களை முதலில் தண்ணீரில் நன்ருகக் கழுவிச் சுத்தம் செய்ய வேண்டும். பிறகு அவைகளை கத்தியால் திருத்தித் துண்டுகளாக்க வேண்டும். துண்டுகளை சிறிது உப்புக் கலந்த புளித்தண்ணீரில் வேக விடவேண்டும். குழம்புக்குரிய பொடி அளவாக

எடுத்துக் கரைத்து, அதையும் வெந்து கொண்டிருக்கும் கறிகாய் களுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும். பிறகு தண்ணீரில் கரைத் துள்ள பெருங்காயத்தை ஊற்ற வேண்டும்.

தண்ணீர் நன்ருக வற்றின பிறகு குழம்பை இறக்கி விடலாம்.

பருப்பைக் குழம்போடு கலக்கின்றதாளுல் கலந்த பிறகு சிறிது நேரம் குழம்பு கொதிக்க வேண்டும்.

கடைசியாக குழம்பைத் தாளிதம் பண்ண வேண்டும்.

### கறி அல்லது துவட்டல்

வாழைக்காய், கத்தரிக்காய் போன்ற கறிகாய்களை நன்ருகக் கழுவிப் பின் துண்டு துண்டாக நறுக்கி வைத்துக் கொண்டு வாணலி யில் எண்ணெயைக் காயவைத்து உளுத்தம் பருப்பு, கடுகு போட்டுத் தாளிதம் பண்ணிக்கொண்டு கறிகாய்களை அதில் போட்டு இறுக மூடி வைத்தால் சிறிது நேரத்துக்குள் நன்ருக வெந்துவிடும். போதுமான அளவு உப்பு சேர்த்துக் கொள்ள வேண்டும்.

கறிகாய்களை முதலில் வேக வைத்துப் பின் தாளிதம் பண்ணு வதும் நல்லமுறை.

### உணவு

சாரணன் தான் சமைத்த சாதம், பருப்பு, குழம்பு, கறி ஆகிய வற்ருேடு சிறிதுமோர் அல்லது தயிரும் இருக்குமாளுல் அது அவனுக்கு நல்ல உணவாக முடியும்.

இந்தத் தேர்வின் முக்கிய நோக்கம் சாரணனைத் தன் கடமையை யொட்டித் தான் செல்லுமிடங்களில் தனக்கு வேண்டிய உணவைத் தானே தயார் செய்து கொள்ளும் திறன் உடையவனுகச் செய்தலே ஆகும்.

## 8. திசை யறிதல் (Direction Sense)

இரண்டாம் தரச் சாரணன் தேர்ச்சி பெற வேண்டியவற்றுள் எட்டாவதாக உள்ளது திசையறிதல் ஆகும். இதற்கு (1) அவன் திசையறியும் கருவியை உபயோகிக்கத் தெரிந்திருத்தல் வேண்டும். (2) 16 திசைகளைக் காண்பிக்கத் தெரிய வேண்டும். (3) நட்சத்திரக் கூட்டங்களின் உதவியைக் கொண்டு வடதிசை கண்டுபிடிக்கவும் தெரியவேண்டும்.

## திசையறிகருவி (Compass)

திசையறிகருவி காந்த ஊசியின் உதவியால் திசை காட்டுகிறது. காந்த ஊசி நிலைக்கு வரும்பொழுது தெற்கு வடக்காக அமையும் இயல்புடையது. காந்த ஊசியை ஒரு ஊசி முனை (pivot) மேல் மிதக்க விட்டால் கடைசியாக நிலையில் அமர்ந்து நிற்கும். நிலைக்கு வந்தபின் காந்த ஊசியின் ஒரு முனை வடதிசையை நோக்கியும் மறு முனை தென் திசையை நோக்கியும் நிற்கும்.

இதன் காரணம் பூமியில் உள்ள காந்த இழுவை தெற்கு வடக்காக அமைந்துள்ளதே ஆகும். காந்த ஊசியின் வடமுனை யைப் பின்பற்றி நாம் செல்வோமானால் அது கடைசியில் நம்மைக் கானடா நாட்டின் வட எல்லைக்குக் கொண்டு போய்விடும். இந்த இடம் வடதுருவத்திலிருந்து 1400 மைலுக்குள் உள்ளது. இந்த இடத்தில் மிகப்பலமான காந்த இழுவை இருக்கிறது. இதை நோக் கியே காந்த ஊசி நிலைக்கு வருகிறது. இந்தத் திசையை ''காந்த வடக்கு'' என்று குறிப்பிடுகிறோம். இது வடதுருவத்துக்கு நேராக இல்லாமல் சற்று விலகி இருக்கிறது. ஆயினும் இந்தச் சிறு வித்தியா சத்தை நாம் சாதாரணமாக பொருட் படுத்தவேண்டியதில்லை.

வடதுருவம் ''உண்மையான வடக்கு'' என்று குறிப்பிடப் படும்.

## அடிப்படைத் திசைகள்

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்ற நான்கும் அடிப்படைத் திசைகள் எனப்படும். சூரியன் உதிக்கும் திசை கிழக்கு; சூரியன் மறையும் திசை மேற்கு, காலையில் சூரியனைப் பார்க்க நின்றோமானால் நம் இடக்கைப் பக்கத்தை வடக்கு என்றும், வலக்கைப் பக்கத்தை தெற்கு என்றும் குறிப்பிடுகிறோம். இந் நான்கு திசைகளின் அடிப் படையில் நம் நாட்டு வழக்கத்தில் இருந்துவரும் வடகிழக்கு, தென் கிழக்கு, வடமேற்கு, தென் மேற்கு என்ற திசைகள் உள்ளன. மாலுமிகள் பயன் படுத்தும் திசையறி கருவிக்குரிய 16 அல்லது 32 திசைகளும் இதே அடிப்படையில் தான் அமைந்துள்ளன.

32 திசைகளை கப்பல்களில் உள்ளவர்கள் பயன் படுத்துகிறார்கள். அவை சாரணர்களுக்கு அவசியமில்லை. ஆயின் 16 திசைகளைச் சாரணர்கள் தெரிந்திருப்பது அவசியம்.

# பதினாறு திசைகள்

வடக்கு, வடக்கு வடகிழக்கு, வடகிழக்கு, கிழக்கு வடகிழக்கு, கிழக்கு, கிழக்குத் தென்கிழக்கு, தென்கிழக்கு, தெற்குத்தென் கிழக்கு, தெற்கு, தெற்குத் தென்மேற்கு, தென்மேற்கு, மேற்குத் தென்மேற்கு, மேற்கு, மேற்கு வடமேற்கு, வடமேற்கு, வடக்கு வட மேற்கு.




76. பதினாறு திசைகள் (16 Points)

இந்த 16 திசைகளையும் திசைகளுக்குரிய சொல்லால் குறிப் பிடலாமாயினும் அவற்றை டிகிரி அளவில் குறிப்பிடப் பழகிக் கொள்ள வேண்டும்.

ஆரம்பம் முதல் சாரணர்கள் திசைகளின் பெயரையும் அவற்றின் டிகிரி அளவையும் பழக்கத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.




77. திசை டிகிரி அளவு
(Compass Bearing)




78. விளக்கம்

வ என்பது வடக்கு

நிஇ என்பது நிற்கும் இடம்

பா தி என்பது பார்க்கும் திசை

இந்தத் திசையின் டிகிரி அளவு வநிஇ பாதிநிஇ ஆகிய கோடுகள் அமைக்கும் கோணத்தின் டிகிரி அளவே ஆகும்.

இ என்பது நிற்கும் இடம். இஅ தென்வடல் கோடு. இஉ என்பது நாம் பார்க்கும் திசை. அஇஉ என்ற கோணம் எத்தனை டிகிரியாக உள்ளதோ அதுவே உ என்ற இடத்திற்குரிய திசை டிகிரி அளவு (Compass Bearing). திசை டிகிரி அளவு நிற்கும் இடத்தைப் பொறுத்தது.

திசை டிகிரி அளவு (Compass Bearing) என்பது ஒருவர் நிற்கும் இடத்தையும் அவர் பார்க்கும் இடத்தையும் சேர்க்கின்ற ஒரு கோடு. வடக்குத் தெற்காயுள்ள கோட்டினேடு அமையும் கோணத்தைக் குறிக்கும்.

கோணத்தின் அளவைத் தென்வடல் கோட்டிலிருந்து பிரதட்சணமாக (அதாவது வலமாக)க் கணக்கிடல் வேண்டும். தென்வடல் கோடு காந்த வடக்கைக் குறிப்பதாக இருந்தால் நாம் கணக்கிட்டது காந்த டிகிரி அளவு (Magnetic Bearing) ஆகும். உண்மை வடக்கைக் குறிக்கும் கோடாக இருந்தால் கணக்கிடப்பட்டது உண்மை டிகிரி அளவு எனப்படும். நாம் பார்க்கும் திசையில் உள்ள பொருள் வடக்கிலிருந்து வலக்கைப் பக்கமாய் எத்தனை டிகிரியில் காணப்படுகிறதோ அத்தனை டிகிரி அதன் டிகிரி அளவு (Compass Bearing) ஆகும்.

உயர்ந்த ரகத் திசைகாட்டும் கருவிகள் டிகிரி அளவைக் காட்டுவன.

## துருவ நட்சத்திரமும் வடதிசையும்

வட துருவத்தில் துருவ நட்சத்திரம் (Pole Star) இருக்கிறது. அது நின்ற நிலையிலே நிற்கிறது. ஏனைய நட்சத்திரங்கள் அதைச் சுற்றிவருகின்றன. அவை யாவும், கிழக்கே உதித்து மேற்கு நோக்கிச் செல்கின்றன.

''துருவன் நின்ற நிலையிலே நிற்கிறது'', என்பது நூற்றுக்கு நூறு உண்மை அல்ல. உண்மையில் அது நின்ற நிலையிலிருந்து இரண்டு டிகிரி வரை அசைகிறதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்த அசைவினால் பூமியின் மேற்பரப்பில் திசையறிதலுக்கு எவ்வித இடைஞ்சலுமில்லை.

துருவ நட்சத்திரத்தை அடையாளம் கண்டு கொண்டால் அது இருக்கும் திசை வடதிசை என்று அறிந்து கொள்ளலாம். துருவ நட்சத்திரத்தை சப்தரிஷி மண்டலத்தின் (Great Bear) உதவியால் கண்டு கொள்ளலாம். சப்தரிஷி மண்டலம் ஏழு நட்சத்திரங்களைக் கொண்டது. படத்தில் காண்பித்துள்ளதுபோல அவை காணப்படும். பெரிய கலப்பை என்றும் அது வழங்கப்பெறும்.




79. துருவனும் பெரிய கலப்பை அல்லது சப்தரிஷி மண்டலமும்

துருவ நட்சத்திரம் படத்தின் அடியில் இடது பக்கம் கடைசியில் உள்ள நட்சத்திரம். இதனையும் இதனோடு இணைந்துள்ள நட்சத்திரங்களையும் ''சின்னக் கலப்பை'' (Small Plough) சிறு கரடி என்று சொல்வதும் உண்டு என்பார்கள்.

மேலாக உள்ள நட்சத்திரங்கள் ''பெரிய கலப்பை'' (Great Plough) அல்லது, ''பெருங்கரடி'' (Great Bear) எனப்படும். நம் நாட்டினர் இதனை சப்தரிஷி மண்டலம் என்பர்.

சப்தரிஷிகளுக்குள் இடது கடைசியில் உள்ள இரண்டையும் ''துருவனுக்கு வழிகாட்டி'' என்பர்.

துருவன் எப்பொழுதும் வடதிசையைக் காட்டும்.

வழிகாட்டிகளுக்கு இடையில் எவ்வளவு தொலைவு காணப்படுகிறதோ அதைப்போல ஐந்து மடங்கு தொலைவில் துருவன் இருக்கின்றது.

துருவனைப் பார்த்ததும் நாம் வடதிசையைப் பார்த்து நிற்கிறோம் என்று அறிந்து கொள்ளலாம்.

துருவ நட்சத்திரத்தை காஸியோப்பியா (Cassiopea) என்ற பிறிதொரு நட்சத்திரக் கூட்டத்தின் உதவியாலும் கண்டு கொள்ளலாம்




80. காசியோப்பியா நட்சத்திரக் கூட்டமும் துருவனும்

காஸியோப்பியா M என்ற ஆங்கில எழுத்துப் போன்ற தோற்றமுடையது. ஐந்து நட்சத்திரங்களாலாய இந்தக் கூட்டத்துக்கு வலதுபக்கம் உள்ள கோணத்தை இரண்டு சரிபாகங்களாகப் பிரித்தால் அப்படிப் பிரிக்கின்ற நேர்க்கோடு துருவ நட்சத்திரத்துக்கு வழிகாட்டியாக அமையும்.

## ஓரியோன் என்ற நட்சத்திரக் கூட்டமும் வடதிசையும்

ஓரியோன் (Orion) என்ற நட்சத்திரக் கூட்டம் ஒரு வேடனைப் போல் தோற்றம் அளிக்கின்றது.

ஒரு பக்கமாகக் காணப்படும் மூன்று நட்சத்திரங்கள் வேடனின் தலை என்றும், அவைகளுக்குக் கீழே காணப்படும் இரண்டு நல்ல பிரகாசமுள்ள நட்சத்திரங்கள் வேடனின் இருதோள்கள் என்றும், அவைகளுக்கு கீழ் காணப்படும் மூன்று நட்சத்திர வரிசை வேடனுடைய இடைவார் (Belt) என்றும் அதற்குக் கீழாக உள்ள மூன்று நட்சத்திரங்கள் அவனுடைய இடைவாரிலிருந்து தொங்கும் கட்டாரி எனவும், இவைகளுக்கு கீழ் காணப்படும் நல்ல பிரகாசமுள்ள இரண்டு நட்சத்திரங்கள் வேடனுடைய முழங்கால் முட்டுக்கள் எனவும் கூறலாம்.




81. ஓரியோன் நட்சத்திரக் கூட்டமும் வடதிசையும்

இந்த ஓரியோன் நட்சத்திரக் கூட்டத்தை ஆகாயத்தில் எளிதில் கண்டு கொள்ளலாம். ஓரியோனின் தலை உச்சியில் உள்ள நட்சத்திரத்தையும் (இதனை மிருக சிரசு என்கிறோம்) கட்டாரியில் உள்ள நடு நட்சத்திரத்தையும் ஒரு நேர்கோட்டால் இணைத்து அந்தக் கோட்டை இருபக்கமும் நீட்டி விட்டால் அது தெற்கு வடக்காக அமையும். சிரசு பக்கம் வடக்கு, அது துருவனுக்கு வழி காட்டி. அதற்கு எதிர் பக்கம், கட்டாரி உள்ள பக்கம், தெற்கு.

## கடிகாரத்தால் திசையறிதல்

கடிகாரத்தைத் தரையில் அல்லது தட்டையான ஒரு இடத்தில் படத்தில் காண்பித்துள்ள மாதிரி வைக்கவேண்டும். வைக்கும் பொழுது மணியைக் குறிக்கும் முள் சூரியனுக்கு நேராக இருக்க வேண்டும். இந்த முள் சூரியனுக்கு நேராக இல்லையானல் கடிகாரத்தை அது இருக்கும் நிலையிலேயே அதனைச் சுழற்றிச் சரி செய்ய வேண்டும்.

கடிகாரத்தில் மணிகாட்டும் முள்ளும் 12 என்ற எண்ணும் தரும் கோணங்கள் இரண்டு. ஒன்று கடிகாரத்தின் வலப்பக்கம் இருக்கும். மற்றையது கடிகாரத்தின் இடப்பக்கம் இருக்கும். ஒரு கோணம் 180°க்குக் கூடுதலாக இருக்கும். இன்னென்று 180°க்குக் குறைவாக இருக்கும். இவ்விரு கோணங்களையும் சமமாகப் பிரிக்கிற நேர்

கோடு தென்வடலாக உள்ளது. 180°க்குக் குறைவாக உள்ளது தென்பாகம் 180°க்குக் கூடுதலாக உள்ளது வடபாகம்' இதைக் கொண்டு வடக்கு திசையையும் மற்றத் திசைகளையும் அறிந்து கொள்ளலாம்.




82. கடிகாரத்தால் திசையறிதல்

மணிகாட்டும் முள்ளை சூரியனுக்கு நேராக வைக்க, 12 என்ற எண்ணுக்கும் மணி முள்ளுக்கும் உள்ள கோணத்தை இருசம பங்காகப் பிரிக்கும் நேர்க்கோடு தெற்குத் திசையையும் வடக்குத் திசையையும் காட்டும்.

குறிப்பு : மணிகாட்டும் முள் சூரியனுக்கு நேராக உள்ளதா இல்லையா என்று அறிவதற்கு. தட்டையாகப் போடப்பட்டுள்ள கடிகாரத்தில் மணியைக் குறிக்கும் முள் முனையில் ஒரு குச்சியை நிற்க வைத்து அதன் நிழலைக் கவனிக்க வேண்டும். அந்த நிழல் மணிமுள்ளுக்கு மேல் விழுந்தால் அது சூரியனுக்கு நேராக உள்ளது என்று கொள்ளலாம்.

இங்கு தரப்பட்டுள்ள முறை பூமியின் வடபாதி கோளத்துக்குப் பொருந்துவது. தென் பாதி கோளத்துக்கு இது பொருந்தாது. தென் பாதிக்கு வடபாகம் என்றுள்ளதை தென்பாகம் என்றும், தென்பாகம் என்றுள்ளதை வடபாகம் என்றும் கொள்ளவேண்டும்.

## தல படங்களைக்கொண்டு திசையறிதல்

ஒன்றவைத்த தலபடங்கள் திசைகளைத் தெளிவாகக் காட்டும். ஒன்ற வைத்தல் என்பது தலத்திலுள்ள அம்சங்களும் படத்தில் உள்ள அம்சங்களும் ஒன்றுக்கொன்று பொருந்தும்படி படத்தைத் தரையில் விரித்து வைப்பதாகும். ஒன்ற வைத்தல் (Map Setting) எனப்படும்.

**ஒன்ற வைத்தல்**

தலத்தில் நாம் நிற்குமிடத்துக்கு முன் சற்றுத் தொலைவில் உள்ள ஒரு அம்சத்தை (Feature) யும் நமக்குப் பின்னால் சற்றுத் தொலைவில் உள்ள ஒரு அம்சத்தையும் தெரிந்தெடுத்துக் கொண்டு அதே இரண்டு அம்சங்களையும் படத்தில் கண்டு பிடிக்கவேண்டும். படத்தில் உள்ள அம்சங்கள் மேல் ஒரு எழுதுகோலை (Pen or Pencil) வைத்து அது இடம் பிறழாமல் படத்தைச் சிறிது சிறிதாகச் சுழற்றவேண்டும். அப்படிச் சுழற்றி எழுதுகோலை தலத்திலுள்ள இரு அம்சங்களுக்கு நேராகக் கொண்டு வரவேண்டும். இப்பொழுது தலபடம் தலத்தோடு ஒன்ற வைக்கப்பட்டுள்ளது.

இப்பொழுதுள்ள படத்தின் மேற்பக்கம் வடக்கு என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

## 9. முற்காப்பு விதிகள் (Safety Rules)

இரண்டாம் தரச் சாரணன் தேர்ச்சிபெற வேண்டிய பயிற்சிகளுள் ஒன்பதாக உள்ளது முற்காப்பு விதிகளைத் தெரிந்திருப்பது.

முற்காப்பு விதிகள் விபத்துக்களைத் தடுக்க உதவும் விதிகள்.

ஒவ்வொரு வருடமும் ஆயிரக்கணக்கான மக்கள் விபத்துக்கு ஆளாகிறார்கள். காப்பு விதிகளைப் பின்பற்றுவதாலும், அவற்றைப் பிறருக்கு எடுத்துச் சொல்லி அவற்றை நன்கு விளக்குவதாலும் விபத்துக்களைக் குறைக்க முடியும்.

ஐந்து வயதுக்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் ஐம்பது வயதுக்கு மேற்பட்ட முதியவர்களும் மிகுதியாக விபத்துக்கு ஆளாகிறார்கள் என்று கணக்கிடப்படுகிறது.

### வீட்டில் முற்காப்பு (Safety First at Home)

(1) ஊசி, குண்டூசி, சவரச் சிறு கத்தி (blade), ஆணிகள் போன்றவைகளை அங்கங்கே போடக்கூடாது. அவற்றை எங்கு கண்டாலும் அப்புறப்படுத்த வேண்டும். அப்புறப்படுத்தும் முறை மறுபடியும் அபாயத்துக்கு இடம் தரலாகாது.

(2) நாற்காலி, மேஜை, மரக் கொம்புகள் முதலியவற்றை மற்றவர்கள் தடுக்கி விழுந்துவிடக்கூடிய விதமாக வைத்தல் கூடாது. அவற்றை நல்ல இடத்தில் நல்ல முறையில் வைக்க வேண்டும்.

(3) மருந்துப் பெட்டியையும் மருந்துப் புட்டிகளையும் வீட்டில் உள்ள சிறுவர்களுக்கும் சிறு குழந்தைகளுக்கும் எட்டாத இடத்தில் உரிய பாதுகாப்புடன் வைத்தல் வேண்டும்.

(4) சமையல் அறையில் சிறு குழந்தைகளைத் தனித்திருக்கும் படி விடுதல் கூடாது. அதுபோலவே அரிவாள் மணை, கத்திகள் முதலியவற்றைச் சிறு குழந்தைகளுக்கு எட்டும் இடத்தில் வைத்தல் கூடாது.

(5) தண்ணீர்த்தொட்டி, கிணறு, குளம், குட்டைகள், ஆறு முதலியவை உள்ள இடங்களில் சிறுவர்களைத் தனியாக விடுதல் கூடாது.

(6) தீப்பெட்டியை வைத்துக் கொண்டு சிறுவர்கள் விளையாடு தல் கூடாது. அது தீமையை விளைவிக்கும்.

(7) மின்சாரப் பொறிகளுடன் விளையாடுதல் கூடாது. மின்சாரம் விளைவிக்கும் ஆபத்தைச் சாரணன் நன்குணர வேண்டும். வீடுகளில் உள்ள மின்சாரம் 250 வோல்ட் ஆனாலும் மனிதனைக் கொல்லும் வல்லமை பொருந்தியது.

(8) வீட்டைச் சுற்றி உள்ள தோட்டத்தில் குப்பை கூளங்கள் முதலியவற்றைச் சேரவிடக்கூடாது. தீவிபத்துக்கு அவை காரண மாகலாம்.

(9) உடைந்த கண்ணாடித் துண்டுகள், துருப்பிடித்த கம்பிகள் முதலியவைகளை உடனுக்குடன் அப்புறப்படுத்த வேண்டும்.

(10) ''காஸ்'' சமையல் நடக்கும் இடங்களில் அபாயம் நேரலாம். திறந்து வைக்கப்பட்டுள்ள 'பர்ணர்'கள் மிகுந்த அபாயம் விளைவிக்கும். அவற்றால் உயிருக்கும் அபாயம் உண்டாகலாம்.

## தொழில் நிலையங்களில் முற்காப்பு

(Safety first at Work)

(1) தொழில் புரியும் இடங்களில் ஜனங்கள் செய்யும் வேலைக்குத் தகுந்த அளவு வெளிச்சம் இருக்கவேண்டும். இருட்டுள்ள இடங் களில் அல்லது குறைந்த வெளிச்சத்தில் வேலை செய்ய அனுமதிப்பது அல்லது தூண்டுவது விபத்துக்கு இடம் தரும்.

வேலை செய்யும்பொழுது கண்ணுக்கு எதிர் நேராக வெளிச்சம் இருப்பது நல்லதல்ல. கண்ணுக்குக் கெடுதி செய்யும்.

(2) வேலை செய்வோர் ''ஒதுங்குவதற்கு''ப் போதுமான வசதிகள் இருப்பது அவசியம்.

(3) பொறிகளைச் சுற்றி வேலிகள் அவசியம். பொறிகளைச் சேர்ந்த பெல்ட் என்ற ஓடும் வார்களுக்கும் வேலி அவசியம்.

(4) இயங்கும் பொறிகளை நிறுத்துவதற்கு தக்க ஏற்பாடுகள் வேண்டும். அதுபோலவே அவைகளை ஓட்டுவதற்கும் ஏற்பாடுகள் இருக்கவேண்டும்.

(5) தொழில் நிலயத்தில் தீ விபத்து நேரிட்டால் எந்த வழியாய் எல்லோரும் தப்பித்துக்கொள்ளலாம் என்பதை தெரிவிக்கும் அறிவிப்புகள் எல்லோருக்கும் தெரியும்படி வெளியிடப்படவேண்டும்.

(6) தீ அணைக்கும் கருவிகள், தீ அணைக்கும் வாளிகள் முதலியவற்றை தொழில் செய்வோர் பார்வையில் படும்படி முக்கிய மான ஒரு இடத்தில் வைக்க வேண்டும்.

(7) முதலுதவிக் கருவிகள் தொழில் செய்வோர்களுக்கு எளிதில் கிடைக்கக்கூடிய விதமாக வைக்கப்படவேண்டும். அவை களை எளிதில் எடுத்து உபயோகப்படுத்தும் வசதி அவர்களுக்கு இருக்கவேண்டும்.

மிகுந்த பணச் செலவில் தயார் செய்யப்பட்ட இந்த வசதிகள் உள்ளதைத் தொழில் செய்கிறவர்கள் தெரிந்துகொள்ளாமல் இருந்தா லும் அவற்றைப் பயன்படுத்துவதில் அவர்கள் மெத்தனமாயிருந்தா லும் அந்த முற்காப்புகள் பயனற்றவையாய் போகும், ஆகையால் அமைக்கப்பட்டுள்ள வசதிகளைப் பற்றி நல்ல விளம்பரமும் அவசியம்.

## பள்ளியில் முற்காப்பு (Safety first at School)

(1) விளையாட்டு மைதானங்களில் சிறுவர்கள் தக்க துணையின்றி விளையாடல் ஆகாது. அவர்கள் விளையாட்டை மேற்பார்க்க ஆசிரியர் இருக்க வேண்டும். அவர் மேற்பார்வையில்லாது விளை யாடும் சிறுவர்களுக்கு அங்குள்ள சாரணர்களும் ஏனைய இளைஞர் களும் துணையாவார்கள்.

(2) சிறுவர்களை வீதியில் விளையாட. அனுமதித்தல் கூடாது.

(3) பள்ளியில் உள்ள பொருள்கள் எல்லாம் சுத்தமாக இருத்தல் வேண்டும்.

(4) மாணவர்கள் சுத்தமாக வைக்கப்படாத தின்பண்டங்களை வாங்கித் தின்னக் கூடாது.

(5) மாணவர்கள் சுத்தமாக வைக்கப்பட்டுள்ள தண்ணீரையே பருக வேண்டும்.

(6) மாணவர்கள் தங்கள் தங்கள் உடல் நலத்தைக் கவனிப்பது போல உரிய காலங்களில் தடுப்பு ஊசிகளைப் போட்டுக் கொள்ளத் தவறலாகாது.

## பள்ளிக்கு வருகையில் முற்காப்பு
(Safety first on the road)

(1) பொதுப் பாதைகளில் நடந்து செல்லும் பொழுது வலது ஓரமாகவே போக வேண்டும். அப்படி நடந்து போவதால் நம்மை நோக்கி வரும் மோட்டார் வண்டிகளும் இதர வாகனங்களும் நமக்கு ஆபத்திழைக்காமல் பார்த்துக்கொள்ளல் கூடும்.

(2) நடந்து செல்ல நடைபாதை அமைக்கப்பட்டுள்ள இடத்தில் அந்த நடைபாதை மீதேதான் நடத்தல் வேண்டும். நடைபாதை மீது நடக்கும் பொழுது இடது பக்கமாக நடக்க வேண்டும்.

(3) தெருவைக் குறுக்கே கடப்பது அவசியமாயின் அப்படிக் கடந்து செல்வதற்காக அடையாளம் இடப்பட்டுள்ள இடத்திலே தான் கடக்கவேண்டும். அப்படிச் செய்யாமல் நாம் விரும்பும் இடத்தில் கடக்க முயற்சி செய்யக்கூடாது.

(4) குறுக்கே கடப்பதற்கு அடையாளம் போடப்படாத அகல மான தெருக்களைக் கடக்க வேண்டுமானால் அதற்காக கையாளப் படவேண்டிய முறை தனியாக உண்டு.

அந்தச் செயல்முறை ஒரு சூத்திரமாக அமையும் :

அது ''நில்—பார் — உற்றுக்கேள்!

''வலம் பார் — இடம் பார் — மறுபடியும் வலம் பார்!

''தெரு மத்தி வரைக் கடந்து செல்!

''அங்கு நில் — இடம் பார்!

''பாக்கி தெருவைக் கடந்து செல்!'' என்பதாகும்

[Stop–Look–Listen. Look right–Look left–Look right once again—cross to the centre of the Road–Stop–Look left–cross over to the Kerb]

அகலமான தெருவைக் கடக்க வேண்டுமானால் அவசரப் படலாகாது. தெரு ஓரத்தில் நிற்கவேண்டும். நின்று கொண்டு பார்க்கவேண்டும். செவி சாய்த்துக் கூர்ந்து கவனிக்க வேண்டும். வண்டிகள், மோட்டார் வண்டிகள் வருகின்றனவா என்று கூர்ந்து பார்க்கவேண்டும். கூர்ந்து கேட்க வேண்டும். வலது பக்கம் பார்க்க வேண்டும். இடது பக்கம் பார்க்க வேண்டும். மறுபடியும் வலது பக்கம் பார்க்கவேண்டும். இடைஞ்சல் எதுவும் இல்லை என்று தெரிந்ததும் தெருவைக் கடக்கலாம். ஆனால் தெரு மத்திக்குச் சென்றதும் மறுபடியும் நிற்கவேண்டும். நின்று வலது பக்கம் பார்க்க வேண்டும். இடைஞ்சல் இல்லை என்று தெரிந்ததும் கடந்து சென்று தெருவின் மறுகரையை அடையலாம்.

தெருவின் குறுக்கே செல்லும்போது ஓடுதல் கூடாது. நேராகச் செல்ல வேண்டும். கோணலாகச் செல்லுதல் கூடாது.

தெருவின் குறுக்கே ஓடுவது மோட்டார் ஓட்டிகளுக்கு திகைப்பை உண்டு பண்ணும். கடைசியில் நமக்கு அபாயம் உண்டா கலாம். அமைதியாக நின்றுவிடல் மோட்டார் ஓட்டிகளுக்கு அமைதி அளிக்கும்.

தெருவின் குறுக்கே செல்வதானல் கோணலாகச் செல்லாமல் சென்ருல் நேராகச் சீக்கிரமாகச் சென்று விடலாம். கோணலாகச் சென்ருல் செல்ல வெகு நேரம் பிடிக்கும்.

(5) பேருந்து வண்டிகளுக்காக காத்து நிற்பதானல் அதற் காகக் குறிப்பிடப்பட்டுள்ள இடத்திலேயே நிற்க வேண்டும். நடை பாதை உள்ள தெருவானல் நடைபாதை மேல் நிற்கவேண்டும்.

(6) பேருந்துப் போக்குவரத்து வண்டிகளிலிருந்து இறங்க வேண்டுமானல் வண்டி நின்ற பிறகே இறங்கவேண்டும். வண்டி ஓடிக் கொண்டிருக்கும் பொழுது இறங்குவது கூடாது. அப்படிச் செய்வதால் அபாயம் ஏற்படலாம். ஏறும் பொழுதும் வண்டி புறப் பட்டபின் ஏற முயற்சிக்கக் கூடாது.

(7) வண்டியில் ஏறும்போதும் வண்டியிலிருந்து இறங்கும் போதும் ''கியூ'' வரிசைக்கு மதிப்புத்தர வேண்டும்.

(8) போக்குவரத்து வண்டிகளில் செல்லும் பொழுது உடம்பு முழுவதும் வண்டிக்கு உள்ளாகவே இருக்கும்படி உட்காரவேண்டும். அல்லது நிற்கவேண்டும். கையை அல்லது தலையை வெளியே நீட்டுவது விபத்தில் முடியலாம்.

(9) சைக்கிள் வண்டியில் போகும் பொழுது நம்முடைய பாதை யைப் பொது மக்களுக்கும் கார் ஓட்டிகளுக்கும் சைகைகள் மூலம் தெரிவிக்க வேண்டும். ஒருவருக்கு மேல் சைக்கிளில் போகக் கூடாது என்ற கட்டுப்பாட்டை மதித்து நடத்தல் அவசியம். பொருள்களைக் கொண்டு போவதானல் அவற்றை சைக்கிளோடு சேர்த்துக் கட்டிக் கொண்டு போக வேண்டும். கையில் வைத்துக் கொண்டு செல்வது அபாயத்துக்கு இடமாகலாம். சாலையை அடைத்துக் கொண்டு ஒரே வரிசையில் இருவர் மூவர் சைக்கிளில் செல்லுதல் கூடாது. அப்படிச் செல்வது விபத்தில் முடியலாம்.

## பண்ணையில் முற்காப்பு
(Safety on the Farm)

பண்ணையில் உழவு, தொழில் முதலியன நடைபெறலாம். பண்ணை பால்பண்ணையாக இருக்கலாம். ஆட்டுப்பண்ணை,

கோழிப் பண்ணையாக இருக்கலாம். பண்ணையில் மக்களைப் போலவே அங்குள்ள கால் நடைகளுக்கும் இதர பிராணிகளுக்கும் பாதுகாப்பு தேவையாகலாம். பண்ணையில் தீ விபத்துக்களும் தண்ணீர் விபத்துக்களும் உண்டாகலாம். பாம்புக்கடி முதலிய அபாயங்களும் இருக்கலாம்.

## முற்காப்பு விதிகள்

1. பண்ணையில் உள்ள வீடுகளிலும் வீடுகள் அருகிலும் குப்பை கூளம் முதலிய எளிதில் எரியும் பொருள்கள் சேர இடம் தரலாகாது. விறகுக் கட்டைகள், மரச்சட்டங்கள், பலகைகள், கழிகள், செங் கல், மணல், சுண்ணும்பு, கல், மண் முதலியன இருப்பின் அவைகளை ஒழுங்காக அடுக்கி அல்லது அழகாகக் குவித்து வைக்கவேண்டும்.

2. சமையல் அடுப்பு ஓலைக் கூரையை ஒட்டி இருத்தல் கூடாது. அடுப்பு எரிந்து கொண்டிருக்கும்போது அதனைக் கண் காணிக்க யாராவது ஒருவர் அங்கு இருந்து கொண்டிருக்க வேண்டும்.

3. பண்ணையில் உள்ள வீடுகளில் திறந்த தீச்சுடர் தரும் "காடா'' விளக்குகளை உபயோகித்தல் கூடாது. அரிக்கேன் லாந்தர்களைப் பயன்படுத்த வேண்டும். வைக்கோல் போரில் வைக் கோல் பிடுங்கும்பொழுது திறந்த சுடர்தரும் விளக்குகளைப் பயன் படுத்தல் கூடாது. பீடி, சிகரேட் முதலியவைகளை உபயோகித்தல் கூடாது. இவைகளை யாராவது பண்ணைகளில் பயன்படுத்துகிற தானல் பிடித்து முடிந்துள்ள துண்டுகளைத் தரையில் போட்டுத் தேய்த்து தீயை நன்ருக அணைத்து விடவேண்டும். தரையைக் கிளறி அவற்றைப் புதைத்து விடுவது மிகவும் நல்லது.

4. பண்ணைகளில் எந்த இடத்திலும் எண்ணெய் தோய்ந்த துணிகளைக் கும்பலாகச் சேர விடக்கூடாது.

5. பண்ணை வீடுகளில் தீபாவளி, பொங்கல் போன்ற பண்டிகை நாட்களில் அகல் விளக்குகள் ஏற்றுகையில், பொங்கல் இடுகையில், பெண்கள் தங்கள் ஆடைகளைப்பற்றி மிகக் கவனமாய் இருத்தல் வேண்டும்.

6. தீபாவளி முதலிய நாட்களில் சிறுவர்கள் பட்டாசு முதலிய வாணங்கள் விடுகையில் விபத்து நேரிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது.

7. தண்ணீர் விபத்துக்களைத் தடுக்கும் முறையில் பண்ணையில் உள்ள கிணறுகள் திறந்திருத்தல் கூடாது. உயரமான பாது காப்புச் சுவர் அமைந்துள்ளனவாய் இருத்தல் வேண்டும். குளங்கள்

இருந்தால் படித்துறைகளில் பாசிபடியாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

8. பண்ணையில் மக்கள் நடமாடும் இடங்களில் முறையான பாதைகள் அமைக்கப் படவேண்டும். பாதைகளின் இருபுறமும் சுண்ணும்புக் குழம்பில் தோய்ந்துள்ள கற்களை வரிசையாக வைத்தல் வேண்டும்.

9. வனங்களில் உள்ள புலி, ஓனுய், நரி முதலியன பண்ணையில் உள்ள ஆடுமாடுகளைக் கோழிகளைப் பிடிக்கவராமல் இருக்கும் பொருட்டு உறுதியான வேலிகள் அமைப்பது அவசியம்.

முன் எச்சரிக்கையாக பண்ணைகளில் உள்ள மக்கள் தங்கள் பாதுகாப்புக்கு வேண்டிய அனைத்தையும் செய்து கொள்ளவேண்டும்.

## 10. கவாத்து (Drill)

இரண்டாம் தரச் சாரணன் தேர்ச்சி பெற வேண்டியவைகளுள் பத்தாவதாக உள்ளது கவாத்து. கவாத்துக் கட்டளைகள் சாரணனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அவற்றை நிறைவேற்றும் ஆற்றலும் அவனுக்கு இருக்கவேண்டும்.

இரண்டாந்தரச் சாரணன் தெரிந்திருக்க வேண்டிய கவாத்துக் கட்டளைகள் :—

(1) வரிசையாய் நிற்றல்

(2) ஒழுங்காய் நிற்றல்

(3) நேர்நிலை நிற்றல்

(4) தளர்நிலை நிற்றல்

(5) வலம் திரும்புதல்

(6) இடம் திரும்புதல்

(7) பின்புறமாகத் திரும்புதல்

(8) எண் கூறல்

(9) கலக்க வரிசையில் செல்லுதல்

(10) நெருக்க வரிசையில் செல்லுதல் — என்பன. இவை தவிர சரியான முறையில் நிற்றல், உட்காருதல், நடத்தல், ஓடுதல் ஆகியவைகளும் தெரிந்திருத்தல் வேண்டும்.

# நிற்றல், நடத்தல், உட்காருதல், ஓடுதல்

நிற்கும் போது நிமிர்ந்து நிற்றல் வேண்டும். வளரும் சிறுவர்கள் வளைந்து குழைந்து நிற்பதும் உட்காருவதும் அவர்களது இயல்பு. அதைத் திருத்துவது பெரியவர்களின் கடமை.

நிற்கும்போது நிமிர்ந்தே நிற்பது, உட்காரும்போது நிமிர்ந்தே உட்காருவது என்ற நிபந்தனை மிகுந்த நன்மை செய்யும். உடல் நலத்துக்கு நல்லது. நிமிர்ந்து நிற்றல், நிமிர்ந்து உட்காருதல் மனத்தைக் கூர்மைபடுத்தி நம்மை விழிப்போடு இருக்கச் செய்யும். இளைஞர்களிடம் கூர்மையையும் விழிப்புடைத் தன்மையையும் யாவருமே விரும்புவர்.





இது சரி இதுகூடாது இதுசரி

83. நடந்து செல்வது

நாற்காலியில் உட்காரும்போது நிமிர்ந்து உட்கார வேண்டும். முதுகை நிமிர்ந்து இருக்கும்படி நாற்காலியின் பின்பக்கத்தை முதுகால் அழுத்திக்கொண்டு உட்கார வேண்டும்.

நாற்காலியில் உட்காருகையில் முதுகை வளைத்துக் கொண்டு உட்காரக் கூடாது. அப்படி உட்காருவது உடல் நலத்தைக் கெடுக்கும்.



இது சரி



இது கூடாது

84. நாற்காலியில் உட்காருவது

மேஜை அருகில் உட்கார்ந்து எழுத்து வேலை செய்யும் பொழுது அல்லது புத்தகங்கள் படிக்கும் பொழுது நிமிர்ந்தே உட்கார வேண்டும். நிமிர்ந்து உட்கார்ந்து எழுதவும் படிக்கவும் பழக்கம் செய்து கொள்ள வேண்டும். எந்த வேலை செய்யும் பொழுதும் முதுகை வளைய விடாமல் அதனை உள்ளடக்கிக் கொள்ளக் கற்றுக் கொள்ளவேண்டும்.

நடக்கும் பொழுது மனதில் மகிழ்ச்சியுடன் நடக்கக் கற்றுக் கொள்ளவேண்டும். பாதம் முழுதும் ஒரே நேரத்தில் தரையில் படாமல், குதிக்காலும் முன்பாதமும் உரிய முறையில் தரையில் படும்படி நடக்கக் கற்றுக் கொள்ளவேண்டும். நடக்க ஆரம்பம் செய்யும் பொழுது இடதுகால் முன்னும் வலதுகை பின்னும் இருக்க நடையை ஆரம்பம் செய்து, நடந்து செல்லும் பொழுது கையும் காலும் மாறிமாறி அசையும்படி நடக்கக் கற்றுக்கொள்ளவேண்டும்.

ஓடும்போது உடம்பை இலேசாகத் தூக்கிக்கொண்டு ஓடுவது போலத் தோன்றவேண்டும். ஓடும்போது பாதத்தின் முன்பக்கம் தான் தரையில் படும்.

## படைக் கவாத்து

**(1) அணிவரிசையாய் நிற்றல்** — ''அணிநேர் வரிசையாய் நிற்க'' (Form Line) என்ற கட்டளை பிறந்ததும் சாரணர்கள் அணி முறை வழுவாது வரிசையாய் நிற்கவேண்டும்.

அணிகள் வரிசையாய் அடுத்தடுத்து நிற்கவேண்டும். அணிக்குள் வலப்பக்கம் கடைசியில் அணித்தலைவனும் அவனுக்கு அடுத்து அணியில் மூன்றுவது சாரணன், அதற்குப்பிறகு

நான்காவது, ஐந்தாவது, ஆருவது, ஏழாவது சாரணன் ஆகியவர்கள் நிற்க, இடப் பக்கக் கடைசியில் உதவித் தலைவன் நிற்கவேண்டும். ஆசிரியர் வரிசைக்கு எதிர்பக்கம் நடுவில் உள்ள அணிக்கு எதிராக நிற்பார்.



  

நேர் வரிசை அணி வகுப்பு

 ஆசிரியர்  அணித்தலைவன்  உதவி அணித்தலைவன்

இது நேர்வரிசை அணிவகுப்பு

## 85. நேர்வரிசையில் நிற்றல்

''அணி வரிசையாய் நிற்க'' என்ற கட்டளையை கைச் சைகை யாலும் கொடுக்கலாம். அதற்கு ஆசிரியர் நேர்நிலையில் நின்று கொண்டு தன் கைகள் இரண்டினையும் இருபுறமாக படத்தில் காண்பித்துள்ளபடி நீட்ட வேண்டும். உள்ளங்கை முன் புறமாக காட்டப்படவேண்டும். இப்படி சைகை காட்டிவிட்டு கைகளைத் தொங்கவிட்டவுடன் சாரண அணிகள் சுறுசுறுப்பாக இயங்கி ஆசிரியருக்கு முன் அவரைப் பார்த்துக்கொண்டு தங்கள் தங்கள் இடத்தில் வந்து நிற்கவேண்டும். அணியின் வலது பக்கக் கடைசியில் அணித்தலைவனும், அதன் இடது கடைசியில் உதவித் தலைவனும் நிற்கவேண்டும். ஏனைய சாரணர்கள் அணித் தலைவனுக்கு இடதுபக்கமாகத் தங்கள் அணி எண்படி வரிசையாய் நிற்கவேண்டும். எப்பொழுதும் இதுவே முறை.



இது அதற்குரிய சைகை

**நேர்நிலை நிற்க — (Alert) அல்லது "Attention".**

''நேர்நிலை நிற்க'' என்ற கட்டளை பிறந்ததும் சாரணர்கள் நேர் நிலை (Alert) யில் நிற்கவேண்டும். ஒவ்வொரு சாரணனும் நன்ருய் நிமிர்ந்து நின்றுகொண்டு தனக்கு முன் நேராகத் தன் பார்வையை அமைத்தல் வேண்டும். சாரணனுடைய குதிக்கால்கள் சேர்ந்தும் முன்பக்கம் 30° கோணத்துடனும் இருக்கும். கைகள் இயல்பாகத் தொங்கும். ஆனல் உடம்போடு சேர்ந்திருக்கும். கைவிரல்கள் இறுகி அமைந்திருக்கும். கட்டை விரல்கள் கால் சட்டையின் பக்கத்துத் தையலோடு ஒட்டியிருக்கும்.

## தளர்நிலை நிற்க (Stand at Ease)

''தளர்நிலை நிற்க'' என்ற கட்டளை பிறந்ததும் இடதுகாலைத் தரைக்குமேல் 6 அங்குல (15 செ. மீ.) அளவுக்குத் தூக்கி இடது பக்கம் 12 அங்குல (30 செ. மீ.) அளவுக்குக் கொண்டு போக வேண்டும். கைகளையும் அதே நேரத்தில் பின்பக்கம் கொண்டுபோய் இடதுகையில் வலது கையைப் பிடித்துக்கொள்ள வேண்டும். கைகள் உடம்போடு ஒட்டிக் கொள்ளும்படி அவைகளைத் தொங்க விட வேண்டும். கால்களும் கைகளும் ஒரே நேரத்தில் இப்படி இயங்க வேண்டும்.

## தளர்ந்தநிலை நிற்க (Stand Easy)

''தளர்ந்த நிலை நிற்க'' என்ற கட்டளை பிறந்ததும் சாரணர்கள் சற்று சௌகரியமாக நிற்கலாம். கைகளை அசைக்கலாம். ஆனால் பேசுதல் கூடாது. கால்களையும் இடத்தை விட்டு அசைக்கக் கூடாது.

## ஒழுங்காய் நிற்க (Dress)

''ஒழுங்காய் நிற்க'' என்ற கட்டளை பிறந்தும் அணிகள் வந்து ஒழுங்காய் நிற்க வேண்டும். பல வரிசைகள் உள்ளனவானால் ஒவ்வொரு வரிசையும் நேர் நேராக அமைந்திருப்பதோடு முன் பக்கம் உள்ள சாரணர்களைப் பின் பக்கம் உள்ள சாரணர்கள் உரிய முறையில் மறைத்துக் கொண்டு நிற்கவேண்டும். அவர்களுக்கு மத்தியில் உள்ள தூரமும் கணக்குப்படி இருக்கவேண்டும்.

வலது பக்க ஒழுங்கு (Right Dress) என்றால் வலது பக்கத்தி லிருந்து ஒழுங்கு அமைக்கப் பெறுகிறது என்பதைக் குறிக்கும். வலது கடைசியிலுள்ள சாரணன் நின்ற இடத்தில் அசைவின்றி நிற்பான். மற்ற சாரணர்கள் 15 அங்குல (38 செ. மீ.) முன்னால் செல்வார்கள். சென்று தங்கள் தலைகளையும் பார்வையையும் வலப்பக்கம் திருப்பு வார்கள். முன்வரிசையில் கடைசியில் உள்ள சாரணனைத்தவிர எல்லோரும் தங்கள் வலது கையை நீட்டிக் கொண்டு ஒவ்வொருவரும் தனக்கு முன் மூன்றுவதாக நிற்கும் சாரணனின் முகத்தின் கீழ்ப் பாகத்தைப் பார்க்க வேண்டும்.

வரிசைக்கு வரிசை 30 அங்குல தூரம் (76 செ. மீ.) இருக்க வேண்டும். பின்னால் உள்ள வரிசைகள் முன் வரிசையிலுள்ள சாரணர்களை நன்றாக மறைத்துக்கொண்டிருக்க வேண்டும்.

ஆசிரியர் சரிபார்த்துச் சரியாக இருக்கிறது என்று தெரிந்து கொண்ட உடனே ''நேர் பார்வை'' என்று கட்டளை இடுவார். எல்லோரும் நேர்நிலைக்கு வரவேண்டும்.

''இடது பக்க ஒழுங்கு'' (Left dress) என்றால் முன்னதைப் போலவே இடது பக்கமாக ஒழுங்குபடுத்திக் கொள்ளவேண்டும்.

# குதிரை லாட வட்ட அமைப்பு
## (Horse-Shoe Formation)

சாரணப் படைக் கூட்டங்கள் குதிரை லாட வட்ட வளேவில் காணப்படும். குதிரை லாடம் ஒரு நீண்ட வட்டம். சாரணர்களும் நீண்ட வட்டத்தில் நிற்பார்கள். வட்டத்தின் ஒரு பக்கம் திறந் திருக்கும். இந்தப் புகுமுகத்தில் சாரணக் கொடி பறந்து கொண்டிருக்கும். கொடிக் கம்பத்துக்குப் பின்னுல் ஆசிரியரும் அவருக்குப் பக்கத்தில் உதவி ஆசிரியரும் நிற்பார்கள்.

''குதிரை லாட வட்ட வடிவில் நிற்க'' என்று கட்டளே பிறந்ததும் அணிகள் தங்கள் தங்கள் இடத்தில் நிற்கவேண்டும். வட்டம் சரியாக அமைந்துள்ளதா என்பதைச் சாரண உதவி ஆசிரியர் அல்லது சாரணத் தலேவர்களுள் ஒருவன் சரி பார்க்க வேண்டும்.




ஆசிரியர்


உதவி
அணித்தலேவன்


அணித்தலேவன்

86. குதிரை லாட அணிவகுப்பு
(Horse-Shoe Formation)


அதற்குரிய சைகை

இதற்கு சைகையாலும் கட்டளே கொடுக்கலாம். சாாணர்கள் எந்த இடத்தில் குதிரை லாட வட்டவளேவீல் நிற்கவேண்டுமோ அந்த இடத்துக்கு எதிரில் நின்று கொண்டு சாரண ஆசிரியர் தரையை நோக்கி நீட்டியுள்ள தன் கைகளே முன்னும் பின்னுமாக இரு பக்கமும் பல முறை கொண்டுபோகவேண்டும். இந்த சைகையைக் கண்ட சாரண அணிகள் தத்தமக்குரிய இடங்களில் ஓடிவந்து நிற்கும்.

## போட்டி விளையாட்டு வரிசை (Rows Formation)

சில விளையாட்டுகளுக்கு சாரண அணிகள் ஒன்றன் பக்கத்தில் ஒன்ருக வரிசையாக நிற்க வேண்டியதாக வரும். ''விளையாட்டு வரிசையில் நிற்க'' என்று கட்டளை இடலாம். சைகையாலும் இதனைக் குறிக்கலாம்.



அதற்குரிய சைகை



87. போட்டி விளையாட்டு வரிசை அணி வகுப்பு (Rows Formation)

சாரண ஆசிரியர் நேர் நிலையில் நின்று கொண்டு தன் கைகளைத் தனக்கு முன் நேராக நீட்டிக்காண்பித்து விட்டுக் கீழே விட வேண்டும். கை கீழே விழுந்ததும் அணிகள் ஓடிவந்து வரிசையில் நிற்கவேண்டும். அணிகளில் அணித்தலைவன் முன்ஞகவும் அவனுக்குப் பின் மூன்ருவது, நான்காவது, ஐந்தாவது, ஆருவது, ஏழாவது சாரணனும் அதற்குப்பின் உதவிச் சாரணனும் இருப்பார்கள்.

## கலக்க அணி வரிசை (Open Column)

கலக்க அணி வரிசை என்பது அணிகள் கலக்கமாக நிற்பதைக் குறிக்கும். கலக்கமாக நிற்பதால் அவைகள் நின்றபடியே வட்ட மாக வலம் திரும்பவும் இடம் திரும்பவும் கூடும். ஒரு அணியின் நீளமும் அணிகளுக்குள்ள இடைவெளியும் சமமாக இருக்கும்.

இந்த அணிவகுப்பைச் சைகையாலும் அமைத்துக் கொள்ளலாம் இதற்குரிய சைகை படத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆசிரியர் நேர் நிலையில் நின்றுகொண்டு கைகளை அகலமாக விரித்துத் தோள் மட்டத்துக்கு உயர்த்தி முன் கைகளை 'ப' வடிவில் வைக்க வேண்டும். முன் கைகள் அகலமாக இருக்கவேண்டும். கைகளைக் கீழே விட்டவுடன் அணிகள் வரிசை அமைக்கவேண்டும்,



88. கலக்க வரிசை
(Open Formation)



அதற்குரிய சைகை

## நெருக்க அணி வரிசை (Close Column)

நெருக்க வரிசையில் அணிகள் நிற்கும் பொழுது கலக்க வரிசையில் உள்ளது போலவே அணிகள் ஒன்றன் பின் ஒன்ருய்



89. நெருக்க வரிசை
(Close Formation)



அதற்குரிய சைகை

நிற்கும். ஆனால் ஒரு அணிக்கும் அடுத்த அணிக்கும் மத்தியில் உள்ள இடைவெளி 3 தப்படி (Paces) ஆகும்.

இந்த அணி வகுப்புக்குரிய சைகை ஏறக்குறைய முன் போன்றதே. ஆயினும் கைகள் முன்னுக்கு வந்து நெருங்கியிருக்கும்.

இந்த அணி வகுப்பு வரிசைகள் தவிர இன்னும் மூன்று வகை வரிசைகள் வழக்கில் இருந்து வருகின்றன.

அவை : (1) சக்கர ஆரை அமைப்பு

(2) வட்ட அமைப்பு

(3) 'ப' அமைப்பு என்பன.

## சக்கர ஆரை அமைப்பு (Spokes Formation)

இதற்குரிய சைகை: ஆசிரியர் தன் கைகளை படத்தில் உள்ளபடி தன் கண்களுக்கு நேராகக் கொண்டு வந்து விட்டு அவற்றைக் கீழே விடுவது. இடது கை இடது கண் பக்கத்திலும் வலது கை வலது கண் பக்கத்திலும் இருக்கவேண்டும். கைகளை கீழே விட்டதும் சக்கர ஆரை அமைப்பு உருவெடுக்கும்.

சாரண ஆசிரியர் அணியில் உள்ள சாரணர்களுக்கு அறிவுரை வழங்க மிகவும் பொருத்தமான அமைப்பு சக்கர ஆரை அமைப்பு ஆகும்.



90. சக்கர ஆரை அமைப்பு (Spokes Formation)



அதற்குரிய சைகை

## வட்ட அமைப்பு (Circle Formation)

சாரணர்கள் வட்டமாக நின்று கொண்டு வட்டத்துக்குள் இருக்கும் சாரண ஆசிரியர் கூறுவதைக் கேட்பதற்குப் பொருத்த மானது வட்ட அமைப்பு. நேர் நிலையில் நின்று கொண்டு தன் கைகளைத் தன் தலைக்கு மேல் வளைவாகத் தூக்குவது இந்த அமைப்புக்குரிய சைகை ஆகும்.





வட்ட அணிவரிசை
91. (Circle Formation)

அதற்குரிய சைகை



இந்த மாதிரியாகவும் சைகை கொடுக்கலாம் (கை முன்னும் பின்னுமாக உடம்பைச் சுற்றி வரும்)

## 'ப' அமைப்பு (Hollow Square Formation)

சிற்சில வேளைகளில் இந்த 'ப' அமைப்பு அவசியப்படலாம். ஆணையாளர்கள் போன்ற பெரியார்கள் வருகையின்போது அவர்களை வரவேற்கப் பொருத்தமுடைய அமைப்பு 'ப' அமைப்பு ஆகும்.

ஆசிரியர் நேர் நிலையில் நின்று கொண்டு இரண்டு கைகளையும் இறுக்கிப் பிடித்துக்கொண்டு சாய்வாக மேனோக்கி நீட்டுவது இதற்குரிய சைகை ஆகும்.



92 ப—வரிசை
(Hollow Square Formation)



அதற்குரிய சைகை

## வலம் திரும்புக (Right Turn)

நிலையில் நிற்கும் பொழுது வலம் திரும்ப வலது குதிக்காலினாலும், இடது பெரு விரலாலும் சுழன்று திரும்பி இடது காலை வலது காலோடு சேர்க்கவேண்டும்.

நடந்து போய்க்கொண்டிருக்கும் பொழுது வலம் திரும்புவதற்குரிய கட்டளை கொடுப்பதானால் வலது கால் இடது காலைத் தாண்டும் போது கொடுக்கலாம். முன் செல்வதை இடது காலோடு நிறுத்திக் கொண்டு வலது பக்கம் திரும்பி வலது காலால் முன்னுக்குச் செல்ல வேண்டும்.

## பின்புறம் திரும்புக (About Turn)

நிலையில் நிற்கும் பொழுது பின்புறம் திரும்ப வலம் திரும்புதலைப் போலவே, 180° திரும்பவேண்டும்.

நடந்து போய்க் கொண்டிருக்கும் பொழுது பின்புறமாகத் திரும்புவதற்குரிய கட்டளை இடது கால் வலது காலைத்தாண்டும் போது கொடுக்கப்படலாம். அப்போது முன்செல்வதை இடது காலால் முடித்துக்கொண்டு மூன்று தாள அடையாளம் செய்து கொண்டு பின்புறமாகத் திரும்பி அதன் பிறகு முன் ஏறிச் செல்ல வேண்டும்.

### எண் கூறுக (Take Numbers)

முன் வரிசையில் உள்ளவர்கள் வலது கடைசியில் இருந்து எண்களை வரிசையாக ஒவ்வொருவரும் கூறவேண்டும்.

## கலைக (Disperse)

''கலைக'' என்ற கட்டளை பிறந்ததும் எல்லோரும் வலது பக்கம் திரும்பி, ஒரு கணம் அப்படியே நின்று, பிறகு வலப்பக்கமாக ஒரு தப்படி நகர்ந்து, அதன்பின் கலைந்து செல்லவேண்டும்.

## கலைந்து செல்க (Dismiss)

இந்தக்கட்டளை பிறந்ததும் எல்லோரும் வலம் திரும்பி ஒரு கணம் நின்று சாரண வணக்கம் செய்து விட்டு, வலப்பக்கம் ஒரு தப்படி நகர்ந்து அதற்குப் பின் கலைந்து செல்லவேண்டும். பயிற்சி நாள் பயிற்சிமுடிவில் இந்தக் கட்டளை கொடுக்கலாம்.

## ஊதல் சைகைகள்

ஆசிரியரும் அணித்தலைவனும் தங்கள் ஊதலால் கட்டளை கொடுக்கலாம்.

| ஊதல் சைகை | பொருள் |
| --- | --- |
| — | ஊதலில் நீண்ட ஒலி — ''அமைதி'' ''நேர்நிலை'' |
| • • • • • • | பலகுறுகிய ஒலி — ''சேர வாருங்கள்'' |
| • — • — • — | குறுகியதும் நீண்டதும் ஆன ஒலிகள் 'அபாயம்' |
| • • • — | மூன்று குறுகிய ஒலியும் ஒரு நீண்ட ஒலியும் ''அணித்தலைவர்களே வாருங்கள்'' |
| — • • | இது D என்ற எழுத்து பொறுப்பு அணித்தலைவனை அழைக்கப் பயன்படும். |

ஊதலால் கொடுக்கப்படும் கட்டளைகள் மிகுந்த விரைவுடன் நிறைவேற்றப்படவேண்டும்.

விசால வெளி விளையாட்டுகள் (Wide games) நடக்கும்போது அணித்தலைவர்கள் தங்கள் அணிகளுக்கு இடக் கூடிய கட்டளைகளை சைகை செய்து தெரிவிக்கலாம்.

கையைப் பலமுறை முகத்துக்கு எதிராக ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கம் வரை அசைத்தால் ''இல்லை'' (No) என்று பொருள்.'' ''பரவா இல்லை'' (Never Mind) ''முன் இருந்தது போல'' என்றும் பொருள்படும்.

நன்ருக நீட்டப்பட்டுள்ள கையை மெதுவாக பலமுறை ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கத்துக்கு அசைத்தால், ''இன்னும் தொலேவு செல்லுங்கள் (Go farther) என்று பொருள். முழுதும் நீட்டப்பட்டுள்ள கையால் கொடியை உயர்த்திப் பிடித்துக்கொண்டு பக்கத்துக்குப் பக்கம் விரைவாக அசைத்தால் ''சேர வாருங்கள்'' (Rally) என்பது பொருள்.

கையை அல்லது கொடியை ஏதாவது ஒரு திசையை நோக்கிக் காட்டிஞல் ''அந்தத் திசையில் போங்கள்'' (Go in that direction) என்று பொருள்.

இறுகப்பிடித்துள்ள கையை அல்லது கொடியை மேலும் கீழு மாக பலதடவை அசைத்தால் ''ஓடுங்கள்'' (Run) என்று பொருள்.

கையை அல்லது கொடியைத் தலேக்குமேல் இருக்கும்படி பிடித் தால் அது ''நிற்க'' (Halt) என்று பொருள் தரும்.

அணித்தலேவன் சிறிது தொலேவில் உள்ள சாரணனிடம் ஏதா வது சொல்லிக் கொண்டிருந்தால் தலேவன் சொல்வது சாரணனுக்கு நன்ருய்க் கேட்கிறது என்பதைத் தெரிவிக்க தன் கையை தலே மட்டத்தில் வைத்துக் கொண்டிருக்கவேண்டும். சொல்வது காதில் விழா விட்டால் எந்த சைகையும் செய்யமால் அசைவில்லாமல் நிற்க வேண்டும். அப்பொழுது தலேவன் அந்தச் சாரணனே இன்னும் அருகில் வரக் கட்டளேயிட்டு அவனிடம் சொல்ல வேண்டியதைச் சொல்ல லாம்.

## 11. உழைப்புத் தானம்

தன் அணியில் உள்ள சாரணர்களோடு நான்கு மைல் 6.4.கி.மீ. தொலேவாவது சென்று அங்கு நடக்கும் கிராம முன்னேற்ற வேலேகளே ஆராய்ந்து அதன் பிறகு தன் சாரண ஆசிரியருக்கு ஒரு சிறு அறிக்கை சமர்ப்பித்தல். இப்படிச் சென்று பார்வையிடும் பொழுது 2 மணி நேரத்துக்குக் குறையாமல் உழைப்புத்தானம் செய்தல்.

இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் அந்த அணித்தலேவன் செய்ய வேண்டும். அவை செய்யும் முன்னதாக சாரண ஆசிரியரின் அனுமதி பெற்றுக் கொள்வது அவசியம். கிராம முன்னேற்ற அலுவல்கள் நடைபெறும் இடத்தில் சாரணர்களுக்கு உதவிபுரிய சாரண ஆசிரியர் அங்குள்ள முக்கிய அலுவலர்களே முன்னதாகக் கேட்டுக் கொள்வதும் மிக அவசியம்.

## 12. இயற்கை ஆராய்ச்சி

ஆறு பறவைகள், ஆறு மரங்கள், ஆறு காய்கறிகள் ஆகியவை களேப் பற்றி நன்கு தெரிந்திருப்பதோடு அவைகளேப் பற்றிய குறிப்புப் புத்தகம் வரைந்து (Log Book) முடிப்பதும் அவசியம்.

இந்தத் தகுதி நிபந்தனை மிக முக்கியம் வாய்ந்தது. சாரண இயக்கத் தந்தை பேடன்-பவலார் கொண்டிருந்த முக்கிய அடிப் படைக் கருத்துக்களுள் ஒன்றை நிறைவேற்றும் இயல்பு வாய்ந்தது. அது சாரணச் சிறுவர்களை அவர்கள் சிறுவர்களாயிருக்கும் பொழுதே அவர்களுக்கு இயற்கையைப் பற்றிய அறிவு உண்டாக வேண்டும்; அவர்கள் இயற்கை ஆராய்ச்சியில் ஈடு படவேண்டும் என்பதாகும்.

இயற்கை எழில் நிறைந்தது. பலப்பல அதிசயங்களைத் தன்னுள் அடக்கியுள்ளது. இந்த அழகும் அதிசயங்களும் அவற்றை விரும் பிப் பார்ப்பவர் கண்களுக்கே புலப்படும் இயல்புடையன. ''ஆறு பறவைகள், ஆறு மரங்கள் ஆறு காய்கறிகள்'' என்ற நிபந்தனையைச் சாரணர்கள் அந்த இனங்களோடு அந்த எண்ணிக்கையோடு விட்டு விடக்கூடாது. ஆறு அறுபதாக வளரவேண்டும். பறவைகள், மரங்கள், காய்கறிகள், என்பன நாளடைவில் சாரணனை இயற்கைப் பிரபஞ்சத்தையே நாடச் செய்ய வேண்டும். இயற்கை அன்னையின் இணையற்ற அழகைக் கண்டுகளிக்க அவனைத் தூண்டவேண்டும். இயற்கையில் உள்ள அதிசயங்களை தனக்குள்ள வாய்ப்புகளுக்கு ஒத்த அளவில் உணர்ந்து சிந்தித்து அந்த அழகு வாய்ந்த இயற் கையை படைத்துள்ள இறைவனைப் பற்றிய சிந்தனைக்கு அவனைத் தூண்டவும் வேண்டும்.

''வானந்தம் மண்ணின் அந்தம்
வைத்து வைத்துப் பார்க்க எனக்கு
ஆனந்தம் தந்த அரசே பராபரமே''

என்ற பராபரக் கண்ணிப் பாடலை நினைவு கொள்வோமாக.

சாரணன் தன் இருக்கைக்கு அருகாமையில் உள்ள மரங்களைப் பற்றியும், தன் வீட்டுத் தோட்டத்தில் அல்லது அக்கம் பக்கங்களில் உள்ள தோட்டங்களில் விளையும் காய்கறிகளைப் பற்றியும், தான் இருக்கும் இடத்தை ஒட்டிய தோட்டங்களிலும் பூங்காக்களிலும் அவ்வப்போது காணப்படும் பறவைகளைப் பற்றியும் குறிப்பு எழுத லாம். குறிப்பு எழுதுவதற்கு அவைகளைப் பல நாள் பார்த்து அனுப வம் பெறவேண்டும்.

குறிப்புப் புத்தகத்தில் இவைகளைப் பற்றிய விவரங்கள் தரப்பட வேண்டும். அதோடு அந்த விவரங்களுக்குரிய படங்களும் வரையப் படவேண்டும்.

சாரணன் படம் வரையப் பழகிக்கொள்ள வேண்டும். பறவை களை, மரங்களை, காய்கறிகளை, காய்கறிச் செடிகளை, பூக்களை இயற்கையிலிருந்தே அவைகளை நன்றாய் ஊன்றிப் பார்த்து அவை

களின் படம் வரையக் கற்றுக்கொள்ள வேண்டும். இது ஒரு முக்கிய மான கலை.

இயற்கையில் இருப்பதைப் பார்த்து அப்படியே படம் வரையத் தெரியவில்லையானாலும் புத்தகங்களிலும், பத்திரிகைகளிலும் அவை களைப் பற்றிக் கொடுக்கப்பட்டிருக்கும் படங்களை முன் வைத்துக் கொண்டு படம் போடலாம்.

இல்லையேல் கண்ணாடி போன்ற மெல்லிய காகித (Cellophane Paper) த்தில் ஊசி முனையால் அல்லது பென்சிலால் அந்தப் படத்தை வரைந்து கொண்டு அதற்குப்பின் தட்டெழுத்து எழுதுவோர் பயன் படுத்தும் படிவத் தாள் (Carbon Paper) உதவியால் குறிப்புப் புத்த கத்தில் வரைந்து கொள்ளலாம். ஒளிப்படக்கருவி இருக்குமாயின் (Camera) படம்பிடித்து படத்தை ஒட்டிவைத்துக் கொள்ளலாம்.

பத்திரிகைகளில், செய்தித்தாள்களில், விலை பட்டியல்களில் வரும்படங்களை க்கத்தரித்து குறிப்புப் புத்தகத்தில் ஒட்டிவைக்கலாம்.

படங்களை வரைந்து அல்லது சேகரித்து புத்தகத்தில் ஒட்டி வைப்பது தவிர இன்னும் வேறுசில நல்ல முறைகளும் உண்டு.

(1) இலை, பூ முதலியவற்றை நன்றாக உலரவைத்து அப்புறம் அழகான காகித அட்டைகளில் அப்படியே ஒட்டிவைத்தல்.

இலைகள், பூக்கள் ஆகியவை உலரவைக்க, செய்தித்தாள்கள் நடு வில் இரண்டு நாள் இருக்கும்படி வைத்து பளுவுள்ள கட்டைகளை அல் லது புத்தகங்களை செய்தித்தாளுக்குமேல் ஏற்றி வைக்கவேண்டும்.

ஒட்டி வைப்பதற்குப் பசையைப் பயன்படுத்தலாம். அதைவிட நல்லது கண்ணாடி போன்ற தோற்றமுடையதும் எளிதில் ஒட்டிக் கொள்வதுமான நாடா (Scotch Tape) வை உபயோகிக்கலாம்.

## இலை, பூ முதலியவற்றை அச்சழுத்தல்

புதிய தட்டெழுத்துப் படிவத் தாள் ஒன்றை எடுத்து அதில் உள்ள மை இலைமேல் நன்றாகப் படும்படி அதைத் தேய்த்து விட்டு, அப்புறம் அந்த இலையை மை உள்ள பக்கம் காகிதத்தில் படும்படி குறிப்புப் புத்தகத்தில் வைத்து, இலைக்குமேல் வேறு சில காகிதங் களை அடுக்கிக் கொண்டு, இலை இடத்தை விட்டு நகர்ந்து விடாதபடி அதனை அழுத்த வேண்டும். இலையைப் போன்ற அச்சுப் படம் புத்தகத்தில் விழும்.

பூக்களுக்கு இந்த செயல்முறை அவ்வளவு நல்லதல்ல.

தட்டெழுத்து படிவத் தாளுக்கு பதில் அச்சகத்தில் உபயோகிக்கப்படும் மையை மை உருட்டி (Printing Roller) யால் இலைமேல் தேய்த்து முன் கூறியது போல இலையை அழுத்தி அச்சுப்படம் எடுத்துக்கொள்ளலாம்.

## மா அச்சு (Plaster Cast)

இதற்கு முதன் முதல் ப்ளாஸ்டிஸின் (Plasticine) என்ற சீமைக் களி மண்ணின் மேல் இலையை அழுத்த வேண்டும். அழுத்தினதும் இலை போன்ற உருவமும் இலையின் நரம்புகளும் ப்ளாஸ்டிஸின் பேரில் காணப்படும். வாஸலின் என்ற எண்ணெய்க் குழம்பை அந்த உருவத்தின் மேல் இலேசாகத் தடவி விட்டு ப்ளாஸ்ட்டர் அப் பாரிஸ் (Plaster of Paris) என்ற மாவைக் கட்டிக்குழம்பாக கரைத்து அந்தக் குழம்பை 2 சென்டி மீட்டர் கனத்துக்கு அந்தப் பிளாஸ்டிஸின் அச்சு மேல் விடவேண்டும். பிறகு கால்மணி நேரம் கழித்து மா அச்சைத் தனியாக எடுத்துவிடலாம். இந்த அச்சு இரண்டொரு நாளுக்குப்பின் உறுதியாகவும் நல்ல பலம் பொருந்தியதாகவும் காணப்படும்.

### பறவைகள்

பறவைகள் ஆகாயத்தில் பறக்கும் இயல்புடையன. பறப்பதற்கு அவைகளுக்கு இறக்கைகள் உண்டு. இறக்கைகளைக் கொண்டு பறவை எந்த இனத்தைச் சேர்ந்தது என்று தெரிந்து கொள்ளலாம்.

பறவைகளை பொருட்காட்சிச்சாலை (Museum) களில் பார்க்கலாம். பார்த்து அவைகளின் அமைப்பைத் தெரிந்து கொள்ளலாம்.

பறவைகளின் அலகு, கால் முதலியன அந்தப் பறவைகளின் பழக்க வழக்கங்களுக்குப் பொருத்தமாய் அமைந்துள்ளன.

பறவைகளைப் பற்றிய புத்தகங்களைப் படித்து அவைகளின் அமைப்பையும் அவைகளுக்குரிய பழக்க வழக்கங்களையும் தெரிந்து கொள்ளலாம்.

பட்டணங்களில் இருக்கும் சாரணர்கள் திறந்த வெளியிடங்களுக்குச் சென்று பறவைகளையும் அவைகளின் பழக்க வழக்கங்களைப் பற்றியும் பார்த்துத் தெரிந்து கொள்ளவேண்டும். பட்டணங்களில் உள்ள பூங்காக்களுக்கும் சென்று அவைகளைத் தெரிந்து கொள்ளலாம். பறவைகள் அதிகாலையில் இரை தேடப் புறப்பட்டு விடும். ஆகையால் அவைகளைப் பற்றி அறியும் விருப்பமுடைய சாரணர்களும் வைகறையில் எழுந்து, பறவைகள் மிகுதியாக உள்ள இடங்களுக்குச் சென்று சந்தடி செய்யாமல் அங்கும்

இங்கும் அலையாமல் நல்ல சௌகரியமாக உள்ள ஒரு இடத்தில் மறைந்து நின்று அவைகளைப் பார்த்து அவைகளைப் பற்றி அறிந்து கொள்ளவேண்டும். சிற்சில வேளைகளில் தொலைப்பார்வைக் கண்ணாடிகள் (Field Glasses) தேவைப்படலாம்.

சாரணன் தன் குறிப்புப் புத்தகத்தில் தான் பார்க்கும் பறவைகளின் பெயரையும், அதனைப் பார்த்த இடம், பார்த்த தேதி முதலிய விவரங்களையும் குறித்து வைப்பதோடு அந்தப் பறவையைப் பற்றிய சில விவரங்களையும் குறித்து வைக்கவேண்டும்.

பறவைகளைப் பார்க்கும் பொழுது நாம் ஊன்றிப் பார்த்துக் கவனித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய விவரங்கள் பல உண்டு.

(1) அலகின் நிறம், அதன் உருவம்,

(2) பறவையின் மார்பின் நிறம் அதனுடைய வால், முதுகுப் புறம், முதலியவற்றின் தோற்றம்.

(3) கால்களின் தோற்றம்.

(4) கால் விரல்களின் தோற்றம்.

(5) பறவைத் தாவித்தாவிச் செல்லும் விதம், ஓடும்விதம், பறந்து செல்லும்விதம்.

(6) பறவையின் குரல், அதன் பாட்டுக் குரல்.

(7) இரை தின்னும் போது எப்படித் தின்கிறது என்பது.

(8) அதன் இனப் பெருக்கத்தைப் பற்றிய விவரங்கள். அதன் கூடு—கூட்டின் அமைப்பு—எங்கு கட்டி உள்ளது என்ற விவரம்.

(9) அதன் முட்டைகள், அவற்றின் நிறம்—உருவம்—எண்ணிக்கை இவை அனைத்தையும் ஒரே தடவையில் தேடிக் கொள்ள முடியாமல் போகலாம். பல தடவை பல இடங்கள் சென்று, அவற்றைச் சேகரிக்க வேண்டும்.

எடுத்துக் காட்டுக்காக,
பறவையின் பெயர்—மைனா
தேதி, நேரம்—15—3—70, காலை 5-30.
இடம்—காட்டுக் குளம் பக்கத்தில்.

குறிப்புகள்: இரக்கை தவிட்டு நிறம், பறவையின் தலை, கழுத்து, மார்பின் மேல் பாகம், வால் இவைகள் கருப்பு சிறகில் ஒரு வெள்ளைக் கோடு. இது பறவை பறக்கும்போது நன்கு காணப்படுகிறது. அலகு மஞ்சள் நிறம். கால்களும் மஞ்சள் நிறம். கண்ணுக்குப் பின்னால் மஞ்சள். கால் விரல்களில் மூன்று முன் நோக்கி இருக்கின்றன ஒன்று பின் நோக்கி உள்ளது.

வேறு குறிப்புகள் - (இந்தியப் பறவைகள் - ஸலீம் அலி என்ற புத்தகத்தைப் படித்து எழுதப்பட்டவை)

மைனு வீட்டுத் தோட்டங்களிலும் காணப்படும். மக்களைக் கண்டு அஞ்சுவதில்லை. காக்கை, பருந்து, சிட்டுக்குருவிகளுக்கும் பயப் படுவனல்ல. புழுக்களைத் தின்னும். சிறகு முளைத்துள்ள கரையான் களைத் தின்னும். புல்தரையில் வெட்டுக் கிளியைத் தின்னும். மரம் நிறைந்த தோப்புகளில் பல மைனு ஜோடிகள் ஒன்ருகவே ஒரே மரத்தில் தங்குவதைப் பார்க்கலாம். ஏப்ரல் முதல் ஆகஸ்ட் வரை கூடு கட்டிக் குஞ்சு பொரிக்கும். சுள்ளிகள், செடிகளின் வேர்கள், காகிதம், முதலியனவற்றைக் கொண்டு கூடுகட்டும். அடைகாக்கும்.

இந்த விதமாக ஏனைய பறவைகளைப் பற்றிக் குறிப்புகள் எழுத லாம். புல்புல், காகம், கக்கூ என்ற குயில், வாத்து, கழுகு, ஆந்தை, புரு முதலியவைகளைப் பார்த்துப் பின்னல் புத்தகங்களைப் படித்து எழுத வேண்டும்.

## மரங்கள்

அடிமரம், பட்டை, கிளைகள் செல்லும் விதம், இலை, பூ, விதை ஆகியவைகள் மரத்தின் இனத்தைத் தெரிவிக்கக் கூடியன. இவை பற்றிய குறிப்புகள் குறிப்புப் புத்தகத்தில் இருக்க வேண்டும். மரத் தைப் படம் வரைந்து காட்ட வேண்டும்.

குறிப்புப் புத்தகத்தில் இருந்து ஒரு ஏடு எடுத்துக்காட்டாக இங்கு தரப்பட்டுள்ளது.

## மாதிரி ஏடு

மரத்தின் பெயர்—மா மரம்

இடம்—சாரண மாநில நிலையத் தோட்டம்

தேதி—ஜூன் 8, 1970

அடிமரம்—குட்டையாக உள்ளது.

கிளைகள்—பருமனுக உள்ளன. கருமை நிறம்

இலை—பெரியது. 15செ.மீ. எதிர் எதிராக உள்ளன.

பூ—ஜனவரி முதல் மார்ச்சு வரை காணப்படுகின்றன. பூ சிறி தாக உள்ளது. எளிதில் புலப்படவில்லை. கூர்ந்து பார்க்க வேண்டி யதாக உள்ளது.

காய், பழம்-பொதுவாக மக்கள் இதயம் போன்ற உருவம்.

பழத்தில் நல்ல சதைப் பற்று கொட்டையைப் பாதுகாக்கின்றது.

இது போலவே ஏனைய மரங்களைப் பற்றியும் குறிப்பு எழுதலாம். நாம் தெரிந்து கொள்ள வேண்டிய மரங்களுள் ஆல், அரசு, கமுகு, தென்னை, பனை, கருவேல், முருங்கை, பலா, தேக்கு, பப்பாளி, தூங்குமூஞ்சி (Rain Tree), இலவு, புளி முதலியன ஒரு சில ஆகும்.

## பூக்கள்

குறிப்புப் புத்தகத்தில் பூக்களைப் பற்றிக் குறிப்பு எழுதும் பொழுது அவைகள் காணப்படும் மரங்கள் அல்லது செடி கொடிகளைப் பற்றியும் எழுத வேண்டும்.

பூக்களின் அமைப்பு எப்படி உள்ளது என்பதைச் சாரணர்கள் தங்கள் பள்ளிப் பாடத்தில் தெரிந்து கொண்டிருப்பார்கள்.

பொதுவாகக் கூறுமிடத்து — பூக்கள் நான்கு பாகங்களை உடையன எனலாம்.

(1) பூக்களின் வெளிப்பாகத்தில் அவைகளின் அடியில் பசுமை நிறத்தில் காணப்படும் புறவிதழ்கள் (Sepals) என்பவை.

(2) அடுத்து பூ இதழ்கள்

(3) அடுத்து மலரிழைகள் (Stamens). இவைகளை ஆண் உறுப்பு எனலாம்.

(4) இந்த உறுப்புகளின் மத்தியில் அமைந்துள்ளது மலர்ச் சூலகங்கள் (Pistil). இதனை பெண் உறுப்பு எனலாம்.

பூக்கள் தோட்டங்களை அலங்கரிக்கின்றன. அவற்றின் அழகு தேனீ முதலிய ஈக்களை ஈர்த்து அவைகளின் உதவியால் காயாகவும் பழமாகவும் மாறுகின்றன. தேனீ முதலியன சுயநலம் நாடிப் பூக்களைத் தேடி வருகின்றன. தங்கள் உணவு ஆகிய தேனை எடுத்துச் செல்கின்றன. எடுத்துச் செல்வதில் தங்களுக்குத் தெரியாமலே மகரந்தப் பொடியை ஒரு பூவிலிருந்து இன்னொரு பூவுக்கு எடுத்துச் சென்று அந்தப் பூவை காயாக்க உதவுகின்றன.

## காய்கறிகள்

நம் வீடுகளில் சமையலுக்குப் பயன்படுத்தப்படுகின்ற காய்கறிகளைப்பற்றியும் நாம் தெரிந்திருக்கவேண்டும். சாரணர்களின் குறிப்புப் புத்தகத்தில் காய்கறிகளுக்கு என்று ஒரு பகுதி ஒதுக்கப்படவேண்டும். தோட்டத்தில் போடக்கூடிய விதைகளை அவைகளுக்குரிய காலங்களில் போட்டு, அவைகளிலிருந்து முளைக்கும் செடிகளை ஒழுங்காகப் பாதுகாக்கும் பொறுப்பு அந்தச் சாரணர்களுடையதாகும்.

இந்தத் தேர்வுக்கு இது அவசியமில்லையாயினும் அந்த மாதிரியான பழக்கம் சாரணர்களுக்கு இருப்பது நல்லது. தான் பயிர் செய்த காய் கறிகளைப்பற்றித் தெரிந்து கொள்வதோடு மற்றவர்கள் செய்துள்ள காய்கறிகளைப்பற்றிக் குறிப்புகள் எழுதுவது அவசியம். அப்படி எழுதும்பொழுது பார்த்த இடம், பார்த்த தேதி, காய்கறியின் பெயர் முதலியனவற்றை எழுதி வைப்பது அவசியம் ஆகும்.

அதோடு இன்னும் சில விவரங்களைச் சேர்க்க முடிந்தால் நல்லது. அதாவது பூமியின் தன்மை, விளைச்சலை மிகுதிப் படுத்துவதற்காக இயற்கை உரங்கள், செயற்கை உரங்கள், உபயோகப்படுத்தப் பட்டிருந்தால் உரங்களின் பெயர், மண்ணைக் கொத்தி பக்குவப் படுத்தியிருந்தால் அதைப் பற்றிய விவரம், பயிர் விதைகள் எப்படி எந்த எந்தக் காலத்தில் விதைக்கப்பட்டன என்பது, அறுவடை செய்யும் விதம், அந்தக் காய்கறியினால் நாம் அடையக் கூடிய போஷாக்கு, முதலியவற்றை விவரமாக எழுதி வைப்பது மிக அவசியம்.

கறிகாய்களின் தோற்றத்தையும் அழகையும் புலப்படுத்தும் வகையில் அவைகளைப் பற்றிய படங்களை சாரணன் தானாகவே வரைந்தோ அல்லது, அவைகளைப்பற்றிய விலைப்பட்டியல்களிலிருந்து கத்தரித்து ஒட்டி வைத்தோ குறிப்புப் புத்தகத்தை அழகு பெறச் செய்ய வேண்டும்.

## உழைப்புத்தானம்

இரண்டாம் தரச் சாரணச் சின்னம் பெற விரும்பும் சாரணன் தன் அணியுடன் நான்கு மைல் தொலைவு சென்று போகும் வழியில் நடை பெறும் கிராமப் புனருத்தாரண வேலையைப்பற்றி தன் சாரண ஆசிரியருக்கு அறிக்கை எழுதித் தரவேண்டும். அதோடு அந்த கிராமத்தில் தான் இரண்டு மணி நேரத்துக்குக் குறையாமல் உழைப் புத்தானம் செய்ய வேண்டும். 4 மைல் என்பது 6.4 கி. மீ.

அப்படி எழுதித்தரும் அறிக்கையில் கிராமத்தின் பெயர், மாவட் டத்தின் பெயர், மாநிலத்தின் பெயர் முதலியவற்றையும், கிராமத்தில் குடியிருக்கும் மக்களின் எண்ணிக்கை, தான் உழைப்புத்தானம் செய்த தேதி முதலியவற்றையும், வேறுசில விவரங்களும் தர வேண்டும்.

(1) அந்த கிராமத்தில் பள்ளி, கல்லூரி, நூல் நிலையம் இருக் கின்றதா என்ற விவரமும்,

(2) அங்கு சுகாதார நிலையம், மருத்துவ நிலையம், குழாய்க் கிணறு முதலியன இருக்கின்றனவா, கழிவுநீருக்கு முறையான போக்கு அமைந்திருக்கின்றதா, உடற் பயிற்சி நிலையங்கள் உள் ளனவா என்ற விவரமும்,

(3) சாலைகள் உள்ளனவா, பாலங்கள் உள்ளனவா, தண்ணீரில் போக்குவரத்து வசதிகள் இருக்கின்றனவா, தபால் நிலையம் உண்டா, தந்தி நிலையம் இருக்கின்றதா, தொலைபேசி வசதியுண்டா என்ற விவரமும்,

(4) விவசாயத்துக்கு அரசினர் சார்பில் அறிவுரை கூறும் அலுவலர்கள் இருக்கின்றனரா, விவசாயத்துக்குரிய இயந்திரங்கள் உள்ளனவா, விதைகள் எளிதில் கிடைக்கின்றனவா, உரங்கள் எளிதல் கிடைக்கின்றனவா, விவசாயத்துக்கு அவசியமான நீர்ப்பாய்ச்சு வசதிகள் உள்ளனவா, தரிசுநிலம், சதுப்பு நிலம் முதலியன திருத்தப்படுகின்றனவா, என்ற விவரங்களும் அறிக்கையில் இடம் பெற வேண்டும்.

(5) அதுபோல, கைத்தொழில் சம்பந்தமாக, அவைகளை நடத்தும் திறன் சம்பந்தமாய் உள்ள வசதிகளையும் அறிக்கையில் குறிப்பிட வேண்டும்.

(6) கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டுறவு வங்கிகள் உள்ளனவா, பூங்காக்கள் போன்ற மனித வாழ்க்கைக்கு அவசியமான இதர வசதிகள் உள்ளனவா என்றும் அறிக்கையில் குறிப்பிடல் அவசியம்.

## சாரண இயக்க ஈடுபாடு

இரண்டாம் தரச் சின்னம் பெறவிரும்பும் சாரணன், ஒரு மாதத்திற்குக் குறையாத கால அளவு இளம்பாதனாக இருந்து சாரண இயக்கத்தில் ஈடுபட்டிருத்தல் வேண்டும். அவன் தன் அணியில் உள்ள ஏனையசாரணர்களின் வீடுகளைத் தெரிந்திருத்தல் வேண்டும். அது போலவே தன் சாரண ஆசிரியரின் வீட்டையும் தெரிந்திருக்க வேண்டும். அவனுக்கு மறுபடியும் இளம்பாதத் தேர்வுகளில் தேர்ச்சி பெறும் திறன் வேண்டும். அவன் தன் வாழ்க்கையில் சாரணநெறி, சாரண வாக்குறுதி, சாரணக் குறிக்கோள் ஆகியவைகளை முறையாகப் பின்பற்றுகிறான் என்ற நம்பிக்கை அவனுடைய சாரண ஆசிரியருக்கு இருக்கவும் வேண்டும்.

இப்படிப் பல தேர்வுகளில் வெற்றிபெறும் சாரணனுக்கு இரண்டாந் தரச் சாரணச் சின்னம் கொடுக்கப்படும்.

சின்னத்தை சாரண ஆசிரியரே கொடுக்கவேண்டும். சின்னம் கொடுப்பது சாரணப் படையைக் கூட்டுவித்து அந்தக் கூட்டத்தில் கொடுக்கப்படவேண்டும். எல்லோரும் சீருடையணிந்துள்ள கூட்டமாயிருத்தல் வேண்டும்.

சின்னம் கொடுக்கும் முன் மாவட்ட ஆணையாளர் அனுமதியுடன் கொடுக்க வேண்டும்.

# பயிற்சி அளித்தல் முறை

## 1. முதல் உதவி கற்றல்

முதல் உதவிச் சிகிச்சைகளை மனப்பாடம் செய்து கற்றல் ஒரு சிறிதும் பயன் அளிக்காது. அவைகளை நிதர்சன முறையிலேயே தான் கற்றல் வேண்டும். முதல் உதவி கற்பிக்கும் ஆசிரியர் உரிய சிகிச்சை முறைகளை முறையாகவும் வரிசையாகவும் படிப்படியாகச் செய்து காண்பிக்க, சாரண மாணவர்கள் அவரைப் பின்பற்றி அவர் செய்வது போல சிகிச்சைகளைப் படிப்படியாகச் செய்து, அவைகளுக் குரிய செயல்முறையைக் கற்றுப் பழகவேண்டும். அவர் கற்பிக்கும் நேரத்தில் மட்டும் கற்றுக்கொள்வது போதாது. தான் தன் அணியில் உள்ளபொழுது தன் அணித்தலைவன் உதவியோடு தான் கற்ற வற்றை மறுபடியும் மறுபடியும் பழகிக்கொள்ள வேண்டும். அப்படிப் பழகிக் கொண்டால் மட்டுமே உண்மையான தேர்ச்சி பெறமுடியும்

மேலும் சிகிச்சை முறைகளைக் கற்றுக்கொள்ளும்பொழுது அல்லது கற்பிக்கும்பொழுது, விபத்து உண்மையில் உண்டாகியிருப்ப தாகவே எண்ணி அதற்குரிய மன உணர்வை வரவழைத்துக் கொண்டு, செயலாற்றிப் பழகுவது அவசியம்.

சமையல் செய்து கொண்டிருக்கும் ஒரு பெண் தன் ஆடையில் தீப்பற்றிக்கொள்ள, திகில் அடைந்து வெளியே ஓடிவருகிருள் என்ருல் எப்படி முதல் உதவி செய்யவேண்டும் என்பதை நாடகமாகவே நடித்துக் கற்பிப்பது கற்பித்த சிகிச்சை முறையை மனதில் நன்கு பதியவைக்கும். தீப்பிடித்து எரிவதுபோல காகிதத்தில் வரைந்துள்ள வண்ணப்படத்தை விபத்துக்குள்ளானவர் ஆடைமீது பதித்து வைத்துக்கொண்டு அறைக்குள்ளிருந்து அவரை ஓடிவரச் செய்யலாம். அவர் ஓடிவரும்போது அவரைத் தடுத்து நிறுத்தி, தரையில் தள்ளி, கம்பளம் அல்லது சமுக்காளத்தில் அவரைச் சுருட்டித் தரையில் உருட்டுவதால் விபத்துக்குரிய சிகிச்சைமுறை கற்போர் மனதில் நன்கு பதியும். இப்படிக் கற்றுக்கொண்டவர் உண்மையிலேயே அப்படி ஒரு தீ விபத்து நேரிட்டால், மற்றவர்கள் திகில் அடைந்து செய்வதறியாமல் திகைப்புற்று இருக்க, இவர் மட்டும் மன உறுதியுடன் எந்த வகையான தயக்கமும் இல்லாமல் செய லாற்றும் வல்லமை உடையவராக விளங்குவார்.

வெட்டுப்பட்டு இரத்தப்பெருக்கு உண்டாவதைப் பொருந்தும் முறையில் சித்தரித்து அதற்குரிய சிகிச்சை முறைகளைக் கற்பது நல்லது. நடிகர்கள் நாடக ஒப்பனைக்குப் பயன்படுத்தும் வண்ண மெழுகுகள் சிலவற்றைப் பயன்படுத்தி வெட்டுக்காயத்தையும்

இரத்தப் பெருக்கையும் நிதர்சனமாகக் காண்பித்து அதற்குப்பின் சிகிச்சை முறையைப் படிப்படியாக ஆசிரியர் செய்து காண்பிக்க சாரணர்களும் அதேபோல் செய்து பழக வேண்டும். இப்படிக் கற்றுக் கொள்வதால் உரிய பயிற்சி முறைகளை நன்கு கற்றுக் கொள்வதோடு இரத்தப் பெருக்கு, பலத்த காயம் முதலியவற்ருல் உண்டாகும் பயமும் போய்விடும்.

## 2. சைகைப் பேச்சு கற்கும் முறை

மார்ஸ் முறை சைகைப் பேச்சு ஆங்கில எழுத்துக்கள் அடிப் படையில் அமைந்துள்ளது. இருபத்தாறு எழுத்துக்களுக்கு இருபத் தாறு அடையாளங்கள், எண்களுக்கு பத்து அடையாளங்கள் ஆகிய முப்பத்தாறு அடையாளங்களை சிறுசிறு பாடங்களாகப் பிரித்து ஐந்தாறு வாரங்களில் கற்றுவிடலாம்.

ஒவ்வொரு பாடமும் கற்றுக்கொள்ள ஒரு வாரம் தேவையாகும். எழுத்துக்கள் ஐந்து பிரிவாகத் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு பிரிவும் ஒரு பாடமாக அமையும். ஒவ்வொரு படைக்கூட்டத்தில் ஒரு பாடத்தைக் கற்றுக்கொள்ளுதல் கூடும். பாடங்களை கற்கும்போது முதலில் எழுத்துக்களைக் கற்கவேண்டும். பிறகு எழுத்துக்களை சொற் களாகக் கற்கவேண்டும். அதன் மிறகு சொற்களை வாக்கியங் களாகக் கற்கவேண்டும்: ஒரு பாடத்துக்கு 15 அல்லது 20 நிமிடங் கள் வேண்டும்.

சைகை அடையாளங்களை மார்ஸ் கொடியாலும், ஊதலைப் பயன் படுத்தியும், மின்விளக்கைப் பயன்படுத்தியும் கற்பிக்கலாம். சாரணர் கள் அடையாளங்களை ''அனுப்பவும்'' அவைகளை ''வாங்கவும்'' கற்றல் வேண்டும்.

தந்திக் கட்டையில் மின் இரைப்பானை இணைத்து அந்த ஒலியாலும் மார்ஸ் முறைச் சைகைப் பேச்சு கற்கலாம்.

அடையாளங்களை ''கடு'' ''கட்டு'' அல்லது ''கிர்'' ''கிர்-ர்-ர்'' என்ற ஒலியை வாயால் ஒலித்துக்கொண்டே கற்றுக்கொள்வதும் நல்ல பயனுடையதாகும்.

படைக்கூட்டத்தின் போது படிக்கும் சைகைப் பேச்சுப் பாடங் களை மறுபடைக் கூட்டம்வரை, (அதாவது ஒரு வாரம்) சாரணர்கள் வீட்டிலும் கற்றுக்கொள்ள வேண்டும்.

இரண்டு மூன்று பாடங்கள் ஆனதும் நிலையப் பயிற்சி பழகலாம். அந்தந்த வாரத்தில் அதுவரை படித்துப் பழக்கமான எழுத்துக்களை யும், எண்களையும் பயன்படுத்தி வாக்கியங்கள் அமைத்து, தந்திச் செய்தி ''அனுப்பவும்'' ''வாங்கவும்'' பழகவேண்டும். நிலையப்

பயிற்சி செய்யும்போது சைகைப் பேச்சுக் குழூஉக்குறிகள் பயன் படும்.

சைகைப் பேச்சை ஐயந்திரிபறக் கற்பதற்கு நிலையப் பயிற்சிப் பழக்கம் மிகவும் அவசியம். சைகைப் பேச்சில் நல்ல திறமை அடைய விரும்பும் சாரணர்கள் தங்கள் அணியில் உள்ள சாரணர் களை நிலையமாக அமைத்து நிலையப் பயிற்சி பெற்றுக் கொள்ளலாம்.

சாரணப் படைக்கூட்டங்கள் நடைபெறும் பொழுது சாரண அணிகள் ஆங்காங்கு அமர்ந்து தங்கள் அணித்தலைவர்களோடு சாரணப் பயிற்சிக் கற்றுக்கொண்டிருப்பார்கள். அப்பொழுது சாரண ஆசிரியர் மார்ஸ் கொடியின் உதவியால் அந்த அணிகளோடு தொடர்பு வைத்துக்கொண்டால் அது சாரணச் சைகைப் பேச்சுக்கு ஒரு புதுமையான முக்கியத்துவம் அளிப்பதாகும்.

### 3. ஊன்றிப் பார்த்தல் அல்லது உற்றுப் பார்த்தல்

இந்தப் பயிற்சிக்குப் பொருத்தமான விளையாட்டுகள் இரண் டொன்று முன் அத்தியாயத்தில் தரப்பட்டன. பயிற்சி அளிப்பது அவைகளின் அடிப்படையில் இருப்பது அவசியம். தடம்பிடித்தல் அல்லது விற்பனைச்சாளரங்கள் அல்லது கிம் விளையாட்டு என்று ஏதாவது ஒன்றைமட்டும் பயிற்சிக்கு எடுத்துக்கொள்ளாமல் அவை மூன்றையுமே நல்ல முறையில் பழகிக்கொள்ளுவது நல்ல பயன் தரும்.

இந்தப் பயிற்சிக்குப் பயன்படக் கூடிய வேறுசில விளையாட்டு களும் இப்பொழுது இங்கு தரப்பட்டுள்ளன.

(1) சாரணர்களுக்கு பழக்கமாக உள்ள பல பொருள்களைப் பள்ளிக்கூடத் தோட்டத்தில் நடைபாதையின் அருகில் உள்ள மரங்க ளுக்குப் பக்கத்தில், அல்லது வேலிஓரத்தில், ஆனால், கண்ணுக்கு எளி தில் புலப்படக்கூடிய விதமாக வைக்கவேண்டும். இவற்றை வைப்பது சாரணர்களுக்குத் தெரியக்கூடாது. வீட்டில் உள்ள பாத்திரங்கள், மண் வெட்டி, குடம், வாளி, வடக்கயிறு, கடப்பாரை போன்ற பொருள்களை வைக்கலாம். பயிற்சி அளிக்கும் நேரத்தில் சாரண ஆசிரியர் அணிஅணியாக சாரணர்களை அழைத்துக்கொண்டு பாதை வழியாக ஓட்டமாக அல்லது விரைவான நடையில் செல்லவேண்டும். சாரணர்கள் தாங்கள் போகின்ற போக்கில்--அதாவது நின்று பார்க் காமல்—ஒளித்துவைக்கப்பட்டுள்ள பொருள்களைப் பார்த்துக்கொள்ள வேண்டும். எல்லா இடங்களையும் சுற்றிப்பார்த்த பிறகு சாரணர்களை வேறொரு இடத்துக்கு அழைத்துச் சென்று ஒவ்வொரு அணியும், அல்லது ஒவ்வொரு சாரணனும், தான்கண்ட பொருள் என்னென்ன,

அவைகள் எத்தகையன என்பதைப் பட்டியல் ஒன்றில் விவரிக்க வேண்டும். இந்த விளையாட்டு ''கிம்'' இனத்தைச் சேர்ந்தது.

(2) இருபத்துநாலு பொருள்களை ஒரு கயிற்றில் நான்கு ஐந்து அடிக்கு ஒன்றாகக் கட்டி அவ்வளவு பொருள்களையும் ஒரு பெரிய பெட்டியில் மறைத்து வைத்துக்கொண்டு பிறகு ஒவ்வொன்றாக வரிசையாக எடுத்து சாரண அணிகள் பார்த்துக் கொள்ளும்படி 10 அல்லது 15 விநாடி நேரம் காண்பித்துவிட்டு வரிசையாக வேறு ஒரு பெட்டியில் போட்டு மறைக்க வேண்டும். அப்படி அத்தனை பொருள்களையும் காண்பித்துவிட்டுச் சாரணர்கள் ஒவ்வொருவரும் ஒரு பட்டியல் எழுதித்தரக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

(3) மூடிவைத்திருக்கும் அறைக்குள் இருந்து ஒருவர் பல மாதிரிச் சத்தங்களை உண்டுபண்ண வேண்டும். தண்ணீரைக் குடத்தில் இருந்து வெண்கலப்பானையில் விடுவது, அரிக்கேன் விளக்கை ஏற்றுவது, மேஜை செருகுஅறையை இழுத்து மூடுவது, செருப்புக் காலால் தரையில் தேய்ப்பது, படித்துக்கொண்டிருந்த புத்தகத்தை சத்தம் உண்டாகும்படி மூடுவது, மடக்கு நாற்காலியை மடக்கிவைப்பது போன்ற பல சத்தங்கள் உண்டுபண்ணலாம். அறையின் வெளியில் இருந்து இந்தச் சத்தங்களைக் கேட்டுக்கொண்டிருந்த சாரணர்கள் அவைகளை வரிசையாக வருணித்து எழுதவேண்டும்.

(4) வாசனையுள்ள பொருள்கள் பலவற்றைச் சிறுசிறு சீசாக்களில் போட்டு வைத்துக் கண்ணைக்கட்டி வைக்கப்பட்ட சாரணர்கள் கையில் ஒன்றன் பின் ஒன்றாக வரிசையாகக் கொடுத்து அவற்றை அவர்கள் முகர்ந்து பார்த்துத் தெரிந்துகொண்டு பின்னால் அவற்றை வரிசையாகத் தங்கள் குறிப்புப் புத்தகங்களில் எழுதவேண்டும்.

(5) சாரணர்களைக் கண்ணைக்கட்டி வைத்து அவர்கள் கையில் சிறு சிறு நாணயங்களைக் கொடுத்து அவர்கள் அவற்றைத் தொட்டுப் பார்த்து எந்தமாதிரி நாணயம் தரப்பட்டது என்று அவர்கள் கூற வேண்டும்.

(6) சாரணர்கள் ஒவ்வொருவருக்கும் 10 அல்லது 15 தீக்குச்சிகள் கொடுத்துவிட்டு ஆசிரியர் தானும் அதே எண்ணிக்கையான குச்சிகளை எடுத்துக் கொள்ளவேண்டும். முதலில் தன்கையில் உள்ள குச்சிகளைப் பயன்படுத்தி ஏதாவது ஒரு உருவம் அமைக்கவேண்டும். அதனைப்பார்த்துக் கொண்டிருந்த சாரணர்கள் வேறொரு அறைக்குச் சென்று ஆசிரியர் அமைத்த உருவத்தைப் போலவே வேறொரு உருவம் அமைத்துக் காண்பிக்கவேண்டும். குச்சிகள் எப்படி எப்படி வைக்கப்பட்டிருந்தனவோ அப்படியே அவர்களும் வைக்கவேண்டும் உருவமும் ஆசிரியர் அமைத்த உருவத்தைப் போலவே இருக்க வேண்டும். தீக்குச்சியின் தலையிருந்த பக்கத்தில் தலையும் கால் இருந்த பக்கத்தில் காலும் இருக்கும்படி தீக்குச்சிகள் வைக்கப்படவேண்டும்

சிற்சில வினடி வினக்களும் உற்று நோக்கும் கலக்குரிய பயிற்சி யாகவே அமையும். எடுத்துக்காட்டாக—

(1) வீட்டில் வளர்க்கும் நாய் தரையில் படுத்துக் கொள்ளும் போது படுத்துக்கொள்வது எப்படி ?

(2) வீட்டில் வளர்க்கும் பசு மாடு படுத்துக் கொள்ளும்போது படுத்துக் கொள்வது எப்படி ? எழுந்திருக்கும்போது எப்படி எழுந்திருக்கின்றது ?

(3) குதிரைகள் தரையில் படுத்துக்கொள்வது எப்படி ? எழுந் திருப்பது எப்படி ?

(4) ''சிறுத்தையுடன் சண்டை'' என்ற தீப்பெட்டியில் சிறுத்தை தீப்பெட்டியின் இடப்பக்கத்தில் இருக்கிறதா அல்லது வலப்பக்கத்தில் இருக்கிறதா ?

(5) தபால் நிலையத்தில் விற்பனை செய்கிற உள் நாட்டுக் காகி தத்தின் விலை ஆங்கிலத்தில் தரப்பட்டுள்ளது. அந்தத் தலையின் வலது பக்கத்திலா அல்லது இடது பக்கத்திலா ?

(6) தபால் கவரின் விலை எந்த மொழியில் தலையின் வலது பக்கம் தரப்பட்டுள்ளது ?

(7) பள்ளியில் மச்சுக்குப் போகிற மச்சுப்படியில் எத்தனை படிகள் உள்ளன ?

இவைகள் போன்ற வினடி வினக்கள் சாரணர்களை உற்று நோக்கத் தூண்டும் இயல்புடையன.

## சாரண வேகம் கற்றல்

கிலோ மீட்டர் கற்கள் உள்ள சாலைகளில் சாரண வேகப் பயிற் சியை நடத்தலாம். சாலையில் உள்ள ஒரு கிலோ மீட்டர் கல்லி லிருந்து அடுத்த கிலோ மீட்டர் கல்லைப் போய்த்தொட்டுவிட்டு மறுபடி யும் புறப்பட்ட இடத்துக்கு வந்தால் அது 2 கிலோ மீட்டர் ஆகும். இந்தத் தொலைவு சாரண வேகத்தில் செல்ல 3 நிமிடங்கள் பிடிக்கும். அணிகளை ஒன்றன் பின் ஒன்ருக $\frac{1}{2}$ அல்லது 1 நிமிட கால இடை வெளியில் அனுப்பி இந்த பயிற்சி அளிக்கலாம். போய்வருகின்ற நேரம் நூற்றுக்கு நான்கு என்ற அளவில் வித்தியாசப்படலாம். 3 நிமிடம் என்பதற்குப் பதிலாக 7 வினடி முந்தியோ அல்லது பிந்தியோ வரலாம். ஆனல் கணக்காக 3 நிமிடத்தில் வருவது மிகவும் பாராட்டுக்குரியது

மாதம் ஒரு முறையாவது இப்படிப் பயிற்சி அளிப்பது அவசியம். அடிக்கடி பயிற்சி செய்து பழகுவது சாரண வேகத்துக்குரிய ஆற்றல் தரும்.

## ஆக்கக் கலை கற்றல்

இளம்பாதப் பயிற்சியில் கற்ற முடிச்சுகளையும் இரண்டாம் தரச் சாரணப் பயிற்சியில் கற்கின்ற முடிச்சுகளையும் கட்டும் ஆற்றல் இரண்டாம் தரப்பயிற்சிபெறும் சாரணர்களுக்கு இருக்கவேண்டும். ''சித்திரமும் கைப் பழக்கம்'' என்பது போலவே முடிச்சுக்கட்டும் ஆற்றலும் கைப் பழக்கமே ஆகும்.

(1) பழைய முடிச்சுகளை மறுமுறை கற்கும்போது இரண்டொரு புது முடிச்சுகளையும் கற்றுக் கொள்ளலாம். அவற்றுள் புத்தகங்களை அடுக்கி வைத்து மூட்டை (Parcel) யாகக் கட்டப் பயன்படும் ''ஹார்னெஸ்-பென்ட்'' (Harness Bend) என்ற கட்டு-முடிச்சு ஒன்று. படம் இதனை விளக்கும்.



கட்டுகள் (Parcels)



ஆரம்பம்



அடுத்தபடி



முடிவு

கட்டுமுடிச்சு (Harness Bend)

93. கட்டுகளும் கட்டு-முடிச்சும்

(2) தீ விபத்தில் மாடியில் இருந்து வெளிப்புறமாகக் கீழே இறங்க வேண்டிய அவசியம் நேரிட்டால் படுக்கை விரிப்புகளை அல்லது பெண்கள் அணியும் சேலைகளைப் பயன்படுத்திக் கீழே இறங்கலாம். துணிக்குத் துணி சதுரமுடி கட்டிவிட்டு நுனிகளை அந்தத் துணியைச் சுற்றி ஒரு அரைக்கொலுசு போட்டுக் கட்டி விட்டால் சதுர முடி நெகிழ்ந்து அவிழ்ந்துவிடாது. இதை துணிமுடிச்சு அல்லது ''ஷீட் நாட்'' (Sheet Knot) என்பர். இந்த முடிச்சைப் படம் விளக்குகிறது.



94. துணிமுடிச்சு (Sheet Knot)



95. எட்டுமுடிச்சு (Figure of Eight Knot)

(3) நீளமான ஒரு கயிற்றை வெட்டவேண்டியதாக வந்தால் வெட்டினதும் அதற்கு நுனிவரிதல் செய்யவேண்டும். நுனி குலைந்துவிடாமல் தற்காலிகமாகத் தடுக்க எட்டு முடிச்சுப் பயன்படுத்தலாம். படத்தைப் பார்க்க.

இந்த முடிச்சுகள் இரண்டாந்தரச் சின்னம் பெறுவதற்கு வேண்டியதில்லையானாலும் சாரணர்கள் இவற்றைக் கற்றுக் கொள்வது நல்லது.

(4) பாலத்தட்டி, கொடிக் கம்பம், முக்காலி முதலியவற்றை இரண்டாம் தரச் சாரணர்கள் தங்கள் சாரண தண்டத்தினால் கட்டப் பழக வேண்டும். மூங்கில்களையும் சவுக்குக் கொம்புகளையும் அவர்கள் பயன்படுத்தக்கூடாது.

(5) சாரண தண்டத்தால் இடம் விட்டு இடம் எடுத்துச்செல்லக் கூடிய விகான் கொடி மரக் கம்பம் செய்து பழகுவதும் இரண்டாம் தரச் சாரணர்களுக்கு நல்ல ஆக்கப் பயிற்சி ஆகும். இதைப்பற்றிப் பின் 9-ம் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

(6) சாரணப் பாசறைக்குரிய பலதர சில்லரை அமைப்புக்களைச் செய்து பழகுவதும் அவர்களுக்கு நல்ல ஆக்கப் பயிற்சியாக அமையும்.



96. விகான் (Wigan) கொடிக்கம்பம்



97. பாசறை மேஜை (Camp Table)



98. பாசறைப் பாய் நெசவுதறி (Camp Loom)




99. சமையல் பாணத் தொங்கட்டம்
(Camp Pot Hooks)



100. பாதரட்சைப் பரண்

## சாரணர்களின் அரிய நண்பர்கள்
(Scouts' Best Friends)



இதில் மடக்கக்கூடிய கத்தியைச் 'சாரணக் கத்தி.' (Scout Knife) என்பர் மற்றையது 'நேர்க் கத்தி,' 'சூரி,' 'உறைக் கத்தி' என்று பலவிதமான பெயர்களை உடையது. ஆங்கிலத்தில் வாள் கத்தி (Sheath Knife) என்பர். இவை இரண்டும் சாரணர்களுக்கு உரிய அரிய நண்பர் கள். அவை சாரணர்கள் கையில் மிகப் பயன் உள்ள வேலைகளைச் செய்யப் பயன்படுகின்றன.

(7) சாரணப் பாசறையில் கூடாரக்கயிறுகளை இழுத்துக்கட்டு வதற்குரிய இரண்டு மாதிரியான முடிச்சுகளையும் கட்டிப் பழகுவது இரண்டாம் தரச் சாரணர்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். இவைகளுள் ஒன்று வடக்கயிற்றுத் தொடுப்பைப் பயன் படுத்தி உள்ளது. இன்னொன்று சிறுவர் சாரணீயத்தில் பேடன் பவல் பெரியார் கூறி உள்ளது.

சாதாமுடி இரண்டினைப் பயன்படுத்தி உள்ளது.



வடக்கயிற்று தொடுப்பால் அமைந்தது



1. பேடன்-பவல் முறை 2. வடத் தொடுப்பு முறை

101. கூடாரக்கயிறு முடிச்சுகள்

## இமயமலேப் பாலம் (Himalaya Bridge)

சாரணதண்டங்களைப் பயன் படுத்தி இமயமலேப்பாலம் அமைப்பது இரண்டாம் தரச் சாரணர்களுக்கு நல்ல பயிற்சியாக இருக்கும்.



102. இமயமலேப் பாலம் (Himalaya or Monkey Bridge)

(8) சாரண தண்டங்களைக் கொடிக்கம்பமாகக் கட்டி கொடி ஏற்றிப் பழகுவதும் நல்ல பயிற்சியே ஆகும்.

(9) படத்தில் காண்பித்துள்ளது போல தங்குவதற்குப் பந்தல் அமைப்பதும் நல்ல பயிற்சியே ஆகும்.



103. தட்டுப் பந்தல் (Flat Shelter)

## 4. தீ மூட்டுதல் பயிற்சி

தீ மூட்டுதல் எப்படி என்பதைக் கற்றுக் கொண்டதும் சாரணர்களைச் சில போட்டிகளில் ஈடுபடச் செய்யலாம்.

(1) ஏறக்குறைய 20 அடி தொலேவில் அமைந்துள்ள இரண்டு மரங்களில் தரையில் இருந்து 40 அல்லது 45 சென்டி மீட்டர்

உயரத்தில் சணல் கயிறு ஒன்றைக் கட்டி வைத்து அந்தக் கயிற்றினை எரிக்கும் நோக்கத்தோடு அதன் கீழே அல்லது அதன் அருகில் தீ மூட்டி அந்தக் கயிற்றை எரிப்பதுதான் விளையாட்டு. அணிகள் இதனைப் போட்டியாகச் செயலாற்ற வேண்டும். கயிறு எந்த அணி மூட்டிய தீயால் எரிபட்டு அறுந்ததோ அதற்கே வெற்றி.

(2) இரண்டாவது, தண்ணீர் கொதிக்க வைக்கும் போட்டி. இந்தப் போட்டியில் அணிகளுக்கு ஒரே மாதிரியான பாத்திரங்களும் ஒரே அளவு தண்ணீரும் கொடுத்து, ஒரே நேரத்தில் தீ மூட்ட ஆரம்பித்துத் தண்ணீரைக் கொதிக்க வைக்கச் சொல்ல வேண்டும். எந்த அணியில் தண்ணீர் முதன் முதல் கொதிக்கிறதோ அந்த அணிக்கு வெற்றி.

## சமையல் போட்டி

(1) அணிகளுக்கு ஒரே அளவு அரிசியும் கறிகாய்களும் மசாலாவும் கொடுத்துப் பின் அவைகளைக் குறித்த நேரத்தில் அடுப்பு மூட்டச் சொல்லி சமையல் செய்யச் சொல்ல வேண்டும். எந்த அணி முதன் முதல் சமையல் செய்து முடிக்கிறதோ அந்த அணிக்கு வெற்றி.

(2) பாத்திரங்களைப் பயன்படுத்தாமல் சமையல் செய்தலை ஒரு போட்டியாக நடத்தலாம். அணிகள் ஒவ்வொன்றுக்கும் ஒரே அளவு கோதுமை மாவு, உருளைக்கிழங்கு, மசாலா முதலியவைகளைக் கொடுத்து அவைகளை உண்ணத் தகுந்த உணவாகச் செய்வதுதான் போட்டி. முதன் முதல் செய்து முடிக்கும் அணிக்கு வெற்றி.

## 5. திசையறிவு கற்றல்

விளையாட்டு மைதானத்தில் 5 மீட்டர் விட்டம் உள்ள வட்டம் ஒன்றை வரைந்து திசைக்கருவியின் உதவியால் வடக்கு, வடக்கு வடகிழக்கு, வடகிழக்கு, கிழக்கு வடகிழக்கு என்றுள்ள 16 திசைகளையும் அந்த வட்டத்தில் எளிதில் புரிந்து கொள்ளும் விதத்தில் அடையாளம் செய்ய வேண்டும். வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு என்ற நான்கு முக்கிய திசைகளை முழுச் செங்கல்லால் குறிக்கலாம். வடகிழக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு என்ற திசைகளைக் கருங்கல்லாலும், ஏனைய எட்டுத் திசைகளையும் மணலாலும் குறிக்கலாம். இதில் இரண்டு மாதிரியான விளையாட்டு விளையாடலாம்.

(1) ஆசிரியர் 16 திசைகளில் 16 சாரணர்களை நிற்க வைப்பார். தான் நிற்கும் திசையின் பெயரைச் சாரணன் நன்றாக நினைவு படுத்திக் கொள்ள வேண்டும். ஆசிரியர் ஏதாவது இரண்டு திசைகள்

பெயரைக் கூறுவார். கூறினதும் அவ்விரு திசைகளில் நிற்கும் சாரணர்கள் தங்கள் இடங்களை மாற்றிக் கொள்ள வேண்டும். அவ்விரு சாரணர்களில் முதன் முதல் மாற்றின இடத்தை அடைகிற சாரணனுக்கு வெற்றி. அதற்கறிகுறியாக அந்தச் சாரணனுடைய அணிக்கு ஒரு மதிப்பெண். மதிப்பெண் கொடுக்கத் தீர்மானம் செய்தால், ஒவ்வொரு அணியிலிருந்தும் ஒரே எண்ணிக்கையான சாரணர்களை வைத்து இந்த விளையாட்டை விளையாட வேண்டும். எல்லோருக்கும் ஓடும் வாய்ப்புக் கிடைக்கும்வரை விளையாடலாம்.

(2) முன் போலவே 16 திசைகளிலும் 16 சாரணர்களை நிற்க வைத்து, ஒவ்வொரு சாரணனும் தான் நிற்கும் திசையை நினைவு வைத்துக் கொள்ள வேண்டும். தபால் நிலையத்தில் உள்ளதுபோல இங்கும் கார்டு, கடிதம், நூல் அஞ்சல், தந்தி ஆகியவை உண்டு. கார்டு நடக்கும், கடிதம் ஓடும், தந்தி பறக்கும், நூல் அஞ்சல் கை கால்களை ஊன்றி ஊர்ந்து செல்லும். மற்றவை முந்தின விளையாட்டில் உள்ளபடி.

(3) விளையாட்டு மைதானத்தில் ஒரு பக்கத்தில் ஒரு நேர் கோடும் எதிர்ப் பக்கம் 10 மீட்டர் தள்ளி மற்றொரு நேர் கோடும் வரைய வேண்டும். சாரண அணிகள் விளையாட்டு வரிசையில் முதல் கோட்டைத் தொட்டுக்கொண்டு அடுத்த கோட்டைப் பார்க்க நிற்க வேண்டும். இரண்டாவது கோட்டில் ஒவ்வொரு அணிக்கு நேராக ஒரு செங்கல் வைத்து அடையாளம் செய்ய வேண்டும்.

ஒவ்வொரு அணிக்கும் 16 திசையைக் குறிக்கும் 16 சீட்டுகள் எழுதி வைத்து அவைகளை அணிக்கு ஒரு நடுவராக மூன்று அல்லது நான்கு நடுவர்களிடம் கொடுக்கப்பட வேண்டும். அணிகளுக்கு நேராக அந்த அணிக்குரிய செங்கல் பக்கத்தில் அந்தந்த அணியின் சீட்டுகளை வைத்துக் கொண்டு நடுவர்கள் நிற்க வேண்டும்.

ஆட்ட ஆரம்பத்தில் தங்கள் தங்கள் கையில் இருக்கும் சீட்டுக்களை நன்ருய்க் கலைத்து வைத்து விடுவார்கள். விளையாட்டை ஆசிரியர் முறையாக ஆரம்பித்ததும் ஒவ்வொரு அணியில் முதலாவது நிற்கும் சாரணன் ஓடிவந்து தன் அணிக்காக நிற்கும் நடுவரிடம் சீட்டு ஒன்றைப் பெற்றுக் கொண்டு அந்தச் சீட்டில் குறிக்கப் பட்டிருக்கும் திசையில் தண்டத்தின் நுனி இருக்கும்படி தன் சாரண தண்டத்தைத் தரையில் வைத்துவிட்டுத் தன் அணிக்குப் போய் அடுத்த சாரணனைத் தொட்டுவிட்டு வரிசையின் கடைசியில் சென்று நிற்க வேண்டும். தொடப்பட்ட சாரணன் ஓடி, தன் நடுவரிடம் இருந்து சீட்டைப் பெற்றுத் தன் சாரணத் தண்டத்தை முறையாக வைத்துவிட்டு அடுத்த சாரணனைத் தொட வேண்டும். அப்படி

8 திசைகளுக்குரிய தண்டங்கள் தரையில் வைக்கப்படுவதுவரை விளையாடலாம்.

இப்படிப் பல மாதிரியான விளையாட்டுக்களை விளையாடி திசை யறிதல் பயிற்சி செய்ய வேண்டும்.

(4) திசையறிதல் பயிற்சிக்கு மிகவும் பொருத்தமாயுள்ளது புதையல் வேட்டை. விளையாட்டு மைதானத்தில் அல்லது வேறெங்காவது புதையலைப் புதைத்து வைக்க வேண்டும். ஆசிரியர் தரும் குறிப்புகளைக் கொண்டு அந்தப் புதையலை எடுத்து வந்து ஆசிரியரிடம் கொடுப்பது இந்த விளையாட்டு. அணிகளிடையில் அது போட்டியாகவே நடத்தப்படும்.

ஆசிரியர் ஒரு இடத்தில் அணிகளை ஒன்றுக வரச்செய்து ஒரே நேரத்தில் புதையலைக் கண்டுபிடித்தற்குரிய குறிப்புகளை அணித் தலைவரிடம் கொடுப்பார். அணிகள் ஒவ்வொன்றும் குறிப்பில் கூறப் பட்டுள்ள இடத்துக்குச் சென்று அங்கிருந்து ஆரம்பம் செய்ய வேண்டும்.

நான்கு அணிகள் இருந்தால் நான்கு வெவ்வேறு மாதிரியான குறிப்புகள் அவர்களுக்குத் தரப்படும். ஆயின், எல்லாக் குறிப்பு களும் ஒரே இடத்துக்கு—அதாவது புதையல் உள்ள இடத்துக்கே கொண்டுவிடும்.

**மாதிரிக் குறிப்புகள் :** ''விளையாட்டு மைதானத்தில் விளா மரத்தடியில் இருந்து வட திசையாக 50 தப்படி; அதன்பின் வ. மே. 75 தப்படி; அதன்பின் கிழக்குத் திசையாக 80 தப்படி'' இதுபோல புதையல் இருக்கும் இடத்துக்குப் போய்ச் சேரும்வரை அவசியமான குறிப்புகள் கொடுக்கப்பட வேண்டும்.

(5) திசைகளைக் கூறுவதற்குப்பதில் திசையின் டிகிரி அளவைக் கூறுவது இந்த புதையல் வேட்டையின் அடுத்த படியாக அமையும். திசைகளை டிகிரிக் கணக்கில் விவரித்துப் பழக வேண்டியது இரண்டாம்தரச் சாரணர்களுக்கு அவசியம்.

(6) நட்சத்திரங்கள் தெளிவாகக் காணப்படும் முன்னிரவு இரண்டொரு மாதங்களுக்கு ஒரு முறை சாரணர்களுக்கு விண்வெளி யைக்கண்டு களிக்கும் வாய்ப்பு அளிப்பதவசியம். அப்பொழுது வானத்தில் உள்ள நட்சத்திரக் கூட்டங்களைப்பற்றிச் சாரணர் களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். இப்படிச் சாரணர்கள் சப்தரிஷி மண்டலத்தை, துருவ நட்சத்திரத்தை, ''ஓரியன்'' தலையாகிய மிருகசீர்ஷ நட்சத்திரத்தை, ''ஸிரியஸ்'' என்றழைக்கப்

படும் அக்கினி நட்சத்திரத்தை, ''கார்த்திகை,'' ''ரிஷபம்,'' ''கன்னி,'' ''விருச்சிகம்'' என்றவை போன்ற நட்சத்திரக் கூட்டங்களைப் பார்த்துப் பழகவேண்டும். இதற்குரிய பயிற்சி ஆசிரியர் தானுகவே அளிக்கலாம், அல்லது மற்றவர்கள் உதவியை நாடலாம்.

சப்தரிஷி மண்டலத்தில் உள்ள ''வழிகாட்டி''கள் எப்படித் துருவனுக்கு வழிகாட்டுகின்றன, ''கஸியோப்பியா'' என்ற நட்சத்திரக்கூட்டம் எப்படி துருவனுக்கு வழிகாட்டியாக அமைகிறது என்பதை வாய்ப்புக் கிடைக்கும்போது நிதரிசனமாக காண்பித்தல் அவசியம்.

## 6. சாரணதண்டக் கவாத்து

இது மிக முக்கியமான பயிற்சி. சாரணர்களுக்கு இந்தப் பயிற்சி மிக அவசியம். ஒழுங்காக ஒரு இடத்திலிருந்து மற்ருெரு இடம் செல்ல இது இன்றியமையாத பயிற்சி. ஒவ்வொரு வேளையில் சாரணத்தண்டம் இல்லாமலும் பயிற்சி அளிக்கலாம். ஆசிரியர் அல்லது உதவி ஆசிரியர் கவாத்துப் பயிற்சி அளித்தல் வேண்டும். கவாத்துப் பயிற்சி அளிக்கும் பழக்கம் இருவருக்கும் வேண்டும்.

ஒழுங்கும், கட்டுப்பாடும் சாரணர்களுக்கு மிக முக்கியமானவை. சாரணக் கவாத்து இந்த உயரிய பண்புகளை அளிக்கவல்லது. படைக் கூட்டம் நடைபெறும் நாட்களில் கவாத்துப் பயிற்சியும் அளித்தல் அவசியம்.

## 7. இயற்கையைப்பற்றிய குறிப்புகள்

சாரண ஆசிரியர் சாரணர்களை அடிக்கடி இயற்கைச் சுற்றுலாவிற்கு அழைத்துச் செல்லவேண்டும். மரங்களைப்பற்றி, செடிகள் கொடிகளைப்பற்றி, மிருகங்களைப்பற்றி, பறவைகளைப்பற்றி, இயற்கை வளங்களைப் பற்றி சாரணர்கள் தாங்களாகவே சிறிது சிறிதாக அறிந்துகொள்ள இந்தச் சுற்றுலாக்கள் வசதியளிக்கும். இயற்கைக் குறிப்புகள் தயார் செய்யவும் இவை வாய்ப்புத்தரும்.

இரண்டாம்தரச் சாரணப் பயிற்சி அளிக்கும் சாரண ஆசிரியர் அந்தப் பயிற்சிக்குள்ள பயிற்சித்திட்டத்தை அப்படியே தன் மனக் கண்முன் எப்பொழுதும் வைத்துக்கொண்டு தனக்குக் கிடைக்கும் வாய்ப்புகளுக்குத் தகுந்த முறையில் சாரணர்களின் ஆர்வத்துக்கும் ஆற்றலுக்கும் ஒத்தமுறையில் பயிற்சி அளிக்கவேண்டும்.

சாரணப் பயிற்சி நல்ல பயனுள்ள அனுபவமாக அமைய வேண்டும். சாரண ஆசிரியர் விரும்பின் இது அந்தவிதமாக அமையும்.

# 8. முதல் தரச் சாரணன்

முதல் தரச் சாரணன் ஆவதற்கு (1) சாரணச் சிறுவன் 14 வயதுடையவனுக இருக்க வேண்டும். (2) இளம்பாதச் சாரணத் தேர்வு, இரண்டாம்தரச் சாரணத் தேர்வு ஆகிய தேர்வுகளில் மறு படியும், பங்குகொள்ள அவன் ஆயத்தமாக இருத்தல் வேண்டும். அதுதவிர (3) அடியிற் குறிப்பிடப்பட்டுள்ள சாரணக் கலைகளில் தேர்ச்சி பெற்றிருக்கவும் வேண்டும்.

(1) நீச்சல் கலை (Swimming), (2) ஆக்கக் கலை (Pioneering), (3) சைகைப் பேச்சு (Signalling), (4) கண்மதிப்பு (Estimation), (5) முதல் உதவி (First Aid), (6) சமையல் கலை (Cooking), (7) நிலப்படம் வரையும் கலை (Mapping), (8) கோடரிக் கலை (Axemanship), (9) பயணக் கலை (Scout journey), (10) பாசறைக் கலை (Camping) முதலியவற்றில் தேர்ச்சி பெற்றிருக்கவேண்டும். மேலும்,

(11) சாரண இயக்கத்தில் சேரவிரும்பும் புதுப்பையன் ஒருவனுக்கு இளம்பாதப் பயிற்சியளித்து அவனை உரிய தேர்வு களில் தேர்ச்சிபெற வைப்பது முதல்தரச் சாரணனுக விரும்பும் சாரணன் செய்யவேண்டிய கடமை. அந்தப் பயிற்சிக்குரிய சாரணக் கலைகளை நன்கு கற்றிருப்பது அவசியம். அவனுக்கு அவைகளை ஐயந் திரிபறக் கற்பிக்கும் ஆற்றலும் வேண்டும்.

(12) முதல்தரச் சாரணனுக விரும்பும் சாரணன் தானுகவே ஒரு ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதித்து, சம்பாதித்த பணத்தைச் சேமிப்பு வங்கியில் போட்டுவிட்டுத் தன் சாரண ஆசிரியருக்குத் தெரிவித்தல் வேண்டும். இதோடு விட்டுவிடாமல் சம்பாதிப்பதும் சேமிப்பதும் ஆகிய ஒரு நல்ல பழக்கத்துக்கு அவன் ஆளாவது அவசியம். தபால் நிலையத்தில் அல்லது வேறு வங்கிகளில் ஆரம்பிக்கப் பட்ட இந்த சேமிப்புக் கணக்கு நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வரவேண்டும். அதற்குரிய வழிகளை அவன் தேடிக் கொள்வது அவசியம்.

(13) முதல்தரச் சாரணச் சின்னத்துக்கு அருகதை அடைவ தற்கு பதின்மூன்ருவதாக உள்ள நிபந்தனை இரண்டாந்தரச் சின் னத்தைப் பெற்றபிறகு தான் மாவட்ட ஆணையாளரின் அங்கீகாரம்

பெற்ற ஏதாவது சமுதாயத் தொண்டுகளில் ஈடுபட்டு 8 மணி நேரம் பங்கெடுத்துக் கொண்டு உழைப்புத்தானம் செய்த அனுபவம் பெற வேண்டும். இதற்குரிய வாய்ப்புக்களை சாரண ஆசிரியர் அளிப்பது அவசியம். இது நாளடைவில் செய்யப்பட வேண்டிய ஏற்பாடுகளுள் அடங்கும்.

## 1. நீச்சல் கலை (Swimming)

முதல்தரச் சாரணன் ஆவதற்குத் தேர்ச்சிபெற வேண்டிய வற்றுள் முதலாவதாக உள்ளது நீச்சல் கலை.

நீச்சல் மிக முக்கியமான கலை. நீந்தும் திறன் பாராட்டுக் குரியது. அது சாரண வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்று. ஒவ்வொரு சாரணனும் இந்தக் கலையில் நல்ல தேர்ச்சியுடையவனுக இருத்தல் மிக அவசியம். ஒரு நாளில்லாவிட்டால் ஒரு நாள் தன் உயிரையே காப்பாற்றிக் கொள்ள இது பயன்படலாம். அது போலவே தன் அண்டை அயலார்களின் உயிரைக் காப்பாற்றும் அரிய வாய்ப்பினையும் இது அளிக்கலாம்.

பட்டணங்களில் நீச்சல் கற்றுக்கொள்ள நீச்சல் குளங்கள் (Swimming Pools) இருக்கின்றன. அங்கு நீச்சல் கற்பிக்கும் ஆசிரியர்களும் இருப்பார்கள். இத்தகைய இடங்களில் சாரணர்கள் நீச்சல் எளிதில் கற்றுக் கொள்ளலாம்.

நீச்சல் குள வசதிகள் இல்லாத இடங்களில் உள்ள சாரணர்கள் தத்தம் ஊர்களில் உள்ள ஆறுகளிலும் குளங்களிலும் நீந்தக் கற்றுக் கொள்ளவேண்டும். சாரணர்கள் அல்லாத சிறுவர்கள் மிகப் பலர் நீந்தக் கற்றுக்கொள்கிருர்கள். கடமை உணர்ச்சியும் மனஉறுதியும் உள்ள சாரணர்களுக்கு நீச்சல் பயிற்சி எளிதாகவே தோன்றும். நீச்சல் மிக முக்கியமான கலை.

முதல் சாரணத்தேர்வில் வெற்றி பெறுவதற்குச் சாரணன் 50 கஜ தூரம் (45.72 மீட்டர்) நீந்த வேண்டும். இவ்வளவு நேரத்துக்குள் இந்த தூரத்தைக் கடக்கவேண்டும் என்ற நிபந்தனை கிடையாது. மேலும் எந்த மாதிரியான நீச்சல் முறையைத் தான் பயன்படுத்த வேண்டும் என்ற நிபந்தனையும் இல்லை. ஐம்பது கஜ தூரத்தை நீந்தித் தாண்டவேண்டும் என்பதுதான் நிபந்தனை.

### நீச்சல் பயிற்சிக்குப் பதில் வேறு பயிற்சி

நீச்சல் பயிற்சி ஒரு சாரணன் உடல்நலத்துக்கு அபாயம் விளை விக்கும் என்று மருத்துவர் ஒருவர் நற்சான்று அளித்துள்ளாராஞல், அல்லது நீச்சல் பயிற்சிக்குப் போதுமான வசதியில்லை என்று

மாவட்டச் சாரண ஆணையாளர் கருதினால், நீச்சல் கற்றுக்கொள்வதற்குப் பதிலாக—

பாசறைக்கலை அறிஞன் (Camper)

உடல்நலம் உடையவன் (Healthy man)

இயற்கைக் கலை அறிஞன் (Naturalist)

ஆக்கக் கலைஞன் (Pioneer)

கிராமத் தொண்டன் (Rural Worker)

என்ற கலைச்சின்னங்களுள் ஒன்றைப் பெற்றிருக்க வேண்டும். அப்படிப் பெற்றபின் நீச்சல் கலையைக் கற்கவேண்டியதில்லை.

## 2. ஆக்கக் கலை (Pioneering)

முதல்தரச் சாரணன் ஆவதற்குத் தேர்ச்சி பெற வேண்டியவற்றுள் இரண்டாவதாக உள்ளது ஆக்கக் கலை.

இந்தப் பகுதியில் முதல்தரச் சாரணன் தெரிந்துகொள்ள வேண்டியவை—(1) நேர்க்கட்டு, (Sheer Lashing)

(2) கயிற்றின் நுனி திணிப்பு (Back Splice)
கண்ணித் திணிப்பு (Eye Splice)
குறுக்குத் திணிப்பு (Cut Splice or Short Splice)

(3) நாற்காலி முடிச்சு (Fireman's Chair Knot)

(4) வண்டி இழுத்தல் தொடுப்பு (Man Harness Hitch)
நடுக்கயிற்றில் வளையமுடி (Bowline on Bight) என்பன.

### நேர்க்கட்டு (Sheer Lashing)

இரண்டு மூங்கில்களைக் கவட்டைக்கால் (Sheer legs) ஆகக் கட்டுவதற்கும், மூன்று மூங்கில்களை முக்காலி (Tripod) யாகக் கட்டுவதற்கும், மூன்று நான்கு மூங்கில்களை ஒன்று சேர்த்து ஒரு நீளக் கம்பமாகக் கட்டுவதற்கும் பயன்படும் கட்டு நேர்க்கட்டு (Sheer Lashing) எனப்படும். இம்மூன்று சந்தர்ப்பங்களிலும் இந்தக் கட்டு கட்டப்படும் முறை சிறிது வித்தியாசப்படும்.


நேர்க்கட்டு
ஆரம்பம்


அடுத்தபடி


முடிவு


கவட்டைக்கால்
(Sheer-legs)

104. நேர்க்கட்டு

## கவட்டைக் கால் கட்டு (Sheer Legs)

இரண்டு மூங்கிலையும் ஒன்றன் பக்கத்தில் ஒன்ருக வைத்தல் வேண்டும். கட்டுக்கயிற்ருல் (Lashing) ஒரு காலில் யானைக் கொலுசு போட்டுக் கொண்டு கட்டுக்கயிற்றை இரு மூங்கில்களைச் சுற்றி வரிய வேண்டும் (Wrapping). வரிவது சற்று நெகிழ்வாகவே இருத்தல் வேண்டும். ஐந்து ஆறு தடவை வரிந்த பிறகு கவட்டைக் கால்களைச் சற்றுப் பிரித்துக் கொண்டு இரண்டு மூங்கில்களுக்கும் இடையில் இரண்டு சுற்றுகள் (Frapping turns) போட்டுவிட்டு மறு மூங்கிலில் இரண்டு அரைக் கொலுசுகள் போட்டுக் கட்டை முடித்து விடவேண்டும்.

குறிப்பு: யானைக் கொலுசு போட்டு ஆரம்பிக்கும் பொழுது எப் பொழுதும் செய்வதுபோல யானைக் கொலுசின் நுனியை நீளக் கயிற்ருேடு முறுக்கிக் கொண்டு பிறகு வரிய வேண்டும். வரிதலும் சற்றுத் தளர்வாகவே வரியவேண்டும். அப்படிச் செய்தால் மட்டுமே இரண்டு கால்களையும் பிரித்து அமைத்தல் கூடும்.

## முக்காலிக் கட்டு (Tripod)

முக்காலிக்குரிய கட்டை இரண்டு மாதிரியாகக் கட்டலாம். **முதல்முறை :** படத்தில் காண்பித்துள்ளதுபோல மூன்று மூங்கில் களையும் நிலத்தில் வைக்கவேண்டும். இரண்டு கால்கள் ஒரு பக்கமாகவும் இன்னொன்று அவைகளுக்கு எதிர்ப்பக்கத்திலும் இருக்கும்.

நடுவில் உள்ள மூங்கிலில் யானைக் கொலுசுபோட்டு ஆரம்பிக் கவும். யானைக் கொலுசு நுனியை நீளக் கயிற்றையும் முறுக்கிக் கொண்டு மூன்று கால்களையும் சேர்த்து வரிய வேண்டும். வரிவது சற்று நெகிழ்வாக இருக்கவேண்டும். ஐந்து ஆறுதரம் வரிந்த பிறகு மூன்று கால்களையும் முக்காலியாகப் பிரித்து வைத்துக்கொண்டு மூங்கில்களுக்கிடையில் இடைச்சுற்று (Frapping) போடவேண்டும். இரண்டு அல்லது மூன்று இடைச்சுற்றுகள் போதுமானது. அப்புறம் கட்டு மிக இறுக்கமாக இல்லாமல் அதைச் சரிபண்ண வேண்டும். இரண்டு அரைக் கொலுசுகள் போட்டு வெளிப்பக்கம் உள்ள காலில் கட்டி முடித்து விடவேண்டும்.




105. முக்காலிக்கட்டு I (Tripod Lashing)

**இரண்டாவது முறை :** மூன்று கால்களையும் முன்போலவே வைத்துக்கொண்டு வெளிப்பக்கம் உள்ள ஒரு காலில் யானைக் கொலுசு போட்டு ஆரம்பம் செய்யவேண்டும். யானைக் கொலுசு நுனியையும் நீளக் கயிற்றையும் முறுக்கிக் கொண்டு 8 உருவத்தில் (Figure of Eight Knot) கட்டுப் போடவேண்டும். இது ஒரு மூங்கிலுக்கு மேலாகவும் அடுத்ததுக்குக் கீழாகவும் அப்படி மாறிமாறி வரும். நான்கு ஐந்துதரம் வரிதல் (Wrapping) முடிந்ததும் இடைச் சுற்று (Frapping) போட்டுக் கட்டைச் சிறிது சிறிதாக இறுக்க

வேண்டும். எந்தக் காலில் ஆரம்பம் செய்தோமோ அதை விட்டு விட்டு அடுத்த வெளிப்பக்கக் காலில் இரண்டு அரைக் கொலுசு போட்டு முடித்து விடவேண்டும்.



(1) (2)

106. முக்காலிக்கட்டு II (Tripod Lashing)

இங்கு தரப்பட்டுள்ள இரு முறைகளும் நல்ல பளுவைத் தாங்கக் கூடிய முக்காலிகளுக்கு உரியன. ஜான் தர்மன் (John Thurman) எழுதியுள்ள 'பயனியரிங் பிரின்ஸிபிள்ஸ்' (Pioneering Principles) என்ற புத்தகத்திலும், எரிக் பிராங்க்லின் (Eric Franklin) எழுதியுள்ள 'டையிங் நாட்ஸ்' (Tying Knots) என்ற புத்தகத்திலும் விவரிக்கப் பட்டுள்ளன. இவைகளைக் கட்டும்போது கவனமாகவே கட்ட வேண்டும். கட்டுகளை முதலில் இறுக்கமாகக் கட்டாமல் சற்று நெகிழ்வாகவே கட்டிப் பின்னால் கட்டை முடிக்கும்போது கட்டின் இறுக்கத்தை முடிவிலிருந்து ஆரம்பம் வரை சிறிது சிறிதாகச் சரி பண்ண வேண்டும். கடைசியாக மூன்று கால்களையும் தரையில் முக்காலியாக நிற்கவைத்து அதன் பின்னர் கட்டை இறுக்க வேண்டிய அளவுக்கு இறுக்கி குறுக்குக்கட்டுப் போட்டுப் பின் முடிக்க வேண்டிய முறையில் முடித்துக் கொள்ளவேண்டும். செயல் முறையில் எவ்வித இடைஞ்சலும் இல்லை.

## சாதாரண முறை I

மூன்று கழிகளையும் தரையில் ஒன்று போலவே வைக்க வேண்டும். மூன்று நுனிகளும் ஒரு பக்கம் இருக்க மூன்று அடிப் பக்கங்களும் மறு பக்கம் இருக்கவேண்டும். நுனிப்பக்கத்தில் ஒரு சில சென்டி மீட்டருக்குக் கீழாகக் கட்டுப்போட வேண்டும். முதலில் வெளிப்பக்கம் உள்ள கழி ஒன்றில் யானைக் கொலுசு போட

வேண்டும். கயிற்றின் நுனியை நீட்டுக் கயிற்ளேடு முறுக்கிக் கொண்டு கயிற்றைச் சுற்றி இரண்டு மூன்று வரிதல்களுக்குப் பின் ''எட்டு முடி'' (Figure of Eight Knot) போட்டுக் கழிகளை ஒன்ருக இணைக்கவேண்டும். ஐந்தாறு வரிதல்களுக்குப் பின் இறுக்குச் சுற்று போட்டு கட்டை யானைக் கொலுசு அமைத்து முடித்து விடவேண்டும்.

## சாதாரண முறை II

முன்போல மூன்று கழிகளையும் நுனிகள் ஒரு பக்கமாகவும் அடிப்பக்கங்கள் மறு பக்கமாகவும் வைத்து, ஏதாவது ஒரு கழியில் யானைக் கொலுசு போட்டு ஆரம்பம் செய்யவேண்டும். அப்புறம் நீட்டுக்கயிற்றைக் கழிகளைச் சுற்றி வரிய வேண்டும். நான்கு ஐந்து வரிதல் முடிந்ததும் கழிகளைத் தரையில் முக்காலியாக அமைத்து அதன் பின்னர் ''எட்டுமுடி'' (Figure of Eight Knot) போட்டு, பின் குறுக்குக்கட்டுப் போடவேண்டும். கடைசியாக முன் யானைக் கொலுசு போட்டு ஆரம்பித்த கழியை விட்டுவிட்டு மற்றைய வெளிப் பக்கக் கழியில் கட்டை முடிக்கவேண்டும்.

## சாதாரண முறை III

இந்த முறை தண்ணீர்த் தட்டு (Wash Basin) வைத்தற்கு ஏற்றது. மூன்று கழிகளையும் அடிப்பக்கங்கள் ஒரு பக்கமும் நுனிப் பக்கங்கள் மறு பக்கமும் இருக்கும்படி வைத்துக் கொண்டு, நுனிப் பக்கத்தில் நுனியில் இருந்து 20, 25 சென்டி மீட்டர் கீழாகக் கட்டுப் போடவேண்டும். கயிற்றின் கட்டும் நுனியைக் கீழிலிருந்து மேலாக, கழிகளை ஒட்டி, நீளவாட்டில் வைத்துக்கொண்டு மேலிருந்து கீழாக வரிய வேண்டும். அப்படி வரிந்த பிறகு கடைசியாக கயிற்றின் மறு நுனியை கழிகளுக்கும் வரிதலுக்கும் நடுவில் திணித்துக் கட்டை முடித்துவிடலாம் கழிகளை முக்காலியாகத் தரையில் அமைத்துக் கொண்டு முக்காலியின் மேல் தண்ணீர்த் தட்டை வைக்கலாம்.

## கொடிக்கம்பக் கட்டு (Flag Staff)

மூன்று மூங்கில் உபயோகித்து ஒரு கொடிக்கம்பம் தயார் பண்ணலாம். மூங்கில்களின் அடிப்பக்கம் எல்லாம் ஒரு திசையாக வும் நுனிகள் எல்லாம் ஒரு திசையாகவும் இருக்கும்படி இவைகளைத் தரையில் வைக்கவேண்டும். மேலும் முதலாவது மூன்ருவதாகிய மூங்கில்கள் ஒரு பக்கத்தில் ஒன்றுக்கொன்று நேராக இருக்க வேண்டும். இரண்டாவது மூங்கில் முதலாவது மூன்ருவது மூங்கில்களை

ஒட்டி மறுபக்கம் வைக்கப்பட வேண்டும். அடுத்தடுத்துள்ள மூங்கில்களின் அடியும் நுனியும் அளவிற்கு ஒரு மீட்டர் ஏற்றி வைக்கப்பட வேண்டும். ஏற்றி வைக்கப்பட்டுள்ள பாகத்தில் மேல் ஒரு கட்டும் கீழ் ஒரு கட்டுமாக படத்தில் உள்ளபடி இரண்டு கட்டுகள் கட்ட வேண்டும். ஒவ்வொரு கட்டும் இரண்டு மூங்கிலேயும் சுற்றி இருக்கவேண்டும். ஐந்து ஆறு வரிதலுக்குப் பிறகு இரண்டு அரைக் கொலுசு போட்டுக் கட்டை முடித்துவிட வேண்டும்

மூன்று மூங்கில்கள் ஒன்றின்மேல் ஒன்று ஏற்றி வைக்கப்பட்ட இடம் இரண்டு. இந்த இரண்டு இடத்துக்கும் சேர்ந்து நான்கு கட்டுகள் தேவை. கட்டுகள் கட்டி முடிந்ததும் மரத்தால் சீவி அமைக்கப்பட்ட முளைகளை (Pegs) படத்தில் காண்பித்திருப்பது போல் கட்டுக்கு நடுவில் இறுக்கவேண்டும்.



107. கொடிக் கம்பக் கட்டு (Flag Staff Lashing)

இப்படி இணைக்கப்பட்ட மூங்கில்கள் ஒரு கொடிக்கம்பமாக அமையும்.

## சாரணத் தண்டக் கொடிக்கம்பம்

சாரணர்கள் தங்கள் சாரண தண்டங்களில் மூன்றைப் பயன் படுத்தி 10 அடி உயரம் உள்ள கொடிக்கம்பம் செய்யலாம். இப்படி அமைத்தலை ஒரு போட்டி விளையாட்டாகவும் விளையாடலாம்.

## புரி திணித்தல் (Splicing)

கயிற்றில் உள்ள புரிகளைப் பிரித்து வைத்துக் கொண்டு கயிற்றின் புரிகளுக்கு நடுவில் வேறு புரிகளை அழகு பெறத் திணிப்பது புரி திணித்தல் எனப்படும்.

முதல் தரச் சாரணன் தெரிந்துகொள்ள வேண்டிய புரி திணித்தல் மூன்று வகைப்படும். அவை (1) நுனித்திணிப்பு (Backsplice) (2) கண்ணித்திணிப்பு (Eye splice) (3) குறுக்குத்திணிப்பு அல்லது வெட்டுத் திணிப்பு (Short splice or Cut splice) என்பன.

## நுனித் திணிப்பு (Back Splice)

நுனித் திணிப்பு கயிற்றின் நுனியை உறுதி பெறச் செய்யும்.

புரி திணித்தல் பயிற்சிக்கு மூன்று புரிகள் உள்ள கயிறுகளைப் பயன்படுத்தல் நல்லது. பயிற்சி பெற்றபின் நான்கு அல்லது பல புரிக் கயிறுகளைப் பயன்படுத்திப் பழகலாம்.



(1)



(2)



(3)



(4)



(5)



(6)

108 நுனித் திணிப்பு செயல்முறை
(1) ஆரம்பம் (2) (3) (4) (5) அடுத்த படிகள் (6) முடிவு

**செயல் முறை :**

(1) முதலில் கயிற்றின் நுனியில் உள்ள புரிகளை 6 அல்லது 7 செ. மீ. நீளத்துக்குப் பிரித்து விட்டுக் கொண்டு அவைகளை மடக்கி படத்தில் காண்பித்திருக்கிறபடி ஒன்றனுள் ஒன்று ஏறும்படி திணிக்க வேண்டும். இந்த முடிச்சு கிரீடமுடி (Crown Knot) எனப்படும். கிரீடமுடிச்சை நன்ருக இழுத்து இறுக்க வேண்டும்.

(2) கிரீடமுடிச்சு கட்டி முடிந்ததும் புரிகள் குறுக்காக மூன்று பக்கங்களிலும் காணப்படும். அவைகளைப் பக்குவமாக இழுத்துக் கீழ் நோக்கித் திருப்ப வேண்டும். இப்படி இழுத்து விட்டு விட்டு ஒவ்வொரு புரியையும் அடுத்துள்ள புரிக்கு மேலாகவும் அதற்கு அடுத்துள்ள புரிக்குக் கீழாகவும் திணிக்க வேண்டும். இப்படி முறையாக மூன்று புரிகள் திணிக்கப்பட்டபின் அவை ஒவ்வொன்றையும் கயிற்றில் உள்ள புரிகளின் போக்குக்கு எதிராக இழுத்து இறுகச் செய்ய வேண்டும்.

(3) இப்படி மூன்று சுற்றுப் புரி திணித்தல் செய்த பிறகு தொங்கிக் கொண்டிருக்கும் நுனிகளைச் செம்மையாகக் கத்தரித்து எடுத்துவிட்டுப் புரி திணித்தல் செய்த பாகத்தைத் தரையில் போட்டுப் பாதரட்சை அணிந்துள்ள காலால் அழுத்தி உருட்டினுல் அது ஒழுங்கான தோற்றத்தைப் பெறும்.

## கண்ணித் திணிப்பு (Eye Splice)

ஒரு கயிற்றின் நுனியில் சிறிய அல்லது பெரிய வளையம் (loop) ஒன்று அமைக்கக் கண்ணித் திணிப்பு (Eye Splice) பயன்படும். கண்ணித் திணிப்பு நிரந்தரமானதும் உறுதி வாய்ந்ததுமான ஒரு வளையத்தை அமைத்துத் தரும்.

**செயல் முறை :**

கயிற்றின் நுனியில் புரிகளை 6 அல்லது 7 செ. மீ. நீளத்துக்கு பிரித்து வளையம் எவ்வளவு பெரிதாக இருக்க வேண்டுமோ அதற்கு ஏற்ற இடத்தில் கயிற்றுப் புரிகளுக்குள் திணிப்பது இதன் செயல் முறையாகும்.

(1) மூன்று புரி நுனிகளையும் முறையாக கயிற்றின் புரி களுக்குள் திணிப்பது முதற்படி. புரிகளுக்குள் திணித்த திணிப்பு களை ஒன்று போலக் கயிற்றுக்குள் இழுத்து விடவேண்டும். அப்படிச் செய்தால் நெடுங் கயிறும் வளையமும் அழகுறச் சேர்ந்து காணப்படும்.

(2) இது போலவே மூன்று புரி நுனிகளையும் இழுத்து இறுகும்படி செய்ய வேண்டும். அதன் பிறகு நீண்டு நிற்கும் புரிகளைக் கத்தரித்து விடவேண்டும்.

நுனித் திணித்தலுக்குக் கூறியுள்ளபடியேதான் கண்ணித் திணிப்பிலும் புரிகளைத் திணிக்க வேண்டும். புரி ஒவ்வொன்றும் அடுத்துள்ள புரிக்கு மேலாகவும் அதற்கு அடுத்த புரிக்குக் கீழாகவும் மாறி மாறி வரவேண்டும். புரிகளை இழுத்து இறுக்குவது கயிற்றிலுள்ள புரிகளின் எதிரிடையாக இருத்தல் வேண்டும்.



109. கண்ணித் திணிப்பு (**Eye Splice**) செயல் முறை

## குறுக்குத் திணிப்பு (Short Splice)

உபயோகத்தில் உள்ள கயிறு நைந்து போனல், நைந்து போன பாகத்தை வெட்டி எறிந்து விட்டு மீதியுள்ள இரு துண்டுகளையும் இணைத்து ஒரு கயிருகச் செய்வது குறுக்குத் திணிப்பு (Short Splice) எனப்படும். அதனை வெட்டுத் திணிப்பு (Cut Splice) என்றும் கூறுவர்.



110. குறுக்குத் திணிப்பு செயல் முறை (Short Splice)

### இதன் செயல் முறை

(1) இரு துண்டுகளிலும் ஏறக்குறைய ஆறு அல்லது ஏழு சென்டி மீட்டர் நீளத்துக்குப் புரியைப் பிரித்துவிட வேண்டும். பிரிந்துள்ள

புரிகளை படத்தில் காண்பித்துள்ளபடி ஒன்று மற்றையதுக்குள் இணையும்படி வைத்து இரண்டு பக்கத்திலும் நூலால் கட்ட வேண்டும்.

(2) ஒரு பக்கத்தில் உள்ள நூலை அவிழ்த்து விட்டு அந்தப் பக்கத்தில் உள்ள மூன்று பிரிவுகளையும் முறையாக புரி திணிக்க வேண்டும். பிறகு மறுபக்கத்து நூலை அவிழ்த்து விட்டு அந்தப் பக்கத்தில் உள்ள நுனிகளையும் முறையாகப் புரி திணிக்க வேண்டும். அப்புறம் புரி திணித்த பாகத்தைத் தரையில் போட்டு பாதரட்சை அணிந்துள்ள காலால் அழுத்தி உருட்ட வேண்டும். நீண்டு நிற்கும் புரி நுனிகளை ஒழுங்காகக் கத்தரித்து விடவேண்டும்.

## தீயணைப்போர் நாற்காலி முடிச்சு

### (Fireman's Chair Knot)

தீ விபத்தில் தொண்டு புரியும் சாரணர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய முடிச்சுகளுள் மிகவும் முக்கியமானது நாற்காலி முடிச்சு என்பதாகும். இது நீளமான கயிற்றில் அதன் நேர் நடுவில் கட்ட வேண்டிய முடிச்சு. தீ விபத்தில் பயன்படும் முடிச்சு.

நாற்காலி முடிச்சில் இரண்டு வளையங்கள் (loops) உண்டு. இது தீ விபத்தில் அகப்பட்டுக் கொண்டுள்ளவரை மேல் மாடியில் இருந்து கீழே இறக்குவதற்குப் பயன்படும் முடிச்சு. விபத்தில் அகப்பட்டுக் கொண்டவரை நாற்காலியில் உட்காருவது போல இந்த வளையங்களில் உட்கார வைத்துக் கீழே இறக்கலாம். ஒரு வளையத்தை விபத்திலுள்ளவரின் அக்குள்களுக்கு அடியிலும் இன்னொரு வளையத்தை கால் மூட்டுகளுக்கு அடியிலுமாக அமைத்தால் அவரைக் கீழே இறக்குவது எளிது. மாடிமேல் உள்ள சாரண உதவியாளர்கள் தங்கள் கயிற்றை மெல்ல மெல்ல இறக்க வேண்டும். கீழே இருப்பவர்கள் இழுத்துப் பிடித்து மெதுவாக இறக்க வேண்டும்.

### செயல்முறை

(1) நாற்காலி முடிச்சு கட்டுவதற்கு முதலில் கயிற்றின் நடுவை கண்டுபிடிக்க வேண்டும். கண்டுபிடித்து அந்த இடத்தில் யானைக் கொலுசு மாதிரி இரண்டு வளையங்கள் அமைக்க வேண்டும். அந்த வளையங்களை ஒன்றுக்குள் ஒன்றாக படத்தில் காண்பித்திருப்பது போல இரண்டு பக்கத்திலும் இழுத்துவிட வேண்டும்.

(2) இப்பொழுது முடிச்சு படத்தில் காண்பித்துள்ளது போல இருக்கும்.


1


2


3


4

111. தீயணைப்போர் நாற்காலி முடிச்சு செயல்முறை.
(Fireman's Chair Knot)

1. ஆரம்பம், 2. அடுத்தபடி,
3. மூன்ருவதுபடி, 4. நான்காவதுபடி (முடிவு).

முடிச்சு அழகாக இறுக்கப்பட வேண்டும். இரு வளையங்களுள் நீளமாக உள்ளது உட்காருவதற்கும் மற்றையது உடம்பைத் தாங்கிக் கொள்ளவும் பயன்படும்.

(3) அடுத்தபடியாக இந்த முடிச்சை மத்தியில் இறுக்க வேண்டும். இரு பக்கங்களிலும் இரண்டு வளையங்கள் தொங்கும். கயிற்றின் நீளப் பாகத்தைக் கொண்டு ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு அரைக் கொலுசு அமைக்க வேண்டும்.

## வண்டி இழுத்தல் தொடுப்பு
(Man Harness Hitch)

நான்கு ஐந்து பேர் வண்டியை இழுப்பதற்கு வண்டி இழுத்தல் தொடுப்பு நல்ல முறையில் பயன்படும். இந்தத் தொடுப்பு கட்டுவதற்கு வடத்தின் நுனி தேவையில்லை. கயிற்றின் நடுவைக் கொண்டே இந்தத் தொடுப்பைக் கட்டுதல் கூடும்.



முதலில் படத்தில் காண்பித்திருப்பது போல கயிற்றை வைக்க வேண்டும். பின்னல் படத்தில் குறிப்பிட்டிருக்கிறபடி கயிற்றை வளையத்தின் வழியாக இழுக்க வேண்டும். இழுத்தால் அடுத்த படத்தில் உள்ளது போல தொடுப்பு உருவெடுக்கும்.

1. ஆரம்பம்



2. இரண்டாவது படி



3. முடிவு

112. வண்டி இழுத்தல் தொடுப்பு—செயல்முறை.
(Man Harness Hitch)

## நடுக் கயிற்றில் வளையமுடிச்சு
(Bowline on a Bight)

கயிற்றை நடுவில் மடித்துக் கொண்டு மடிக்கப்பட்டுள்ள இடத்தில் வளையமுடிச்சு அமைத்தால் அத்தகைய வளையமுடிச்சு இரு பிரிவாகக் காணப்படும். அந்தப் பிரிவினுள் கால்களைப் நுழைத்துக் கொண்டு கையால் மேற் கயிற்றை பிடித்துக் கொண்டால் கிணற்றுக்குள் அல்லது பள்ள மான இடங்களுக்குள் இறங்குவது எளிது. கிணற்றில் இருந்து பிராணிகளை அல்லது மனிதர்களை வெளி யேற்றவும் இதனைப் பயன் படுத்தலாம்.



113. நடுக் கயிற்று வளையமுடி (Bowline on Bight)

### செயல்முறை

கயிற்றை மடித்து, மடித்துள்ள இடத்தில் கயிற்றின் மடிக்கப்பட்டுள்ள இரட்டை மடிப்புடைய நுனியைக் கட்டும் நுனி (Working End) ஆகக் கொண்டு வளையமுடிச்சு அமைக்க வேண்டும். வழக்கமாகச் செய்வதுபோல நுனி (அதாவது மடித்துள்ள நுனி) மேல் உள்ள வளையத்துக்குள் எடுத்துச் செல்லபட்டு நீட்டுக் கயிற்றைச் சுற்றிக்கொண்டு வந்து பழையபடி வளையத்துக்குள் நுழைக்கப்பட்ட பிறகு அதனைச் சிறிது மிகுதியாகவே இழுத்துக் கொண்டு நுனியில் உள்ள வளையத்துக்குள் முடிச்சு உள்படக்

கயிற்றை இழுத்துவிட வேண்டும். இப்பொழுது வளையமுடிச்சு இரட்டையாக அமைந்து காணப்படும். கயிற்றில் இரண்டு வளையமுடிச்சுகளும் இரண்டு நீட்டுக் கயிறுகளும் இருக்கும். போதுமான பலமும் நீளமுமுடைய கயிருக இருந்தால் கிணற்றிலிருந்து பிராணிகளையும் மனிதர்களையும் கரையேற்ற அதனைப் பயன்படுத்தலாம்.

இந்தப் பலவகை முடிச்சுக்களை, தொடுப்புக்களைக் கற்கும் சாரணன் இன்னும் இரண்டொரு முடிச்சுக்களையும் தொங்கட்டங்களையும் கற்றுக்கொள்வது நல்லது.

## ஊஞ்சல்கட்டு (Scaffold Sling)

ஊஞ்சல் பலகையைக் கட்டுவதற்கு இது பயன்படும். கட்டும் முறை படத்தில் விளக்கப்பட்டுள்ளது.



1. ஆரம்பம்.



2. இரண்டாவது



3. முடிவு.

114. ஊஞ்சல்கட்டு செயல்முறை (Scaffold Sling)

## தண்ணீர்க் குவளைத் தூக்கு (Jug Sling)

இது தண்ணீர் அல்லது பால், தயிர் முதலியவற்றைத் தொலைவில் உள்ள ஊர்களுக்கு எடுத்துச் செல்லப் பயன்படும். இந்த முடிச்சு கட்டும் முறை படத்தில் விளக்கப்பட்டுள்ளது.




115. தண்ணீர்க் குவளைத் தூக்கு—செய்முறை.
(Jug or Bottle Sling)

1. ஆரம்பம், 2. இரண்டாவதுபடி, 3. மூன்ருவதுபடி 4. முடிவு.

## பீப்பாய்த் தொங்கட்டம் (Barrel Sling)

சில வேளைகளில் பீப்பாய் அல்லது கள்ளிப்பெட்டி போன்றவை களைப் படகுகளில் ஏற்ற வேண்டியதாக வரும். அப்பொழுது படத்தில் விளக்கியுள்ள முறைகளைப் பயன்படுத்தலாம். முதல் முறையில் வட்டக் கயிற்றைப் பயன்படுத்தி தொங்கட்டம் அமைக்கப் பட்டுள்ளது. இரண்டாவதில் கயிற்றைச் சுற்றிக் கொண்டுவந்து கடைசியாக வளையமுடி கட்டி முடிக்கப்பட்டுள்ளது.





116. பீப்பாய் தொங்கட்டம் I.
(Barrel Sling)

117. பீப்பாய் தொங்கட்டம் II
(Barrel Sling)

## பாலத்தட்டி அமைத்தல் (Trestle Building)

பாலத்தட்டி என்பது பாலங்கள் அமைப்பதற்காகப் பயன்படுத்தப் படும் தட்டி. தட்டிகள் பல அளவுகளில் இருக்கலாம். சாரண தண்டங்களை உபயோகித்து மாதிரி (Model) த் தட்டிகள் கட்டலாம். 8 அல்லது 4 மீட்டர் நீளமும் 6 அல்லது 7 செ. மீ. கனமும் உள்ள கொம்புகளால் அமைக்கப்பெறும் பாலத்தட்டிகள் உறுதி உள்ளன வாய் இருக்கும். சிறு ஆறுகளை கடக்க அவைகள் பயன்படும்.

ஒரு பாலத்தட்டிக்கு ஆறு கொம்புகள் தேவைப்படும். ஆறு கொம்புகளும் ஒரே நீளமுடையனவாய் இருக்கவேண்டும்.

படத்தில் காண்பித்துள்ள மாதிரி 6 சாரண தண்டங்களைத் தரையில் வைக்கவேண்டும். அவற்றுள் கால்கள் (Legs) இரண்டு, மேல்சட்டம் (Transom) ஒன்று, கீழ்ச்சட்டம் ஒன்று, குறுக்குச் சட்டங்கள் (Diagonal Braces) இரண்டு.

கால்களின் மேலே மேல் சட்டமும் கீழ்ச்சட்டமும் வைக்கப்பட வேண்டும். கால்களுக்குக் கீழ்ப்பக்கமாக குறுக்குச்சட்டங்கள் வரும். கொம்புகளின் அடிப்பக்கம் (butts) மூன்று கால்களுக்கு




118. பாலத்தட்டி அமைத்தல் (Trestle Building)

அடிப்பக்கமாகவும் நுனிப்பக்கங்களுள் ஒன்று காலுக்கு மேல் பக்க மாகவும் வைப்பது அவசியம். அப்பொழுதுதான் தட்டி உறுதியாக இருக்கும். இது படத்தில் நன்ருக விளக்கப்பட்டுள்ளது. அடிப் பாகம் அகலமாகவும் நுனிப்பாகம் உள்ளுக்குச் சாய்ந்தும் வைக்கப் படவேண்டும். இந்தச் சாய்வு ''6க்கு 1'' என்ற அளவில் அமைய வேண்டும்.

மேற்சொல்லியபடி கொம்புகளை வைத்து, கொம்புகள் ஒன்றை யொன்று தொடும் இடத்தில் சதுரக்கட்டு போடவேண்டும். கட்டுகள் மிக இறுக்கமாகப் போடப்பட்டாலும் தட்டி உறுதி அடையாது. அது கோணலாக முன்னும் பின்னும் அசையும். இதை உறுதியாக இருக்கும்படி செய்யவே இரண்டு குறுக்குச் சட்டங்கள் அமைக்கப் படுகின்றன. (Diagonal Braces)

இரண்டு குறுக்குச் சட்டங்களும் சேரும் இடத்தில் அவை ஒன்றை ஒன்று தொடாமல் விலகி நிற்கும். பருமரத் தொடுப்பு (Timber Hitch) போட்டு இழுத்து நெருங்கச் செய்து, குறுக்குக்கட்டு (Diagonal Lashing) ப் போடவேண்டும்.

தட்டியின் கால்கள் ''6க்கு 1'' என்ற சரிவில் இருக்க வேண்டும். அப்படி கால்களை வைப்பதற்கு ஒரு குறுக்கு வழி உண்டு. மேல் சட்டத்தில் கால்கள் மத்தியில் உள்ள தூரத்தை

அளந்து கொண்டு அந்த நீளத்தோடு அதன் மூன்றில் ஒரு பாகத்தையும் கூட்டவேண்டும். அப்படி வந்த அளவு அடிச்சட்டத்தில் கால்கள் மத்தியில் அமையவேண்டிய தூரத்தைக் குறிக்கும்.

கனமுள்ள கொம்புகளைப் பயன்படுத்திப் பாலத்தட்டி அமைக்கும்போது கட்டுக் கயிறு (Lashing Ropes) என்ன பருமன் உள்ளதாக இருக்கவேண்டும், எவ்வளவு நீளம் உடையதாக இருக்கவேண்டும் என்பதற்கும் ஒரு குறுக்கு வழியுண்டு.

(1) கட்டுக் கயிற்றின் கனம் (அதாவது குறுக்களவு) நாம் பயன்படுத்தும் கழிகளின் கனம் அல்லது குறுக்களவின் $\frac{1}{12}$ பாகம் ஆகும். கட்டுக் கயிறு பயன்படுத்தும் கழியின் கனம் எத்தனை அடியோ அத்தனை அங்குல கனம் உள்ளதாக இருக்கவேண்டும். கழிகள் 6 அங்குல கனமானல் கட்டுக்கயிறு $\frac{1}{2}$ அங்குல கனமுடையதாக இருக்கவேண்டும்.

(2) கட்டுக் கயிற்றின் நீளம்-நாம் பயன்படுத்தும் கழிகளின் கனம் எத்தனை அங்குலமோ அத்தனை ''பாகம்'' (fathoms) நீளம் இருக்கவேண்டும் ''பாகம்'' என்பது ஆறு அடி நீளம்

சாரண தண்டங்களைக் கொண்டு பாலத்தட்டி அமைத்துப் பழகலாம். அப்படி அமைக்கப்பட்ட பாலத்தட்டிகளால் பாலமும் கட்டிப் பழகலாம். ஆனல் அந்தப் பாலங்கள் மாதிரிப் பாலங்களாக அமையுமே ஒழிய கனத்த பாரத்தைத் தாங்கக்கூடிய பாலங்கள் ஆகமாட்டா.

## விகான் கொடிக்கம்பம் (Wigan Flagstaff)

இது தரையில் புதைக்கப்படாமல் எங்கெங்கு வேண்டுமோ அங்கு நிற்கவைத்துக் கொள்ளக்கூடிய கொடிக்கம்பம். இதனைச் சாரண தண்டங்களாலேயே செய்யலாம்.

விகான் கொடிக்கம்பம் மூன்று பாகங்களைக் கொண்டது. அவை (1) அடித்தட்டு (2) கொடிக்கம்பம் (3) நிலைக்கயிறுகள் அல்லது நிலைநிறுத்தும் கொம்புகள்.

அடித்தட்டு நான்கு பக்கங்களில் நாலு தண்டமும் நடுவில் இரண்டு தண்டமும் உள்ளது. சதுரக்கட்டுகளால் அமைக்கப் பட்டுள்ளது.

கொடிக்கம்பம் இரண்டு அல்லது மூன்று சாரண தண்டங்களால் ஆனது. தண்டங்கள் நேர்க் கட்டுக்களால் அமைக்கப்பட்டுள்ளது. கொடிக்கம்பத்தில் கொடியைப் பறக்கவிடுவதற்கு தனிக்கயிறும்

சாவி வளையமும் வேண்டும். நிலைநிறுத்தும் கொம்புகள் அல்லது கயிறுகள் கொடிக்கம்பத்தைச் சாய்ந்துவிடாமல் காப்பாற்றும். இந்தக் கொம்புகளை கொடிக்கம்பத்தோடு சேர்த்து வரிந்து கட்டலாம். அடித்தட்டில் அவைகள் சதுரக்கட்டுப் போட்டு இணைக்கப்படும். நிலைநிறுத்தும் கொம்புகளுக்குப் பதில் நிலைக்கயிறுகளால் நிலை நிறுத்தலாம்.

பாலத்தட்டி அமைத்தலும் விகான் கொடிக்கம்பம் அமைத்தலும் முதல்தரச் சாரணத் தேர்வுக்கு அவசியமில்லை. ஆயினும் அவைகள் முதல்தரச் சாரணர்கள் தெரிந்துகொள்ள வேண்டியவைகளேயாகும்.

## 3. சைகைப் பேச்சு (Signalling)

முதல்தரச் சாரணன் ஆவதற்கு தேர்ச்சி பெறவேண்டியவற்றுள் மூன்றுவதாக உள்ளது சைகைப் பேச்சு.

முதல்தரச் சாரணன் மார்ஸ் முறையில் நிமிடத்துக்கு 15 எழுத்துக்கள் சைகை செய்யும் திறனுடையவனுக இருக்கவேண்டும். இது தவிர எண்களுக்குரிய தணிக்கை முறையும் தெரிந்திருக்க வேண்டும்.



119. சைகைப் பேச்சு நிலையப்பயிற்சி
(Signalling Station at Work)

சைகைப் பயிற்சி கற்கத் தொடங்கிய சில நாட்களுக்குள்ளேயே நிலையப் பயிற்சி முறையைக் கற்றுக்கொள்ள வேண்டும். கற்றபின் அந்த முறை பழக்கத்திலிருந்து வரவேண்டும். நிலையப்பயிற்சி சாரணனுக்கு நல்ல பயனுள்ள அனுபவம் ஆகும்.

இரண்டு அல்லது மூன்று நிலையங்களை அமைத்துக்கொண்டு நிலையப்பயிற்சி ஆரம்பிக்கலாம். ஒவ்வொரு நிலையமும் சைகைப்

பேச்சு அனுப்பும் பொழுது அனுப்பும் நிலையம் (Sending Station) ஆகவும், சைகைப் பேச்சு வாங்கும்பொழுது வாங்கும் நிலையம் (Receiving Station) ஆகவும் செயலாற்றும்.

அனுப்பும் நிலையத்தில் மூவர் அவசியம். சேதி (Message) யை உரக்கப் படிப்பவர், கொடி அசைத்துச் செய்தியைத் தெரிவிப்பவர், செய்தியை எதிர்நிலையத்தில் சரிவரப் புரிந்து கொள்கிறார்களா என்பதை அறியும் கூர்ந்த பார்வையாளர் (Observer) என்று மூன்று பேர் பணியாற்ற வேண்டும்.

வாங்கும் நிலையத்திலும் மூவர் அவசியம். எதிர்நிலையத்தில் நடக்கும் கொடி அசைப்பைக் கவனித்து என்ன என்ன எழுத்துக்களை அல்லது அடையாளங்களை அல்லது குழூஉக்குறிகளைத் தெரிவிக்கிறார்கள் என்று பார்ப்பவர், அவர் சொல்லச் சொல்ல புத்தகத்தில் எழுதி வைப்பவர், இந்த நிலையத்துக்கு மறுநிலையத்திலிருந்துவரும் செய்தியைப்பற்றி கொடி அசைத்துச் சொல்பவர் என்று மூவர் பணியாற்ற வேண்டும்.

| செய்தி அனுப்பும் நிலையம் | செய்தி வாங்கும் நிலையம் |
|---|---|
| (1) செய்தி படிப்பவர் | (1) கூர்ந்து பார்ப்பவர் |
| (2) கொடி அசைப்பவர் | (2) செய்தி எழுதுபவர் |
| (3) கூர்ந்து பார்ப்பவர் | (3) கொடி அசைப்பவர். |

அணிகளை இரு பிரிவாகப் பிரித்துக் கொண்டு இரண்டு நிலையங்கள் அமைத்து நிலையப் பயிற்சி அளிக்கலாம்.

நிலையப் பயிற்சி சைகைப் பயிற்சியை ஐயந்திரிபறக் கற்கும் வாய்ப்பு அளிப்பது, அவை சைகைப் பயிற்சியை மனதைக் கவரும் பயிற்சியாக மாற்றும் ஆற்றல் படைத்தது. முதல் தரச் சாரணனுக்கு அவசியமான விரைவை (Speed) யும் தரவல்லது.

நிலையச் சைகைப் பேச்சுப் பயிற்சியில் ஈடுபடும் முதல்தரச் சாரணன் நிலைய நிர்வாகத்துக்குரிய குழூஉக்குறிகளைப் பயன்படுத்திப் பழக வேண்டும்.

எதிர் நிலையத்தை அழைக்கப் பயன் படுத்த வேண்டிய அடையாளம் VE

சற்றுப் பொறுங்கள் என்று கூறுவதற்கு உரிய அடையாளம் Q பொதுவான பதில் (General Answer) என்பதற்கு உரிய அடையாளம் T

முற்றுப்புள்ளி அல்லது தசமப்புள்ளிக்கு உரிய அடையாளம் AAA

செய்தி முடிவுற்றது (Message Ended) என்பதற்கு உரிய அடையாளம் AR

தவறு—இதை அழித்து விடுங்கள் என்பதற்கு எட்டுப்புள்ளிகள்.
வேலை முடிவுற்றது — நிலையத்தை மூடுகிறோம் என்பதற்குரிய அடையாளம் GB

எண்ணிக்கைகள் அனுப்பப்படும் பொழுது செய்தி வாங்கும் நிலையம் எண்களை எழுத்தால் தணிக்கை செய்யவேண்டும்.

1 என்ற எண்ணை A என்ற எழுத்தால் தணிக்கை செய்யப்படும் 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 0, என்றவை முறையே B, C, D, E, F, G, H, I, K, என்ற எழுத்துக்களால் தணிக்கை செய்யப்படும்.

எண்ணிக்கை பின்னமாக இருந்தால், முழு எண்ணைப் பின்னத்திலிருந்து பிரிக்க MM என்ற அடையாளத்தைப் பயன் படுத்த வேண்டும். "$8\frac{3}{4}$" என்ற பின்னம், சைகைப் பேச்சில் "8 MM 3 NR 4" என்று அமையும். இதில் NR என்பது பின்னத்தின் மேலும் கீழும் உள்ள எண்களைப் பிரிக்கின்ற சிறு கோட்டுக்குரிய அடையாளம் ஆகும்.

அரை வட்ட வளைவுகளை (Brackets) KK என்ற அடையாளத்தால் குறிப்பிட வேண்டும. அரை வட்ட வளைவுகளுக்குள் அமைய வேண்டிய சொற்கள் முன்னும் பின்னும் KK அடையாளங்கள் தருதல் வேண்டும். (நல்லது) என்பது "KK நல்லது KK" என்று அனுப்பப்படும்.

மேற்கோள் குறிகளுக்கு " " உரிய அடையாளம் RR ஆகும்.

"கண்ணன் வருவான்" என்பது RR கண்ணன் வருவான் RR என்று அனுப்பப்ப்படும்.

## எண்களுக்குரிய தணிக்கை

மார்ஸ் முறையில் எண்களுக்குத் தனி அடையாளங்கள் உள்ளன. இவைகளை உபயோகப்படுத்தி செய்தி அனுப்பும் நிலையத்தார் எண்களைச் சைகை செய்வார்கள். எண்ணிக்கைகள் ஒவ்வொன்றுய்க் கொடுக்கப்படும். அப்படிக் கொடுக்கப்பட்டு எண்ணிக்கை முடிந்த உடன் செய்தி வாங்கும் நிலையத்தார் அவைகளுக்குரிய மாற்று அடையாளங்களைக் கொடுத்து எண்ணிக்கையைத் தணிக்கை செய்து கொள்ளவேண்டும்.

1 க்குத் தணிக்கை அடையாளம் A
2 க்குத் தணிக்கை அடையாளம் B
3 க்குத் தணிக்கை அடையாளம் C
4 க்குத் தணிக்கை அடையாளம் D
5 க்குத் தணிக்கை அடையாளம் E
6 க்குத் தணிக்கை அடையாளம் F
7 க்குத் தணிக்கை அடையாளம் G
8 க்குத் தணிக்கை அடையாளம் H
9 க்குத் தணிக்கை அடையாளம் I
0 க்குத் தணிக்கை அடையாளம் K

இது முதல்தர சாரணன் தெரிந்திருக்க வேண்டியவற்றுள் முக்கிய மானதொன்று.

## 4. கண் மதிப்பு (Estimation)

கண் மதிப்பு என்பது முறையாக அளந்து பார்க்காமல் ஒரு பொருளின் நீளம், அகலம், உயரம் முதலியவற்றையும் கனம், எண்ணிக்கை போன்றவற்றையும் நிதானித்து உத்தேசமாகக் கூறுதல். இது பழக்கத்தால் அமையக்கூடிய ஒரு திறன். இது கிராமக் கலைகளுள் ஒன்று.

முதல்தரச் சாரணன் ஒரு அங்குலம் முதல் அரை மைல் வரை உள்ள தூரத்தை மதிப்பாகக் கூறும் திறன் படைத்தவனாய் இருத்தல் வேண்டும். அதுபோலவே 100 அடிக்கு மேற்படாத மூன்று உயரங்களையும் எடையில் 2 சேருக்கு அதிகப்படாத பளு அல்லது கனத்தை கண் மதிப்பாகவும் கை மதிப்பாகவும் கூறவல்ல திறன் உடையவனாகவும் இருக்கவேண்டும். அப்படி மதிப்பாகக் கூறுவது 100க்கு 10 வரை கூடலாம் அல்லது குறையலாம். அதற்கு அதிகமாக மாறு படுதல் கூடாது.

கண் மதிப்பு, பழக்கத்தால் ஏற்படவேண்டிய ஒரு திறன் ஆயினும் அதற்குரிய சில தனிப் பயிற்சிகள் உண்டு.

### நீளம் கணக்கிடல்

(1) சாரண தண்டத்தை அல்லது இதர கழிகளை அல்லது மேஜை, பெஞ்சு போன்றவைகளின் நீளத்தை முதலில் மதிப்பிட்டுக் கூறல், அப்புறம் அவைகளை அளந்து பார்த்தல்.

(2) அறைகளின் நீளம், அகலம், உயரம் இவற்றை முதலில் மதிப்பிடல், பின்னால் அளந்து பார்த்தல்.

(3) கட்டடத்தின் நீளத்தை மதிப்பிடல், பிறகு அளந்து பார்த்தல்.

(4) நீண்டு உயர்ந்து வளர்ந்துள்ள மரங்களின் உயரத்தை மதிப்பிடல், பிறகு உயரத்தை உரிய முறையில் கணக்கிட்டுத் தெரிந்து கொள்ளல்.

(5) தெருக்களின் நீளத்தை முதலில் மதிப்பிட்டுக் கூறல், பின்னுல் உரிய முறையில் கணக்கிட்டுத் தெரிந்து கொள்ளல்.

### எண்ணிக்கை கணக்கிடல்

(1) ஆடுகள் அல்லது மாடுகள் மந்தையாகச் செல்லும்போது கண் மதிப்பாக அவற்றின் எண்ணிக்கையைக் கூறல். பிறகு மேய்ப்பவனிடம் கேட்டு அவற்றின் சரியான எண்ணிக்கையைத் தெரிந்து கொள்ளல்.

(2) தேங்காய் அல்லது இளநீர் அம்பாரமாகப் போட்டு வைத்திருக்குமிடத்தில் அவற்றின் எண்ணிக்கையை முதலில் மதிப்பிட்டுக் கூறல், பிறகு எண்ணித் தெரிந்துகொள்ளல், அல்லது அவைகளை விற்கும் வியாபாரியிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளல்.

### பளு, கனம் அல்லது எடை கணக்கிடல்

(1) சிறு மரத்துண்டுகள், கற்கள், செங்கல் முதலியவற்றை கை மதிப்பால் எத்தனை கிலோகிராம் இருக்கும் என்று கூறல், பின்னுல் தராசின் உதவியால் சரிபார்த்தல்.

(2) நாற்காலியின் பளுவை மதிப்பிடல், பிறகு சரிபார்த்தல்.

(3) சாரணனிடம் உள்ள தண்டம், கைக்கோடரி முதலியவற்றின் பளுவை மதிப்பிடல், பிறகு சரிபார்த்தல்.

இத்தகைய பயிற்சிகளைக் கையாளுதல் நல்ல பயன்தரும். பழக்கத்தால் மதித்து அறிந்து கொள்ளும் திறன் வளர்ச்சி அடையும். ஆகையால் இப்படியான பயிற்சிகளை அடிக்கடி கையாள வேண்டும்.

ஒவ்வொரு சாரணனும் தன் உடம்பிலுள்ள சில பாகங்களின் அளவுகளை நன்கு தெரிந்து வைத்துக் கொள்ளவேண்டும்.

| | |
|---|---|
| ஆள்காட்டி விரலின் முதல் கணு | 1 அங்குலம் |
| கட்டை விரலின் அகலம் | 1 அங்குலம் |
| கட்டை விரல் முதல் ஆள்காட்டி விரல் வரை நீளம்-இதனை ஒட்டை என்பார்கள் | 8 அங்குலம். |
| கட்டைவிரல் முதல் சுண்டுவிரல் நுனிவரை நீளம்-இதனை சாண் என்பார்கள் | 9 அங்குலம் |
| மணிக்கட்டு முதல் முழங்கை வரை உள்ள நீளம் | 10 ,, |
| பாதத்தின் நீளம் | 10 ,, |
| கை முழம், ஆள்காட்டி விரல் நுனிவரை | 17 ,, |
| கை முழம், நடுவிரல் நுனிவரை | 18 ,, |
| தரையிலிருந்து முழங்கால்மூட்டு மத்திவரை | 18 ,, |

இங்கு தரப்பட்டுள்ள அளவுகள் சாரணனுக்குப் பொருத்த முடையதாக உள்ளதா என்று சரிபார்த்துக் கொள்ளவேண்டும்.

ஒவ்வொரு சாரணனும் தனக்குள்ள இந்த அளவுகளைத் தன் வரையில் சரிபார்த்துக் குறித்து வைத்துக்கொள்வது அவசியம். சில சந்தர்ப்பங்களில் இந்த அளவுகள் அளவுகோலாகப் பயன்படும்.

## கவனிப்பு

தொலைவு மதிப்பிடும்பொழுது கவனிக்க வேண்டியவை. நாம் மண்டியிட்டுக் கொண்டுள்ள நிலையில் அல்லது படுத்துக்கொண்டுள்ள நிலையில் உள்ள பொழுது அண்மையில் உள்ளவை சேய்மையில் உள்ளதாகத் தோன்றலாம். அதுபோலவே நாம் பார்க்கின்ற பொருளும் அதன் பின்னணித் தோற்றமும் (back ground) ஒரே நிறமாக உள்ள பொழுதும், மேடு பள்ளமான தரையைத் தாண்டி நம் பார்வை செல்லும் பொழுதும், சாலைகளிலும் நீண்ட தெருக்களிலும் நாம் இருந்து பார்வையைச் செலுத்தும் பொழுதும் நாம் பார்க்கின்ற பொருள் நிழலில் உள்ள பொழுதும், பார்க்கின்ற நேரத்தில் வெயில் சிறிது சிறிதாக மங்கிக்கொண்டிருந்தாலும், தரையிலிருந்து வெப்பம் வெளியேறிக் கொண்டிருக்கையிலும், பார்க்கப்படும் பொருள் பாதி தெரிந்தும் பாதி தெரியாமலும் உள்ள பொழுதும், அண்மையில் உள்ளது சேய்மையில் உள்ளதாகக் காணப்படும்.

நல்ல வெளிச்சம் உள்ள நாட்களிலும் சூரியன் நமக்குப் பின் பக்கமாக உள்ள பொழுதும் பின்னணித் தோற்றமும் (back ground) பார்க்கப்படு பொருளும் வெவ்வேறு நிறமாக உள்ள பொழுதும், நாம் பார்க்கும் பூமி தட்டையாக உள்ள இடங்களிலும், நீர்நிலைக்கு மேலாக நம் பார்வை செல்லும் பொழுதும், ஆழமான படுபள்ளத்தின் மேலாக நம் பார்வை செல்லும் பொழுதும் மேல் நோக்கி அல்லது கீழ் நோக்கி நாம் பார்வையைச் செலுத்தும் பொழுதும், சேய்மையில் உள்ளவை சற்று அண்மையில் உள்ளதாகத் தோன்றும்

கண்மதிப்புச் செய்யும்போது இவற்றை மனதில் கொண்டு மதிப்பிடவேண்டும்

பயணத்தின்போது எவ்வளவு நேரம் பயணம் செய்துள்ளோம் என்பதையும், என்ன வேகத்தில் பயணம் செய்கிறோம் என்பதையும் மனதிற்கொண்டு அந்த அடிப்படையில் பயணம் செய்துள்ள தொலைவைக் கணக்கிடவேண்டும்.

ஓசை அடிப்படையிலும் தூரத்தைக் கணக்கிடல் கூடும். தொலைவில் ஒரு துப்பாக்கிச் சுடப்பட்டால் ஒளியைக் கண்ட எத்தனை

விநாடிகளுக்குப் பின் ஓசை கேட்டது என்பதைத் தெரிந்து கொண்டு அந்த அடிப்படையில் துப்பாக்கி சுடப்பட்ட இடத்தின் சேய்மையைக் கணக்கிடலாம். (விநாடி 1க்கு ஓசை 1100 அடி தூரம் செல்கின்றது. 1100 அடி தொலைவு என்பதை 365 கஜம் என்றும் கொள்ளலாம். ஆண்டில் எத்தனை நாள் உண்டோ அத்தனை கஜ தூரம் ஓசை 1 விநாடிப் பொழுதில் செல்கின்றது என்று எளிதாக நினைவில் வைத்துக் கொள்ளலாம்.)

தொலைவை நிதானிக்க இன்னும் வேறு வழிகளும் உள்ளன. பார்க்கப்படும் பொருள் எவ்வளவு தெளிவாய்க் காணப்படுகிறது என்ற அடிப்படையில் தொலைவைக் கணக்கிடலாம்.

ஐம்பது கஜ தூரத்தில் ஒருவருடைய வாயும் கண்ணும் தெளிவாகத் தெரியும். 100 கஜ தூரத்தில் கண்கள் புள்ளிகள் போலத் தெரியும். 200 கஜ தூரத்தில் சீருடையின் நுணுக்கங்களும் அதிலுள்ள பொத்தான்களும் காணப்படும். 300 கஜ தூரத்தில் முகம் தெரியும். 400 கஜ தூரத்தில் கால்களின் அசைவு தெரியும். 500 கஜ தூரத்தில் சீருடையின் நிறம் தெரியும்.

இதற்கும் அதிகமான தூரத்தைக் கணக்கிட வேண்டுமானால் நாம் பார்க்கின்ற பொருள் இருக்கும் இடத்துக்கு நேர் மத்தியாக உள்ள இடத்தை மதிப்பாக நிச்சயம் செய்துகொண்டு அதன் தொலைவைக் கணக்கிட வேண்டும். அப்படிக் கணக்கிட்டபின் அதனை இரண்டால் பெருக்க வேண்டும்.

இதற்கு இதைத்தவிர இன்னும் ஒரு செயல் முறையும் உண்டு. பார்க்கப்படும் பொருள் அதிக பட்சம் எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்பதைக் கணக்கிட்டுக்கொண்டு பிறகு அதுபோல குறைந்த பட்சம் எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்பதையும் கணக்கிட்டுக் கொண்டு, இரண்டையும் கூட்டிப் பின் சராசரி எவ்வளவு என்று கணக்கிடுவதாகும்.

## ஆற்றின் அகலம் (Width of River)

ஆற்றின் அகலம் மரத்தின் உயரம் முதலியவற்றைக் கணக்கிடுவதற்கு கணிதத்தைப் பயன்படுத்தலாம். கணிதத்தைப் பயன்படுத்தி ஆற்றின் அகலம் கணக்கிடல் மரத்தின் உயரம் கணக்கிடல் ஆகிய இரண்டினையும் முதல்தரச் சாரணன் தெரிந்திருக்க வேண்டும். தெரிந்திருந்தால் கண் மதிப்புச் செய்தபிறகு தான் செய்துள்ள மதிப்பு சரிதானா அல்லது மிகவும் மாறுபடுகிறதா என்பதை உடனுக்குடன் அறிதல் கூடும்.

(1) **ஒத்த முக்கோண முறை** (Similar Triangles Method)

எதிர்க்கரையில் உள்ள ஒரு மரத்தை அடையாளமாகக் கொண்டு அதற்கு நேர் எதிராக இக்கரையில் ஒரு சாரணனை நிறுத்த வேண்டும்.

அ என்பது மரம். ஆ என்பது சாரணன் நிற்கும் இடம் ஆ-வில் இருந்து ஆற்றங்கரையோரமாக நாம் 30 தப்படி நடக்கவேண்டும். இந்த இடத்தில் இன்னும் ஒரு சாரணனை நிற்க வைக்கவேண்டும். அந்த இடத்தை இ என்று வைத்துக் கொள்வோம். பிறகு அதே திசையில் நாம் இன்னும் 30 தப்படி நடக்கவேண்டும். இப்பொழுது ஈ என்ற இடத்துக்கு வந்துள்ளோம். அதன் பிறகு ஆ, இ, ஈ கோட்டுக்கு 90° அளவில் ஆற்றுக்கு எதிர்பக்கமாக நடந்து செல்ல வேண்டும். நடந்து போகும்போது நாம், இ சாரணன், அ என்ற மரம் ஆகிய மூன்றும் ஒரே வரிசையில் வந்ததும் உடனே அந்த இடத்தில் நிற்கவேண்டும். அந்த இடத்தை உ என்று வைத்துக் கொள்வோம். ஈ, உ எத்தனை தப்படியோ அதுவே ஆற்றின் அகலமும் ஆகும்.




120. ஆற்று அகலம் கணக்கிடல்
—ஒத்த முக்கோண முறை—
(Finding Width of River)
(Similar Triangles Method)

## (2) திசைக்கருவி முறை (Compass Method)

முன் செய்தது போலவே அ என்ற மரத்தை அடையாளமாகக் கொண்டு அதற்கு எதிராக ஆ என்ற இடத்தில் இக்கரையில் நின்றுகொண்டு மரத்தின் டிகிரி அளவு பார்க்க வேண்டும். அது எத்தனை டிகிரியோ அதனோடு 90° சேர்த்துக் கொள்ள வேண்டும். மரத்தின் டிகிரி அளவு 60° என்று இருக்கட்டும். 90° யைச் சேர்த்துக் கொண்ட பிறகு 150° ஆயிற்று. ஆற்றின் கரை ஓரமாக மரத்தின் டிகிரி அளவைப்பார்த்துக் கொண்டே நடந்து செல்ல வேண்டும். எந்த இடத்தில் 150° யில் மரம் காணப்படுகிறதோ அங்கே நிற்கவேண்டும். அந்த இடத்தை இ என்று வைத்துக் கொள்வோம். இ-யிலிருந்து ஆ-வுக்கு உள்ள தூரமும் ஆற்றின் அகலமும் ஒன்று.




121. ஆற்றின் அகலம் கணக்கிடல்-திசைக்கருவி முறை-(Finding Width of River (Compass-Method)

## (3) மடித்த காகித அட்டை முறை (Folded Paper Method)

தபால் கார்டு போன்ற சிறிது கனம் உள்ள அட்டையில் 3 அல்லது 4 அங்குலச் சதுரத் துண்டு ஒன்றை மூலைக்கு மூலையாக இரண்டு முக்கோணத் துண்டுகளாக வெட்ட வேண்டும். இந்த இரண்டு துண்டுகளில் ஒன்றைப் பயன்படுத்தி ஆற்றின் அகலத்தைக் கணக்கிடல் கூடும்.

முன்போல ஆற்றுக்கு அக்கரையில் ஒரு மரத்தைத் தேர்ந்து கொண்டு அதை அ என்று வைத்துக்கொள்ள வேண்டும். ஆற்றுக்கு இக்கரையில் அதற்கு எதிராக ஆ என்ற இடத்தில் நின்று கொண்டு வெட்டப்பட்டுள்ள காகித அட்டையை தட்டையாகப் பிடித்துக் கொண்டு ஒரு குறுகிய



122. ஆற்றின் அகலம் கணக்கிடல் —மடித்த காகித முறை— (Folded Paper Method)

பக்கம் அ மரத்துக்கு நேராகவும் இன்னென்று ஆற்றின் கரை யோடு ஒத்தும் இருக்கும்படியும் வைக்கவேண்டும். அப்படியே காகித அட்டையைத் தட்டையாய்ப் பிடித்துக்கொண்டு ஆ விலிருந்து ஆற்ருேரமாக நடக்கவேண்டும். நடந்து செல்லும்போது காகித முக்கோண த்தின் நெடும்பாகம் (hypotenuse) மரத்துக்கு நேராக வந்ததும் அந்த இடத்தில் நிற்கவேண்டும். அது இ என்று இருக் கட்டும். ஆ என்ற இடத்தில் இருந்து இ என்ற இடம் எவ்வளவு தொலேவோ அதுவே ஆற்றின் அகலமாகும்.

## மரத்தின் உயரம் (Height of Tree)

மரத்தின் உயரத்தைக் கணக்கிடப் பல முறைகள் உண்டு. அவை (1) ஒரு அங்குலத்துக்கு ஒரு அடி என்ற முறை. (2) மடித்த காகித முறை (3) ஓவியர் முறை (4) மரம் வெட்டி முறை (5) நிழல் முறை (6) செவ்விந்தியர் முறை (7) தண்ணீர்த் தொட்டி முறை என்பன.

### (1) அங்குலத்துக்கு ஒரு அடி

அ என்பது மரத்தின் அடி. அதிலிருந்து தரையில் 11 கழி அளக்க வேண்டும். அந்த இடம் ஆ என்று இருக்கட்டும். அப்புறம் இ, ஆ என்று 1 கழி அளக்கவேண்டும். அ, ஆ என்பது 11 கழி. ஆ, இ-என்பது 1 கழி. ஆ என்ற இடத்தில் சாரண தண்டத்தை நட்டு வைக்க வேண்டும். இ என்கிற இடத்தில் இருந்து உ என்ற மரத்தின் உச்சியைப் பார்க்க வேண்டும். பார்வை செல்லும் கோடு சாரண தண்டத்தில் எந்த இடத்தில் படுகிறது என்பதைக் குறிப்பாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். அந்த இடம் ஈ என்று இருக்கட்டும். ஆ, ஈ எத்தனே அங்குலமோ அத்தனே அடி அந்த மரத்தின் உயரம் என்று கணக்கிடலாம்.




123. மரத்தின் உயரம் கணக்கிடல்
—அங்குலத்துக்கு ஒரு அடி முறை—
(Inch to Foot Method)

ஆ, ஈ-என்ற சாரண தண்டத்தில் ஒரு அங்குலம் மரத்தில் 1 அடி.

## (2) மடித்த காகித முறை (Folded Paper Method)

மடித்த காகிதம் 90° கோணத்தையும் ஒரே அளவுள்ள இரு பக்கங்களையும் உடையது. இதனை ஒரு சாரண தண்டத்தின்மேல்




124. மரத்தின் உயரம் கணக்கிடல்
மடித்த காகித முறை (Folded Paper Method)

படத்தில் காண்பித்துள்ள மாதிரி வைத்துக்கொண்டு மரத்தின் உயரத்தைக் கணக்கிடலாம்.

மரத்தின் அடி அ என்று இருக்கட்டும். அட்டையின் நீண்டபக்கம் (Hypotenuse) ஆகும். அது மரத்தின் உச்சிக்கு நேராக இருக்கவேண்டும். தண்டத்தை முன்னும் பின்னுமாக கொண்டு போய் அதற்கு நேராக மரத்தின் உச்சி உள்ள பொழுது தண்டம் இருக்கும் இடத்தை ஆ என்றால் அ, ஆ வின் நீளமும் சாரண தண்டத்தின் நீளமும் சேர்ந்தது மரத்தின் உயரம் ஆகும்.

ஆ, உ என்பது சாரண தண்டத்தின் நீளம்.

அ, ஆ என்பது சாரண தண்டம் இருக்கும் இடத்தில் இருந்து மரம் வரை உள்ள நீளம். அ, இ என்பது மரத்தின் உயரம்.

### ஓவியர் முறை

(3) தெரிந்த உயரத்தோடு தெரியாத உயரத்தை ஒப்பிட்டுப் பார்ப்பது ஓவியர் முறையாகும்.

மரத்தின் பக்கத்தில் சாரணன் தன் நண்பர் ஒருவரை நிற்க வைத்து, தன் நீட்டிய கையில் பிடித்துள்ள எழுதுகோலினால் (Pencil) அவர் உயரத்தைத் தன் கைவிரலால் ஓவியர்களைப்போல் அளந்து



125. மரத்தின் உயரம் கணக்கிடல்
ஓவியர் முறை (Artist's Method)

தெரிந்து கொள்ளவேண்டும். பின்னர் அந்த உயரத்தையும் மரத்தின் உயரத்தையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். நண்பர் உயரம் $5\frac{1}{2}$ அடி என்று இருக்கட்டும். மரம் அதைப்போல நான்கு பங்கு உயரம் என்ருல், மரத்தின் உயரம் $= 4 \times 5\frac{1}{2}$ அடி அல்லது 22 அடி.

## (4) மரம் வெட்டி முறை (Lumberman's Method)

மரத்தை நிற்கின்ற இடத்திலேயே வெட்டி வீழ்த்திஞல் மரத்தின் நுனி எந்த இடத்தில் வரும் என்று தெரிந்து கொள்வது இதன் செயல்




126. மரத்தின் உயரம் கணக்கிடல்.
மரம் வெட்டி முறை (Lumberman's Method)

முறை. மரத்தினடியிலிருந்து சற்றுத் தொலைவில் நின்று கொண்டு கையை நன்ருக நீட்டி அதில் ஒரு சாரண தண்டத்தைப் பிடித்துக்கொள்ள வேண்டும். தண்டத்தின் நுனியும் மரத்தின்

நுனியும் ஒன்ருக அமையும்படி அதனைப் பிடித்துக்கொள்ள வேண்டும். பிறகு நம் கைவிரலை மேலும் கீழும் நகர்த்திக் கொண்டுபோய் கை விரலும் மரத்தினடியும் ஒன்ருக அமையும்பொழுது தண்டத்தை அந்த இடத்தில் பிடித்துக்கொண்டு மரத்தை சாய்ப்பதுபோல தண்டத்தை சாய்க்க வேண்டும் தண்டத்தின் நுனி பூமியில் எந்த இடத்தில் தொடுவதுபோலத் தோன்றுகிறதோ அந்த இடத்தில் நம் நண்பர் ஒருவரை நிற்கவைக்க வேண்டும். நண்பர் நிற்கும் இடம் மரத்தின் அடியிலிருந்து எவ்வளவு தொலைவு உள்ளதோ அதுவே அந்த மரத்தின் உயரம்.

(5) **நிழல் முறை :-** மரத்தின் நிழலையும் சாரண தண்டத்தின் நிழலையும் ஒப்பிட்டுப் பார்த்து மரத்தின் உயரத்தைக் கணக்கிடலாம்.

$5\frac{1}{2}$ அடி நீளம் உள்ள சாரண தண்டம் 11 அடி நிழல் தருகிற நேரத்தில், 50 அடி நிழல் தருகிற மரத்தின் உயரம் என்ன?

$$\text{மரத்தின் உயரம்} = \frac{\text{மர நிழலின் நீளம்} \times \text{தண்டத்தின் நீளம்}}{\text{தண்டத்தின் நிழலின் நீளம்}}$$




127. மரத்தின் உயரம் கணக்கிடல் —நிழல் முறை—
(Shadow Method)

(6) **செவ்விந்தியர் முறை :-** செவ்விந்தியர்கள் (Red Indians of America) குனிந்து நின்று கொண்டு தன் கால் கவட்டை வழியாக மரத்தின் உச்சியைப் பார்த்து மரத்தின் உயரத்தைக் கணக்கிடுவார்கள். மரத்தின் உச்சி கவட்டை வழியாகத் தென்படுகையில் தான் நிற்கும் இடத்துக்கும் மரம் நிற்கின்ற இடத்துக்கும் என்ன தூரமோ அதுவே மரத்தின் உயரம்.

குறிப்பு :- பார்வை 45° கோணத்தில் உச்சியை நோக்கி செல்ல வேண்டும்.

### (7) தண்ணீர்த் தொட்டி முறை

எந்த மரத்தின் உயரத்தை அளக்க வேண்டுமோ அதற்கு எதிராக மரத்துக்குள்ள தொலைவில் ஒரு அகன்ற தொட்டியில் தண்ணீர் விட்டு வைக்கவேண்டும். மரத்தின் உருவம் தண்ணீரில் தெரியும்படி தொட்டியை வைக்க வேண்டும். தொட்டிக்கும் மரத்துக்கும் எதிர்ப் பக்கத்தில் நின்று கொண்டு மரத்தின் உருவம் தெரிகிறதா என்று பார்த்துத் தெரியவில்லையானால் தொட்டியை முன்னும் பின்னுமாக நகர்த்தி வைத்துப் பார்க்க வேண்டும். மரத்தின் நுனி தெரியும் போது அந்த இடத்தில் தொட்டியை விட்டு விடவேண்டும்.

தொட்டி மரத்திலிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கிறதோ அதுவே மரத்தின் உயரமும் ஆகும்.




128. மரத்தின் உயரம் கணக்கிடல்—தண்ணீர்த் தொட்டி முறை—(Basin of Water Method)

## 5. முதல் உதவி (First Aid)

முதல் தரச் சாரணனாக விரும்பும் சாரணன் தேர்ச்சி பெற வேண்டியதாக உள்ளவைகளில் ஐந்தாவதாக உள்ளது முதல் உதவியாகும். இதில் சாரணன் தெரிந்துக்கொள்ள வேண்டியவை பல உள : (1) உடம்பின் முக்கிய உறுப்புகள் (Principal organs of the body) உடம்பில் எங்கெங்கு அமைந்துள்ளன என்பதைத் தெரிந்திருக்க வேண்டும். (2) முக்கிய சுத்த இரத்தக் குழாய்கள் (Arteries) உள்ள இடங்களைத் தெரிந்திருத்தல் வேண்டும். (3) இரத்தப் பெருக்கை (Bleeding) நிறுத்தும் விதம் தெரிந்திருக்க வேண்டும். (4) மேல்கை எலும்பு ஒடிதல், முன்கை எலும்பு ஒடிதல், காரை எலும்பு ஒடிதல், கால் எலும்பு ஒடிதல் ஆகியவற்றிற்கு உரிய

முதல் உதவிச் சிகிச்சை தெரிந்திருத்தல் வேண்டும். (5) தீ விபத்து, மயக்கம் போட்டு விழுதல், மின்சார விபத்து ஆகிய விபத்துக்களில் அகப்பட்டுக் கொண்டவர்களுக்கு முதல் உதவி செய்தல் தெரிந்து இருத்தல் வேண்டும். (6) உயிர் காப்புக் கயிறு (Life Line) $9\frac{1}{4}$ மீட்டர் தூரம் குறி பார்த்து வீசி எறியும் திறன் உடையவனாக இருக்க வேண்டும். (7) கிணற்றில் இருந்து மனிதர் களையும் பிராணிகளையும் கரையேற்றும் முறை தெரிந்திருக்க வேண்டும். (8) தொத்து நோய்கள் பரவாமல் இருக்க நாம் எடுத்துக் கொள்ள வேண்டிய முன் எச்சரிக்கை முறைகளைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்க வேண்டும்.

## முக்கிய உறுப்புகள் (Principal Organs)

மனித உடம்பு ஒரு எலும்புக் கூட்டை ஒட்டி அமைக்கப் பட்டிருக்கிறது. இந்த எலும்புக் கூடு உடலுக்கு உறுதி அளிக்கிறது. அது தசைகளைத் தாங்கி நிற்கிறது. இது தவிர அது முக்கிய உறுப்பு களுக்குப் பாதுகாப்பாகவும் உள்ளது.

உறுப்புகள் செய்யும் தொழில் அடிப்படையில் அவற்றை வெவ் வேறு தொகுதிகளாகப் பிரிக்கலாம்.



129. மார்பு, அடிவயிறு இவை களில் உள்ள உறுப்புகளின் முன்பக்கத் தோற்றம் (Organs of the Chest and abdomen-Front view)

(1) ஜீரணத்துக்குரிய தொகுதி (Digestive System): இது வாய் முதல் குதம் (Rectum) வரை உள்ளது. வயிறு (Stomach), சிறு குடல் (Small Intestines) பெருங்குடல் (Large Intestines) என்பவை இதில் அடங்கியுள்ள முக்கிய உறுப்புகள். ஜீரணத்துக்குரிய பலவகை ரசங்கள் (Digestive Juices) இவ்வுறுப்புகளில் உண்டாகின்றன. இந்த உறுப்புகளும் இரசங்களும் உணவை இரத்தத்தோடு கலக்கச் செய்கின்றன.

ஜீரணம் முற்றுப் பெற்றபிறகு ஒரு சிறிது ஜீரணமாகாமல் மிஞ்சுகிறது. இது தண்ணீர், பலவகை உப்புக்கள், பலவகை நுண்கிருமிகள் (Bacteria) ஆகியவற்றோடு கலந்து மலமாக வெளி வருகிறது.

(2) இரத்த ஓட்டத்தொகுதி (Circulatory System) :

இதில் இதயமும் (Heart) இரத்தக் குழாய்களும் அடங்கும். சுத்த இரத்தக்குழாய் (Arteries) வழியாகவும், மென்குழாய் (Capillaries) வழியாகவும் இரத்தம் தசைகளுக்குச் சென்று உடம்பை வளர்க்கின்றது. பிறகு தன் வேலையைச் செய்துவிட்டு அது அசுத்த இரத்தக் குழாய் (Veins) வழியாகவும், மென் குழாய் வழியாகவும் இதயத்தை நோக்கித் திரும்பி வருகிறது. அப்படி வருகிற அசுத்த இரத்தம் நுரையீரல்களில் (Lungs) சுத்தம் செய்யப்பட்டு இதயத்தை அடைகிறது. இதயத்திலிருந்து சுத்த இரத்தம் மறுபடியும் வெளியேறுகிறது. உடம்பில் தன் வேலையைச் செய்துவிட்டு மறுபடியும் நுரையீரல்களுக்கு வந்து சுத்தம் அடைகிறது. மறுபடியும் மறுபடியும் இது நடந்துகொண்டே இருக்கிறது.

மென்குழாய்கள் (Capillaries) மிகவும் மெல்லியன. அவற்றின் பருமன் $\frac{1}{3000}$ அங்குலம் ஆகும்.

(3) சிறுநீர்த் தொகுதி (Urinary System) :

இந்தத் தொகுதி உடம்பில் உள்ள இரத்தத்தில் இருக்கும் அசுத்தமான பொருள்களை வெளியேற்றுகின்றது. இதன் முக்கியஉறுப்புக்கள்இரண்டு: சிறுநீர் கோசங்களும் (Kidneys) தோலும் ஆகும். ஒவ்வொரு சிறுநீர்க் கோசத்திலிருந்து ஒரு சிறு குழாய் (Ureter) சிறுநீரைக்கொண்டு வருகிறது. கொண்டு வந்து சிறுநீர்ப்பையில் (Bladder) சேர்த்து வைக்கும். அங்கிருந்து சிறுநீர் சிறுநீர்க் குழாய் (Ureter) வழியாய் வெளிக் கொண்டு வரப்படுகிறது. தோல் இரத்தத்தில் உள்ள அழுக்குப் பொருள்களை வேர்வையாக வெளிப்படுத்துகிறது.



130. மார்பு, அடிவயிறுகளில் உள்ள உறுப்புகள் —பின் பக்கத் தோற்றம்

(Organs of the Chest and abdomen—back view)

(4) சுவாசத் தொகுதி (Respiration System) :

மூக்கு வழியாகவும் வாய் வழியாகவும் உட்செல்கின்ற காற்று நுரையீரலை அடைகின்றது. நுரையீரலில் இரத்தம் பிராணவாயு (Oxygen) வோடு கலந்து சுத்தப்படுகிறது. இதனால் உண்டாகிற கரியமிலவாயு (Carbon–di–oxide) வெளியே வரும் சுவாசத்தோடு வந்து விடுகிறது.

இந்தத் தொகுதியில் இதயமும் இரு நுரையீரல்களும் அடங்கும்.

(5) சுரத்தல் தொகுதி (Glandular System) :



131. கழுத்து, தலை, நடுஉடல்களில் உள்ள சுத்த இரத்த ஓட்டம் (Arteries of Neck, Head & Trunk)

சுரத்தற்குரிய உறுப்புகள் உடம்பில் ஆங்காங்குள்ளன. பான்கிரீயாஸ் (Pencreas) என்பதும், லிவர் (Liver) என்பதும், குடலும் (Intestines) ஜீரணத்துக்கு அவசியமான இரசங்களை சுரக்கின்றன. இன்னும் சில உறுப்புக்கள் ஹார்மோன் (Hormone) என்கிற பொருளைச் சுரந்து இரத்தத்தோடு கலக்கச் செய்கின்றன. இத்தகைய உறுப்புக்கள் உணவை மிதப்படுத்தும் இயல்புடையன. வளர்ச்சியையும் கட்டுப்படுத்துகின்றன. இனப் பெருக்கத்துக்கும் வாய்ப்பு அளிக்கின்றன. உடம்பின் வெட்ப தட்ப நிலையைக் கட்டுப்படுத்துகின்றன. அதோடு மக்களுக்குரிய இயல்புகளுக்கு வழியும் கோலுகின்றன.

(6) நரம்புத் தொகுதி (Nervous System): எண்சாண் உடம்புக்கு முக்கியமாக உள்ளது தலை. நரம்புத் தொகுதிக்கு முக்கியமாக உள்ளதும் தலையே. மூளை இருப்பது தலையில். மூளை உடம்பின் எல்லாப் பாகத்தையும் அடக்கி ஆள்கின்றது. முதுகெலும்பு நாளத்தின் (Spinal Cord) வழியாகவும், அதைச் சார்ந்துள்ள

நரம்புகள் வழியாகவும் சமாசாரங்கள் மூளைக்கு வந்த வண்ணமா யிருக்கிறது. முதுகெலும்பு நாளம் உடம்பின் எல்லாப் பாகத்தையும் மூளையோடு இணைக்கின்றது.

இங்கு கூறப்பட்டுள்ள பல உறுப்புக்கள், உடம்பில் எங்கெங்கு உள்ளன என்பதை நன்கு தெரிந்த ஒரு ஆசிரியரிடம் இருந்து நேர் முகமாகத் தெரிந்து கொள்வது நலம். உடல் அமைப்பு உடற் கூறு மாதிரிகளின் (Physiology Models) உதவியால் அந்த உறுப்பு களின் தோற்றத்தையும் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

## முக்கிய இரத்தக் குழாய்கள் (Arteries)

சுத்தமான இரத்தத்தை இதயத்திலிருந்து தலைக்கு, கைகளுக்கு, கால்களுக்கு கொண்டு செல்லும் இரத்தக் குழாய்கள் சுத்த இரத்தக் குழாய்கள் (**Arteries**) எனப்படும்.

படத்தில் இவை காண்பிக்கப்பட்டுள்ளன.

### 1. இதயத்தில் இருந்து தலைக்குச் செல்வன :

இவை பல பிரிவுகளாக உள்ளன.

(1) தொண்டையைச் சேர்ந்த கரோடிட் சுத்த இரத்தக் குழாய் (Carotid Artery)

(2) நாக்கைச் சேர்ந்த லிங்குவல் சுத்த இரத்தக்குழாய் (Lingual Artery)

(3) பின் கழுத்தைச் சேர்ந்த அக்ஸிபிடல் சுத்த இரத்தக் குழாய் (Occipital Artery)

(4) முகத்தைச் சேர்ந்த பேஷியல் சுத்த இரத்தக் குழாய் (Facial Artery)

(5) நெற்றிப் பொட்டைச் சேர்ந்த சுத்த இரத்தக் குழாய் (Temporal Artery) என்பன.

### 2. இதயத்திலிருந்து கைகளுக்குச் செல்வன

இவை பல பிரிவுகளாக உள்ளன.

(1) அடித்தோலைச் சேர்ந்த ஸப்கிளேவியன் சுத்த இரத்தக் குழாய் (**Sub**-Clavian Artery)

(2) அக்குளைச் சேர்ந்த அக்சில்லரி சுத்த இரத்தக் குழாய் (Auxiliary Artery)



132. இரத்த ஓட்டம் —கைகளில் (Circulation of Blood in the hand)




133. இரத்த ஓட்டம் —கால்களில்

(Circulation of Blood in the Leg)

(3) கைமுண்டாவைச் சேர்ந்த பிரேக்கியல் சுத்த இரத்தக் குழாய் (Brachial Artery)

(4) முன்னங்கையைச் சேர்ந்த ரேடியல் சுத்த இரத்த குழாயும் (Radial Artery) அல்நார் சுத்த இரத்தக்குழாயும் (Ulnar Artery)

(5) கை விரல்களைச் சேர்ந்த பாமர் சுத்த இரத்தக் குழாய் (Palmar Arch) என்பன.

### 3. இதயத்திலிருந்து கால்களுக்குச் செல்வன

இவை பல பிரிவுகளாக உள்ளன.

(1) இதயத்தில் இருந்து கீழ் நோக்கிச் செல்லும் ''அயோர்ட்டல்'' சுத்த இரத்தக் குழாய் (Aortal Artery)

(2) துடையைச் சேர்ந்த பிமொரல் சுத்த இரத்தக் குழாய் (Femoral Artery)

(3) முழங்கால் மூட்டுக்குப் பின்பக்கம் உள்ள பாப்லிட்டியல் சுத்த இரத்தக் குழாய் (Popliteal Artery)

(4) காலின் முன் பக்கம் உள்ள ''டிபியல்'' சுத்த இரத்தக் குழாய் (Anterior Tibial Artery)

(5) காலின் பின்பக்கம் உள்ள டிபியல் சுத்த இரத்தக் குழாய் (Posterior Tibial Artery)

## இரத்தப் பெருக்கைக் கட்டுப்படுத்துவது

காயம் ஏற்பட்டால் இரத்தப் பெருக்கு உண்டாகும் பலத்த காயமானல் இரத்தப் பெருக்கு மிகுதியாக இருக்கும். இலேசான காயமானல் இரத்தப் பெருக்கும் இலேசாக இருக்கும்.

காயங்கள் பலமாதிரியாக இருக்கலாம்.

(1) வெட்டுக் காயம் (Incised wound)

(2) கிழிபட்ட காயம் (Lacerated wound)

(3) சிதைவுற்ற காயம் (Contused wound)

(4) குத்துண்ட காயம் (Punctured wound)

**வெட்டுக் காயம்—** காயத்தின் ஓரங்கள் ஒன்றுபோல் இருக்கும். ஏதோ கூர்மையான ஆயுதத்தால் ஏற்பட்டுள்ளது என்று எளிதில் உணர்ந்து கொள்ளல் கூடும்.

**கிழிபட்ட காயம்—** காயத்தின் ஓரங்கள் கிழிபட்டமாதிரி தோன்றும். ஓரங்கள் ஒழுங்காக இராது. ஆழமான காயமாயிருக்கலாம்.

**சிதைவுற்ற காயம்—** சிதைவுற்றதினுல் உண்டான காயம் ஏதாவது கனத்த பொருள் விழுந்ததால் உண்டாகியிருக்கலாம்.

**குத்துப்பட்ட காயம்—** கூர்மையான ஆயுதத்தால் குத்துப்பட்டு உண்டான காயம் மிக ஆழமாக இருக்கலாம். கத்தியால் குத்துண்ட காயம் அல்லது தச்சு வேலைக்குரிய உளி போன்ற ஆயுதத்தால் ஏற்பட்டகாயம், இரும்பு ஆணிகளால், கனத்த ஊசியால் உண்டான காயங்களும் இந்த பிரிவைச் சேர்ந்தன.

காயங்களுக்குரிய சிகிச்சையின் நோக்கம் (1) இரத்தப் பெருக்கைக் கட்டுப்படுத்துவது, (2) மயக்கத்தை குணப்படுத்துவது, (3) காயம் சீழ் கட்டாமல் தடுப்பது.

உரோமக்கால் அளவுள்ள இரத்தக் குழாய்க் காயங்களுக்குரிய சிகிச்சை இரண்டாம் தரச் சாரணப் பயிற்சியில் தரப்பட்டன. கடுமையான காயங்களுக்குரிய சிகிச்சை இங்கு முதல் தரப் பயிற்சியில் தரப்படுகின்றன.

(1) இரத்தப் பெருக்கு மிகுதியாய் உள்ளபொழுது அதை மட்டுப்படுத்தற்குரிய முறைகளை காலதாமதம் இல்லாமல் கையாள வேண்டும். அதே நேரத்தில் மயக்கத்துக்குள்ள சிகிச்சைகளையும் கவனிக்க வேண்டும்.

(2) காயம் அடைந்துள்ளவரை இதமான முறையில் உட்கார அல்லது படுக்கவைக்க வேண்டும். காயம்பட்ட இடத்தை உயரமாகத் தூக்கி வைப்பது அவசியம். **குறிப்பு:** எலும்பு ஒடிந்துள்ளபொழுது காயம் ஏற்பட்டுள்ள இடத்தை அசைத்தல் கூடாது.

(3) காயத்துக்கு அருகில் உள்ள துணிகளை அகற்ற வேண்டும். இரத்தம் உறைந்திருந்தால் அதை அப்படியே விட்டுவிட வேண்டும். உறைந்துள்ள கறை இரத்தப் பெருக்கைத் தடுக்கும் இயல்புடையது.

(4) காயத்தில் வெளிப்பொருள்கள் (Foreign bodies) இருப்பின் எடுத்துவிடுவது நல்லது. அவைகள் இரத்தப் பெருக்கைத் தடுத்துக் கொண்டிருக்குமானுல் அவைகளை அகற்ற வேண்டியதில்லை.

(5) கிருமி நாசினி மருந்து கலந்த தண்ணீரால் காயத்தை நன்ருய்க் கழுவி சுத்தம் செய்ய வேண்டும். டெட்டால் (Dettol) ஒரு பாகம், தண்ணீர் 20 பாகம் என்ற கலவையைப் பயன்படுத்திக்

காயத்தைக் கழுவலாம். கழுவுவது உட்பக்கமிருந்து காயத்தின் வெளிப்பக்கமாகக் கழுவ வேண்டும். கழுவப் பயன்படுத்தப்படும் பஞ்சை அது வெளித்தோலைத் தொட்டதும் எறிந்துவிட வேண்டும்.

(6) காயத்துக்கு கிருமி நாசினி தோய்ந்த துணியை வைத்துக் கட்டலாம். டெட்டால் அல்லது மெர்கியூரோக்கிரோம் (தண்ணீரில் கலந்தது) உபயோகப்படுத்தலாம். டிங்ச்சர் அயடீன் தசைகளை (Tissues) எரித்து விடுமாதலால் அதனை மிகுதியாக உபயோகித்தல் கூடாது.

(7) காயத்துக்கு மேல் மருந்துக்கட்டு (Sterile Dressing) போட்டு, அதற்குமேல் துணி அடுக்கு (Pad) வைத்து பான்டேஜ் கட்டும் கட்ட வேண்டும். அழுத்தி அபாயம் செய்யக்கூடிய வெளிப் பொருள் இருப்பின் மோதிர பான்டேஜ் (Ring Bandage) போட்டுக் கட்ட வேண்டும்.

(8) காயம் உள்ள இடத்தை அசைவில்லாமல் பண்ணுவது அவசியம்.

(9) இரத்தப் பெருக்கு நின்றதும் மயக்கத்துக்குரிய சிகிச்சை நடைபெற வேண்டும்.

## மிகுந்த இரத்தப் பெருக்கு

இப்படியுள்ள இரத்தப் பெருக்கை நிறுத்துவது (1) காயத்தின் மேல் அழுத்தி நிறுத்தலாம், (2) காயத்தைச் சுற்றி அழுத்தி நிறுத்த லாம், (3) காயத்தை விட்டுவிட்டு இரத்தக் குழாயை அழுத்தி நிறுத்த லாம்.

## காயத்தின் மேல் அழுத்தல்

(1) கையால் அல்லது கைவிரலால் நன்கு அழுத்தலாம். அப்படி அழுத்துவதற்கு முன் சுத்தமான துணி (Sterile Dressing) போட்டுக் கொண்டு அதன் மேல் அழுத்த வேண்டும். எலும்பு முறிந்து வெளியில் நீண்டுள்ளபொழுது இது சாத்தியம் அல்ல.

(2) துணி அடுக்கும் துணிக்கட்டும் (Pad and Bandage) அமைத்துக் கொண்டு அழுத்தலாம். துணி அடுக்கை மருந்துக் கட்டுக்கு மேல் வைத்து ஒடுக்கமான பான்டேஜ் (Narrow Bandage) உபயோகித்து இறுகக் கட்டி விடலாம்.

## காயத்தைச் சுற்றி அழுத்தல்

காயத்தின் மீது இலேசான மருந்துக்கட்டு (Dressing) போட்டு விட்டு துணி அடுக்குகள் (Pads) பலவற்றை காயத்தைச் சுற்றி

அடுக்கிக் கொண்டு அவைகளைக் கட்டி அழுத்துவது. காயத்தின் மீது அழுத்தல் சாத்தியம் இல்லையானால் இப்படிக் காயத்தைச் சுற்றி அழுத்தல் பயனளிக்கும்.

## இரத்தக் குழாயை அழுத்தல்

இரத்தக் குழாயை அழுத்தி இரத்தப் பெருக்கை நிறுத்தலாம். இரத்தக் குழாய் ஒரு சில இடங்களில் எலும்புக்கு மேலாக எளிதில் அழுத்தக்கூடிய நிலையில் காணப்படுகிறது. இப்படி உள்ள இடத்தில் இரத்தக் குழாயை எலும்பின்மேல் வைத்து அழுத்தி இரத்தப் பெருக்கை நிறுத்தல் கூடும். அப்படியான இடங்களை அழுத்தல் இடம் (Pressure Point) எனப்படும்.

காயத்தின் மேல் அழுத்தல், காயத்தைச் சுற்றி அழுத்தல் ஆகிய இரண்டும் முடியாதபொழுது அழுத்தல் இடத்தில் அழுத்தி இரத்தப் பெருக்கை நிறுத்தலாம்.

அழுத்தும் இடத்தில் (Pressure Point) அழுத்துவது கையால் அல்லது கை விரலால் அழுத்தலாம், அவசியமானால் கிட்டி (Tourniquet) அமைத்து அழுத்தலாம். கிட்டி அமைத்தலை முதல் உதவி செய்வோர் கையாளுவதில்லை.

## எலும்பு முறிவு (Fracture)

எலும்பின் மேல் கடுமையான அடிபடுவதால் எலும்பு முறிவு உண்டாகிறது. அப்படி முறிவது அடிபட்ட இடத்தில் இருக்கலாம். அல்லது அடிபட்ட இடத்தைவிட்டு இன்னொரு இடத்திலும் இருக்கலாம்.

முன்கையில் அடிபட்டு, அடிபட்ட இடத்தில் (முன் கையில்) எலும்பு ஒடிதல், முதலில் கூறப்பட்டுள்ளதற்கு உதாரணம்.

கீழே விழும்போது கைகுத்தி விழ, காரை எலும்பு ஒடிய நேரிட்டால் அது இரண்டாவதாகக் கூறியுள்ளதற்கு உதாரணம்.

தசைச் சுருக்கத்தாலும் (Muscular Contraction) எலும்பு முறிவு ஏற்படலாம். உதாரணமாக ஒருவன் தன் பலத்தை எல்லாம் பயன் படுத்தி பந்து ஒன்றை மிகப் பலமாக எறிவதால் கையின்மேல் பாகத்தில் உள்ள ஹியூமரஸ் (Humerus) என்ற எலும்பு ஒடிந்து விடுதல் கூடும்.

### பல மாதிரியான எலும்பு முறிவு

எலும்பு முறிவு பல மாதிரியாக உள்ளது அவை:

(1) மிக இலேசான எலும்பு முறிவு (Simple Fracture); (2) காயத் தோடுள்ள எலும்பு முறிவு (Compound Fracture); (3) இரத்தக்

குழாய், நரம்பு போன்ற உறுப்புகளுக்கு கெடுதி செய்துள்ள எலும்பு முறிவு (Complicated Fracture); (4) எலும்பு நொறுங்கியுள்ள எலும்பு முறிவு (Comminuted Fracture); (5) முறிந்த எலும்பின் நுனிகள் ஒன்றுக்குள் ஒன்று ஏறி உள்ள எலும்பு முறிவு (Impacted Fracture); (6) முறிந்த எலும்பு கீழ் சென்றுள்ள எலும்பு முறிவு (Depressed Fracture); (7) எலும்பு முறியாமல் வகுந்தும் பிளவுபட்டும் காணப்படும் எலும்பு முறிவு (Green Stick Fracture) என்பன.

இங்கு ஏழாவது கூறப்பட்டுள்ள எலும்பு முறிவு சிறு குழந்தைகளிடம் காணப்படும்.

### எலும்பு முறிதலுக்கு அறிகுறிகள்

(1) வலி; (2) வீக்கம்; (3) அசைவின்மை; (4) உருவமாற்றம்; (5) கோணல்; (6) உரசும் சத்தம்; (7) எலும்புக் குறுக்கம்; (8) அசைவு இருக்கக் கூடாத இடத்தில் அசைவு.

இந்தக் குறிகள் அனைத்தும் இருக்க வேண்டும் என்பதில்லை. இவற்றுள் இரண்டு மூன்று இருந்தால் எலும்பு முறிவு ஏற்பட்டுள்ளது என்ற முடிவுக்கு வரலாம்.

குறிப்பு : ஆறுவதாக கூறியுள்ள உரசும் சத்தம், அதாவது கர கரப்பு, இருக்கிறதா என்ற சோதனை செய்யும் உரிமை மருத்துவர் ஒருவருக்கே உண்டு. முதல் உதவி செய்யும் சாரணர்கள் அந்த சோதனையைச் செய்து பார்த்தல் கூடாது.

### எலும்பு முறிதலுக்குச் சிகிச்சை

(1) எலும்பு முறிதல் விபத்தில் அகப்பட்டுள்ளவரை அந்த இடத்திலேயே வைத்து முதலுதவி செய்ய வேண்டும். தீ விபத்துப் போன்ற விபத்துக்களில் மட்டுமே எலும்பு முறிவு அடைந்துள்ளவரை இடம் விட்டு வேறு இடத்துக்கு எடுத்துச் செல்லலாம்.

(2) இரத்தப் பெருக்கு இருந்தால் முதலில் அதற்குரிய சிகிச்சை செய்ய வேண்டும்.

(3) அடிபட்டுள்ள இடத்தை அசைவில்லாமல் வைப்பது மிகவும் முக்கியமானது.

(4) கை எலும்பு, கால் எலும்பு, முறிவடைந்தால் அந்த எலும்புகள் இயற்கையில் எப்படிக் காணப்படுமோ அப்படியே வைக்க வேண்டும்.

(5) மயக்கம் மேலிட்டால் அதற்குரிய சிகிச்சை செய்ய வேண்டும். ஆனால் முறிந்துள்ள எலும்பால் கெடுதி உண்டாகாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்.

(6) எலும்பு முறிவு ஏற்பட்டுள்ள கை, கால் ஆகிய உறுப்புகள் அசைவுருதபடி இருக்க மட்டை (Splint) வைத்துக் கட்டிவிட வேண்டும்.

மட்டை வைத்துக்கட்டும் போது அவைகளைப்பான்டேஜ் பட்டையால் (Bandage) இறுகக் கட்டிவிட வேண்டும். அப்படிச் செய்வது கெடுதி பயக்கக்கூடிய அசைவுகள் உண்டாகாதபடி தடுக்கும். மட்டை முறிவின் மேலும் கீழும் உள்ள இரு கணுக்களையும் அசைவில்லாமல் வைக்கும் அளவிற்குப் போதுமான நீளம் உடையதாய் இருத்தல் வேண்டும். மட்டைகள் உடம்பை அழுத்தாதபடி அவற்றிற்கு துணி அடுக்குகள் (Pad) அமைக்க வேண்டும்.

## கை எலும்பு முறிவு

I. கையை மடக்க முடியுமானல்—

(1) விபத்துக்குள்ளானவர் அணிந்திருக்கும் சட்டைகளை அப்படியே விட்டு வைக்கலாம். அவற்றை அகற்ற வேண்டிய அவசியமில்லை.

(2) கையை நன்ருக மடக்கி மார்போடு சேர்த்து வைக்க வேண்டும். கை விரல்கள் மறுதோளைத் தொடும்படி வைக்க வேண்டும்.



134. கை எலும்பு முறிவு சிகிச்சை
Upper arm Fracture
கழுத்துப்பட்டி மணிக் கட்டுத் தொட்டில்
Cuff and Collar Sling

(3) கைக்கும் உடம்புக்கும் மத்தியில் மெதுவான துணிகளை வைக்க வேண்டும்.

(4) ஒடுக்கமான பான்டேஜ் பட்டையால் (Narrow-Bandage) மணிக்கட்டுக்கும் கழுத்துக்கும் தொட்டில் கட்டவேண்டும். இந்தத் தொட்டில் அமைப்பதற்கு முதலில் மணிக்கட்டில் பட்டையால் ஒரு யானைக்கொலுசு போடவேண்டும். பிறகு பட்டையைக் கழுத்தைச் சுற்றிக்கொண்டு வந்து முடிச்சுபோட வேண்டும்.

(5) அகல மடிப்புப்பட்டை (Broad Bandage)களை உடம்பைச் சுற்றி மேல் ஒன்றும் கீழ் ஒன்றுமாகக் கட்டவேண்டும்.

(6) நாடியைக் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். இரத்த ஓட்டம் தடைபடாமல் இருப்பது அவசியம்.

II. கையை மடக்க முடியாமல் உள்ள பொழுது—

(1) கையை உடம்போடு சேர்த்து வைக்க வேண்டும். உடம்புக்கும் கைக்கும் மத்தியில் துணிகளை அடுக்காக வைக்க வேண்டும். கையைத் துடையோடு சேர்த்துவைக்க வேண்டும்.

(2) கையையும் உடம்பையும் சேர்த்து மூன்று பட்டிகள் கட்ட வேண்டும். ஒன்று கையை உடம்போடு சேர்த்து, இரண்டாவது முழங்கையையும் உடம்பையும் சேர்த்து, மூன்ருவது மணிக்கட்டை யையும் துடையையும் சேர்த்து, அப்படி மூன்று கட்டுகள் போட வேண்டும்.

## காரை எலும்பு முறிவு

**அறிகுறிகள் :** முறிவு அடைந்துள்ள கை ஆதரவற்றதாகக் காணப்படும். விபத்துக்குள்ளானவர் அந்தக் கையை மறு கையால் தாங்கிய வண்ணம் காணப்படுவார்.



135. காரை எலும்பு முறிவு சிகிச்சை
(One Collar Bone Fracture)

அப்படித் தாங்கும் கை ஊனம் அடைந்துள்ள முழங்கைக்குக் கீழாகக் காணப்படும். முறிவுள்ள பக்கத்தில் அவர் தலை சாய்ந்து காணப்படும். முறிந்த காரை எலும்பின் வெளிப் பக்கத்துத் துண்டு கீழாகவும் உள் பக்கத்துத் துண்டு மேலாகவும் காணப்படும். இவை இரண் டையும் நேராக அமைப்பதும் அவை ஒன்ருேடு மற்றையது உரசாமல் இருக்கும்படி வைப்பதும் தான் நாம் செய்ய வேண்டிய முதல் உதவிச் சிகிச்சை.

**சிகிச்சை :**

(1) வெளிச் சட்டை (Over Coat) அணிந்தி ருந்தால் அதைக் கழற்ற வேண்டும்.

(2) ஊனம் அடைந்துள்ள கையைத் தாங்கிப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

(3) ஒடுக்கமான பான்டேஜால் ஒவ்வொரு தோளைச் சுற்றியும் தளர்ந்த மேல் கட்டு ஒன்று போடவேண்டும். பிறகு மூன்ருவது ஒரு ஒடுக்கப் பட்டையால் முந்தின இரு கட்டுகளையும் பின்னுக்கு இழுத்து இறுகக் கட்டிவிடவேண்டும். இப்படிச் செய்யும்போது இரண்டு தோளுக்கும் நடுவில் மெதுவான துணி அடுக்கு (Pad) ஒன்று அமைக்க வேண்டும்.

(4) கடைசியாக ''செய்ண்ட் ஜான் தொட்டில்'' (St. John Sling) அமைத்து கைக்கு அசைவில்லாமல் செய்யவேண்டும்.

(5) ஊனம் உற்றவரை உட்கார்ந்துள்ள வண்ணம் மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லவேண்டும்.



(பின்புறம்)
(Back View)



(முன்புறம்)
(Front View)

136. இரண்டு பக்கமும் காரை எலும்பு முறிவு சிகிச்சை
(Fracture of Collar Bones on Both Sides)

இரு காரை எலும்புகளும் முறிந்திருந்தால், ஊனமுற்றவரின் முன் கைகளை அவர் மார்புக்கு மேல் வைத்து அகல மடிப்புப் பட்டையால் (Broad-fold Bandage) உடம்பைச் சுற்றிக் கட்ட வேண்டும். அப்படிக் கட்டிவிட்டு, படுக்கவைத்து அவரை மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லவேண்டும்.

## கால் எலும்பு முறிவு



137. கால் எலும்பு முறிவு—சிகிச்சை
(Fracture of the Leg)



கரண்டைக் காலையும் பாதத்தையும் சேர்த்துக் கட்டுவது
(Binding the ankles and the feet)

கால் எலும்பில் முன்பக்கம் உள்ளது டிபியா (Tibia) என்பது, பின்பக்கம் உள்ளது ஃபிபுலா (Fibula) என்பது. இவைகளில் ஒன்று முறியலாம், அல்லது இரண்டும் முறியலாம்.

கால் எலும்பு முறிவுக்குரிய முதல் சிகிச்சை, ஊனமுள்ள காலை ஊனமில்லாத காலோடு இணைத்துக் கட்டுவதாகும்.

(1) காலையும் கரண்டைக் காலையும் பிடித்து மெல்ல இழுத்து ஊனமடையாத காலுக்கு இணையாக அமைக்க வேண்டும். வலி இருந்தால் பொறுத்துக் கொள்ளும் அளவிற்கு இழுத்தால் போதும்.

(2) கால் கவட்டையிலிருந்து பாதம் வரை எட்டுகிற ஒரு மட்டையை அடுக்குத் துணி (Pad) அமைத்து அதனை ஊனம் அடைந்துள்ள காலில் வைத்து இரு பாதங்களையும் கரண்டையையும் சேர்த்து எட்டு வடிவக் கட்டினால் (Figure of Eight) கட்டி உறுதிப் படுத்தவேண்டும்.

(3) துடையைச் சுற்றி அகல பான்டேஜ் போடவேண்டும்.

(4) அகல பாண்டேஜ் ஒன்றினால் இரண்டு கால் முட்டுகளையும் சேர்த்துக் கட்டவேண்டும். முடிச்சுப்போடுவது ஊனமில்லாத காலின் வெளிப் புறத்தில் இருக்கவேண்டும்.

(5) எலும்பு முறிவுக்கு மேல் ஒன்றும் கீழ் ஒன்றுமாக இரண்டு கட்டுகள் ஒடுக்கமான பட்டையால் அல்லது நடுத்தரப் பட்டையால் போடவேண்டும்.

## தொடை எலும்பு முறிதல் (Thigh Bone Fracture)

சிகிச்சை (1) கால் கவட்டையிலிருந்து பாதம்வரை உள்ள மட்டை ஒன்றைத் துணி அடுக்கால் (Pad) மெதுவாக்கிக்



138. தொடை எலும்பு முறிவு—சிகிச்சை
(Thigh Fracture)

கொள்ளவேண்டும். பிறகு அதனைப் பொருந்தும் முறையில் வைக்க வேண்டும். (2) கரண்டைக் காலையும் பாதத்தையும் மெல்ல இழுத்து இயற்கையில் உள்ளபடி அவைகளை வைத்துக்கொண்டு

பாதத்தைச் சுற்றியும் கரண்டைக் காலைச் சுற்றியும் எட்டு வடிவத்தில் கட்டுப்போட வேண்டும். (3) உடம்பின் வெளிப்பக்கத்தில் அக்குள் முதல் பாதம்வரை எட்டுகின்ற ஒரு மட்டையை துணி அடுக்கால் மெதுவாக்கிக் கட்டவேண்டும். (4) ஏழு பான்டேஜ் கட்டுகளைக் கட்டவேண்டும். முதலாவது அக்குளுக்குக் கீழ்; இரண்டாவது இடை எலும்பின் மேல்; மூன்றாவது பாதத்தையும் கரண்டையையும் சுற்றி; நான்காவது இரண்டு தொடைகளையும் சுற்றி முறிவுற்றிருக்கும் இடத்துக்கு மேல்; ஐந்தாவது இரண்டு தொடைகளையும் சுற்றி எலும்பு முறிந்துள்ள இடத்துக்குக் கீழாக; ஆறாவது இரண்டு கால்களைச் சேர்த்து; ஏழாவது இரண்டு கால் மூட்டுக்களையும் சேர்த்துக் கட்டுப் போடவேண்டும்.

## விபத்துக்காளானவரை எடுத்துச் செல்வது

(Transport of Patients)

பேடன்-பவலார் இயற்றியுள்ள ''சிறுவர் சாரணியம்'' (Scouting for Boys) என்ற நூலில் விபத்துக்குள் அகப்பட்டுக் கொண்டவர்களை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்ல ''நான்கு கை இருக்கை''களும் ''மூன்று கை இருக்கை''களும் விவரிக்கப்பட்டுள்ளன.



139. நான்கு கை இருக்கை (Four Handed Seat)

**நான்கு கை இருக்கை:** இரண்டு சாரணர்கள் தங்கள் தங்கள் இடக்கை மணிக்கட்டை வலக்கையால் பிடித்துக்கொண்டு அப்புறம் ஒருவன் அடுத்தவனுடைய வலக்கையைத் தன் இடக்கையால் பிடித்துக் கொள்வது.



140. மூன்று கை இருக்கை (Three Handed Seat)

**மூன்று கை இருக்கை:** ஒரு சாரணன் தன் வலக்கையால் இடக்கை மணிக்கட்டைப் பிடித்துக் கொண்டு தன் இடக்கை மணிக்கட்டினால் மற்றவன் கையைப் பிடிக்க அவனும் முந்தினவன் கையைப் பிடித்துக் கொள்வது.

காலியாய் உள்ள கை அடுத்தவன் தோளைப் பற்றிக் கொண்டால் அது நோயாளியைத் தாங்குதற்கு உதவும்.

**கட்டில்:** கிராமங்களில் கிராமத்தார்கள் நோயாளிகளைக் கட்டிலில் தூக்கிச் செல்வார்கள். ஸ்டிரச்சர் (Stretcher) என்ற



141. நோயாளிக் கட்டில்
(Charpoy for Transport of Patient)

கட்டில் கித்தான் துணியால் செய்தது. இரு பக்கங்களிலும் இரண்டு உருளைக் கொம்புகளை உடையது. இம்மாதிரியான "கட்டில்" நோயாளியை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்ல மிகவும் சௌகரியமாக இருக்கும். அதற்குப் பதிலாக சந்தர்ப்பத்துக்குத் தகுந்தவாறு "கட்டில்களை" நாமே அமைத்துக் கொள்ளலாம்.



142. மருத்துவமனை நோயாளித் தொட்டில் (Stretcher)

(1) கதவுப் பலகையைக் கட்டிலாகப் பயன்படுத்தலாம். நோயாளி தவறி கீழே விழுந்துவிடாதபடி பாதுகாப்புகள் வேண்டும்.

(2) அழுத்தமான ஒரு கம்பளத்தை அல்லது ஒரு சமுக்காளத்தை இரண்டு சாரண தண்டத்தைச் சுற்றி அமைத்துக்கொண்டு அதைக் கட்டிலாகப் பயன்படுத்தலாம்.

(3) இரண்டு சாரண தண்டங்களையும் இரண்டு சட்டைகளையும் பயன்படுத்திக் கட்டில் அமைக்கலாம்.

நோயாளியை கட்டிலில் போட்டு எடுத்துச் செல்லும் சாரணர்கள் ஒன்றுபோல் எழுந்திருந்து ஒன்றுபோல் நடந்து செல்வது அவசியம். நோயாளியை மிகக் கவனமாக அவர்கள் எடுத்துச் செல்ல வேண்டும். கவாத்து நேரத்தில் நடப்பது போல முறையாக நடப்பது நோயாளிக்குத் தொந்தரவு தரும். ஆகையால், கட்டிலைத் தாங்கிச் செல்லும் சாரணர்கள் சாதாரணமான நடைபோட்டுச் செல்ல வேண்டும்.

## தீ விபத்து (Emergency by Fire)

முன் அத்தியாயம் ஏழில் கூறியுள்ளது போல் தீ எரிவதற்குரிய வசதிகள் மூன்று. அவை பிராணவாயு, எரிபொருள், வெப்பம் என்பன. தீ விபத்துக்கும் காரணமாய் உள்ளது இந்த முக்கோணமே. இந்த முக்கோணத்தைத் தீ முக்கோணம் (Fire Triangle)என்பர். தீ விபத்தில் தொண்டாற்றும் சாரணர்கள் செய்ய வேண்டியது இந்த முக்கோணத்தை உடைத்து விடுவதே ஆகும்.

தீ விபத்தில் தொண்டாற்றும் சாரணர்கள் செய்ய வேண்டியவை: (1) மக்களை எச்சரித்தல் (2) தீ அணைக்கும் நிலையத்துக்குச் செய்தி அறிவித்தல் (3) அபாயத்தில் உள்ள மக்களைக் காப்பாற்றல் அதே நேரத்தில் அபாயத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் பிராணிகளைக் காப்பாற்றுதல் (4) பொருள்களைக் காப்பாற்றுதல். (5) பக்கத்து வீடுகளுக்கு தீ பரவாமல் தடுத்தல் (6) தீ அணைத்தல்.

### மக்களை எச்சரித்தல்

தீயைக் கண்டதும் மக்களை எச்சரிக்கவேண்டும். தீயை அணைப்பதற்கும் பொது மக்களின் உதவியை நாடவேண்டும். இரவு நேரமானல் தீ பிடித்து எரியும் வீட்டினுள் மக்கள் தூங்கலாம். கதவு சன்னல் ஆகியவைகளை இடித்துச் சந்தடி செய்து தூங்குபவர்களை எழுப்பி அபாயத்திலிருந்து அவர்களைத் தப்ப வைக்கவேண்டும். எத்தனை பேர் வீட்டினுள் இருந்தனர் என்பதை அவர்களிடம் இருந்தே கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். முக்கியமாக சிறு குழந்தைகளைப் பற்றியும், எழுந்து நடக்க இயலாத நோயாளிகளைப் பற்றியும், வயோதிகர்களைப் பற்றியும் கேட்டுத் தெரிந்துகொண்டு அவர்கள் எல்லோரும் வெளியேற உதவி புரியவேண்டும்.

### தீ அணைக்கும் நிலையத்துக்கு அறிவித்தல்

தீ எரிவதைக் கண்டவன் தீ நிலையத்துக்குத் தொலைபேசி மூலம் தெரிவிக்க வேண்டும். தீ பிடித்து எரிகிற இடத்தைத் தெளிவாகக் கூறவேண்டும். அந்தத் தெருமுனையில் ஒரு சாரணனை நிற்கவைத்து

தீ அணைக்கும் படை வந்ததும் அவர்களை வரவேற்று தீ எரியும் இடத்துக்கு அவர்களை வழிகாட்டி அழைத்து வரச்செய்யலாம். தொலைபேசியில் பேசுவது சுருக்கமாகவும் தெளிவாகவும் சந்தேகத் துக்கு இடம் தராமலும் இருக்கவேண்டும்.

### மக்களையும் பிராணிகளையும் காப்பாற்றல்

தீ அணைக்கும் படையினர் வரும்வரை சாரணர்கள் தம்மால் இயன்ற அளவு இந்தக் கடமையைச் செய்யவேண்டும். தீ அணைக்கும் படையினர் வந்தபிறகு அவர்கள் இந்தக் கடமையைச் செய்வார்கள். ஆயினும் அவர்களுக்கு உதவியாக சாரணர்கள் பணியாற்றவேண்டும்.

பிராணிகள் என்பது ஆடு, மாடு, குதிரை, நாய், பூனை, கிளி முதலியவைகளைக் குறிக்கும். ஆடு, மாடு, குதிரை முதலியன தீ எரியும் வீடுகளிலிருந்து பயத்தினல் வெளிவர மறுக்கலாம். அப் பொழுது கோணிப் பையை அவற்றின் தலையில் போட்டுக் கண்ணை மறைத்து விட்டால் பயமில்லாமல் வெளியே வரும்.

### பொருள்களைக் காப்பாற்றுதல்

சில சாரணர்கள் மக்களையும் பிராணிகளையும் காப்பாற்றும் முறைகளில் ஈடுபட்டிருக்கும் பொழுது வேறு சிலர் தீ எரியும் வீட்டில் உள்ள பொருள்களைக் காப்பாற்றும் முயற்சியில் ஈடுபடலாம். துணிமணிகளையும், ஏனைய பொருள்களையும் முக்கியமான தஸ்தா வேஜுகளையும் காப்பாற்றி அவைகளை ஒரு இடத்தில் சேகரித்து வைத்து அவைகளைப் பாதுகாக்க இரண்டு மூன்று சாரணர்களையும் காவல் போடவேண்டும்.

### பக்கத்து வீடுகளுக்குத் தீ பரவாமல் தடுத்தல்

ஓலையால் அமைந்துள்ள கூரைகளைப் பிரித்து ஓலையை அப்புறப் படுத்தவேண்டும். தண்ணீரால் கூரையை நன்ருக நனைத்துக் கொண்டு அப்புறம் ஓலையைப் பிரிக்கலாம்.

### தீ அணைத்தல்

தீ அணைக்கும் படை இல்லாத இடங்களில் சாரணர்களே இந்த அலுவலையும் செய்யவேண்டும். முன் அத்தியாயம் ஏழில் இதைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.

தீ அணைத்தலுக்கு ஏராளமான தண்ணீர் வேண்டும். தண் ணீரை மொண்டு கொள்ள குடங்கள், வாளிகள் போன்ற பாத்திரங் களும் வேண்டும். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்கவும், இறைத்த தண்ணீரை தீயருகில் கொண்டு சேர்க்கவும் போதுமான

அளவு உதவியாளரும் தேவையாகும். இதற்கு அவசியமான வாளி, குடம் போன்ற பாத்திரங்களையும் ஏணி முதலிய உபகரணங்களையும் பக்கத்து வீடுகளில் இருந்து சேகரிக்க வேண்டும். உதவியாளர்களில் ஒரு சிலர் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்கவேண்டும்.

இன்னும் சிலர் கிணற்றிலிருந்து தீ பிடித்து எரியும் இடம்வரை 10 அல்லது 15 அடிக்கு ஒருவராய் நின்று தண்ணீர் நிறைந்துள்ள வாளிகளை அல்லது குடங்களை தீ எரியும் இடத்திற்கு அஞ்சல் செய்து கொண்டிருக்க வேண்டும். தீ எரியும் இடத்தில் ஒருவர், இருவர் அக் குடங்களையும் வாளிகளையும் வாங்கித் தீயை அணைத்துக் கொண்டிருக்க வேண்டும். இன்னும் சிலர் இன்னொரு வரிசையாக நின்றுகொண்டு காலியாக உள்ள குடங்களையும் வாளிகளையும் பழையபடி கிணற்றுப் பக்கம் அனுப்பிக் கொண்டிருக்க வேண்டும். (142-ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள படத்தைப் பார்க்கவும்) சற்று நேரத்துக்கு அப்பால் இரண்டு வரிசைகளும் தங்கள் வேலைகளைத் தங்களுக்குள் மாற்றிக்கொள்ளலாம். காலிப் பாத்திரங்களை அனுப்பிக் கொண்டிருந்த வரிசை தண்ணீர் நிறைந்த பாத்திரங்களை அனுப்ப, தண்ணீர் நிறைந்த பாத்திரங்களை அனுப்பிக் கொண்டிருந்த வரிசை காலிப் பாத்திரங்களை அனுப்பும் வேலையில் ஈடுபடலாம். இப்படிச் செயல்புரிந்து தீ நன்றாக அணைவதுவரைப் பாடுபட வேண்டும்.

இந்தத் தீ அணைக்கும் பொறுப்பை சாரண ஆசிரியர் அல்லது சாரண உதவி ஆசிரியர் அல்லது பயிற்சி பெற்ற ஒரு அணித்தலைவன் ஏற்று நடத்த வேண்டும்.

தீ அணைக்கும்பொழுது வேடிக்கை பார்க்கும் கூட்டத்தால் இடைஞ்சல் உண்டாகாதபடி கூட்டத்தை மட்டுப்படுத்துவது மிக அவசியம். அதுபோலவே தீயிலிருந்து காப்பாற்றப்பட்ட பொருள்களைக் களவுபோகாதபடி காப்பாற்றுவதும் அவசியம். இதற்காக சில சாரணர்களைப் பொறுப்புக் கட்டவேண்டும்.

### அதிர்ச்சி அல்லது மயக்கம் உற்றவரைக் காப்பாற்றல்

(1) தீ எரியும் வீட்டிற்குள் மயக்கம் உற்று யாராயினும் இருந்தால் அவர்களை சீக்கிரமாக வெளி ஏற்ற வேண்டும். அதற்காக சாரணன் தீ எரியும் வீட்டுக்குள் நுழைய வேண்டும். தன் வாயையும் மூக்கையும் ஈரம் தோய்ந்த துணியைக் கொண்டு மூடிக்கொள்ள வேண்டும். அப்புறம் குனிந்த வண்ணமாக நகர்ந்து நகர்ந்து வீட்டுக்குள் செல்ல வேண்டும். நகர்ந்து செல்வதால் அறைக்குள் அடைந்துள்ள புகை நம்மைத் தாக்காது. ஈரமுள்ள துணி புகையில் இருந்து நம்மைக் காப்பாற்றும்.



143. தீயணைப்போர் இழுவை (Fireman's Drag)

(2) மயக்கம் வந்துள்ளவரை சட்டையின் கழுத்துப் பக்கமாகப் பிடித்து இழுத்து வெளியே கொண்டு வரலாம். அப்படி இழுத்துவர முடியவில்லை என்றால், அவரை மல்லாக்கப் போட்டு அவர் மார்பைச் சுற்றி ஒரு வளையமுடிச்சு (Bowline) கட்ட வேண்டும். கட்டும்போது அதன் முடிச்சு அவர் தலைக்குக் கீழே வரும்படி வைத்துக் கொள்ள வேண்டும். கயிற்றின் மறுபக்கத்தில் ஒரு வளையமுடி போட்டு அதைச் சாரணன் தன் கழுத்தில் மாட்டிக் கொண்டு, இரண்டு கைகளையும் நிலத்தில் ஊன்றி நகர்ந்து வெளிவந்துவிட வேண்டும். மயக்க மடைந்தவர் தலையும் தோளும் தரையில் உராயாதபடி கவனித்துக் கொள்ளவேண்டும்.

விபத்தில் உள்ளவரை வெளிக்கொண்டு வந்ததும் தீயணைப் போன் தூக்கணம் (Fireman's Lift) போட்டு அவரைப் பாதுகாப்பான இடத்துக்கு எடுத்துச் செல்ல வேண்டும்.



144. தீயணைப்போர் தூக்கு (Fireman's Lift)

இதற்குரிய செயல்முறை: (1) மயக்கமடைந்திருப்பவரை மல்லாக்கப்போட வேண்டும். (2) அவர் கையை அவர் தலைக்கு உயரமாக அமைத்து அவரை மெதுவாக உருட்ட வேண்டும்.

(3) முதல் சிகிச்சையாளர் அவர் தலைப்பக்கம் உட்கார்ந்துகொண்டு தன் கைகளை குப்புறக்கிடக்கும் அவருடைய மார்பின் இருபக்கத்திலும் வைத்து அவரை மேலுக்குத் தூக்க வேண்டும். (4) தூக்கி நிறுத்தியதும் முதல் சிகிச்சையாளர் திடீரென்று குனிந்து லாகவமாக அவரைத் தன் தோளின்மேல் தாங்கிக்கொள்ள வேண்டும். (5) அப்புறம் கால் பக்கம் தன் கையை கொண்டுபோய் அவருடைய இரு கால்களுக்கும் நடுவில்விட்டு அவர் கையைத் தன் கையால் இறுகப் பிடித்துக் கொள்ள வேண்டும். (6) அப்புறம் மெதுவாக எழுந்து பாரத்தைச் சரி செய்து கொண்டு முன்னுக்கு நடக்கலாம் மச்சுப்படி வழியாகக் கீழே இறங்கலாம், (7) தரைக்குக் கொண்டு வந்த பிறகு தரையில் மெல்லப் படுக்கப் போடலாம். அப்படிப் படுக்கவைத்து சிகிச்சை செய்ய இங்கு (1)-லிருந்து (7)வரைக் கூறியுள்ளதை (7)லிருந்து (1)வரை செய்தல் போதுமானது.

## செயற்கை மூச்சு (Artificial Respiration)

தீ விபத்தில் மயக்க முற்றிருப்பவரைத் தீயைவிட்டு வெளிக் கொண்டு வந்ததும் எவ்வளவு சீக்கிரமாக செயற்கை மூச்சு அளிக்கக் கூடுமோ அவ்வளவு சீக்கிரமாக அளிக்க வேண்டும். சுவாசம் இயற்கையாக வர ஆரம்பித்த உடன் மயக்கத்துக்குரிய சிகிச்சை செய்ய வேண்டும். இது பின்னால் விவரிக்கப்பட்டுள்ளது.

### தண்ணீரில் விபத்து

தண்ணீரில் விழுந்து ஆழத்தில் தத்தளிக்கின்றவரைக் கரை ஏற்றச் சிறந்த உபாயம் அவரை நோக்கி கரை ஏற்றக் கயிறு (Life-Line) எறிவதாகும். முதல்தரச் சாரணன் கரையேற்றக் கயிறு எறியும் ஆற்றலும் திறனுமுடையவனாக இருக்க வேண்டும்.

கரை ஏற்றக் கயிறு மிகவும் மெதுவானதாக, எளிதில் வளைந்து கொடுக்கக் கூடியதாக இருக்க வேண்டும். அது ஏறக்குறைய 20 மீட்டர் நீளமுடையதாகவும் பளுக் குறைந்ததாகவும் இருக்க வேண்டும். இலேசான கயிற்றை வீசுவது எளிது. அது மிகுந்த தொலைவும் செல்லும். விபத்தில் உள்ளவரைத் தாக்கினாலும் தீங்கு உண்டாகாது.

கரை ஏற்றக் கயிற்றின் ஒரு நுனியில் முக்கால் முழம் அல்லது ஒருமுழ நீளம் உள்ள ஒரு சிறு கழி கட்டப்பட வேண்டும். இந்தக் கழிக்குள்ள கனம் கயிற்றை எறிவதற்கு நல்ல வாய்ப்பு அளிக்கும்.

கரையேற்றக் கயிற்றினை வீசுவதற்கு முன்னால் அதன் ஒரு நுனியை இடதுகை மணிக்கட்டில் கட்டிக்கொண்டு கயிற்றை ஒழுங்கான வரிசையில் பின் இருந்து முன் தட்டைதட்டையாகச் சுற்றிப்

பிடித்துக்கொள்ள வேண்டும். கயிறு ஒன்றன்மேல் ஒன்று ஏருமல் பார்த்துக்கொள்ள வேண்டும். கழி உள்ள நுனி கடைசியில் வரும். கழியையும் ஒரு மீட்டர் கயிற்றையும் வட்டமாக பல தடவை விரைவாய் கழற்றிக் கொண்டு தண்ணீரில் தத்தளிக்கிறவரை நோக்கி முன்னுக்கு வீசவேண்டும். கயிறு அவரைத் தாண்டிச் சென்று அவர் பக்கத்தில் விழுவதோடு அவர் தன் கையால் எட்டிப்



145. கரை ஏற்றக் கயிறு (Life Line)
கரை ஏற்றக் கயிற்றை வீசும் முறை (How to Throw Life-Line)



விரல்களைச் சுற்றிக்
கயிற்றை அடுக்கும் முறை
(How the line should be
held on the fingers)



செய்யக்கூடாத
முறை
(How not to do it)

பிடிக்கக்கூடிய தொலைவில் இருக்க வேண்டும். அவர் கயிற்றைப் பிடிக்க முடிந்தால் அவரைக் கரையேற்றுவது மிக சுலபம்.

இப்படி கரையேற்றக் கயிற்றினை உரிய முறையில் எறிய சாரணர்கள் பழகிக்கொள்ள வேண்டும். முதல்தரச் சாரணன் 10 மீட்டர் தூரத்திற்குக் குறையாமல் கரையேற்றக் கயிறு எறியும் வல்லமை உடையவனுயிருத்தல் வேண்டும்.

பாசறைக் காலத்தில் சாரணர்கள் ஒன்று போலக் குளிக்கச் செல்லும் வேளைகளில் பாதுகாப்பு முறைகளைக் கையாளவேண்டுவ தவசியம். அந்த முறைகளில் கரையேற்றக் கயிறு வீச ஆயத்தமா யிருப்பதும் ஒன்று ஆகும்.

## காப்பு முறைகள் (Rescue Methods)

தண்ணீரில் தவறி விழுந்து ஒருவர் தத்தளிக்கிறதைக் கண்ணுற்ற உடன் எந்த முறையில் அவரைத் தப்ப வைக்கலாம் என்பதைச் சீக்கிரமாக முடிவு செய்ய வேண்டும். கரைக்கு அருகாமையில் விழுந்து தத்தளிக்கும் ஒருவரை ஒரு கயிற்றின் உதவியால் கரையேற்ற முடியுமானால் அதைச் செய்யலாம். அல்லது ஒரு நீளக் கொம்பை அவர் பக்கம் நீட்டி அதைப் பிடிக்கச் செய்து அவரைக் கரை ஏற்றலாம். நீச்சல் தெரியாத சாரணன் செய்யக் கூடியது இவைதான். நீச்சல் தெரிந்த சாரணனும் முதலில் இவைகளைப் பயன்படுத்திப் பார்க்க வேண்டும். அவைகள் முடியாமற் போனால் நீந்திச் சென்று தத்தளிப்பவரைக் கரையேற்றலாம். ஆனால் அதற்குரிய தனிப் பயிற்சி தேவை.




146. நீர் விபத்துக் காப்பு முறைகள்
(Accident in Water—Rescue Methods)

1. நீட்டுதல் (Reach) 2. எறிதல் (Throw) 3. தோணியைக் கொண்டு போதல் (Row) 4. நீந்திப் போதல் (Go)

தத்தளிப்பவரைக் கரையேற்ற நீந்திச் செல்லும் சாரணன் தன் மேலுடைகளைக் களைந்து விட்டு உள்ளுடையோடு செல்ல வேண்டும். தத்தளிப்பவரை அணுகும்போது ஒரு கயிற்றை அல்லது துணியை எறிந்து அவரை அதைப் பற்றச் செய்து தண்ணீரில் இழுத்து வரலாம். அவர் யாதொரு தொந்தரவும் கொடுக்கவில்லையானல் அவரை அப்படி இழுத்துக் கொண்டே நீந்திக் கரைக்கு வந்து



147. தொந்தரவு கொடுக்காத ஒருவரை நீச்சலில் கரை கொணர்தல் (Rescuing Quiet Patient)

விடலாம். நீச்சல் தெரிந்தவர்கள் மிகுந்த களைப்படைந்திருப்பதால் நீந்த இயலாமல் தண்ணீரில் தத்தளிப்பவரை அணுகும் போது அவர் நம்மை இறுகப் பிடித்துக் கொள்ளக்கூடும். அது நமக்கு அபாயம். அவரும் தப்பித்துக்கொள்ளும் வாய்ப்பை இழக்கிறர். அவரைத் தப்புவிக்கப் போய் நாம் நம்மைத் தப்புவித்துக் கொள்ள வேண்டிய தாக வரலாம்.

முன் பக்கமாக அவர் நம் கழுத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டுள்ளாராஞல், நாம் அவர் மூக்கை இறுகப் பிடித்து அழுத்தி சுவாசம் விடாமல் திக்கு முக்கடிக்கும்படி திணற வைத்துப் பின் அவரை மிக ஊக்கமாகப் பின்னுக்குத் தள்ள வேண்டும். இது மிகக் கொடுமையாகத் தோன்றலாம். ஆயின் அவர் நன்மைக் காகவே நாம் அவருக்கு இழைக்கும் கொடுமை. அதற்குப் பிறகு நீந்தி அவர் பின் பக்கமாகச் சென்று அவர் கை "முண்டா" வை இறுகப் பிடித்துக் கொண்டு அவரை இழுத்துக் கொண்டே நீந்திக் கரைக்கு வந்து விடலாம்.

பின் பக்கமாக அவர் நம்மை இறுகப் பிடித்துக் கொண்டிருந்தால் நம் தலையாலேயே ஓங்கி அவர் மூக்கின் மேல் இடித்து அவருக்கு அதிர்ச்சி உண்டு பண்ணி நாம் நம்மைத் தப்ப வைத்துக் கொண்டு, மறுபடி அவரை அணுகி அவர் கை முண்டாவை முன்போல் பிடித்துக் கொண்டு நீந்திக் கரை சேர வேண்டும்.

இவ்விரண்டு முறைகளையும் பலமுறை பயிற்சி செய்தால் நன்கு கற்றுக் கொள்ளலாம்.




148. காப்பு முறைகள்—மரணப் பிடியைத் தளர்த்தல்
(Rescue Methods—Breaking Death Grips)

(1) விபத்துக்குள் இருப்பவர் மதியிழந்தவராகையால் தன்னைத் தப்புவிக்க வருபவரை இறுகக்கட்டிக் கொள்ளலாம்.

(2) அப்படியாயின் இரண்டு கைகளையும் பிடித்துக் கீழாகவும் வெளிப் பக்கமாகவும் ஊக்கமொடு உதறித் திருப்ப வேண்டும். தப்புவிக்க வந்தவர் முதலில் தன்னைத் தப்புவித்துக் கொண்டதும் விரைவாக மற்றவரை மேல் படத்தில் உள்ளது போல, மேலாகப் பற்றிக்கொண்டு, நீந்திக் கரை சேரவேண்டும்.

(3) இறுகக் கட்டிக் கொண்டால் தப்புவிக்க வந்துள்ளவர் மற்றவரின் மூக்கை கெட்டியாய் அழுத்தி மூச்சுத்திணறும்படி செய்து கொண்டு, தன்னை விடுவித்த பிறகு, அவர் அருகில் சென்று அவர் கையை முழங்கைக்குச் சிறிது மேலாகப் பிடித்து, நீந்திக் கரை சேரலாம்.

(4) தப்புவிக்கிறவர் தானும் மல்லாக்காக நீந்தியும் மற்றவரையும் மல்லாக்காக நீந்தச் செய்தும் கரை சேரலாம்.

## செயற்கை மூச்சு

தண்ணீரில் மூழ்கி மூச்சு இழந்துள்ளவர்களை கரைக்குக் கொண்டு வந்ததும் செயற்கை மூச்சு உண்டாக்க முயற்சி செய்தல் மிக அவசியம்.

விபத்துக்குள் அகப்பட்டுக் கொண்டுள்ளவரை அவர் முகம் கீழ் நோக்கி இருக்கும்படி படுக்க வைத்து அவருடைய நாக்கைச் சிறிது முன்னுக்கு இழுத்து விடவேண்டும். உடனே செயற்கை மூச்சு அளித்தலில் ஈடுபடவேண்டும்.

செயற்கை மூச்சுக்குரிய முயற்சிகள் நடந்து கொண்டிருக்கும் போது மருத்துவரை அழைக்க ஒருவர் செல்லவேண்டும். வேருெருவர் அவருடைய ஈரமான ஆடைகளை மாற்றிவிட்டு கம்பளி யால் அவரைப் போர்த்து வைக்க முற்பட வேண்டும். அவசிய மாளுல் வென்னீர் புட்டிகளால் ஒத்தடம் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இன்னும் ஒருவர் அவருக்கு நல்ல படுக்கை ஆயத்தம் செய்ய வேண்டும்.

இயற்கை மூச்சு வர ஆரம்பமானதும் அவர் கை கால்களை நன்ருய்ச் சூடு உண்டாகும்படி இதயத்தை நோக்கித் தேய்க்க வேண்டும். தேய்ப்பது கையால் தேய்க்கலாம், அல்லது ஒரு துவாலை (Towel) வைத்துக் கொண்டு தேய்க்கலாம்.

## செயற்கை மூச்சு உண்டுபண்ணும் முறை









149. செயற்கை மூச்சு ஷேபர் முறை (Schafer's Method)

செயற்கை மூச்சு உண்டு பண்ணும் முறைகள் பல. அவற்றுள் ஷேபர் (Schafer) முறை என்பது ஒன்று. ஸில் வெஸ்ட்டர் (Silvester) முறை என்பது இன் ஞென்று. ஹோல்ஜர்-நீல்ஸன் (Holger Nielsen) முறை மற்ருென்று. வாய்க்கு வாய் முறை (Mouth to Mouth Method) என்பது பிறிதொன்று.

செயற்கை மூச்சு அவசியம் என்றுள்ள பொழுது மிகவும் சுறு சுறுப்பாக அந்த வேலை யைச் செய்ய வேண் டும். ஒவ்வொரு வினு டியும் முக்கியம் வாய்ந்தது.

செயற்கை மூச்சு உண்டுபண்ண விபத்துக்குள்ளானவர் குப்புறப் படுத்திருக்க வேண்டும். அவர் மல்லாந்து படுத்திருந்தால் அவரைக் குப்புறப் படுக்கும்படி திருப்ப வேண்டும். இதற்கு நாம் அவர் பக்கத்தில் முழங்காற்படி இட்டு நின்றுகொண்டு அவருடைய கைகளை அவர் உடம்போடு சேர்த்து வைத்து அவர் கால்களையும் ஒன்றன் மேல் ஒன்ருக அதாவது தொலைவில் உள்ள மற்றதன் மேலாக ஏற்றி வைத்து, ஒரு கையால் அவர் முகத்தைத் தாங்கிக் கொண்டு மற்றொரு கையால் அவர் இடையில் அணிந்துள்ள ஆடையைப் பிடித்து மெதுவாகப் புரட்டவேண்டும்.

இவ்வளவும் செய்து விட்டு செயற்கை மூச்சு உண்டுபண்ண முற்படவேண்டும். சற்று நேரத்துக்குப் பிறகு இன்னொருவர் அந்த வேலையைச் செய்ய முன் வரவேண்டும். முந்தியவர் எப்படிச் செய்தாரோ அது போலவே அந்தக் காலஅளவை ஒட்டியே இவரும் செய்ய வேண்டும். தடை ஏற்படாமல் எண்ணிக்கை தவருமல் செயற்கை மூச்சுக்கான முயற்சியைக் கையாளுவது அவசியம்.

இயற்கை மூச்சு வந்த பிறகும் சிறிது நேரத்துக்கு செயற்கை மூச்சுக்குரிய முயற்சி கையாளப் படவேண்டும். ஆனல் இயற்கை மூச்சின் நிமிட எண்ணிக்கையைப் பின்பற்றியே செயற்கை மூச்சுக் குரிய முயற்சி இருக்கவேண்டும். இயற்கை மூச்சு உண்டாகவில்லை யானல் மருத்துவர் வந்து அது தேவையில்லை என்று கூறும் வரை செயற்கை மூச்சுக்குரிய முயற்சியைக் கைவிடல் கூடாது.

## ஹோல்ஜர்-நீல்சன் முறை

(1) மூச்சு நின்றுள்ளவரை முகம் கீழாக இருக்கும்படி படுக்க வைக்க வேண்டும். அவருடைய தலை ஒரு புறமாகத் திரும்பியிருக்க வேண்டும். அவர் கைகளை வளைத்து அவர் நெற்றி அவருடைய கை மேல் அமரும்படி வைக்கவேண்டும்.

(2) செயற்கை மூச்சுப் பணியாற்றுபவர் மூச்சு இழந்தவர் தலைக்குப் பக்கத்தில் மண்டி போட்டு நிற்கவேண்டும். ஒரு முழங் கால், மூச்சு இழந்தவர் தலைக்கு அருகிலும், மறுகால் அவருடைய முழங்கை பக்கத்திலும் இருக்கும்படி நிற்கவேண்டும். படத்தில் காண்பித்துள்ளபடி கைகளை அவர் முதுகில் வைக்கவேண்டும். கை விரல்கள் ஒன்றை ஒன்று தொட்டுக்கொண்டிருக்கும்படி இருக்க வேண்டும். கைகள் இரண்டும் படத்தில் உள்ளது போல இரண்டு அக்குள்களை இணைக்கும் ஒரு நேர் கோட்டுக்குக் கீழாக இருத்தல் வேண்டும்.



1



2





3 ஹோல்ஜர் நீல்ஸன் முறை 4



5



6

150. ஹோல்ஜர் நீல்ஸன் முறை
**(Holger Nielsen Method)**

(3) முதலில் காற்றை வெளியே தள்ளவேண்டும். இதற்கு நம் கையை நேராக வைத்துக் கொண்டு முன்னுக்குச் செல்லவேண்டும். செல்லும்பொழுது ஒரு சிறிது அழுத்திக்கொண்டு செல்லவேண்டும். அழுத்துவது பெரியவர்களுக்கு 12 முதல் 15 கிலோ வரையும், பெண் களுக்கு 6 கிலோ முதல் 7 கிலோ வரையும், சிறு குழந்தைகளுக்கு 1 கிலோ முதல் 2 கிலோ வரையும் அழுத்தலாம். இந்த அளவு அழுத்தங்களை அதற்குரிய அழுத்தல் பொறிகளில் பயிற்சி செய்து நிதானப்படுத்திக் கொள்ளவேண்டும். பயிற்சி செய்து பழகும்போது அந்தப் பொறி 30 செ.மீ. தொலைவில் வைக்கப்படவேண்டும்.

(4) அடுத்து காற்றை உள்ளே இழுக்கும்படி செய்ய நாம் தோற்றுவித்த அழுத்தத்தை மெதுவாகத் தளர்த்தி நம் கைகளைப் பின்னுக்கு மெதுவாகத் தோள்களைத் தொட்டுக்கொண்டு கொண்டு வந்து முழங்கைகள் அருகில் இறுகப்பிடித்து கைகளைப் பின்னுக்கு

இழுத்தல் வேண்டும். இழுக்கும்போது மூச்சிழந்தவர் மார்பு தரையைத் தொட்டுக்கொண்டே இருக்கவேண்டும். உயர்வது கூடாது. இது முடிந்ததும் கைகளைக் கீழே விட்டு விட்டு மறுபடியும் மேலே (3)ல் கூறியுள்ளபடி அழுத்தி சுவாசத்தை வெளியேறும்படி செய்ய வேண்டும்.

(5) இப்படி நிமிடத்துக்கு 10 அல்லது 12 தடவை செய்ய வேண்டும். அதாவது 10 அல்லது 12 தடவை காற்றை வெளியே தள்ளவும் 10 அல்லது 12 தடவை காற்றை உள் இழுக்கவும் வேண்டும். அழுத்துவதும் அழுத்தத்தைத் தளர்த்துவதும் ஒரே கால அளவில் இருக்கவேண்டும். காற்றை வெளித்தள்ள 3 பங்கு நேரம் காற்றை உள் இழுக்க 3 பங்கு நேரம் நடுவில் 1 பங்கு நேரம் என்ற அளவில் இருக்கவேண்டும்.

ஷேபர் முறையும் ஸில்வெஸ்டர் முறையும் இப்பொழுது பழக்கத்தில் இல்லை என்று சொல்லலாம். ஹோல்ஜர் - நீல்சன் முறை தான் அடிக்கடி உபயோகிக்கப்படும் முறை. வாய்க்கு வாய் என்ற முறை மிக நல்ல முறைதான். ஆயினும், பழக்கத்தில் இன்னும் மிகுதியாகக் காணப்படவில்லை.

வாய்க்கு வாய் என்ற முறைக்குரிய செயல்முறை:

(1) மூச்சு நின்றுள்ளவரை மடியில் படுக்கப்போட வேண்டும். அவருடைய மோவாய்க்கட்டை மேல் நோக்கி இருத்தல் வேண்டும். சுவாசப் பாதையை ஏதாவது வெளிப்பொருள்கள் அடைத்துக் கொண்டிருந்தால் அவற்றை அப்புறப்படுத்திவிட வேண்டும்.

(2) கைக் கட்டைவிரலால் அவருடைய கீழ் மோவாயை இழுத்து வைத்துக்கொண்டு அவருடைய நாக்கு அவர் தொண்டையை அடைத்துக் கொள்ளாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். (3) அவருடைய மூக்கை இறுகப் பிடித்துக் கொள்ளவேண்டும். (4) முதல் உதவி செய்பவர் தன் முகத்தை ஒரு பக்கமாகத் திருப்பி நன்ருகத் தன் வாயைத் திறந்து வாய் நிறைய நல்ல காற்றை உள் வாங்கிக் கொண்டு பிறகு தன் வாயை அவர் வாய்மேல் வைத்து நல்ல காற்றை அவர் வாய்க்குள் ஊதவேண்டும். மற்றவருடைய மார்பு உயர்ந்து காண்பதுவரை ஊதவேண்டும். பிறகு முகத்தைத் திருப்பிக்கொண்டு மறுபடியும் நல்ல காற்றை வாய்க்குள் வாங்கிக் கொண்டு முன் போல மற்றவர் வாய்க்குள் ஊதவேண்டும்.

இப்படி ஒரு நிமிடத்துக்கு 12 முதல் 15 தரம் வரை ஊதிக் காற்றை உள் செலுத்த வேண்டும்.

சாரணர்கள் இதற்காகப் பயிற்சி பெறுகையில் இங்குத் தந்துள்ள (1-2) குறிப்புகளை மட்டும் பயிற்சி செய்து பழக்கிக்கொள்வது போதுமானது. மூன்றுவது நான்காவதாகக் கூறியுள்ள குறிப்பு களுக்குப் பயிற்சி அவசியமில்லை. விபத்து நேரிட்டு செயற்கை மூச்சு அளிக்கவேண்டும் என்ற சந்தர்ப்பம் வரும்போது பயிற்சி இல்லாம லேயே அதைச் செய்யலாம்.



(1)



(2)



(3)



(4)

151. வாய்க்குவாய் முறை
(Mouth to Mouth Method)

## அதிர்ச்சி (Shock)

### பொதுக்குறிப்பு

ஏதாவது ஒரு காரணத்தினுல் மூளைக்குப் போதுமான அளவு இரத்த ஓட்டம் இல்லையானுல் மயக்கம் உண்டாகும். மிகுந்த களைப்பு, உணவு இன்மை, களைப்புள்ளபொழுது வேலை செய்தல் ஆகியவை மயக்கத்துக்குக் காரணமாக அமையலாம். அது போலவே மிகுந்த பயம், இரத்தத்தைக் கண்டு பயங்கொள்ளல், ஆகியவையும் மயக்கத்தை உண்டு பண்ணலாம். விபத்துக்கள் மயக்கத்துக்குக் காரணமாகலாம். போதுமான அளவு சுத்தமான காற்று இல்லாமல் போனுலும் மயக்கம் உண்டாகலாம்.

அதிர்ச்சிக்குரிய அறிகுறிகள்— தலை சுழல்வது (கிறுகிறுப்பு); தலை சுழன்று தரையில் விழுந்துவிடுவது; முகம் வெளிறிக் காண்பது; வேர்வையால் கசகச என்றிருப்பது; சுவாசம் மிகவும் அமைதியாய்க் காணப்படுவது; நாடி மந்தமாகக் காணப்படுவது ஆகியவை மயக்கத்தின் அறிகுறிகள் ஆகும்.

### சிகிச்சை

(1) இரத்தப் பெருக்கு இருந்தால் முதலில் அதை நிறுத்த வேண்டும்.

(2) நோயாளியைப் படுக்க வைத்து அவருடைய கால்களை உயரமாகத் தூக்கி வைக்கவேண்டும். நோயாளியின் தலையும் தோள்களும் கால்மட்டத்துக்குக் கீழாக இருக்கவேண்டும்.

(3) சன்னல்களையும் வாசல்களையும் நன்ருகத் திறந்து வைத்து நல்ல சுத்தமான காற்று ஏராளமாக வர வழி செய்தல் வேண்டும். கூட்டம் இருந்தால் அதனை ஒதுக்கவேண்டும். நோயாளியை நன்ருய் விசிற வேண்டும்.

(4) இறுகலாய் உள்ள ஆடைகளை நெகிழ்த்த வேண்டும்.

(5) முகத்திலும் நெற்றியிலும் குளிர்ந்த தண்ணீர் தெளிக்க வேண்டும்.

(6) மயக்கம் தெளிந்ததும் நோயாளிக்கு தேநீர் அல்லது காபி கொடுக்க வேண்டும்.

## மின்சாரத்தினுல் அதிர்ச்சி (Electric Shock)

பட்டணங்களிலும் நகரங்களிலும் உள்ள மின்சார இணைப்பு 220 வோல்ட் அழுத்தம் உடையது. தொழிற்சாலைகளில் உள்ள இணைப்பு 440 வோல்ட் அழுத்தம் உடையது. இவ்விரண்டும்

உயிருக்கு ஆபத்தை உண்டு பண்ணக் கூடியது. ஆகவே, மின்சாரத்தை நாம் மிக விழிப்போடு கையாளவேண்டும். மின்சார அமைப்புக்களை உரிய கவனத்தோடு நாம் பயன் படுத்தவேண்டும். நம்முடைய கவனக் குறைவால் விபத்துக்கள் ஒவ்வொரு வேளையும் உண்டாகின்றன.

### சிகிச்சை முறை

(1) வீபத்துக்குள்ளானவர் மின்சாரக் கம்பியோடு இணைந்து காணப்பட்டால் முதன் முதலாக நாம் செய்ய வேண்டியது, அவரை அந்தத் தொடர்பிலிருந்து பிரித்து விடுவதாகும். அவரைத் தாக்கிக் கொண்டிருக்கும் மின்சாரத்தைத் துண்டிக்க வேண்டும். முக்கிய பிணைப்பு (Main Switch) இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து பிணைப்பை விலக்கிவிட வேண்டும்.

பிணைப்பு இருக்கும் இடத்துக்குப் போகமுடியாமல் இருந்தால் வீபத்துக்குள் இருப்பவரை நன்ருய்க் காய்ந்து உலர்ந்துள்ள ஒரு கம்பிஞல் விலக்கி விடலாம். கனத்த ரப்பர் கை உறைகள் இருக்குமாயின் அவற்றை அணிந்து கொண்டு கையால் இழுத்து விலக்கி விடலாம்.

மின்சாரத்தோடு இணைப்புண்டிருப்பவரைத் தொடும் முன்ஞல் காலுக்கு ரப்பர் செருப்பு அணிந்து கொள்வது நலம். அது முடியாமல் போஞல் காய்ந்து உலர்ந்த பலகையின் மீது நின்று கொண்டு விலக்கலாம். ரப்பர் பாய் மேல் நின்று கொண்டும் விலக்கலாம்.

மின்சார விபத்து உண்டாகும் பொழுது பலத்த எரிபுண் உண்டாகலாம், மயக்கம் உண்டாகலாம். மூச்சு விடுவதற்கு பயன் படும் தசைகள் (Respiratary Muscles) தங்கள் வேலையைச் செய்ய முடியாமல் போகலாம். அப்பொழுது விபத்துக்குள்ளானவர் மூச்சு விட முடியாமல் போகலாம். உடனே செயற்கை மூச்சு உண்டாக்கு வதற்குரிய முயற்சி செய்ய வேண்டும். அதே நேரத்தில் மயக்கத்துக்குரிய சிகிச்சை முறைகளையும் கையாள வேண்டும்.

## மனிதர்களை அல்லது பிராணிகளைக் கிணற்றில் இருந்து கரையேற்றல்

கிணற்றில் தவறி விழுந்துவிட்ட மனிதர்களை அல்லது பிராணிகளைக் கரையேற்ற நாம் கயிற்றின் நடுவில் அமைக்கப்பெற்ற வளைய முடிச்சை ((Bowline on Bight) பயன் படுத்தலாம்.



152. நடுக்கயிற்றில் வளையமுடிச்சு என்ற முடிச்சுபோட்டு கிணற்றிலிருந்து மனிதர்களை, விலங்குகளைக் கரையேற்றுவது (Rescuing from a well using Bowline on a Bight)

இந்த முடிச்சு இரண்டு வளையங்கள் உடையது. ஒவ்வொரு வளையத்துக்குள் ஒரு காலை விட்டுக் கொண்டு மேல் கயிற்றைக் கையால் பிடித்துக் கொள்ள வேண்டும். கிணற்றில் விழுந்துள்ள வரைக் கரையேற்ற இந்த முடிச்சு நல்ல முறையில் பயன்படும். அதை எப்படி உபயோகிப்பது என்று தெரிய வேண்டும். அப்படித் தெரிய வில்லையானால் அதைத் தெரிந்த ஒரு சாரணன் கிணற்றில் இறங்கி விபத்துக்குள்ளானவரை வளைய முடிச்சில் உட்கார வைத்து கயிற்றை மேல் இழுக்கச் செய்யலாம்.

பிராணிகள் கிணற்றுக்குள் விழுந்து விட்டால் அப்பொழுதும் செயல்முறை தெரிந்த சாரணன் ஒருவன் கிணற்றுக்குள் இறங்கி அந்தப் பிராணியைக் கரையேற்றலாம்.

தண்ணீரில்லாத பாழுங் கிணற்றில் மக்களோ பிராணிகளோ விழுந்து விட்டால் சற்று சாவகாசமாகப் பணியாற்றலாம். ஆயின் தண்ணீர் நிறைந்துள்ள கிணற்றில் யாராவது விழுந்து விட்டால் முதல் உதவி செய்பவர் சிறிதும் காலதாமதம் இன்றிக் கிணற்றில் குதித்து விபத்துக்குள்ளானவரை தண்ணீருக்குள் மூழ்கிவிடாதபடி காப்பற்றி அப்புறம் அவரைக் கரை ஏற்றவேண்டும்.

# தொத்துநோய்த் தடுப்புமுறை

தொத்து நோய்களை கண்ணுக்குத் தெரியாத நுண் கிருமிகள் (Micro Organisms) பரவச் செய்கின்றன. தொத்து நோய்களுக்குத் தடுப்பு மருந்துகள் உள்ளன. மருத்துவர்கள் அந்த மருந்துகளை மருத்துவ ஊசி மூலம் உடம்புக்குள் செலுத்துகின்றனர். இதற்குத் தடுப்பு ஊசி போடுதல் என்பர்.

சாரணர்கள் தொத்து நோய்களைத் தடுக்கும் முறைகளை நன்கு தெரிந்திருப்பது அவசியம். அவற்றைத் தாங்களும் பயன் படுத்த லாம். பொது மக்களுக்கும் அவற்றைப் பற்றி எடுத்துச் சொல்லலாம்.

தடுப்பு, இயற்கையான தடுப்பு, செயற்கையான தடுப்பு என இரு வகைப்படும்.

## இயற்கைத் தடுப்பு

நல்ல உடல் நலமே நல்ல இயற்கைத் தடுப்பாக உள்ளது. நல்ல உடல் நலம் உடைய ஒருவர், தொத்து நோய் பரவியுள்ள இடங் களுக்குப் போகாமல், தன் உணவையும் தன் வாழ்க்கையையும் கட்டுப்படுத்திக் கொள்வாரானால் அவரைத் தொத்து நோய் எதுவும் அணுகாது. இதை இயற்கைத் தடுப்பு எனலாம்.

## செயற்கைத் தடுப்பு

இப்பொழுது பல தொத்து நோய்களுக்குரிய தடுப்பு ஊசிகள் அமைந்திருக்கின்றன. உடல் நலம் நன்றாய் இருக்கும் பொழுதே அவைகளைப் பயன் படுத்திக் கொண்டால் அந்தந்த தொத்து நோய் வராமல் தப்பித்துக் கொள்ளலாம்.

சாரணர்கள் ஒவ்வொருவரும் தத்தம் உடல் நலத்தை நன்றாகப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். மருத்துவர் உதவியை உரிய காலத்தில் நாடி தங்கள் உடல் நலத்தை நன்றாகப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

தொத்து நோய் நுண் கிருமிகள் காற்றோடு கலந்து வரலாம். உணவுப் பண்டங்களோடு வரலாம். நாம் பயன் படுத்தும் பாத்திரங் கள் சுத்தமாக இல்லையானால் அவற்றில் இருந்து வரலாம். நம் விரல் நகங்களில் இருக்கலாம். அவைகளில் இருந்து நாம் உணவருந்தும் போது உணவோடு கலந்து உட்செல்லலாம், விஷக் கிருமிகளால் மிகுந்த கெடுதி ஏற்படக்கூடும். ஆகையால் நாம் மருத்துவத் தடுப்பு முறைகளைக் கையாளுவது அவசியம்.

நாம் நம் வாழ்க்கையில் பின்பற்றக் கூடிய தடுப்பு முறைகள் சில உண்டு.

(1) குடிக்கும் தண்ணீரைக் கொதிக்க வைத்தே குடிக்க வேண்டும். கொதித்த பின் நன்ருய் குளிர வைத்துள்ள நீரைக் குடிப்பது என்றுள்ள பழக்கம் மிக மிக நல்லது. சந்தேகமாக உள்ள நீரைக் கொதிக்க வைத்த பின்னரே குடிப்பது என்ற வழக்கத்தை யாவது பின்பற்ற வேண்டும்.

(2) நன்ருய்க் கழுவப் படாத எதனையும் பச்சையாய்த் தின்னல் ஆகாது.

(3) நாம் இருக்கும் அறை நல்ல காற்ரேட்டம் உள்ள அறை யாக இருக்க வேண்டும்.

(4) வீட்டில் உள்ள மேஜை, நாற்காலிகள், கட்டில்கள், படுக் கைகள் முதலியவற்றை அடிக்கடி வெய்யிலில் போட வேண்டும். அது போலவே நம் ஆடைகளையும் வெய்யிலில் போட்டு சுத்தப் படுத்த வேண்டும்.

(5) அழுகிப் போன காய்கறிகள், பழங்கள் முதலிய உணவுப் பொருள்களைத் தனியான, நல்ல மூடியுள்ள, ஒரு பாத்திரத்தில் சேர்த்து வைத்து உடனுக்குடனே அவற்றை பூமியில் புதைத்து விடவேண்டும். அல்லது வேறு முறையில் அவற்றை அழித்து விட வேண்டும். அவைகளால் தீங்கு விளையாதபடி தடுப்பதே இதன் நோக்கம் ஆகும்.

(6) உணவுப் பொருள்களை நன்ருய் மூடி வைக்க வேண்டும். ஈ முதலியவை அவற்றை நாடவிடக் கூடாது.

(7) ஃபிளிட் (Flit) போன்ற கிருமி நாசினிகளை உபயோகித்து ஈக்கள் கொசுக்கள் அணுகாதபடி செய்ய வேண்டும். தூங்கும் போது கொசு வலைக்குள் தூங்க வேண்டும்.

(8) உணவு அருந்தும்முன் கை கால்களை நன்ருய் சுத்தம் செய்து கொள்ள வேண்டும்.

(9) கை நகங்களை அடிக்கடி திருத்திக் கொள்வது அவசியம்.

(10) காயங்கள் ஏற்பட்டால் அவைகளை நல்ல முறையில் கவனித்தல் வேண்டும்.

இப்படியான நல்ல பழக்கங்களைப் பின்பற்றுவதோடு அவ்வப் போது உடல் நலத்துறையினர் அவசியம் எனக் கூறும் தடுப்பு ஊசி களையும் போட்டுக் கொள்வது மிக முக்கியமானது.

தொத்து நோய்வாய்ப்பட்டுள்ள பொழுது மருத்துவர் சொற்படி நடந்து கொள்வது மிக அவசியம். எத்தனை நாள் தனியாக இருத்தல் வேண்டும் என்று கூறுகிருர்களோ அத்தனை காலம் தனியாகவே இருக்க வேண்டும். அந்தக் காலத்தில் நோயாளியின் மலம் சிறுநீர்

முதலியவற்ருல் நோய் மற்றவர்களுக்குப் பரவாமல் இருக்க அவசிய மான சிறப்பு முறைகளைக் கையாள வேண்டும். நோயாளிக்காக வைக்கப் பட்டிருக்கும் பாத்திரங்களையும் தனியாகவே வைத்திருந்து அவைகளை அவ்வப்போது கிருமி நாசினி மருந்துகளால் சுத்தம் செய்யவேண்டும்.

## 6. உணவு சமைத்தல் (Cooking)

கட்டைத் தீயில் மூன்று பேருக்கு காணும் அளவுக்கு மூன்று உணவுப்பொருள்களை சமைத்தல் — என்ன பதார்த்தங்கள் என்பதை தேர்வாளர் (Examiner) முடிவு செய்வார் — என்பது முதல் தரச் சார ணனின் சமையல் தேர்வுக்குரிய நிபந்தனை.

தென்னுட்டினராகிய நாம் சாதம், குழம்பு, கறி என்பதை உணவு எனக் கருதுகிருேம். சாதம் சமைப்பதே ஒரு முக்கியமான கலை. குழம்பு என்பது பருப்பு கறிகாய்கள் உள்ள சாம்பாராக இருக்கலாம். பருப்பு இல்லாமல் கறிகாய்கள் உள்ள குழம்பாக இருக்கலாம். இதை சாதத்தோடு கலந்து உண்கிருேம். கறி என்பது பொரியல், துவட்டல் போன்ற ஒன்று. கடைசியில் மோரை சாதத்தில் கலந்து உண்கி ருேம் குழம்பு சாதத்துக்குப் பின், மோர் சாதம் உண்பதற்கு முன், ரசம் கலந்த சாதம் உண்ணலாம்.

### சாதம் சமைத்தல்

சாதம் மூன்று பேருக்குப் போதுமானதாக இருக்க வேண்டும். படிக்கணக்காகப் பார்த்தால் ஏறக்குறைய $\frac{3}{8}$ படி (300 மி.லி.) அரிசி தேவைப்படும். நிறை பார்க்கிறதானுல் 600 கிராம் அரிசி தேவைப் படும்.

அரிசியைக் கல், மண் இல்லாமல் சுத்தம் செய்து பிறகு தண் ணீரில் கழுவ வேண்டும். ஒரு பாத்திரத்தில் தண்ணீரைக் கொதிக்க விட வேண்டும். தண்ணீர் கொதித்ததும் கழுவி வைத் துள்ள அரிசியை அதில் போட வேண்டும். போட்ட பிறகு ஒரு தட்டினுல் பாத்திரத்தை மூடி வைக்க வேண்டும். சற்று நேரத் துக்கெல்லாம் தண்ணீர் மறுபடி யும் கொதிக்கும். இப்பொழுது மூடியுள்ள தட்டை எடுத்துவிட லாம். ஒரு பெரிய அகப்பை யால் அரிசியைக் கிளறி விட வேண்டும். அரிசி போட்ட



153. அடுக்குச் செங்கல் அடுப்பு (Brick Fire)
முதல் தரச் சாரணத் தேர்வுக்கு சமையல் செய்யப்பட வேண்டிய வெளியிடம்

கால்மணி நேரத்துக்கெல்லாம் நன்ருக வெந்து விடும். அகப்பையில் சாதத்தை எடுத்து பதம் பார்க்க வேண்டும். சாதம் கைக்கு மசிவ தாக இருந்தால் அரிசி வெந்துபோய் விட்டது என்று கருதலாம். பிறகு பாத்திரத்தை வடித்தட்டால் மூடிவிட்டு, உயரமான கல் அல்லது மண் திரணைமேல் வைத்துக் கொண்டு அதை துணி நிறைய உள்ள இருகைகளாலும் இரு பக்கத்திலும் பிடித்துக் கொள்ள வேண்டும். அப்புறம் பாத்திரத்தைச் சிறிது சிறிதாக சாய்த்து சாதத் திலிருக்கும் தண்ணீரை வடித்துவிட வேண்டும். வடிகிற கஞ்சியை இன்னெரு பாத்திரத்தில் விழும்படி வடிக்க வேண்டும். கஞ்சி நன்ருய் வடிந்த பிறகு பாத்திரத்தை நிமர்த்தி வைத்துக் குலுக்கி விட்டு அகப்பையால் இலேசாக அமர்த்தி விட்டு மறுபடியும் மூடி வைத்து விடவேண்டும். இப்பொழுது சாதம் தயாராகி விட்டது. கஞ்சி வடித்து விடுவதால் சாதத்திலுள்ள சில முக்கிய சத்துக்கள் வீணு கின்றன. ஆகையால் அளவுக்குத் தண்ணீர் வைத்து சாதத்தைப் பொங்கி இறக்குவது நல்லது.

## குழம்பு சமைத்தல்

பருப்பு சாம்பார் சமைக்கத் தேவைப்படும் பொருள்கள்:— பருப்பு, புளி, உப்பு, சாம்பார் பொடி, மஞ்சள் பொடி, எண்ணெய், மிளகு வற்றல், கறிவேப்பிலை, உளுத்தம் பருப்பு, கடுகு, பெருங் காயம். இவற்றில் பருப்பு 100 மி.லி. புளி ஒரு சிறிய கொட்டைப் பாக்கு அளவு, சாம்பார்ப் பொடி கோபுரமாக ஒரு தேக்கரண்டி அளவு, வெண்டைக்காய் இரண்டுமூன்று, கத்தரிக்காய் ஒன்றிரண்டு, உருளைக் கிழங்கு, வாழைக்காய், முருங்கைக்காய் அவசியம் போல, உப்பு அரை தேக்கரண்டி அளவு.

புளியை சிறிது வெந்நீரில் ஊறப் போட வேண்டும். பருப்பை சுத்தம் செய்து கழுவி விட்டு குடுவையான ஒரு சிறு பாத்திரத்தில் சிறிது மஞ்சள் பொடியுடன் வேகவிட வேண்டும். நன்ருக வெந்த பிறகு பருப்பைத் தனியாக வைத்துக் கொண்டு கறிகாய்த் துண்டு களுடன் கொதிக்க வைக்க வேண்டும். இன்னெரு பாத்திரத்தில் புளியை நன்ருய்க் கரைத்து வேண்டிய அளவு உப்புப் போட்டு கறி காய் நன்ருய் வெந்ததும் அவற்றுடன் கலந்து கொள்ள வேண் டும். சாம்பார் பொடியை தண்ணீரில் கரைத்து அதையும் விட வேண்டும். நன்ருகக் கொதிக்கும் பொழுது பெருங்காயத்தை கரைத்து விட வேண்டும் பிறகு சாம்பார் போதுமான அளவு வற்றின பிறகு அடுப்பில் இருந்து இறக்கி விட்டு கறி வேப்பிலை நல் லெண்ணெய், கடுகு, உளுத்தம் பருப்பு முதலியவற்ருல் தாளிதம் பண்ணவேண்டும்.

## கறி சமைத்தல்

கத்தரிக்காய், வாழைக்காய் போன்ற கறிகாய்களை அல்லது உருளைக் கிழங்கு போன்ற கிழங்குகளை நன்ருய் துண்டு துண்டாக

நறுக்கி உப்புக் கலந்துள்ள நீரில் வேக வைக்க வேண்டும். வேக வைத்த நீரைக் கொட்டிவிட வேண்டும். தேங்காய், பச்சை மிளகாய், சீரகம், சிறிது உப்பு இவைகளை அரைத்து அந்தக் காய்கறிகளோடு கலந்து கொண்டு மறுபடியும் சிறிது நேரம் அடுப்பில் இருக்க விட்டுப் பின் தாளிதம் பண்ண வேண்டும்.

### கூட்டு சமைத்தல்

வாழைக்காய், கத்தரிக்காய், பூசணிக்காய் போன்ற கறி காய்களை சிறிது சிறிதாக நறுக்கி வேகவைக்க வேண்டும். வேக வைக்கும்பொழுது கடலைப் பருப்புடன் கலந்து வேக வைக்க வேண்டும். நன்ருக வெந்தபின் அளவாக உப்புப்போட்டு தாளிதம் பண்ண வேண்டும்.

### ரசம் சமைத்தல்

மட்டான அளவு புளியைத் தண்ணீரில் கலந்து கொதிக்கவிட வேண்டும். பருப்பு வேக வைத்த தண்ணீர் இருக்குமானல் அதனையும் கலந்து கொள்ளலாம். அல்லது நன்ருக வெந்துள்ள பருப்பு இருக்குமாயின் அதனைக் கலந்து கொள்ளலாம். நன்ருக கொதித்த பிறகு ரசப்பொடி இருந்தால் போடலாம். அல்லது சிறிது மிளகு, சீரகம், உப்பு, மிளகாய்ப்பொடி இவைகளுடன் பொடிசெய்து போடலாம். ரசத்தை நன்ருகக் கொதிக்கவைக்க வேண்டும். சிறிது பெருங்காயம் சேர்த்துக் கொண்டு ரசத்தை தாளிதம் பண்ண வேண்டும்.

### தாளிதம் பண்ணல்

வாணலியில் போதுமான நல்லெண்ணெயைக் காய வைத்து காய்ந்த பிறகு கடுகு, உளுத்தம் பருப்பு ஆகியவைகளையும் கறி வேப்பிலையையும் இரண்டு அல்லது மூன்று முழு மிளகாய் வற்றலையும் போட்டு கரண்டியால் கிளற வேண்டும். பக்குவமானதும் கரண்டியில் எடுத்துக் குழம்பிலும், கறி, கூட்டுகளிலும், ரசத்திலும் சிறிது சிறிது போட வேண்டும். கடைசியாக கறியை அந்த வாணலியிலேயே கொட்டி அடுப்பில் நான்கு ஐந்து நிமிடங்களுக்கு வைக்கலாம்.

சாரணர்கள் சமையல் கலையை நன்கு கற்றுக்கொள்வது மிக அவசியம். சமையல்கலை கற்றற்கு பாசறை வாழ்க்கை நல்ல வாய்ப்பு அளிக்கும். ஆயினும் சாரணர்கள் தங்கள் தங்கள் தாய்மார்களிடம் இந்தக் கலையைக் கற்றுக்கொள்ள வேண்டும். இங்கு கூறியுள்ள பக்குவங்களை விட மிக நல்ல பக்குவங்களை நல்ல முறையில் அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ள முடியும். அப்படிக் கற்றுக்கொள்வது சிறப்பு உடையது.

## 7. தலபடம் வரைதல் (Mapping)

முதல்தரச் சாரணன் குறிப்பிட்ட எந்த இடத்தையும் புரிந்து கொள்ளக்கூடிய முறையில் தலபடம் வரைந்து காட்டும் ஆற்றல்

உடையவனுக இருக்க வேண்டும். திசை காட்டும் கருவியை உபயோ கிக்கும் முறை தெரிந்திருக்க வேண்டும். பகலிலும், இரவிலும் குறிப் பிட்ட திசையைக் காண்பிக்கும் ஆற்றலும் வேண்டும். சர்வே ஆஃப் இந்திய இலாகா வெளியிட்டுள்ள "1 அங்குலத் தல படத்தை" உபயோகிக்கும் திறன் வேண்டும். ஒரு அங்குலத் தல படம் என்பது தரையில் ஒரு மைல் உள்ளது. தாளில், அதாவது படத்தில், ஒரு அங்குல அளவில் உள்ளது என்று பொருள்படும்.

முதலில், தல படம் உபயோகித்தலைத் தெரிந்து கொள்வோம். பிறகு, தல படம் வரைதலைப் பார்ப்போம்

## தல படம் உபயோகித்தல் (Map Reading)

தல படங்கள் ஐந்து முக்கிய விளக்கங்களைத் தருகின்றன :

(1) திசை காட்டுகின்றன

(2) தொலைவைக் குறிக்கின்றன

(3) நிலத்தின் பாகுபாட்டை விளக்குகின்றன

(4) அவைகளில் உள்ள அம்சங்களின் பெயரைத் தெரிவிக் கின்றன

(5) தங்களைப்பற்றியே சில முக்கிய குறிப்புகளைத் தருகின்றன.

## திசை (Direction)

தல படத்தின் மேல் பக்கம், அதாவது படத்தின் உச்சி, வடக்கு திசையைக் குறிக்கும். அதை மனதில் வைத்துக் கொண்டு கிழக்கு, மேற்கு, தெற்கு என்பதையும் இதர திசைகளையும் புரிந்து கொள்ள லாம்.

## தொலைவு (Distance)

தல படங்களின் உதவியால் ஒரு குறிப்பிட்ட இடத்துக்கும் வேறு ஒரு இடத்துக்கும் உள்ள தொலைவு எவ்வளவு என்பதை அறிந்து கொள்ளக்கூடும். ஒவ்வொரு படத்திலும் தரப்பட்டுள்ள தல பட அளவை (Scale) தொலைவைக் கணக்கிடப் பயன்படுகிறது.

## நிலத்தின் பாகுபாடு (Demarcation or Nature of the Land)

தல படத்தைப் பார்த்ததும் எங்கே மலை உள்ளது, எங்கே ஆறு, எங்கே கடல், எங்கே காடு, எங்கே காப்பித் தோட்டம், தேயிலைத் தோட்டம் எங்கே உள்ளது, பழத் தோட்டங்கள் எங்குள்ளன என்ப வைகளை அறிந்து கொள்ளலாம்.

## பெயர்கள் (Designation)

தல படத்தைப் பார்த்த அளவிலேயே படத்தில் குறிப்பிட்டுள்ள மலைகள், ஆறுகள், பட்டணங்கள் முதலியவற்றின் பெயர்களை நாம்

எளிதில் தெரிந்துகொள்ளலாம். படத்தில் மலைகள், ஆறுகள், பட்டணங்கள் முதலியவற்றைக் குறிப்பிடுகையில் அவற்றின் பெயர்களையும் குறித்து வைத்துள்ளார்கள். இவைகளை வேறு யாரிடமும் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய கட்டாயம் இல்லை. படத்தில் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

## பல குறிப்புகள் (Details)

தல படங்களில் படம் வரையப்பட்டுள்ள இடத்தைச் சுற்றி உள்ள வெற்றிடத்தில் (Margin) அந்தந்தப் படத்தைப் பற்றின பல முக்கிய குறிப்புகள் கொடுக்கப்பட்டிருக்கும்

அந்தத் தல படம் எந்த எல்லையைக் குறிக்கிறது, எந்த ஆண்டில் தயாரித்து வெளியிடப்பட்டது, அதன் வெளியீட்டு எண் என்ன, அதன் அளவைத் திட்டம் (Scale) என்ன, அதில் குறிப்பிட்டுள்ள எல்லைக்கு வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு, வடகிழக்கு, தென் கிழக்கு, தென்மேற்கு, வடமேற்குத் திசைகளில் உள்ள இடங்களுக் குரிய தல படங்களின் வெளியீட்டு எண் என்ன, படத்தில் உபயோகப் படுத்தப்பட்டிருக்கும் சங்கேத அடையாளங்கள் (Conventional Signs) என்னென்ன, கடல் மட்டத்தில் இருந்து பூமியின் உயரத்தை எப்படி காண்பிக்கப் பட்டிருக்கிறது என்பன போன்ற அவசியமான குறிப்புகள் (Details) தலபடத்தில் கொடுக்கப்பட்டிருக்கும்.

ஆகவே தல படங்கள் தங்களுக்குரிய ஒரு தனி மொழியில் நம்மோடு உரையாடுகின்றன அல்லது உரையாடக் காத்திருக்கின்றன என்று கூறலாம். அந்த மொழியில் நமக்கு நல்ல தேர்ச்சி இருந்தால் மட்டுமே நாம் அது கூறுகின்றவற்றை சரியாக உணர்ந்துகொள்ள முடியும் என்பதை நாம் நன்குணர வேண்டும்.

## தலபட அளவைத் திட்டம் (Map Scale)

தல பட அளவைகள் மூன்று விதம். (1) சொற்களால் அமைந்தது ஒருவகை. (2) ஒரு பின்னத்தால் அமைந்தது இன்னொன்று. (3) ஒரு கோட்டினால் அளவை குறிப்பிட்டுள்ளது மற்றொன்று.

சொற்களால் குறிப்பிடுவது : ''ஒரு மைல் ஒரு அங்குலம்'', ''ஐம்பது தப்படி ஒரு அங்குலம்'', ''ஐம்பது மீட்டர் ஒரு சென்டி மீட்டர்'' என்பவை சொற்களால் தல பட அளவையைக் குறிப்பிடுவதற்கு உதாரணம்.

''ஒரு மைல் ஒரு அங்குலம்'' என்ற தல பட அளவைக்கு நிலத்தில் உள்ள ஒரு மைல் தொலைவை தலபடத்தில் ஒரு அங்குலத் தொலைவாகக் காண்பிக்கப்பட்டிருக்கிறது என்று பொருள்.

''ஐம்பது தப்படிகள் ஒரு அங்குலம்'' என்பது நிலத்தில் ஐம்பது தப்படித் தொலைவாக உள்ளது. படத்தில் ஒரு அங்குலமாகக் காண்பிக்கப்பட்டிருக்கிறது என்று பொருள்படும்.

அதுபோலவே ''ஐம்பது மீட்டர் ஒரு சென்டி மீட்டர்'' என்பது நிலத்தில் ஐம்பது மீட்டர் தொலைவாக உள்ளது படத்தில் ஒரு சென்டி மீட்டராகக் காண்பித்திருக்கிறது என்று பொருள்படும்.

பின்னத்தால் குறிப்பிடுவது : தல படத்தில் ''1/63360'' என்று அளவையைக் குறிப்பிட்டிருந்தால், ''படத்தில் 1 பங்காக உள்ளது நிலத்தில் 63,360 பங்கு ஆகும் என்று பொருள். உதாரணமாக படத்தில் 1 அங்குலமாக உள்ளது நிலத்தில் 63,360 அங்குலம் ஆகும். அதாவது 5280 அடி அல்லது 1 மைல் என்று பொருள்படும். இந்தப் பின்னம் தல பட அளவைப் பின்னம் (Representative Fraction) எனப்படும்.

கோட்டினுல் குறிப்பிடுவது : தல படத்தில் அளவையைக் காட்டும் முறையில் ஒரு கோடு வரைந்து அதனைப் பிரித்துக் காட்டியிருக்கும்.




154. தல பட அளவைத் திட்டம் (Map Scale)

இங்கு தந்துள்ள கோடு மூன்று பங்குகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை 1,2,3 என்று எண்களால் குறிக்கப்பட்டுள்ளன. ''மைல்'' என்று குறிப்பிட்டிருப்பதால் '' 1 மைல், 2 மைல், 3 மைல்'' என்று பொருள்படும். ஒரு மைலுக்குக் குறைவான தொலைவை பூஜ்யத்துக்கு இடதுபக்கம் கொடுக்கப்பட்டுள்ள சிறு பங்குகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

## சங்கேத அடையாளங்கள்
## (Conventional Signs)

சங்கேத அடையாளங்கள் ஒவ்வொரு தல படத்திலும் தரப்பட்டிருக்கும். இவை எல்லாப் படங்களிலும் ஒரே மாதிரியாகவே இருக்கும். ஆகையால் தான் இவற்றை ''சங்கேத'' அடையாளங்கள் என்கிறோம்.




CH 20
RH
PS
TO
△ 400

DB 21
IB
PO
PTO
○ 400

155. சங்கேத அடையாளங்கள் (Conventional Signs)

1 மெட்டல் ரோடு 3 மெட்டல் போடாத ரோடு
2 வண்டிப் பாதை 4 ஒற்றையடிப் பாதை
5 கணவாய் இல்லாத பாலம் 6 தோணிப்பாலம்
7 கணவாய் 8 தண்ணீரில் இறங்கிச் செல்லும் பாதை (Ford)
9 ஆறு 10 ஏற்றம் இறக்கம் உள்ள ஆறு (Tidal River)
11 கிணறு 12 சுனை 13 குளம் 14 சதுப்பு நிலம்
15 நாணல் காடு

16, 17, தவறான அடையாளங்கள் தரப்பட்டுள்ளன. தரப்பட வேண்டியவை (1) இரண்டு மெல்லிய கறுப்புக் கோடுகளுக்குள் நீண்ட கறுப்புக் கட்டங்களும், அதே அளவுள்ள வெள்ளைக் கட்டங்களும்—இது அகல கேஜ் இரட்டைப் பாதை இரயிலைக் குறிக்கும்.

(2) அதே போல் மெல்லிய கறுப்புக்கோடுகளுக்குள் சிறு சிறு சதுரங்கள், வெள்ளையிலும் கறுப்பிலும்.—இது ஒற்றை அகல கேஜ் இரயில் பாதையைக் குறிக்கும்.

18 அகலக்குறைவான இரட்டை இரயில் பாதை.

19 அது போன்ற இரயில்

20 CH என்பது சர்க்யூட் வீடு
RH என்பது (ரெஸ்ட் ஹவுஸ்) தங்கும் விடுதி
PS என்பது காவல் நிலையம்
TO என்பது தந்தி நிலையம்

21 DB என்பது டாக் பங்களா
IB என்பது இன்ஸ்பெக்ஷன் பங்களா
PO என்பது தபால் நிலையம்
PTO என்பது தபால் தந்தி நிலையம்

இந்த அடையாளங்களின் உதவியால் அவை கூறும் விவரத்தை நாம் நன்கு புரிந்து கொள்ளலாம். உதாரணமாக-ரோடு, கல் விரித்துள்ளரோடு அல்லது கல் விரியாத ரோடு; பாதை, வண்டிப்பாதையா அல்லது ஒற்றையடிப்பாதையா; ஆறு, ஏற்றஇறக்கம் உள்ள (Tidal) ஆறு; நிலம், சதுப்பு நிலமா அல்லது நாணல் நிலமா; இரயில் பாதை அகலமாக உள்ளதா அல்லது ஒடுக்கமாக உள்ளதா என்பதையும்; இது காவல்நிலையம், அஞ்சல் (தபால்) நிலையம், தந்தி நிலையம், தந்தி அஞ்சல் (தபால்) நிலையம்; இது ரிசர்வ் காடு, இது கோபுரம், மாதா கோயில், மசூதி அல்லது கோயில்; இது அணைக்கட்டு, இது கலங்கரை விளக்கு; இது மாவட்ட அல்லது மாநில எல்லை, இது நாட்டு அல்லது பல நாட்டு எல்லை; இது கல்லறை; இது எண்ணெய்க் கிணறு; இது கனிச் சுரங்கம்; இது போர்க்களம்; இது நில உயரம்; இது முக்கோண நில அளவு நிலையம் என்ற பலவாறுன விவரங்களைத் தருவன.

ஒவ்வொரு தல படத்திலும் சங்கேத அடையாளங்களும், அவற்றின் பொருளும் தரப்பட்டிருக்கும். தல படங்களை உபயோகிக்குமுன் அவைகளைத் தெரிந்து கொள்வது அவசியம்.

முக்கோணம் போட்டு அதில் ஒரு எண் ''படம் வரை முக்கோண முறை''க்குப் பயன் படுத்தப்பட்ட உயரம்.

கறுப்புப் புள்ளியும் எண்ணும் தந்திருப்பது ஒரு இடத்தின் உயரத்தைக் குறிக்கும்.

குறிப்பு:—சாரணர்கள் பயன்படுத்தும் தல படங்கள் ஒவ்வொன்றிலும் அந்தப் படத்தில் உபயோகப் படுத்தியிருக்கும் சங்கேத அடையாளங்களையும் அவற்றின் பொருளையும் விளக்கியிருப்பார்கள். சங்கேத அடையாளங்களை நன்கு கவனித்து அவை என்னபொருளைக் கொண்டன என்று தெரிந்து வைத்திருக்கவேண்டும். சங்கேத அடையாளங்கள் எல்லாம் ஒரே மாதிரியானவை.

## ஓர் உயரக்கோடுகள் (Contour Lines)

ஓர் உயரக் கோடுகள் என்பன நிலத்தில் ஒரே உயரமாக உள்ள பகுதிகளை இணைக்கும் கோடுகள் ஆகும். தல படங்களில் இக்கோடுகள் மெல்லிய தவிட்டு நிறத்தில் தரப்பட்டிருக்கும். சாதாரணமாக 50 அடிக்கு ஒன்ருகத் தரப்படும் இந்தக் கோடுகள் குறிக்கும் உயரத்தை அந்தந்தக் கோடுகளுக்கு மேலே குறிப்பிடுவது மரபு. ஓர் உயரக் கோடுகள் படத்தில் நாம் பார்வையிடும் நிலம் தட்டையாக உள்ளதா, அல்லது ஏற்றமாக உள்ளதா, அல்லது இறக்கமாக உள்ளதா, எந்தப் பக்கம் ஏற்றம், எந்தப் பக்கம் இறக்கம், என்பதை நமக்கு எளிதில் புரியும்படி உணர்த்தும் இயல்புடையன.



156. ஓர் உயரக் கோடுகள் (Contour Lines)

## குறிப்பு எண் (Map Reference)

குறிப்பு எண் என்பது ஒரு இடத்தைக் குறிக்கும் எண் என்று பொருள்படும். தல படத்தில் காட்டப்பட்டுள்ள எந்த இடத்தையும் ஒரு எண்ணுல் குறிப்பிடலாம். இந்த எண் ஆறு தனி எண்களாலாகிய எண்ணுக இருக்கலாம், அல்லது எட்டு எண்களைக் கொண்டதாகவும் இருக்கலாம். பின் கூறியுள்ளது முன்னையதை விட நுட்பமானது. இடத்தை ஊசி முனையாகவே குறிப்பிடுகிறது என்னலாம்.

குறிப்பெண்கள் தல படத்தில் தரப்பட்டுள்ள சிறு சிறு சதுரங்களைக் குறிக்கும். ஆறு எண்ணைக் கொண்ட குறிப்பெண்கள் 100 கஜம் × 100 கஜம் அளவுள்ள எட்டு எண் கொண்ட குறிப்பெண்கள் 10 கஜம் × 10 கஜம் அளவுள்ள இடத்திலும் கொண்டுவிடும்.




157. குறிப்பெண் விளக்கம் (Explanation of Grid Numbers)

படத்தில் உள்ள பாலத்தை 335165 என்ற எண் குறிப்பிடும். 335 என்ற முற்பகுதி மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிச் செல்லும் கோடுகளை உணர்த்தும். 165 என்ற பிற்பகுதி தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் கோடுகளை உணர்த்தும்.

கிழக்கு நோக்கிச் செல்லும் கோடுகள் Eastings எனப்படும். வடக்கு நோக்கிச் செல்வன Northings எனப்படும்.

குறிப்பெண் 335165 பாலம் என்றதும் படத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவர் முதலில் Grid 30 என்ற வரையில் இருந்து கிழக்காக எண்ணிக் கொண்டு போய் 33க்கு வரவேண்டும். அதன் பிறகு 33க்கும் 34க்கும் மத்தியில் 335-ஐக் கண்டுபிடிக்க வேண்டும். அப்புறம் 15-ல் இருந்து மேனோக்கி எண்ணிக் கொண்டு போய் 165-ஐப் பிடிக்க வேண்டும். நாம் தேடும்பாலம் 335-ம் 165-ம் ஒன்றையொன்று சந்திக்குமிடத்தில் இருக்கும்.

ஆறு குறிப்பெண் நுட்பமாகவே உள்ளது எனினும் எட்டு குறிப்பெண் மிகுந்த நுட்பமாக உள்ளது என்று காணலாம். இந்தப் பாலத்தை 3352 1654 எனலாம். இந்த இரண்டு கோடுகளும் நம்மை 10 கஜத்துக்குள்ளாக அந்த இடத்துக்கு கொண்டுவிடும்.

தல படத்தில் இந்தக் கோடுகளுக்கு கிரிட் கோடுகள் (Grid lines) என்று பெயர். கிரிட் கோடுகளும் கோடுகளுக்குரிய எண்களும் தல படங்களில் இரத்தச்சிவப்பு (Carmine Red) நிறத்தில் கொடுக்கப்பட்டிருக்கும். கிரிட் கோடுகள் படத்தைச் சதுரங்களாகப் பிரிக்கின்றன. இந்தச் சதுரங்கள் A, B, C, என்ற எழுத்துக்களால் குறிப்பிடப்பட்டுள்ளன. இடங்களுக்குக் குறிப்பெண் தரும் பொழுது முதன் முதலில் எந்தப் படத்தை நாம் உபயோகப்படுத்துகிறோம், பிறகு எந்த எழுத்துள்ள சதுரத்தில் நாம் குறிப்பிட விரும்பும் அம்சம் உள்ளது என்பதைக் கூறிவிட்டுப் பிறகு குறிப்பிட்ட சதுரத்தில் எந்த எண் என்பதைக் கூற வேண்டும்.

## படத்தை நிலத்தோடு ஒன்ற வைத்தல் (Map Setting)

ஒரு தல படத்தை நிலத்தோடு ஒன்ற வைப்பது என்பது, அதனைப் பிரித்துத் தட்டையாக்கி, வரைந்துள்ள படம் மேலாகவும், படத்தில் உள்ள தென்வடல் கோட்டின் வடமுனை ''உண்மை வடக்குத்'' திசையை நோக்கி இருக்கும்படிக்கும் தரையில் விரிப்பதாகும்.

இதில் நாம் கவனிக்க வேண்டியவை (1) படம் தரையில் தட்டையாக இருக்க வேண்டும். (2) படம் வரைந்துள்ள பக்கம் நாம் பார்க்கும்படி மேலாக இருக்க வேண்டும். (3) படத்தில் உள்ள தென்

வடல் கோட்டின் வடமுனை ''உண்மை வடக்குத் திசையை நோக்கி அமைய வேண்டும். இப்படி இருக்குமாயின் தல படம் நிலத்தொடு ஒன்றி உள்ளது—அதாவது பொருந்தியுள்ளது—என்று கொள்ளலாம்.

உண்மை வடக்கு என்பது துருவ நட்சத்திரம் இருக்கும் திசை ஆகும். துருவ நட்சத்திரத்தைப் பகலில் பார்க்க முடியாது. ஆனால் சூரியன் உதவியால், கடியாரத்தின் உதவியால், திசையறி கருவியின் உதவியால் உண்மை வடக்கை எப்படி நாம் அறிந்து கொள்ளலாம் என்பது முன் 8-ஆவது அத்தியாயத்தில் இரண்டாம் தரச் சாரணனுக்குரிய திசையறிதல் பயிற்சியில் விளக்கப்பட்டுள்ளது.

தல படத்தை நிலத்தொடு ஒன்ற வைத்தற்குரிய முறைகள் பல உள. இவை (1) இரு அம்சங்கள் முறை, (2) இணைக் கோட்டு முறை, (3) திசையறி கருவி முறை என்பனவாகும்.

## இரு அம்சங்கள் முறை

நிலத்தில் நமக்கு முன் பக்கத்தில் சற்றுத் தொலைவில் உள்ள ஒரு முக்கிய அம்சத்தைத் தேர்ந்து கொண்டு அதனைப் படத்திலும் அடையாளம் கண்டுகொள்ள வேண்டும். அது போலவே நமக்குப் பின் பக்கத்தில் சற்றுத்தொலைவில் உள்ள வேறு ஒரு முக்கிய அம்சத்தைத் தேர்ந்து கொண்டு படத்திலும் அதனை அடையாளம் கண்டுகொள்ள வேண்டும். பிறகு தரையில் விரித்து வைத்துள்ள படத்தில் இவ்விரு அம்சங்களையும் ஒரு பென்சிலால், அல்லது நேர் குச்சு ஒன்றினால், இணைத்துக் கொண்டு, பென்சில் அல்லது குச்சு தன் இடம் விட்டு நகர்ந்து விடாதபடி, ஜாக்கிரதையாக படத்தை அது இருக்கும் இடத்திலேயே சுழற்றி நாம் தேர்ந்து கொண்டுள்ள அம்சங்களும் படத்தில் நாம் வைத்துள்ள குச்சு அல்லது பென்சிலும் ஒரே வரிசையில் அமையும்படி செய்ய வேண்டும். அவை ஒரு வரிசையில் வந்ததும் தல படம் நிலத்தோடு ஒன்றி உள்ளது என்று கொள்ளலாம். முன் அத்தியாயம் 7-ல் இது விவரிக்கப்பட்டுள்ளது.

## இணைக் கோடுகள் முறை

தல படத்தைப் பிரித்துத் தரையில் தட்டையாக விரிக்க வேண்டும். நாம் நிற்பதற்கு அருகாமையில் நேர் கோடு போன்ற ஒரு ரோடு, ரயில் பாதை அல்லது ஆறு இருக்குமாயின் அந்த அம்சமும் (Feature) படத்தில் உள்ள அதன் அடையாளமும் இணைக்கோடுகளாக வரும்படி படத்தை வைக்க வேண்டும். அப்படி அமைத்த படம் நிலத்தொடு ஒன்றிக் காணப்படும்.

## திசை டிகிரி அளவு (Compass Bearing)

தல படத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருந்து இன்னொரு குறிப்பிட்ட இடம் போகவேண்டுமானால் சர்வீஸ் புரொட்ராக்டர் (Service Protractor) என்ற கோணம் அளக்கும் கருவியின்




158. சர்விஸ் புரொட்ராக்டர் (Service Protractor)

உதவியால் அந்த இரண்டு இடத்தையும் இணைத்து ஒரு பென்சில் கோடு போட வேண்டும். அப்புறம் இடத்துக்கு இடம் உள்ள 'திசை டிகிரி அளவு' (Compass Bearing) கணக்கிட வேண்டும். அதாவது ஒரு இடத்தில் இருந்து மற்றைய இடத்துக்குச் செல்ல எத்தனை டிகிரி அளவில் செல்ல வேண்டும் என்று நிதானிக்க வேண்டும். இது செய்யுமுன் நாம் கவனிக்க வேண்டுவது ஒன்று உண்டு. படத்தில் குறிப்பிட்டிருக்கும் காந்த டிகிரி ஏற்றத்தாழ்வு (Magnetic Variation) எவ்வளவு என்பதைக் கவனிக்க வேண்டும். ''ஏற்றத் தாழ்வு மேற்கு'' (So many degrees W) என்று இருக்குமாயின் வரைந்துள்ள கோட்டின் டிகிரி அளவோடு கூட்டிக்கொள்ள வேண்டும்; ''கிழக்கு'' என்றிருக்குமாயின் கோட்டின் டிகிரி அளவிலிருந்து கழித்துவிட வேண்டும். படத்தில் உள்ளது ''உண்மை வடக்கு'' (True North) அடிப்படையில் உள்ள திசை. நாம் காந்தத்தின் இழுவையால் இயங்கும் கருவியைப் பயன்படுத்தி டிகிரி கணக்கிடுகிறோம். ஆகவே இந்தத் திருத்தம் அவசியமாகிறது.




159. காந்த டிகிரி அளவு ஏற்றத்தாழ்வு (Magnetic Variation)

## திசையறி கருவி முறை

சில தல படங்களில் காந்த வடதிசையையும் உண்மை வடதிசையையும் ஒன்று சேரும் இரண்டு நேர்கோடுகளால் குறிப்பிடப்பட்டிருக்கும். இந்த இருகோடுகளும் சேர்கின்ற புள்ளிக்குமேல் திசையறி

கருவியை வைத்துத் தல படத்தை அது இருக்கும் நிலேயிலேயே சிறிது சிறிதாகச் சுழற்றித் திசையறி கருவியில் உள்ள காந்த முள்ளும் காந்த வடக்கைக் குறிக்கும் நேர்கோடும் ஒன்றன் மேல் ஒன்ருக வரும்படி செய்ய வேண்டும். அவை இரண்டும் ஒன்றிய உடன் தல படத்தின் வடதிசையும் தலத்தின் வடதிசையும் (அதாவது உண்மை வடதிசையும்) ஒன்றுகின்றன என்று கொள்ளலாம்.

சில படங்களில் உண்மையான வடதிசையை மட்டும் ஒரு நேர் கோட்டினுல் குறிப்பிடப்பட்டிருக்கும். காந்த வடதிசை குறிப்பிடப் பட்டிராது. ஆனுல் அதைக் குறிப்பிடும் வகையில் அதற்குரிய நேர் கோடு ஒன்றை உண்மை வடக்குக்குரிய கோட்டின் அடி நுனியில் இருந்து நாமே வரைந்து கொள்ளலாம். இந்தக் கோட்டை வரையும் முன் படத்தில் குறிப்பிட்டுள்ள காந்த வடக்கின் ஏற்றத் தாழ்வு (Magnetic Variation) எவ்வளவு என்பதையும் அதில் ஆண்டு ஒன்றுக்கு ஏற்படக்கூடிய வித்தியாசம் எவ்வளவு என்பதையும் தெரிந்துகொள்ள வேண்டும். காந்த வடக்குக் கோடு வரைந்து முடிந்த பிறகு அதுவும் உண்மை வடக்குக் கோடும் சேரும் புள்ளி மீது திசையறி கருவியை வைத்து முன்போல வைத்துச் சுழற்றி உண்மை வடக்கைத் தெரிந்து கொள்ளலாம்.

## திசையறியும் கருவி (Magnetic Compass)

திசையறியும் கருவிகள் பலவகை. சாரணர்களுக்கு நல்ல முறையில் பயன்படுவன 0° முதல் 360° காட்டுவன. இப்படி டிகிரி காண்பிக்கிற திசையறியும் கருவியில் வடக்கு என்பது 0° ஆகும், கிழக்கு என்பது 90° ஆகும்; தெற்கு என்பது 180° ஆகும்; மேற்கு என்பது 270° ஆகும். வடகிழக்கு 45°; தென் கிழக்கு என்பது 135°; தென்மேற்கு 225°; வடமேற்கு என்பது 315°; வடக்கு வட கிழக்கு என்பது $22\frac{1}{2}$°; கிழக்கு வடகிழக்கு என்பது $67\frac{1}{2}$°; கிழக்கு தென்கிழக்கு என்பது



160. திசையறி கருவிகள் பல மாதிரி (Kinds of Compass)— 1.2 பயனற்றவை 3. பிரிஸ்மாட்டிக் திசைக்கருவி—மிக உயர்ந்தது 4. ஸில்வா திசைக்கருவி—சாரணர்கட்குரியது.

$112\frac{1}{2}°$; தெற்குத் தென்கிழக்கு என்பது $157\frac{1}{2}°$; தெற்குத் தென் மேற்கு என்பது $202\frac{1}{2}°$; மேற்குத் தென்மேற்கு என்பது $247\frac{1}{2}$; மேற்கு வடமேற்கு என்பது $292\frac{1}{2}°$; வடக்கு வடமேற்கு என்பது $337\frac{1}{2}°$.

நாம் திசைகளை வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு, வடகிழக்கு தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு என்று குறிப்பிடுகிறோம். வழக்கில் உள்ளது இந்த எட்டுத் திசைகள்தாம். மேற் கூறியுள்ள திசைகளில் இவை ஒழிந்தவை நம் தமிழ் நாட்டு வழக்கில் இல்லை யாயினும் அவற்றைச் சாரணர்கள் தெரிந்திருக்க வேண்டும்.

ஒருவர் நடந்து செல்லும் திசையை வழக்கில் இருந்து வரும் சொற்களால் குறிப்பிடலாம். சொற்களைப் பயன்படுத்தாமல் அவர் செல்லும் டிகிரி அளவை (Compass Bearing)க் கொண்டும் குறிப்பிட லாம். டிகிரி அளவு கூறி விளக்குவது மிகத் தெளிவாக அந்தத் திசையை உணர்த்தும்.

சாரணர்கள் இதைப் பழக்கத்துக்குக் கொண்டுவர வேண்டும்.




161. ''ஸில்வா''த் திசையறி கருவி—மிக நல்ல கருவி. இதில் பல வசதிகள் உண்டு (Silva Compass)

சாரணர்கள் சுற்றுலாச் செல்லும்பொழுது அவர்கள் செல்லும் பாதைக்கு அருகில் அல்லது தொலைவில் உள்ள கோயில் கோபுரம், மாதா கோயில், பாலம் முதலியவை இருக்கும் திசையை டிகிரி அளவைக் கொண்டே குறிப்பிடுவது மிகப் பொருத்தமுடையது.

சாரணப் பயிற்சியில் திசைகளை டிகிரி அளவால் குறிப்பிடுவது வழக்கம். டிகிரி அளவால் குறிப்பிடுவதால் அந்தத் திசையைப்பற்றி எவ்வித சந்தேகத்துக்கும் இடம் இராது.

சாரணர்கள், சாரணப்படைகள் திசையறியும் கருவிகளை விலைக்கு வாங்கும்போது 360 டிகிரி காண்பிக்கக்கூடிய கருவிகளையே வாங்க வேண்டும்.

திசையறியும் கருவி காந்தத்தினால் இயங்குகிறது. அதை உபயோகிக்கும் முன் நம் அருகில் காந்த இழுவைக்கு இலக்காகும் பொருள் ஏதாவது இருக்கின்றதா என்று கவனித்துக்கொள்ள வேண்டும். அத்தகைய பொருள்கள் ஏதாவது பக்கத்திலிருந்தால் அவை திசையறி கருவியில் உள்ள காந்த ஊசியின் அசைவுகளைத் தாக்குவதால் அது நிலைக்கு வரும்போது காந்த ஊசியை தப்பிதமான இடத்தில் கொண்டு விடும்.



162. ''பிரிஸ்மாட்டிக்'' திசையறி கருவி (Prismatic Compass)—இது மிக நுணுக்கமானது. திசையறி கருவிகளுள் ''ராஜா'' எனலாம்.

திசையறி கருவிகளில் உள்ள காந்த ஊசி, காந்த வடதிசையைச் சரியாகக் காட்ட வேண்டும். சில கருவிகளில் இரண்டொரு டிகிரி வித்தியாசத்தில் நிலைக்கு வரும். அப்படி இருக்குமாயின் நல்ல கருவி ஒன்றுடன் அதனை ஒப்பிட்டுப் பார்த்து வித்தியாசம் எவ்வளவு என்பதை தெரிந்து கொண்டு அந்தக் கருவியை உபயோகப்படுத்தும் பொழுது வித்தியாசத்தை மனதில் கொண்டு கணக்கிடல் வேண்டும். அந்தக் கருவி காட்டும் டிகிரி அளவிலிருந்து வித்தியாசத்துக்குத் தகுந்தபடி டிகிரி அளவை கூட்டவோ குறைக்கவோ வேண்டும்.

## தல படம் வரைதல் (Map Sketching)

பாசறை நடக்கும் இடம் அல்லது வேறு இடங்களைப் படம் வரைந்து விளக்கும் ஆற்றல் முதல் தரச் சாரணனுக்கு இருக்க வேண்டும். தல படம் விளக்குவதுபோல பிறிது எதுவும் விளக்காது.

நாம் படம் வரைந்து விளக்க விரும்பும் திடலை முழுமையாகக் காணக்கூடிய ஒரு இடத்தில் நின்று கொண்டு அதைப் பார்வை இட வேண்டும். பார்க்கும்பொழுது எந்த எந்த அம்சங்களை நாம் படத்தில் குறிப்பிட வேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டும். அடுத்த படியாகத் திடலின் எல்லை ஓரத்தில் உள்ள அம்சங்களை கவனித்து அவைகளை முதன் முதலாகப் படத்தில் அமைக்க வேண்டும்.

படம் வரைய எடுத்துக் கொண்டுள்ள திடலின் எல்லை ஓரமாக ஒரு கோயில், ஒரு வீடு, ஒரு மாமரம், பின் ஒரு கிணறு, ஒரு புளிய மரம், ஒரு பனைமரம் ஆகியவைகள் உள்ளன என்று வைத்துக் கொள்வோம். அவைகள் நிலத்தில் இருக்கும் இடத்தைப் படத்தில் குறிப்பிட்டு விட்டு அவைகளை ஒரு கோட்டினால் இணைத்தால் நாம் வரைய விரும்பும் திடல் காகிதத்தில் உருவாகும். பிறகு அந்த எல்லைக்குள் காணப்படும் ஏனைய அம்சங்களையும் குறிப்பிட்டு விட்டால் படம் பூர்த்தியாகிவிடும்.

படத்தில் காட்டப்படும் அம்சங்கள் ஒவ்வொன்றும் அவைகளுக் குரிய திசையிலும் அவைகள் ஒன்றுக்கொன்று என்ன தொலைவில் உள்ளனவோ அந்த தொலைவிலும் காட்டப்பட வேண்டும். நிலத்தி லுள்ள தொலைவு தல படத்தில் காட்டப்படும்போது ''தல பட அளவை'' (Scale)க்குப் பொருத்தமாகக் காட்ட வேண்டும்.

படம் வரைவதற்கு அவசியமானவை :—(1) ஒரு காகிதம் (2) ஒரு மேஜை, (3) பட ஊசிகள், (4) முழக்கோல், (5) நீண்ட குண்டூசி இரண்டு (6) சிறு கல் ஒன்று கட்டப்பட்டிருக்கும் நூற் கயிறு.

இரண்டு குண்டூசியை முழக்கோலில் நீளவாட்டில் நட்டுக்குத் துறக் குத்தி வைத்தால் அது குறி பார்க்கும் கோல் (Aledaide) ஆகும்.

நூற்கயிற்றில் கட்டப்பட்டுள்ள கல் மேஜையை மட்டமாக வைப் பதற்கு நூல் மட்டமாகப் பயன்படும்.

முதலில் எல்லையில் உள்ள அம்சங்களைக் குறிப்பிடுவது எப்படி என்பதைப் பார்ப்போம். இதற்குரிய செயல்முறை :—




163. தலபடத் தட்டை மேஜை
(Plane Table for Mapping)

(1) படம் வரையப் பயன்படுத்தப்படும் காகிதத்தின் அளவு, நிலத்தின் விரிவு அதாவது விஸ்தீர்ணம் ஆகிய இரண்டையும் மனத்தில் கொண்டு நம் தலபடத்துக்கு பொருந்தக்கூடிய "தலபட அளவை" (Scale) முடிவு செய்ய வேண்டும், அதைப் படம் வரையும் காகிதத்தில் ஒரு ஓரத்திலிருந்துக் குறித்துக் கொள்ள வேண்டும்.

(2) நிலத்தின் மத்தியில் வசதியுள்ள ஒரு இடத்தில் படம் வரைவதற்குப் பயன்படுத்த அடிப்படைக் கோடு (Datum Line) ஒன்றை வரைய வேண்டும். அது 10 அல்லது 15 மீட்டர் நீளம் இருக்கலாம். நல்ல சரிமட்டமான இடமாக இருக்க வேண்டும். அங்கிருந்து பார்த்தால் திடல் முழுதும் கண்ணுக்குத் தெரியக்கூடிய தாக இருத்தல் வேண்டும். இந்தக் கோட்டின் இரு முனைகளில் இருந்தும் பட அம்சங்களைக் குறி பார்த்து அவைகளிருக்கும் திசையையும் தொலைவையும் நிர்ணயிக்க வசதி வேண்டும்.

(3) படம் வரைவதற்காக உள்ள காகிதத்தை மேஜைமேல் பட ஊசிகளின் உதவியால் நன்கு பதித்தல் வேண்டும்.

(4) முழக்கோலில் நீளவாட்டில் இரண்டு குண்டூசிகளை நட்டுக் குத்துறக் குத்தி வைக்க வேண்டும். இது குறிபார்க்கும் கோலாகப் பயன்படும்.

(5) நிலத்தில் உள்ள அடிப்படைக் கோட்டை படம் வரையும் காகிதத்தில் உரிய இடத்தில் தலபட அளவைக்கு இணங்க வரைந்து கொள்ள வேண்டும். முறையாக அந்தக் கோட்டின் இரு முனை களையும் நிலத்திலும் காகிதத்திலும் ''அ'' ''ஆ'' அடையாளம் இட்டுக்கொள்ள வேண்டும்.

ஒரு அம்புக்குறி முதல் அடுத்த அம்புக்குறிவரை உள்ளது அடிப்படைக்கோடு. அந்தக் கோட்டின் ஒவ்வொரு முனையி லிருந்து பார்வைக்கோல் வழியாகப் பார்வையிட வேண்டும். ஒவ்வொரு அம்சத்தையும் இரு முனையிலிருந்தும் பார்வை யிட்டு அவைக்குரிய கோடுகள் சேரும் இடத்தில் அந்த அந்த அம்சத்தைக் குறிப்பிடுகிறோம்.




164. வரைந்த தலபடம்

1. மாமரம், 2. வீடு, 3. கோயில், 4. பலாமரம், 5. பனைமரம், 6. புளியமரம், 7. கிணறு

படத்தில் உள்ள நேர்க் கோடுகளுக்கருகில் பூமியில் உள்ள வளைவுகளை ஊன்றிப் பார்த்து நிதானித்து வரையவேண்டும்.

(6) தரையில் '' அ '' என்றுள்ள முனைக்கு நேர் மேலாக படத்தில் உள்ள ''அ'' என்ற முனை வருகிற விதமாகவும், தரையில் உள்ள கோட்டுக்கு நேர் மேலாக காகிதத்தில் உள்ள கோடு வரும் படிக்கும் மேஜையை அமைத்தல் வேண்டும்.

(7) மேஜையை அமைத்த உடன் உண்மையான வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு என்ற திசைகளை காகிதத்தில் ஒரு மூலையில் கோடிட்டு வரைந்துகொள்ள வேண்டும்.

(8) மேஜை சாய்வாக இல்லாமல் சரிமட்டமாக உள்ளதா என்று சரிபார்க்க வேண்டும்.

(9) மேஜை சரிமட்டமாக உள்ளது என்று தெரிந்து கொண்டதும் திடல் எல்லையில் உள்ள அம்சங்களை ஒவ்வொன்ருகக் குறிபார்த்து அவைகள் உள்ள திசையைக் குறிக்க நேர்கோடுகள் வரைய வேண்டும். இதற்குக் குறிபார்க்கும் கோலை 'அ' என்ற முனைமேல் வைத்து இரண்டு குண்டூசிகளும் எல்லை அம்சமும் ஓர் நேர் கோடாக வரும்படி வைத்து, அப்படி வந்தபிறகு முழக்கோல் ஓரமாக நேர்கோடு வரைய வேண்டும்.

(10) அப்படி எல்லை அம்சங்களை எல்லாம் குறிபார்த்து வரைந்த பிறகு மேஜையை "ஆ" முனைக்கு மாற்றி அங்கும் இதேமாதிரி குறி பார்த்து எல்லை அம்சங்களின் திசையைக் குறிக்கும் கோடுகள் வரைய வேண்டும் இந்தக் கோடுகளும் முன் 'அ' முனையிலிருந்து வரைந்துள்ள கோடுகளும் ஒன்றை ஒன்று தொடும். அம்சங்கள் இருக்கும் இடம் இப்படிக் கோடுகள் தொடுகின்ற இடத்திலேதான் இருக்கும்.

(11) கோடுகள் தொடுகின்ற இடத்தில் உரிய அம்சத்தின் பெயரை எழுத வேண்டும். அப்புறம் அந்த எல்லை அம்சங்களை ஓர் வளைகோட்டினுல் இணைக்க வேண்டும்.

(12) பின்னர் அந்த எல்லைக்குள் இருக்கும் இதர அம்சங்களை இதே முறையில் படத்தில் குறிப்பிட வேண்டும். இப்பொழுது நமது தலபடம் உருவாகி உள்ளது.

### இரண்டாவது முறை

இதுபோலவே அடிப்படைக்கோடு, படம் வரைய மேஜை முதலி யன வேண்டும். மேஜை சரிமட்டமாக உள்ளதா என்பதைச் சரி பார்க்க நூல் மட்டமும் தேவை. குறிபார்க்கும் கோலுக்கு பதிலாக திசைக் கருவியைப் பயன்படுத்த வேண்டும். "பிரிஸ்மாட்டிக்" அல்லது "ஸில்வா" என்ற திசைக் கருவிகள் இந்த முறைக்குப் பொருத்தமுடையன.

"அ" முனையிலிருந்து எல்லை அம்சங்களனைத்தையும் குறி பார்த்து அவைகளின் டிகிரி அளவு என்ன என்பதைத் தெரிந்து கொண்டபிறகு "ஆ" முனையிலிருந்தும் குறிபார்த்து டிகிரி அளவு

கணக்கிட வேண்டும். பின்னர் காகிதத்தில் இவைகளை வரைய வேண்டும். முன்போலவே தல படத்தை முடிக்க வேண்டும்.

## மூன்ருவது முறை

இந்த முறை விரைவாக ஒரு இடத்தின் தலபடம் வரைய வேண்டிய பொழுது கையாளக்கூடியது. இதற்கும் மேஜை முதலியன தேவைப்படும். அடிப்படைக்கோடும் அவசியம். குறிபார்க்கும் கோல் அவசியமில்லை. 'அ' என்ற முனையில் எழுதுகோலை நட்டுக் குத்துற வைத்து எல்லை அம்சத்தைக் குறிபார்த்து அது எழுது கோலுக்கும் நம் கண்ணுக்கு நேராக வந்த உடன் எழுதுகோலை ஒரு சிறிதும் நடுங்க விடாமல் அம்சத்தை நோக்கிச் சாய்த்து, அது விழுந்த இடத்தில் நேர்க்கோடு வரைதல் வேண்டும். அதுபோலவே 'ஆ' முனையிலிருந்தும் வரைதல் வேண்டும். இப்படி அம்சங்கள் ஒவ்வொன்றையும் நிர்ணயித்துக் கொள்ளலாம். ஆனுல் இப்படி வரையப்பட்ட படம் அவ்வளவு சரியாக இருக்காது. சுமாராகவே இருக்கும். இதனை Rough Sketch Map என்பர்.

அ, ஆ என்பது அடிப்படைக்கோடு. நீளம் 12 மீட்டர் க, ச, ட, த, ப, ற என்பவை மரங்கள். முதலில் 'அ' முனையிலிருந்து க, ச, ட, த, ப, ற என்பவற்றின் டிகிரி அளவை (Compass Bearing) யை நிதானிக்க வேண்டும். பிறகு அதுபோலவே 'ஆ' முனையிலிருந்து அவற்றின் டிகிரி அளவையை நிதானிக்க வேண்டும்.

நிதானித்த டிகிரி அளவைகளை அடியில் உள்ளபடி குறித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

| | "அ" முனையிலிருந்து | "ஆ" முனையிலிருந்து |
|---|---|---|
| க | 40° | 20° |
| ச | 115° | 65° |
| ட | 167° | 150° |
| த | 200° | 210° |
| ப | 250° | 280° |
| ற | 345° | 355° |

இந்தக் குறிப்புகளிலிருந்து தலபடம் வரைவது எளிது

படம் வரை காகிதத்தில் அதன் மத்தியில் அடிப்படைக்கோடு வரைய வேண்டும். அதன் நீளம் தலபட அளவைக்குப் பொருந்த வேண்டும். பூமியில் இவ் வடிப்படைக் கோட்டின் நீளம் 12 மீட்டர் என்பதை நாம் அறிவோம். காகிதத்தின் நீள அகலத்தைப் பொறுத்து இந்த அடிப்படைக் கோட்டின் நீளமும் இருக்கும். பெரிய காகிதமானுல் இந்த அடிப்படைக் கோட்டை 12 செ.மீ. நீளமாக

வரையலாம். அப்பொழுது படத்தின் அளவை (Scale) 1 செ. மீ. = 1 மீட்டர் என்று படத்தில் குறிப்பிட வேண்டும். அது அ, ஆ என்றிருக்கட்டும்.

பிறகு அந்தக் கோட்டின் 'அ' முனையிலிருந்து 40°, 115°, 167°, 200°, 250°, 345°, டிகிரி அளவில் கோடுகள் வரைய வேண்டும். அதுபோலவே 'ஆ' என்ற முனையிலிருந்தும் 20°, 65°, 150°, 210°, 280°, 355°, டிகிரி அளவை கோடுகள் வரைய வேண்டும். கோடுகள் சந்திக்கும் இடங்களை முறையே க, ச, ட, த, ப, ற, எனலாம்.

படத்தில் ஒரு மூலையில் திசைகளைக் குறிப்பதற்கு உரிய கோடுகளையும் வரைய வேண்டும்.

## 8. கோடரிக்கலை (Axemanship)

முதல்தரச் சாரணச் சின்னம் பெற விரும்பும் சாரணன் கைக் கோடரி, அரிவாள், கத்தி முதலியவற்றிற்குரிய காப்பு விதிகள் தெரிந்திருக்க வேண்டும். அவைகளை எப்படி பாதுகாப்பது என்பதையும் தெரிந்திருக்க வேண்டும்.

மரம் வீழ்த்தும் கோடரி, அல்லது ''குக்றி'' அல்லது அரிவாளைப் பயன்படுத்தி மரம் வீழ்த்தல், மரத்தின் கிளைகளைச் சரியான முறையில் அறுத்தல் ஆகியவை தெரிந்திருக்க வேண்டும்.

கோடரிக்கலை என்பது மரத்தை வீழ்த்துவது என்பது மட்டுமல்ல, மரத்தைப் பாதுகாப்பதும் அதில் அடங்கும் சாரணன் மரங்களின் முக்கியத்துவத்தை நன்குணர்ந்தவனாக இருத்தல் வேண்டும். பல வகை மரங்களின் உபயோகத்தைப்பற்றித் தெரிந்திருப்பதோடு மரங்களைப் பேணுதற்குரிய அனுபவம் உடையவனாக இருத்தல் அவசியம்.

நம் நாட்டில் உள்ள மரங்களுள் மிகவும் பயனுடையது தேக்கு (Teak) மரம். அது வீடு கட்டுவதற்கும், மேஜை, நாற்காலி, பெட்டி, அலமாரி செய்வதற்கும் பயன்படுகிறது. அதில் ஒரு வகை எண்ணெய்ப் பசை இருக்கிறது. அது மரத்துக்கு நல்ல வலுவைத் தருகிறது. தேக்கம் பலகையை இழைத்து அதை மிக மெதுவாகப் பண்ணலாம். ''சால்'' (Sal) என்ற மரத்தை வடநாட்டில் பல வகையில் உபயோகிக்கிறார்கள். நூக்கமரம் (Rosewood) மேஜை, நாற்காலி செய்ய மிகவும் பயன்படுகிறது. நூக்கமரம் தோதகத்தி என்றும் வழங்கப்பெறும், சந்தனமரம் (Sandalwood) மலைப்பக்கங்களில் ஆங்காங்கு வளர்கின்றது. கருங்காலி (Ebony) என்பது மிகவும் கருமையான மரம். கோங்கு, பலா, மா முதலிய மரங்களும் மனிதர்களுக்குப் பல வகையில் பயன்படுகின்றன. பனை, தென்னை, பாக்கு ஆகிய மரங்களும் மிகவும் உபயோகம் உள்ள மரங்கள். மரம்

மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது. அது நாகரிகத்துக்கே அடிப்படை.

சாரணர்கள் மரங்களைப் பேணும் கைங்கரியத்தில் ஈடுபடுதல் மிக முக்கியமானது. சாரணர்கள் மரம் நடுதல், மரம் வளர்த்தல் போன்ற பொதுத் தொண்டிலும் ஈடுபடவேண்டும். மரங்களைக் காப்பாற்றும் தொண்டிலும் ஈடுபடுதல் அவசியம். வேனிற் காலத்தில் மரம் அடர்ந்த காடுகளில் தீ ஏற்படுவதுண்டு. ஊர்களுக்கு அருகாமையில் உள்ள காடுகளிலும் தீ உண்டாகலாம். அத்தகைய நெருப்புகளை அணைக்கும் தொண்டில் சாரணர்கள் ஈடுபடவேண்டும். அரசினர் ஆண்டுதோறும் வன மகோற்சவம் நடத்துகிறார்கள். அந்த விழாக்களில் கலந்து கொண்டு தொண்டாற்றுவதும் முக்கியமானது.

## கோடரிக்காப்பு விதிகள் (Safety Ruels for Axe)

(1) உபயோகத்தில் இல்லாதபோது கோடரி அதன் உறைக்குள் வைக்கப்பட வேண்டும். உறையில்லாமல் வைத்தல் கூடாது. கத்தி, அரிவாள் முதலியவற்றையும் உறையிலேயே வைத்திருத்தல் வேண்டும். உபயோகத்தில் உள்ள பொழுது கோடரியை மரக்கட்டையில் இறுக்கி வைக்கலாம்.



165. கோடரிக் காப்பு விதிகள்
(Safety Rules of Axemanship)
கோடரியை எடுத்துச் செல்வது, கோடரியை இன்னொருவரிடம் கொடுப்பது

(2) கோடரியைக் கையில் எடுத்துச் செல்லும் பொழுது மிகக் கவனமாய் எடுத்துச் செல்லவேண்டும்.

மரம் வீழ்த்தும் கோடரி, உறையில் இல்லாத பொழுது, அதன் வெட்டுவாய் புறத்தே இருக்கும்படி தோளில் எடுத்துச் செல்லப் படலாம். நம்மோடு கூட வருபவர்கள் மறுதோள் பக்கமாக வர வேண்டும்.



166. கோடரியைக் கொடுத்தல்
(How to hand over axe)
கோடரியைக் கொடுக்கும் போது அதன் தலையை முதலில் கொடுக்கவேண்டும்.

கைக் கோடரியின் தலையை (axe-head) கையில் அடக்கிப் பிடித்துக் கொண்டு எடுத்துச் செல்லலாம். கோடரியின் வெட்டுவாய் நம் உடம்புக்கு எதிர் பக்கமாக இருக்கவேண்டும் கோடரி இருக்கிற கையைத் தொங்க விட்டுக் கொண்டு போகலாம்.

(3) மரம் வீழ்த்தும் கோடரியை உபயோகிக்கும் முன்னர் மரத்தைச் சுற்றியுள்ள செடிகொடிகளை முற்றிலும் அப்புறப் படுத்திவிட வேண்டும். மரத்தைச் சுற்றி இரண்டு கோடரி நீளத்துக்கு எவ்வித செடி கொடிகள், அல்லது வேறு தடைகள் இருக்கக்கூடாது.

''கோடரி நீளம்'' என்பது நீட்டிப்பிடித்துள்ள கையும் கோடரிக் கணையும் சேர்ந்து எவ்வளவு நீளம் உள்ளதோ அது.

மரத்தைச் சுற்றியுள்ள தரை இரண்டு கோடரி நீளத்துக்குத் தடைகளின்றி சுத்தமாக இருக்க வேண்டும். தரை மட்டத்திலும் அதில் இருந்து 10 அல்லது 12 அடி உயரம் வரை சுத்தமாக இருக்க வேண்டும்.

(4) மரம் வீழ்த்துபவர் உறுதியாக உள்ள தரையில் உறுதியான நிலையில் நின்று மரத்தை வீழ்த்த வேண்டும்.

மரம் பிளப்பவரும் அப்படியே தான். பிளக்கும் மரத்தில் அவர் கால் வைத்துக் கொண்டு மரத்தைப் பிளப்பது கூடாது.

(5) மரத்தைப் பிளக்கும் பொழுது அந்த மரத்தின் கீழே ஒரு வெட்டு அடிக்கட்டையை (Chopping Block) வைத்துக் கொண்டு பிளக்க வேண்டும். மரத்தைத் தரையில் போட்டுக் கொண்டு பிளத்தல் கூடாது.



167. விறகு தறித்தல் (Chopping) அடிக்கட்டை அல்லது தறிகட்டை மேல் பதியவைத்துத் தறிக்கவேண்டும்

(6) கட்டையைத் தறிக்கும் போது அதனை இன்னொரு கட்டை மேல் சாய்வாக வைத்துக் கோடரியால் அல்லது அரிவாளால் தறித்தல் கூடாது. அப்படித் தறித்தால் வெட்டுப் பட்ட துண்டு துள்ளிப் பறந்து வந்து நம் உடம்பை அல்லது கண்ணைத் தாக்கக் கூடும். அப்படியே அருகில் உள்ளவர்களையும் தாக்கலாம்.

(7) கோடரியால் அல்லது அரிவாளால் வெட்டும் பொழுது 45° சாய்வில் வெட்ட வேண்டும். சாய்வு இல்லாமல் நட்டுக்குத்தற வெட்டுவது பயன் அளிக்காது. கோடரி அல்லது அரிவாள் மழுங்குமே ஒழிய வெட்டு ஏறாது.

(7) மரம் வீழ்த்தும் போது பார்ப்போர்கள் இரண்டு கோடரி நீளத்துக்கப்பால் நிற்றல் வேணடும். மரம் பிளக்கும் போதும் அப்படியே.

(8) மரம் வீழ்த்துகையில் மரம் விழ ஆரம்பிக்கும் பொழுது உரக்க சத்தம் போட்டு மற்றவர்களை எச்சரித்தல் வேண்டும். அப்படி எச்சரிப்பதால் அவர்கள் தங்கள் தங்களைக் காத்துக் கொள்ள இடமுண்டு. விழுகின்ற போது அடிமரம் முன்னோக்கி உதைக்கக் கூடும். எனவே, வெட்டுபவரும் வேகமாகப் பின்னோக்கிச் செல்ல வேண்டும்.

(9) விழுந்த மரம் புரளக் கூடும். மரம் விழுந்ததும் அதை நெருங்கக் கூடாது. அது நல்ல பதிவாக அமர்ந்த பின்னரே அதை நெருங்கலாம்.




168. மரத்தைத் துண்டு போடுதல் (Cutting of log)

நட்டுக்குத்துற வெட்டுவது சிறிதும் பயனற்றது. வெட்டும் போது 45° கோணத்தில் வெட்ட வேண்டும். அதற்குப் பெரிய கோணத்தில் வெட்டுவது அபாயம். கோடரி காலில் படலாம்.

## கோடரியின் பாகங்கள் (Parts of an axe)

**வெட்டுவாய் :—** வெட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் பாகம் (Axe Bit)

**கணை :—** கோடரிக் கை — மரத்தால் உள்ள பாகம் (Handle)

**பிடி :—** கையால் பிடித்துக் கொள்ளும் பாகம் (Grip)

**தோள் :—** கோடரியின் தலைக்கு அருகாமை உள்ள கணை (Shoulder)

**தலை :—** கோடரியின் இரும்புப் பாகம் (Head)

**கண் :—** இரும்புப் பாகத்தில் உள்ள துவாரம் (Eye)

**ஆப்பு :—** கோடரித் தலையை கணையோடு இறுக வைக்கும். (Wedge)




169. கோடரியின் பாகங்கள்

(1) வெட்டுவாய் (Axe Bit) (2) கணை (Haft)
(3) குதிக்கால் (Heel) (4) பெருவிரல் (Toe)
(5) தோள் (Shoulder) (6) பின்பக்கம் (Back)
(7) தலை (Head)

## கோடரியைப் பாதுகாத்தல்
(Care of Axe)

கோடரி கூர்மை இழக்கலாம். கார்போரண்டம் (Carborundum) கல்லினுல் வட்டமாகத் தேய்த்துக் கடிவாயைத் தீட்ட வேண்டும். வட்டமாய்த் தேய்ப்பது கடிவாய்க்குக் கூர்மையை உண்டு பண்ணும். அவசியமானுல் சாணை பிடிக்க வேண்டும்.

கோடரியைச் சாணை பிடிக்கும்போது சாணைக்கல் (Grinding stone) தண்ணீரில் சுழன்று கொண்டிருக்க வேண்டும். சாணைக்கல் கடிவாய்க்கு எதிராகச் சுழற்றப்பட வேண்டும். கல் மறு பக்கமாகச் சுழன்ருல் கோடரி கூர்மை ஆகாது. கூர்மையற்ற கோடரி விபத்தை உண்டு பண்ணும்.

கோடரித்தலை அசைவுற்று விழுந்து விட.லாம். அசைவு சிறிதாயின் ஓர் இரவு கோடரித் தலையை ஆலிவ் எண்ணெயில் (Olive oil) ஊறவைக்க வேண்டும். தண்ணீரிலும் ஊற வைக்கலாம். ஆனுல் தண்ணீர் எளிதில் உலர்ந்து விடும். கோடரிக்குப் பழையபடி ஆட்டம் ஏற்படலாம்.

மிகுந்த அசைவு இருக்குமாயின் மறு ஆப்பு அமைக்க வேண்டும். அவசியம் என்று தோன்றினுல் கோடரிக் கணையை மாற்றலாம்.

கத்திகளுக்கும் இத்தகைய பாதுகாப்பு அவசியம். கத்தியைக் கூர்மையாய்த் தீட்டி கத்தி அசைய வேண்டிய இடங்களில் எண்ணெய் போட்டு வைப்பது அவசியம்.

## மரம் வீழ்த்தல் (Tree felling)

(1) மரத்தை வீழ்த்துவதற்கு உரிய திசையை முதலில் முடிவு செய்துகொள்ள வேண்டும். இயற்கையாக எந்தத் திசையில் சாயும் என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். அதே திசையில் மரத்தை வீழ்த்துவதற்கு ஏதாவது இடைஞ்சல் இருக்குமா என்று யோசனை செய்து பார்க்க வேண்டும். மரம் அந்தத் திசையாக விழுவதால் ஏதாவது கெடுதி ஏற்படக் கூடுமாயின் மரம் விழும் திசையை ஒரு சிறிது மாற்றிக் கொள்ளல் நலம். ஏதாவது கட்டிடங் களுக்கு அல்லது பயிர் பச்சைகளுக்குக் கெடுதி ஏற்படக் கூடுமாயின் மரத்தை ஒரே அடியாய் நிலத்தில் வீழ்த்தாமல் மரத்தை அதன் உச்சியில் இருந்து சிறுசிறு பாகமாக வெட்டி விடலாம். ஆனுல் வெட்டுவதற்கு முன் வெட்ட எண்ணும் பாகத்தை கயிறு கட்டிப் பாதுகாத்துக் கொண்டு மரம் துண்டான பிறகு அதனைக் இறக்க வேண்டும்.

(2) மரத்தை வீழ்த்துவதற்கு முன் மரத்தைச் சுற்றிலும் உள்ள செடிகொடிகளை அகற்ற வேண்டும். அகற்றுவது முன் கூறியுள்ள படி இரண்டு கோடரி நீளத்துக்கு இருக்க வேண்டும். மரத்தைச் சுற்றியும் தரையிலிருந்து மேலாக செடிகொடிகள் போன்ற இடைஞ்சல் எதுவும் இல்லாமல் இடம் சுத்தமாக இருக்க வேண்டும்.

(3) மரம் வீழ்த்துக் கோடரியை மரம் வீழ்த்துகையில் முறையாக இயக்க வேண்டும். மரம் வீழ்த்தற்குக் கோடரியை இடது கையால் பிடிக்க வேண்டும். வலதுகை கோடரியின் தோளில் இருக்க வேண்டும். கோடரியை நம் தோள் உயரத்துக்கு உயர்த்த வேண்டும். உயர்த்தின பிறகு அதைக் கீழ்க் கொண்டு வந்து மரத்தை 45° சாய்வில் தாக்க வேண்டும். கீழ்நோக்கி வரும்பொழுது தன் கனத்தாலேயே கீழ்வர வேண்டும். அப்பொழுது வலதுகை கணையின் தோள் பக்கத்திலிருந்து பிடி வரையில் வரும். மரத்தின் பேரில் வெட்டு விழும். இப்படி அநேக தடவை வெட்ட வேண்டும்.

(4) எந்தப் பக்கம் மரத்தைச் சாய்க்க எண்ணுகிறோமோ அந்தப் பக்கத்தில்தான் முதலில் வெட்ட வேண்டும். இது பூமியில் இருந்து 15 செ.மீ அல்லது 30 செ.மீ. (அரை அடி அல்லது ஒரு அடி) உயரத்தில் இருக்கலாம்.



170. கோடரியைப் பயன்படுத்தல் (How to wield axe)

மரம் வீழ்த்துபவர் கோடரியை பயன்படுத்தும் முன்னர் இரண்டு கோடரி நீளத்துக்கு தடைகளை அகற்ற வேண்டும்.

படத்தில் காண்பித்துள்ளதுபோல இந்த வெட்டு அமைய வேண்டும். வெட்டின் அடிப்பாகம் மட்டமாக இருக்க வேண்டும். அதன் மேற்பாகம் 45° சாய்வாகவும் இருத்தல் வேண்டும். அடிப்பாகம் மரத்தின் கனத்தில் பேர்பாதிக்கு அதிகமாக இருக்க வேண்டும்.

(5) இது ஆனதும் மரத்தினுடைய மறுபுறம் சென்று இரண்டாவது வெட்டு ஆரம்பிக்க வேண்டும். முதல் வெட்டுக்கு நான்கு அங்குலங்களுக்கு மேலாக இந்த இரண்டாவது வெட்டு அமைய வேண்டும். மரத்தின் கனத்தில் சரிபாதியை நாம் நெருங்க நெருங்க மிகவும் கவனமாக வெட்ட வேண்டும். மரத்தை வெட்டுவது ஒதுங்கி நின்றே வெட்ட வேண்டும். மரம் திடீரென்று சாயலாம்.



171. தரையில் உறுதியாய் நிற்றல் (Taking Proper Stance)

அதன் பின்னர் தரையில் உறுதியாக நின்று கொண்டு மரத்தை வெட்ட வேண்டும்.

(6) மரம் விழ ஆரம்பிக்கும்போது உரக்கச் சத்தம் போட்டு பக்கத்தில் உள்ளவர்களையும் சற்று தொலைவில் உள்ளவர்களையும் எச்சரிக்க வேண்டும்.

(7) மரம் விழுந்ததும் சில நிமிடங்கள் மரத்தைக் கவனித்தல் வேண்டும். மரம் அசையலாம். மரம் நன்றாகப் பதிவாக அமர்ந்த பிறகு அதன் பக்கத்தில் போய்க் கிளைகளை அறுக்க வேண்டும். கிளைகளை அறுக்கும்போது மரத்தின் அடிப்பக்கத்திலிருந்து மேல் பக்கத்தைப் பார்க்க அறுக்க வேண்டும்.

(8) அடிமரத்தையும் பருத்த மரக்கிளைகளையும் துண்டுபோட வேண்டும். அடிமரத்தைத் துண்டுபோட அதன் இருபுறத்திலும் வெட்ட வேண்டும். வெட்டுப் போடுவது 45° சரிவில் இருக்க வேண்டும். இந்தச் சரிவு இடது பக்கத்திலும் வலது பக்கத்திலும் இருக்க வேண்டும். மரத்தின் கனத்தில் பாதியானதும் மரத்தைத் திருப்பிப் போட்டுக் கொண்டு மறுபக்கமும் வெட்ட வேண்டும். அடிமரம் துண்டாக விழும்வரை வெட்ட வேண்டும்.

இது போலவே பருமனுன கிளைகளையும் துண்டு போட வேண்டும்.

சிறுசிறு கிளைகளையும் தழைகளையும் ஒரு பக்கமாகவும், மரத் துண்டுகளை இன்னொரு பக்கமாகவும் அடுக்கி வைக்க வேண்டும். கோடரியால் துண்டு போட்டால் மரம் அதிக சேதமாவதால் ''துண்டு போடும் வாளை'' (Cross Cut Saw) உபயோகித்து மரத்தைத் துண்டு போடலாம். அதுபோலவே மரத்தை வீழ்த்துவதற்கும் ''துண்டு போடும் வாளைப்'' பயன்படுத்தலாம்.

## மரக்கிளை பிளத்தல்

மரக்கிளைகளைப் பிளக்க விரும்பினுல் மரக்கிளைக்குக் கீழ் ஒரு ''தறிக் கட்டையில்'' (Chopping Block) வைத்துப் பிளக்க வேண்டும். கிளையை இடது கையால் பிடித்துக் கொண்டு வலது கையால் கிளையைப் பிளக்கலாம். பிளப்பது தொலையில் உள்ள நுனியிலிருந்து உள்நோக்கி வரவேண்டும்.

மரத்தை எந்தப் பக்கம் சாய்க்கலாம் என்பதை முடிவு செய்வது முக்கியமானது.



172. மரத்தை எங்கு சாய்க்கலாம்?
(In what direction to fell tree?)

பள்ளத்தாக்கை நோக்கி வீழ்த்தக் கூடாது. அப்படிச் செய்தால் மரம் கீழ் நோக்கி நகரும். இன்னும் பல மரங்களுக்குச் சேதம் விளைவிக்கும்.

தட்டையான நிலத்தில் வீழ்த்தலாம் அல்லது மேட்டை நோக்கி வீழ்த்தலாம்.

மரம் எந்த பக்கத்தில் சாயும் என்பதை மரத்துக்கு நேராகக் கோடரியைத் தொங்க விட்டுத் தெரிந்து கொள்ளலாம்

மரத்தை வீழ்த்துவதற்கு இரண்டு வெட்டுகள் தேவை. முதல் வெட்டு மரத்தின் அடியை ஒட்டி. படத்தில் உள்ளது அடியில் மட்டமாக வும் மேல் உள்ளது சாய்வாக வும் இருக்கும். மரத்தின் கனத்தில் பாதிக்கு மேல் இது வெட்டப்படும். மறு பக்கத் தில் உள்ள வெட்டும் இது போலவே இருக்கும். ஆனல், முந்தினதை விட சில செ.மீ. உயரத்தில் இருக்கும்.



173. மரம் எப்படிச் சாயும் என்று பார்ப்பது (Using the axe as a plumb-line)



174. முதல் வெட்டு (First Cut)

**மரம் எப்படிச் சாயும்?** முதல் வெட்டைப் பார்க்க. முதல் வெட்டு கீழது. இரண்டாவது வெட்டு மேலது. வாள் அறுப்பும் இரண்டாவதே.

இரண்டாவது வெட்டுக்குப் பதில் மரத்தை வாளால் அறுக்கலாம்.



175. மரத்தை இழுத்துச் சாய்த்தல்
(Use of Rope and Pulley in Tree Felling)

மரம் சாய வேண்டிய இடத்தை நன்கு தெரிந்து மரம் வெட்டப் பட்டுள்ளதானல் அது தானுகவே சாய்ந்து விடும். அவசியமானல் படத்தில் உள்ளது போல கப்பியும் கயிறும் அமைத்து இழுத்துச் சாய்க்கலாம்.

மரம் சாயும் போது, அல்லது சாய்க்கும் போது அபாயம் ஏற்படலாம். மரம் வெட்டுவோர் மிக மிக ஜாக்கிரதையாகப் பணியாற்ற வேண்டும். மரக் கொம்பு தறிக்கட்டை மேல் நன்ருகப் பதிவாக வைக்கப்பட வேண்டும். அப்புறம் சிறிது சிறிதாக தொலேவிலுள்ள நுனியிலிருந்து அடியை நோக்கி, அதாவது முன் பக்கத்திலிருந்து பின்னுகப் பிளந்து கொண்டு வரவேண்டும்.

## சாரண யாத்திரை அல்லது சுற்றுலா

(Scout Journey or Hike)

முதல்தரச் சாரணுக விரும்பும் சாரணன் சாரண யாத்திரை திறம்படச் செய்யவேண்டும் எப்பொழுது எந்த இடத்துக்குச் செல்லவேண்டும் என்பதைச் சாரண ஆசிரியர் முடிவு செய்வார்.

தனியாகவோ, இன்னொரு சாரணனுடனே புறப்பட்டுச் சென்று இரண்டொரு இடத்தில் தங்கி, 10 மைல் தொலேவு யாத்திரை செல்வது சாரண யாத்திரை ஆகும். நடந்து யாத்திரை செய்யலாம் அல்லது தோணி தள்ளிக்கொண்டு யாத்திரை செல்லலாம். காலால் செலுத்தப்படும் சைக்கிள் வண்டியையும் பயன்படுத்தலாம்.

சைக்கிளில் செல்வதானுல் 20 மைல் செல்லவேண்டும். அந்த 20 மைலில் நான்கு மைலாவது நடந்து செல்லுதல்வேண்டும். இந்த யாத்திரை செல்வது 24 மணி நேரத்துக்குக் குறையாமல் இருக்க வேண்டும்.

இப்படிச் செல்லும் பொழுது தனக்கு வேண்டிய உணவு முதலிய வற்றை யாத்திரை மத்தியில் தானே தயார் பண்ணிக் கொள்ள வேண்டும். சமையல் செய்யப்பட்ட உணவு எதையும் யாத்திரை ஆரம்பத்தில் எடுத்துச் செல்லக் கூடாது. ஆங்காங்கு தங்கும் இடங் களைத் தானுகவே தேர்ந்து கொள்ளவேண்டும். அந்த இடங்களில் தங்கும் போது சாரணப் பாசறைகளுக்குரிய முறைகளைப் பின்பற்ற வேண்டும்.

யாத்திரை செல்லும் பொழுது சாரண ஆசிரியர் அல்லது தேர்வு நடத்துபவர் சாரணனிடம் எவ்வெவற்றைக் கூர்ந்து கவனிக்க வேண்டும் என்று கட்டளையிட்டுள்ளாரோ அவற்றைச் சாரணன் நன்கு கவனித்து அவற்றைப் பற்றிய அறிக்கை (Report) ஒன்று எழுதிக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தலும் வேண்டும். அறிக்கை மிகச் சுருக்கமாக இருத்தல் வேண்டும். குறிப்பிட்டுள்ளவையைத் தெளிய வைக்கும் முறையில் படங்களும் வரையப்பட்டிருக்க வேண்டும். இவை தவிர வேறு முக்கியமான விவரங்களும் கொடுக்கப்பட வேண்டும். தான் சென்றுள்ள பாதையைத் தெளிவாய் விவரித் தலும் மிக அவசியம். முக்கிய இடங்களின் குறிப்பு எண் (Map-Reference) கொடுக்க வேண்டும். தெருக்கள், வயல்கள், தோட்டங்கள், அவற்றில் கண்ட பயிர்கள், காடுகள் முதலியவற்றை விவரித்துக் கூறல் வேண்டும். அதுபோலவே தான் சென்ற இடங் களில் கண்ட மக்களைப்பற்றியும் அவர்கள் ஈடுபட்டுள்ள தொழிலேப் பற்றியும் விவரங்கள் தரப்படவேண்டும். சரித்திர சம்பந்தமுள்ள இடங்களைப் பற்றிய குறிப்புகள் தருதல்வேண்டும். காவல் நிலேயங்கள், அஞ்சல் நிலேயங்கள், நீச்சலுக்குத் தகுந்த இடங்கள், பாசறைக்குத் தகுந்த இடங்கள் முதலியவற்றைப் பற்றியும் குறிப்பில் கூறப்படவேண்டும்.

# யாத்திரை அறிக்கை (Journey Report)

சாரணர்கள் தங்கள் சாரண ஆசிரியருக்கு அல்லது தேர்வு நடத்துபவருக்கு தங்கள் யாத்திரை அல்லது சுற்றுலாவைப் பற்றிய அறிக்கை ஒன்று சமர்ப்பிக்க வேண்டும். சுற்றுலா செய்யும்போது ஒரு சிறு புத்தகத்தில் குறிப்புகளை எழுதிவைத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பியபின் எழுதியுள்ள குறிப்புகளை விரிவுபடுத்தி எழுத வேண்டும். எழுதும்போது ''சாரண ஆசிரியர் அல்லது தேர்வு நடத்துபவர் தம்மோடு வரவில்லை என்பதை உணர்ந்து அவர்களுக்கு எளிதில் புரியும் வகையில் குறிப்புகளை விவரமாகவும் தெளிவாகவும் எழுதவேண்டும். எழுதியுள்ள அறிக்கையை அவர்கள் படித்தபின் அவர்களும் கூடவே வந்துள்ளது போன்ற உணர்ச்சி அவர்களுக்கு உண்டாக வேண்டும்'' என்ற நோக்கத்தோடு அறிக்கை எழுதப்பட வேண்டும். அறிக்கையில் கூறுவனவற்றை மிகச் சுருக்கமாகக் கூறவேண்டும். கூறியுள்ளவை சந்தேகத்துக்கு இடமில்லாதபடி தெளிவான முறையில் கூறப்பட்டிருக்க வேண்டும். இடங்களின் பெயர்களும், ஆறு, ஏரி, மலை முதலியவற்றின் பெயர்களும் தெளிவாக அச்சு எழுத்துக்களில் எழுதப்பட வேண்டும்.

சாரண ஆசிரியர் அல்லது தேர்வை நடத்துகிறவர் அறிக்கை மதிப்பீடு செய்கையில் (1) அறிக்கையில் கூறப்பட்டுள்ளவை எந்த மட்டுக்குச் சரியாக உள்ளன (2) எந்த அளவுக்குச் சாரணன் தான் கண்டவற்றைக் கூர்ந்து கவனித்து ஆராய்ந்து பார்த்திருக்கிறான் (3) எந்த அளவுக்குச் சாரணப் பண்பைக் காப்பாற்றி சாரணக் கடமைகளை நிறைவேற்றி இருக்கிறான் என்பவைக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கவேண்டும்.

குறிப்பெழுதுவதற்கு மாணவர்கள் தங்கள் பள்ளிப் பாடங்களுக்கு உபயோகிக்கும் நோட்டுப் புத்தகங்கள் போன்ற புத்தகங்களை உபயோகிக்கலாம். சாரணன் சுற்றுலாச் செய்யும்போது இது அவன் கையில் இருக்கவேண்டும். இன்னும் அவன் கையில் கட்டாயமாக இருக்க வேண்டியவை தலபடம், திசையறியும் கருவி, சாரண தண்டம் ஆகியவைகள் ஆகும்

சுற்றுலா அறிக்கை எழுதுவதற்குச் சுற்றுலாக் குறிப்பு மிக மிக அவசியம் குறிப்புப் புத்தகத்தின் வலது பக்கத்தில் ''நேரம்,'' ''சுற்றுலா விவரம்,'' ''தொலைவு,'' ''தலபடம்,'' ''கண்டவை'' என்று ஐந்து பத்திகள் தேவைப்படும்.

மாதிரிச் சுற்றுலாக் குறிப்பு அடுத்த பக்கங்களில் கொடுக்கப் பட்டுள்ளன. ஆனால், சாரணர்கள் குறிப்பு எழுதும்போது — தேதி, நேரம், சுற்றுலா விவரம், இடது பக்கம் கண்டவை, தலபடம், வலது பக்கம் கண்டவை, தொலைவு, என்ற வரிசையில் எழுத வேண்டும்.

சுற்றுலாச் செல்லும்போது அவ்வப்போது குறிப்புகள் எழுதிக்கொள்ள இருக்கவேண்டும். குறிப்பின் ஆரம்பத்தில், சுற்றுலாப் புறப்பட்ட இடம், முதலியன தரபபட வேண்டும். அதற்கு மேல், குறிப்புப் புத்தகத்தில்

| தேதி நேரம் | சுற்றுலா விவரம் | இடது பக்கம் கண்டவை | வலது பக்கம் கண்டவை |
|---|---|---|---|
| 28-10-<br>மாலை<br>2-30 | நானும் என் நண்பன் சாரணன் பாண்டியனும் பள்ளிக்குச் சென்றோம். சாரண ஆசிரியரைச் சந்தித்து எங்கள் பயணக் கட்டளைகளைப் பெற்றோம். | புறப்படும் பொழுது — நல்ல நீலவானம் — மேற்குத் திசையில் எதுவும் இல்லை. | |
| | கட்டளைகள் அடங்கிய லக்கோடா (Sealed Envelope) ஒன்றை அவர் தந்தார். பள்ளிக்கருகாமையில் உள்ள சாலை வழி தென்திசையாகச் சென்று மூன்றும் நம்பர் கலுங்கு (Mile stone) அண்டை நின்று கொண்டு திறக்கும்படி எழுதியிருந்தது. | | |
| 3-00 | மூன்றுவது கலுங்கை நோக்கி நடந்தோம். | | |
| | அந்த இடத்தை அடைந்தோம். லக்கோடாவைத் திறந்தோம். ஒரு கடிதமும் வேறு இரண்டு லக்கோடாக்களும் இருந்தன. அதன் வெளிப்புறத்திலே எப்பொழுது அவைகளை எங்கு வைத்துக் திறக்கலாம் என்று எழுதியிருந்தது. கடிதத்தில் நாங்கள் காப்புக்கட்டிச் சத்திரத்துக்குப் போகவேண்டும் என்று இருந்தது. | | |
| 3-05 | எங்கள் பயணத்தைத் தொடர்ந்து சாலையில் தெற்கு நோக்கிச் சென்றோம். 2 கி.மீ. சென்றதும் அங்கு நான்கு சாலை சந்திப்பு இருந்தது. இந்த நாற்சந்தி ஒரு முக்கிய பேருந்து நிலையம், சென்னையிலிருந்து திருச்சி முதலிய இடங்களுக்குச் செல்லும் பேருந்துகள் இந்த இடம் வழியாகச் செல்கின்றன. | ஒரு மீட்டர் தொலைவில் ஒரு விசாலமான ஏரி தென் பட்டது | இரண்டு மூன்று கி.மீ. தொலைவில் ஒரு உயரமான கோவில் கோபுரம் காணப் பட்டது. |
| 3-45 | நாங்கள் அங்கு சென்ற பொழுது அங்கு பேருந்துகள் இல்லை. ஆனால் ஜனங்கள் கூட்டம் கூட்டமாகப் பேருந்துகளை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தார்கள். | கடைகளும் ஓட்டல்களும் இருந்தன | நாற்சந்தியில் பலப்பல கடைகள், ஓட்டல்கள் முதலியன இருக்கின்றன. |
| 3-55 | 2-வது லக்கோடாவை இந்தப் பேருந்து நிலையத்தில் திறக்கலாம் என்று கண்டிருந்தது. அதைத் திறந்ததும் நாங்கள் காரைப்பட்டியை நோக்கிச் செல்ல வேண்டும் என்று அறிந்தோம். | | |

வேண்டும். இவை சுருக்கமாகவும் தெளிவாகவும் வரைபடங்களுடனும் அதன் குறிப்பெண், ஆண்டு, மாதம், தேதி, சுற்றுலாவின் நோக்கம் ஐந்து பத்திகள் கோடுகிழித்து அமைக்க வேண்டும்.

| தலபடம் | தொலைவு | |
|---|---|---|
| | தற்போது கி.மீ. | இதுவரை கி.மீ. |
| சூரியன் நல்ல ஒளிவீசிக் கொண்டிருந்தது வெயில் கடுமையாக இல்லை, மெல்லிய காற்று இருந்தது. மழைக்குரிய அடையாளங்கள் | 0 | 0 |
| | 1 கி மீ. | 1 கி.மீ. |
| | 2 கி.மீ. | 3 கி.மீ. |

| தேதி நேரம் | சுற்றுலா விவரம் | இடது பக்கம் கண்டவை | வலது பக்கம் கண்டவை |
|---|---|---|---|
| 4-00 | காரைப்பட்டிக்கு எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். இரண்டு பக்கமும் வாழைத் தோட்டங்களும் வெற்றிலைக் கொடிக்கால்களும் இருந்தன.<br><br>ஒன்றரை கி. மீ சென்றதும் பூவையாறு தோணிப்பாலம் வந்தது. தோணிப் பாலத்தின் இரு பக்கக் கடைசியிலும் பெரிய ஏற்றம். நான்கு பார வண்டிகள் ஒரு கரையில் நின்று கொண்டிருந்தன. வேறு வண்டிகள் மிகக் கஷ்டப்பட்டுப் பாலத்தைக் கடந்து கொண்டிருந்தன. பாலத்தில் 50 செ. மீ. தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. பாலத்தின் எதிர்ப் பக்கக் கடைசியில் வண்டிகள் மேட்டை ஏறமுடியாமல் நின்றன. என் நண்பனும் நானும் நான்கு வண்டிகளை அக்கரைக் குக் கொண்டு போய்ச் சேர்த்தோம். இந்த வேலை சற்றுக் காலதாமதத்துக்குக் காரணமாக இருந்தது. பாலத்திலிருந்து பின்னும் $1\frac{1}{2}$ கி.மீ சென்றதும் நெல் வயல் கள் தென்பட்டன. | வாழைத் தோட்ட மும் வெற்றிலைக் கொடிக் காலும் இறவைக் கிணறு களும் இருந்தன. | வாழைத் தோட்டம் வெற்றிலைக் கொடிக் கால் இறவைக் கிணறு களும் இருந்தன. |
| 5-00 | | | |
| | அந்த வயல்களுக்கு நடுவில் ஒரு சாலை யும் தென்பட்டது. அதுதான் காரைப் பட்டிக்குள்ள பாதை என்பதை விசாரித் தறிந்தோம். உடனே குறுக்குப்பாதை யாகச் சென்று அந்தப் பாதையை அடைந்தோம். அப்புறம் சாலையிலேயே சென்றோம். அப்படி இரண்டு கி. மீ. தொலைவு சென்றதும் ஒரு நல்ல தண் ணீர்க் கிணறு தென்பட்டது. இடத்தை யும் தண்ணீரையும் சோதனை செய் தோம். அன்றிரவு அவ்விடத்தில் தங்க முடிவு செய்தோம். எங்கள் முதுகுப் பையை அவிழ்த்து வைத்து சமையலுக் குரிய முயற்சியை ஆரம்பித்தோம். | | |
| 5-40 | | | |

| தல படம் | தொலைவு | |
|---|---|---|
| | தற்போது கி.மீ. | இதுவரை கி.மீ. |
|   | 3 கி.மீ. | 6 கி.மீ. |
|    | 2 கி.மீ. | 8 கி.மீ. |

| தேதி நேரம் | சுற்றுலா விவரம் | இடது பக்கம் கண்டவை | வலது பக்கம் கண்டவை |
|---|---|---|---|
| | ஆறுமணிக்கு ஆரம்பித்த சமையல் 7-15-க்கெல்லாம் முடிவுற்றது. பின்னர் உணவு அருந்திவிட்டு நண்பனும் நானும் நாட்டுப் பாடல்கள் பாடிப் பொழுது போக்கினேம். பாண்டியன் நல்ல இசை பாடுபவர். அரை மணி நேரம் அப்படிக் கழிந்தது. பின் துயில் உற்ருேம். நடு இரவில் எழுந்திருந்து நாங்கள் இருவரும் நட்சத்திரங்களை ஆராய்ந்தோம். கிருத்திகை உச்சியில் காணப்பட்டது. ரோகிணி, சிங்கம் முதலியனவும் இருந்தன. பின்னர் நன்ருக உறங்கினேம். | | |
| 29-10- 5-30 காலை | துயில் எழுந்தோம். காலைக்கடன்களை முடித்துக் கொண்டு சிற்றுண்டி சமைத்தோம். தங்கி இருந்த இடத்தை நன்கு சுத்தம் செய்தபிறகு நாம் தங்கினதாக யாதொரு அடையாளமுமில்லை என்று தெரிந்து கொண்ட பிறகு பிரயாணத்துக்கு சித்தமானேம்.<br><br>நாங்கள் தங்கியிருந்த இடத்துக்கு 1 கி. மீ.க்குள் ஒரு கிராமம் தென்பட்டது. 'சிறுகுளம்' என்ற பெயரை உடையது. எங்குமில்லாத மாதிரி ஒரே அளவான சிறு சிறு வீடுகள் சதுரமாக அமைக்கப்பட்டிருந்தன. சதுரத்தின் மத்தியில் ஒரு பெரிய கிணறு. அங்குள்ள மக்கள் ஆண்களும் பெண்களும் உழவுத் தொழிலில் ஈடுபட்டவர்கள். தங்கள் தங்கள் வீடுகளுக்குப் பின்னல் தங்கள் மாடுகளைக் கொட்டில் அமைத்துக் கட்டி வைத்திருந்தார்கள். உழவுத் தொழிலுக்குரிய சாதனங்கள் பலவற்றை அங்கு கண்டோம். அவர்கள் பழங்குடி மக்கள் என்றும் ஒரே தனி இனம் என்பதையும் அறிந்து கொண்டோம். | | |
| முற் பகல் 8-30 | ஆசிரியர் கட்டளைப்படி 3-வது லக்கோடாவைத் திறந்தோம்.<br><br>இங்கிருந்து சொக்கநாதபுரம் ரயில் நிலையத்துக்குப் போக வேண்டும் என்று எங்களுக்குள்ள கட்டளை.<br><br>சாலைப்பாதையாக அங்கு செல்லக் கூடும். நாங்கள் அப்படியே சென்ருேம். | | |

**குறிப்பு :** இப்படிச் சுற்றுலா விவரங்களை விளக்குவது

சுற்றுலாக் குறிப்பு இன்னொரு முறையாகவும் எழுதலாம். காகிதத்தின்
கில்வெல் முறைச் சுற்றுலாக் குறிப்பு எனப்படும். முதலாவது குறிப்பை
வரையவேண்டும். அந்தக் குறிப்புக்குரிய நேரமும் தொலேவும் குறிப்பிட்
பும், வரைபடமும், நேரமும், தொலேவும் அதற்குமேல் தரப்படும். அப்படி
வரிசையாய் எழுதப்படும். முதற் காகிதம் முடிந்ததும் அடுத்த காகிதத்
கில்வெல் சாரணப் பயிற்சியில் கையாளப்படும் முறை. இது மிக எளிதாகக்
கொண்டு பின் அறிக்கை எழுதிக் கொடுக்கும்போது முந்தின முறையைக்

| தேதி நேரம் | சுற்றுலா விவரம் | இடது பக்கம் கண்டவை | வலது பக்கம் கண்டவை |
|---|---|---|---|
| | சர்க்கரை ஆலேயிலிருந்து ஒற்றையடிப் பாதையாய் அருகில் உள்ள சாலேயை அடைந்தோம். சாலே வழியாக 2 கி.மீ சென்றதும் விசாலமான தோட்டமும் தண்ணீர் கிணறும் இருந்தன. இரவு இந்த இடத்தில் தங்கத் தீர்மானித்தோம். | ஏராளமான மாமரங்கள் உள்ள தோப்பு | வாழைத் தோட்டங்கள் |
| | அந்தச் சிறு சாலேயில் 1 கி. மீ. சென்றோம். அங்கு ஒரு பெரிய வீடு இருந்தது. அதன் வலப்பக்கத்தில் 200 மீட்டருக்கு அப்பால் ஒரு சர்க்கரை ஆலே இருந்தது. வீட்டில் இருக்கும் அலுவலர் அனுமதி பெற்று சர்க்கரை ஆலேயைச் சுற்றிப் பார்த்தோம். | ஆலேயில் உள்ள வேலேயாட்கள் தங்கும் வீடுகள் | |

## சுற்றுலாக் குறிப்பு

அடியில் இருந்து காகிதத்தின் மேல் நோக்கி எழுதப்படும் இக்குறிப்பு
வரைபடத்துடன் காகிதத்தின், அல்லது குறிப்புப் புத்தகத்தின் அடியில்
டதும் அக்குறிப்பினைக் கோடு ஒன்றால் பிரித்துவிட்டு, இரண்டாவது குறிப்
படிப்படியாய் மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது முதலிய குறிப்புகள்
திலும் அடியிலிருந்து மேனோக்கியே எழுதப்படும். இப்படி எழுதுவது
காணப்படும். சுற்றுலாவின்போது குறிப்புக்களை இந்த முறையில் எழுதிக்
கையாளலாம்.

| தல படம் | தொலைவு | |
|---|---|---|
| | தற் போது கி.மீ. | இது வரை கி.மீ. |
|   | 2 கி.மீ. | 8 கி.மீ. |
|   | 1 கி.மீ. | 6 கி.மீ. |

| தேதி நேரம் | சுற்றுலா விவரம் | இடது பக்கம் கண்டவை | வலது பக்கம் கண்டவை |
| --- | --- | --- | --- |
| | கம்மம்பட்டி சாலையில் $1\frac{1}{2}$ கி.மீ. சென்றதும் மேற்கு நோக்கிச் செல்லும் ஒற்றையடிப் பாதையைக் கண்டோம். அதன் வழி ரயில்பாதையை அடைந்து அப்பால் ரயில் பாதைக்கருகே வடக்கு நோக்கி நடந்தோம். $1\frac{1}{2}$ கி.மீ. நடந்ததும் ரயில் பாதையிலிருந்து மேற்கே செல்லும் ஒரு சிறு சாலை வந்தது. | | சிறு சிறு கடைகளும் காப்பி ஓட்டல் களும் |
| | படைக் கூடத்திலிருந்து பெருஞ்சாலை வழியாக தெற்கு நோக்கிச் சென்றோம்.<br><br>2 கி.மீ. சென்றதும் வலதுகைப் பக்கம் பிரிந்து செல்லும் சாலை கம்மம்பட்டிக்கு செல்கிறது. அதன் வழியாகச் சென்றோம். | | |

புறப்பட்ட நேரம் — மாலை 3-00

சுற்றுலாவுக்குப் புறப்பட்ட இடம் — பள்ளியில் சாரணப் படைக்கூடம்

குறிப்பு : கில்வெல் முறைச் சுற்றுலாக் குறிப்பு

| தல படம் | தொலைவு | |
|---|---|---|
| | தற்போது கி.மீ. | இதுவரை கி.மீ. |
| | 3 கி.மீ. | 5 கி.மீ. |
| | 2 கி.மீ. | 2 கி.மீ. |
| | 0 | 0 |

சூரியன் நல்ல ஒளியுடன்
காணப்படுகிருன்.
மழை மேகங்கள் இல்லை
ஆகாயம் நீலமாக
உள்ளது
மேற்குத் திசையில்
இருந்து இலேசான காற்று

அடியில் ஆரம்பித்து மேல் நோக்கிச் செல்லும்.

## பாசறை அனுபவம் (Camping Experience)

முதல்தரச் சாரணச் சின்னம் அளிக்கப்படுமுன் சாரணன் தொடர்ந்தாற்போல மூன்று இரவு சாரணப் பாசறையில் தங்கியுள்ள அனுபவம் உள்ளவனுக இருத்தல் வேண்டும். மூன்று இரவு என்பது மூன்று இரவும் அதை ஒட்டின மூன்று பகலும் என்று பொருள்படும்.

பல தடவை ஒவ்வொரு நாள் அல்லது இரண்டு நாள் பாசறை சென்று அனுபவம் பெற்றிருந்தால் அது போதாது. அப்படி எத்தனை தடவை போயிருந்தாலும் இன்னும் மூன்று இரவு இரண்டு பகல் சேர்ந்தாற்போல பாசறை அனுபவம் பெற வேண்டும். இப்படியான அனுபவம் சிறுவர்களுக்குப் பாசறைப் பழக்க வழக்கங்களை வற்புறுத்திக் கற்பிப்பதோடு, சிறுவர்களுக்கு தன்னம்பிக்கையையும் ஊட்டி வளர்க்கும் இயல்புடையது என்று நாம் உணர வேண்டும். இந்த அனுபவம் அவர்களுக்குப் பாசறை வாழ்க்கையில் ஒரு பற்று தலையும் உண்டுபண்ணும்.

முதல் தரச் சாரணச் சின்னம் என்பது சாரணச் சிறுவனின் சாரணப் பக்குவத்துக்கு ஒரு அறிகுறி. அவன் நற்குணமும் நல்லொழுக்கமும் பொருந்தியவனுகக் கடவுளுக்கும் தன் தாய் நாட்டுக்கும், மக்கள் இனத்துக்கும் உண்மையான உள்ளன்புடன் அரிய பணிபுரியும் ஆற்றல் பெற்றவன் என்பதைக் குறிக்கும். முதல் தரம் என்பது சாரணர்களுக்குரிய பல படிகளில் ஒன்று. இது மூன்ருவதுபடி. இந்தச் சின்னம் சாரணன் இன்னும் அடைய வேண்டியதாக உள்ள முன்னேற்றத்துக்கு அவசியமான தன்னம்பிக்கையை அவனுக்கு ஊட்டுவதாகவும் அமைந்துள்ளது.

### முக்கியமான சில பயிற்சிகள்

முதல்தரச் சாரணச் சின்னம் பெற விரும்பும் சாரணன் அந்தச் சின்னத்துக்காக வகுக்கப்பட்டுள்ள தகுதிப் பயிற்சிகளை மட்டும் கற்றுக் கொள்வது போதாது. முதல் தரச் சாரணனுக விரும்பினுல் அவன் கற்றுத் தெரிந்துகொள்ள வேண்டிய கலை அம்சங்கள் மிகப் பல. அவற்றுள் சில இங்கு விளக்கப் படுகின்றது.

## I உண்மை வடக்கு (True North)

வடக்குத் திசையைக் கடிகாரத்தின் உதவியால் கண்டுகொள்ளலாம்; ஆனுல் அப்படிக் கண்டு கொண்ட திசையை வடக்கு என்று பொதுவாகக் கூறலாமே ஒழிய அது வரையறுத்துள்ள வடதிசையைக் காட்டுகிறது என்று சொல்ல முடியாது.

உண்மை வடக்கு என்பது துருவ நட்சத்திரம் இருக்கும் திசை. சப்தரிஷி மண்டலத்தில் முதல் இரண்டு நட்சத்திரங்களின் உதவியால் துருவனிருக்கும் திசையைக் கண்டு கொள்ளலாம்.

ஒன்ற வைத்த தலபடமும் வடதிசையை வரையறுத்துக் காண்பிக்கும் இயல்புடையது.

உண்மை வடதிசையைப் பள்ளி மைதானத்தில் தரையில் ஒரு வரையை வரைந்து காட்டுவது எளிது.

மழை மப்பு இல்லாமல் சூரியன் நன்ருக ஒளி வீசும் நாட்களில் எளிதாகச் செய்யக் கூடிய ஒரு அமைப்பின் உதவியால் இந்த வரையை வரைந்து கொள்ளலாம்.

சாரண தண்டத்தை அல்லது அதைப் போன்ற ஒரு கொம்பை மைதானத்தில் நல்ல வெயில் உள்ள இடத்தில் 25° அல்லது 30° சாய்வில் வடதிசையை நோக்கி நன்ருக பதித்து வைக்க வேண்டும். 20 அல்லது 25 சென்டி மீட்டர் ஆழமுள்ள குழியில் கொம்பை இறுகப் புதைக்கலாம். அப்புறம் அந்தக் கொம்பின் நுனியில் இருந்து சற்றுப் பளுவுள்ள சிறு கல்லேக் கட்டிவைக்க வேண்டும். இந்தக் கல் பூமியிலிருந்து 2 அல்லது 3 சென்டி மீட்டர் உயரத்தில் இருக்க வேண்டும்.

தொங்க விட்டுள்ள கல்லின் நிழலையும் நூல் கயிற்றின் நிழலையும் உச்சி நேரத்துக்கு முன் ஒரு வேளையும் அதன்பின் ஒரு வேளையும் கவனித்தல் வேண்டும். முற்பகல் எப்பொழுது வசதி இருக்கிறதோ அப்பொழுது கவனித்து அப்பொழுது உள்ள நிழலை அடையாளம் செய்து கொண்டு அதனை ஆரையாகக் கொண்டே ஒரு வட்டம் வரைந்துகொள்ள வேண்டும். அடையாளம் செய்ய ஒரு ஆணியை அடிக்கலாம். வட்டம் வரைவது கல்லுக்கு நேர் உள்ள தரையை மையமாக வைத்து வரைய வேண்டும். அந்த இடம் முதல் கயிற்றின் நிழல் தரையில்படும் இடம் வரை உள்ள நீளம் வட்டத்தின் ஆரை.



176. ''உண்மை வடக்கு''த் திசையை நிர்ணயிப்பதற்குரிய அமைப்பு (How to find True North)

நிழல் வட்டத்தை தொடும் இடத்தில் ஒரு நீள ஆணியை அடிக்க வேண்டும். இப்பொழுது உள்ள நிழல் சிறிது சிறிதாக குறுகும்.

சூரியன் நேர் உச்சியில் உள்ளபொழுது முற்றிலும் குறுகிப் பின் சிறிது சிறிதாக வளரும். அப்படி வளர்ந்து வட்டத்தைத் தொடும். இதை மிகக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். தொட்டவுடன் அந்த இடத்திலும் ஒரு ஆணி அடிக்க வேண்டும்.

இரண்டு ஆணிகளையும் இணைத்து ஒரு கோடு வரைந்து அதை இரண்டு சமபாகங்களாகப் பிரித்து அடையாளம் செய்ய வேண்டும்.

வட்டத்தின் மத்தியையும் இப்பொழுது செய்யப்பட்டுள்ள அடையாளத்தையும் ஒரு நேர் கோட்டால் இணைத்து அதை வடதிசையாக நீட்டினால் அது துருவ நட்சத்திரத்தை அடையும்.

## II. மாவச்சு செய்தல் (Making Plaster Casts)

ஊன்றிப் பார்த்தல் சாரணர்களுக்கு மிக அவசியமான ஒரு பண்பு. வெளியிடங்களுக்குச் செல்வதும், அங்கு உள்ளனவற்றைக் கூர்ந்து கவனிப்பதும் அவர்களுக்கு ஒரு நல்ல பழக்கம். தாம் செல்லும் இடங்களில் சிற்சில வேளைகளில் காட்டு விலங்குகளின் தடங்களைப் பார்க்கும் வாய்ப்புக்கூட அவர்களுக்குக் கிடைக்கும். அப்படியான கால் தடங்களைப் படமாகத் தங்கள் நோட்டுப் புத்தகங்களில் வரைந்து வைத்துக்கொள்வது ஒரு நல்ல பழக்கம். கையில் படம் எடுக்கும் கருவி இருக்குமாயின் பரிதிப்படமாகவே (Photograph) அமைத்துக் கொள்ளலாம். அந்த விலங்குகளைப்பற்றிப் படித்தற்கு இவை மிக உதவி புரியும். இவைகளோடுகூட இன்னும் ஒரு வழி உண்டு. அது தடங்களுக்கு மாவச்சு (Plaster Cast) செய்து கொள்வதாகும். மாவச்சுக்களை சாரணக் கூடத்தில் அலங்காரமாகச் சுவரில் தொங்கவிடலாம்.

மாவச்சுச் செய்ய பிளாஸ்டர்–ஆஃப்-பாரிஸ் (Plaster of Paris) தேவை. ஒரு கிலோ மாவில் ஏழு, எட்டு மாவச்சுகள் செய்யலாம். மாவைத் தண்ணீரில் தோசை மாவு மாதிரி கரைத்துக்கொள்ள வேண்டும். அதற்காக ஒரு தகரம் அல்லது வேறு பாத்திரம் வேண்டும். மாவைத் தடத்தின் மேல் விடும்போது மாவை வட்டமாகவும் திண்ணமாகவும் அடக்கிக்கொள்வதற்கு கெட்டிக் காகிதத்தாலாய ஒரு காரை (Cardboard Collar) வேண்டும். இவை தவிர ஒரு சிறு துண்டு மெல்லிய கம்பியும் தேவை. மாவச்சுச் செய்யும்பொழுது இந்தக் கம்பியை அதில் பதித்து வைத்தால் அதன் உதவியால் மாவச்சைத் தொங்க விடுதல் கூடும்.

**செயல் முறை:** (1) அந்த இடத்தில் காணப்படும் தடங்களை நன்கு பரிசோதித்துப் பார்த்து நன்ருகப் பதிந்துள்ளதும் எவ்வித குறைபாடுகளும் இல்லாததுமான ஒரு தடத்தைத் தேர்ந்து







1 தடத்தைச் சுற்றிக் கெட்டிக் காகிதக்காரை அமைத்தல்

2 தடத்திலும் காரையிலும் பிளாஸ்டர் மா ஊற்றல்

3 மாவச்சு முற்றுப் பெற்றது

177. மாவச்சு செய்தல் (How to Make Palster Casts)

கொண்டு அதில் விழுந்திருக்கும் புல், குச்சு, மண் முதலியவற்றை தடத்துக்குச் சேதம் ஏற்படாத முறையில் அப்புறப்படுத்த வேண்டும்.

(2) அந்தத் தடத்தைச் சுற்றிக் கெட்டிக்காகிதக் காரை (Cardboard Collar) அமைக்க வேண்டும். இது 2 அல்லது $2\frac{1}{2}$ செ. மீ. உயரம் இருக்கலாம்.

(3) பிளாஸ்டர் மாவை அது கரைத்தற்குரிய பாத்திரத்தில் போட்டுக் கட்டி பிடிக்காமல் கரைக்கவேண்டும். மிகக்கட்டியாகவும் இருத்தல் கூடாது; மிகத் தண்ணீராகவும் இருக்கக் கூடாது. தோசை மா நெகிழ்ச்சியில் இருத்தல் வேண்டும்.

(4) கரைத்த மாவை தடத்திலும் கெட்டிக் காதிதக் கரையிலும் நிறையும்படி சிறிது சிறிதாக ஊற்ற வேண்டும். ஊற்றும்போது காற்றுக் குமிழிகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது.

(5) கையில் உள்ள கம்பியில் ஏறக்குறைய 10 செ.மீ. அளவு எடுத்து மடித்துக் கம்பியின் நுனி இரண்டையும் மாவில் பதித்து வைக்க வேண்டும்.

(6) அதன் பின் தடத்தைப்பற்றிய விவரங்களை ஒரு கூரிய ஆணியால் மாவச்சின் மேல் வரைய வேண்டும்.

கரைத்த மாவை ஊற்றிப் பத்து நிமிடங்களுக்கெல்லாம் அச்சு கெட்டியாய்ப் போகும். ஆனல் உலர்ந்திராது. ஆகையால் அச்சை அடி மண்ணோடு சேர்த்து எடுத்து ஒரு பலகையின்மேல் அல்லது அட்டையின் மேல் வைத்து எடுத்துச் செல்லலாம். இரண்டு மூன்று

மணி நேரத்துக்குப் பின் மிகக் கவனமாகத் தண்ணீரில் அலசி மண்ணை அப்புறப்படுத்தலாம். இரண்டு நாளுக்குப்பின் நன்ருய் இறுகிக் கெட்டியாக இருக்கும். நாளடைவில் நன்ருய் உலர்ந்து விடும்.

மாவச்சை ஈரமண்ணில் அழுத்தினுல் விலங்கின் தடம் பழைய படி தோன்றும். இப்படித் தடங்கள் செய்வது பலவகையான பயிற்சி களுக்கும் விளையாட்டுகளுக்கும் பயன்படும். நாய், மாடு, மான் முதலிய பிராணிகளின் காலடித் தடத்தை, பறவைகளின் தடத்தை மாவச்சாகப் பண்ணலாம். அதுபோலவே நாணயங்களை, உலோகத் தில் செய்யப்பட்டுள்ள சின்னங்களை மாவச்சாகப் பண்ணலாம். ஆனுல், முதலில் களிமண்ணில் பதித்து அதன் பின் அச்சு செய்ய வேண்டும்.

## III. பாசறை விளம்பரப் பலகை

## (Camp Notice Board)

பாசறைக்கு எடுத்துச் செல்லப்படும் விளம்பரப் பலகை கெட்டித் துணியால் அல்லது கித்தாஞல் செய்யப்படுவது நல்லது. $1\frac{1}{2}$ மீட்டர் நீளமும் 1 மீட்டர் அகலமும் இருக் கலாம். அந்தத் துணியின் நாலு பக்கத்திலும் பித்தளைக் கண்ணிகள் (Eyelets) பொருத்தப்பட வேண்டும். பாசறையில் அறிக்கை களை ஊசி நூலால் தைத்து வைப்பது நல்லது. அறிக்கைத் தாளை நாலு பக்கமும் வைத்துவிட வேண்டும். அறிக்கைகள் தனித் தனியாக ஒன்றையொன்று தொடாமல் அழகாக அமைக்கப் படவேண்டும்.



178. பாசறை விளம்பரப் பலகை
(Camp Notice Board)

பாசறையில் விளம்பரப் பலகை யை படத்தில் காண்பித்துள்ள படி சட்டத்தில் நான்கு பக்கமும் இழுத்துக் கட்டலாம்.

## IV. முகட்டுக் கூடாரம் அமைத்தல்
(Pitching Ridge Tent)

சாரணர்களுக்கு மிகவும் பொருத்தமாக உள்ள கூடாரம் முகட்டுக் கூடாரம். அதனை அமைப்பதற்குரிய மூன்று படிகளும் படத்தில் காண்பிக்கப்பட்டுள்ளன.




கூடாரத்தின் இருகால்களையும் முகட்டுக் கொம்பையும் அமைத்தல் (ஆரம்பம்)

கால்களையும் முகட்டு கொம்பையும் அமைத்த பிறகு கூடாரக் கயிறுகளை இழுத்துக் கட்டுதல் (அடுத்தபடி)




அப்புறம் கூடாரக் கயிறுகள் ஒவ்வொன்றையும் இழுத்துக் கட்டல். (முடிவு)

179. முகட்டுக் கூடாரம் அமைத்தல்
(Pitching a Ridge Tent)

## V. பாசறைக் காளவாய்
(Camp Incinerator)

பாசறையில் ஒவ்வொரு நாளும் அடிநாள் சேர்ந்துள்ள குப்பையைக் காளவாயில் கொட்டி எரித்துவிடவேண்டும். அதற்குரிய காளவாய் படத்தில் காண்பித்துள்ளது. இரண்டாவது செங்கல் வைத்து அதன் மேல் கம்பியை அழிமாதிரிப் பரப்பி அடுத்த செங்கல்லை அதன்மேல் வைக்கவேண்டும்.

குப்பைகளை கம்பி அழிமேல் கொட்டி அப்புறம் அடியிலிருந்து தீ எரிய விடவேண்டும்.




குப்பை எரிக்கும் காளவாய் I
(Incinerator)




காளவாய் II
(Incinerator)

180. குப்பை கூளம் எரித்தல் (Burning Rubbish)

## VI. பாசறை உணவு மேஜை
## (Camp Dining Table)

பாசறையில் அணிகள் உணவு அருந்த மூங்கில்கழிகளால் உணவு மேஜை செய்து கொள்ளல்கூடும். அந்த மேஜையோடு சேர்ந்தே அவர்களுக்கு உட்கார்வதற்கு இருக்கைப் பலகையும் அமையும். இரண்டு மாதிரியான மேஜைகளைப் படங்கள் விளக்கு கின்றன.





181. பாசறை உணவு மேஜைகள் — தனிமாதிரி
(Camp Dining Tables, Special Type)

## VII. கைக்கோடரிக்குத் தோலுறை
(Hand Aze + Pouch)

கைக்கோடரி இருந்தால் அதைத் தோல்பையில் போட்டு இடை வாரில் மாட்டிக் கொள்வது நல்லது.



பாசறை அலுவல்களுக்கு மிக அவசியமாக உள்ள கைக் கோடரி — அதன் பையில் வைக்கப்பட்டுள்ளது.

182. கைக்கோடரி
(Scouts Hand Axe)

## VIII. மேடை அடுப்பு
(Altor Fire)

பாசறையில் சமையலுக்காக அமைக்கப்பட்டுள்ள அடுப்பு மேஜை அடுப்பாக இருப்பது நல்லது. மேஜை அடுப்பில் சமையல் செய்பவர் முதுகுவலிக்கு இடம் தரவேண்டியதில்லை. தரை ஈர மாக இருந்தாலும் நீர்க் கசிவுள்ள இடமானாலும் இந்த அடுப்பு மிக்க உதவியாகும்.



183. மேடை அடுப்பு
(Altor Fire for Cooking)

மேஜையடுப்பு உயரமான இடத்தில் கட்டப்படும் அடுப்பு. சிறுவர்களுக்கு ஏறக்குறைய 60 சென்டி மீட்டர் உயரம் இருக்கலாம். பெரியவர்களுக்கு மேடையின் உயரம் 70 சென்டி மீட்டர் இருக்கலாம். அந்த உயர மான இடத்துக்கு மேல் அடுப்பு இருக்கவேண்டும்.

## IX. "ஸில்வா"த் திசையறிகருவி

(Silva Compass)



184. "ஸில்வா"த் திசையறிகருவி (Silva Compass)

கண்ணுடி போன்ற பிளாஸ்டிக்கில் செய்யப்பட்டுள்ளது. காந்த ஊசி இருக்கும் பாகத்தை நாம் திருப்பலாம். நாம்போகும் திசையை—அதன் டிகிரி அளவை-எளிதில் மிக நுட்பமாகக் கணக்கிட உதவுகிறது. வேறு பல வசதிகளும் இது அளிக்க வல்லது.

திசையறி கருவி பலவகையாயுள்ளன. ஸ்வீடன் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டு இப்பொழுது உலகப் பிரசித்தி பெற்றுள்ள "ஸில்வா"த் திசையறி கருவி சாரணர்களுக்கு மிகவும் பயன்படுவது.

டிகிரி அளவையைக் கணக்கிட வேண்டுமானுல் திசையறி கருவியைக் கையில் எடுத்துக் கொண்டு, போகவிரும்பும் திசையைப் பார்க்க நிற்கவேண்டும். அதன் பிறகு திசையறி கருவியின் மத்தியில் உள்ள வட்டத்தைக் கையால் வலம் இடமாகத் திருப்பி காந்த முள் அதற்குரிய அடையாளத்துக்குமேல் வரும்படிச்செய்ய வேண்டும். அப்புறம் திசையறியும் கருவி அமைக்கப்பட்டுள்ள தட்டில் "போகும் திசை" என்று அம்புக் குறியால் குறிப்பிட்டிருக்கும் கோட்டில் எத்தனை டிகிரி குறிப்பிடப்பட்டுள்ளதோ அதுவே நாம் நோக்கி நிற்கும் திசையைக் குறிக்கும் டிகிரி அளவை.

டிகிரி அளவை பார்க்கும் ஒவ்வொரு தடவையும் திசையறி கருவியைச் சுழற்றி காந்த ஊசியும் அம்புக் குறியும் ஒன்றுக்கொன்று சரியாக இருக்கிறதா என்று பார்த்துக் கொள்வது அவசியம்.

## X. 90° கோணம் அமைத்தல்

(Making Right Angle)

சாரண தண்டத்தில் சாரணன் கண்ணுல் பார்க்கக் கூடிய உயரத்தில் செய்யப்பட்டுள்ள துவாரங்கள் ஒன்றுக்கொன்று 90° யில் விலகியுள்ளதாக இருக்கும். இவைகளின் உதவியால் 90° கோணம் அமைப்பது எளிது.

அளவு நாடா (Measuring Tape) வைப் பயன்படுத்தியும் 90° கோணம் அமைக்கலாம். அளவு நாடாவை ஒருவர் பிடித்துக் கொள்ளவேண்டும். நாடாவை இழுத்து 3 மீட்டர் கோட்டில் இன்னொருவர் விரலால் பிடித்துக் கொள்ள வேண்டும். அதுபோலவே 7வது மீட்டர் கோட்டில் வேருெருவர் விரல் வைத்துக் கொள்ள வேண்டும், இன்னும் ஒருவரை 12வது மீட்டர் கோட்டில் விரலை வைத்துக்கொண்டு அமைக்கப் படும் முக்கோணம் 90° கோணம் உள்ள முக் கோணமாக அமையும். அதனுடைய பக்கங்கள் 3மீ, 4மீ, 5மீ, நீளம் உடையனவாகக் காணப் படும். 5 மீட்டர் பக்கத்துக்கு எதிராக உள்ள கோணம் 90° கோணமாகும்.



185. பாசறையில் நேர் கோணம் அமைத்தல் (How to form a right angle?)

### தரையில் 90° கோணம் வரைதற்கு உரிய கணித முறை

எந்த இடத்தில் அப்படியான கோணம் வேண்டுமோ அந்த இடத்தில் 3: 4: 5 என்ற விகிதமுடைய பக்கங்களைக் கொண்ட முக்கோணம் வரைய வேண்டும். 5 பங்குள்ள பக்கத்துக்கு எதிராக உள்ள கோணம் நேர் கோணம் என்பதை எளிதில் உணரலாம். ($3^2 + 4^2 = 5^2$).

கூடாரம் அடிக்கும் போது; சமையல் களத்துக்கு வேலி அமைக்கும்போது; விளையாட்டுக்களம் அமைக்கும்போது; இந்த முறை பயன்படும்.

## கயிற்று முறை

சமமாக மடிக்கப்பட்ட ஒரு கயிற்றைப் பயன்படுத்தியும் 90° கோணம் அமைத்தல் கூடும். எந்த இடத்தில் இந்தக் கோணம் வேண்டுமோ அந்த இடத்தில் ஒரு நேர்கோடு வரையவேண்டும். இந்தக் கோட்டின் ஒரு நுனியில் அந்த 90° கோணம் வரவேண்டு மாகையால் நம் சம மடிப்புக் கயிற்றின் ஒரு நுனி கோணம் வர வேண்டிய நுனியில் வைக்கப்பட வேண்டும். அடுத்தபடியாக அந்தக் கயிற்றின் நேர் மத்தியில் கையை வைத்து அதை இழுத்துப் பிடித்துக்கொண்டு கயிற்றின் மறுநுனி அந்தக் கோட்டில் எந்த இடம் வரை வருமோ அந்த இடத்தில் அதை வைத்து அழுத்திப் பிடித்துக் கொள்ளவேண்டும். பிறகு கயிற்றின் முற்பாதியைத் தளர்த்தி, அதை முற்பாதியோடு நேர் கோடாக அமைக்கவேண்டும். இப் பொழுது கயிற்றின் நுனியையும் கோட்டின் நுனியையும் ஒரு கோட்டினுல் இணைக்க இரண்டு கோடுகளும் சேரும் இடத்தில் 90° கோணம் இருக்கும்.




186. 90° கோணம் வரையப் பயன்படும் கயிற்று முறை
(Divided Rope Method)

'அ', 'ஆ' என்பன கயிற்றின் நுனிகள். 'இ' என்பது கயிற்றின் நடு. 'ஆ' 'அ' என்ற கோட்டில் 'அ' என்ற இடத்தில் நேர் கோணம் அமைக்கவேண்டும். 'ஆ', 'இ' என்ற பாகத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டு, 'அ', 'இ' என்ற பாகத்தைத் தளர்த்தி 'ஆ' 'இ' என்ற பாகத்தோடு நேர்கோடாக அமைக்கவேண்டும். 'ஈ' என்ற இடத்தை இப்படித் தெரிந்து கொள்கிறோம். 'ஈ' என்ற இடத்தில் இருந்து 'அ' என்ற புள்ளியை இணைக்கும் கோடு 'அ', 'ஆ' என்ற கோட்டோடு 90° கோணத்தை அமைக்கும்.

## XI. மின்விளக்குப் பாடித்தீ
(Improvised Campfire)

ஒரு சதுரமான பலகையில் விறகுக் கட்டைகளை கூம்புக் கோபுரமாக அடுக்கி வைத்துக் கொண்டு சிகப்புக் காகிதத்தால் மூடி வைக்கப்பட்டுள்ள மின் விளக்கை அந்த விறகுக் கட்டைகள் மத்தியில் வைத்துப் பார்த்தால் அது தீ எரிவது போலத் தோன்றும். விறகுகளுக்கு மத்தியில் சிகப்புக் காகிதங்களைத் தொங்கவிட்டு மின் விசிறிக் காற்று அதன் மேல் படும்படி செய்தால் தீ கொழுந்து விட்டு எரிவது போலவே தோன்றும்.



விறகு இல்லாமல் பாடித்தீ
(Camp fire without fire wood)
187. பாடித்தீப் போலி அமைப்பு
(Improvised Camp fire)

இப்படி அமைக்கப்பட்டுள்ள பாடித்தீ அமைப்பு மழை நாட்களில் பயன்படும். அறைக்குள் பாடித்தீ நிகழ்ச்சிகளை நடத்தல் கூடும்.

## XII. பயிற்சிக் குறிப்பும் படம் வரைதலும்
### (Training Notes + Sketches)

சாரணப் பயிற்சிபெறும் சாரணர்கள் தாங்கள் கற்றுக் கொள்வனவற்றுக்குரிய குறிப்புகளை ஒரு தனிப் புத்தகத்தில் எழுதி வைத்துக் கொள்வார்கள். குறிப்புகள் பெரும்பாலும் வாக்கியங் களால் எழுதப்படும். ஆயினும் முக்கிய குறிப்புகளை படங்களால் விளக்க வேண்டியது அவசியம்.

கற்றனவற்றைப் படங்களால் விளக்குவது ஒரு சிறந்த கலை. கற்றனவற்றை விளக்குவதுபோல நாம் கண்ணால் காண்பன வற்றையும் படம் வரைந்து விளக்குவது சிறப்புடைய பயிற்சி. வரைந்து பழகப்பழக வரைவது எளிதாகிவிடும்.

நம் இயக்கத் தந்தை பேடன்-பவல் பெரியார் தன் சிறு வயதி லிருந்தே படம் வரையும் ஆற்றல் பெற்றிருந்தார். இரு கையாலும் படம் வரைவார். தான் எழுதிய எல்லா நூல்களுக்கும் அவரே படம் வரைந்துள்ளார்.

சாரணர்கள் பாசறையில் உள்ள பொழுது இந்தப் படம் வரை கலையை நன்ருய்ப் பழகிக்கொள்ளலாம். தன்னைச்சுற்றி நாற்புறமும் நடக்கின்ற நிகழ்ச்சிகளை ஒளிப்படம் பிடித்துக் காட்டுவது போல வரைபடம் வரைந்தும் விளக்கலாம். முழு ஊக்கத்துடன் முயற்சி செய்தால் எளிதில் கற்றுக் கொள்ளலாம்.

படங்கள் வரையும்போது படத்தில் வரும் மக்களையும் அவர்கள் உடையையும் கூர்ந்து பார்க்க வேண்டிய அவசியம் ஏற்படும். அது போலவே அவர்கள் தங்களுடன் வைத்திருக்கும் பிற பொருள் களையும் உற்று நோக்கி அவைகளைப் பற்றிய விவரங்களையும் கூர்ந்து கவனிக்க வேண்டியதாகவரும். இப்படி உற்று நோக்கிப் பொருள் களைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ளும் பழக்கம் சாரணர் களுக்கு மிக அவசியமானது.

படம் வரையும் போது ஓவியங்கள் வரைவது போல முழு உருவங்களாக வரையலாம். அப்படி வரைவது நல்ல பயிற்சி ஆகும்.

படங்கள் வரைந்து பழகப்பழக படம் வரைவது எளிதாகி விடும்.

படங்களை வேருெரு முறையாகவும் வரையலாம். அதைத் **தீக்குச்சுருவ முறை** என்பர். மாதிரிக்கு இந்த முறையில் வரைந் துள்ள இரண்டொரு படங்கள் இங்கு தரப்படுகின்றன.



188. தீக்குச்சு முறைப் படம் வரைதல்
(Match Stick Figures)

இந்த இரண்டு முறைகளையும் பயன்படுத்தி குறிப்புப் படங்கள் வரைந்து கொள்ளலாம். படங்களால் நிரப்பப்பட்டுள்ள பயிற்சிக் குறிப்புப் புத்தகம் பார்ப்போர்க்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கும். குறிப்புகளும் எளிதில் விளங்கும்.

## XIII. நிலப்படம் வரைதல்
(Panoramic Sketches)

நிலப்படம் என்பது பரந்து கிடக்கும் நிலத்தின் தோற்றத்தை விளக்கும் தலபடம் என்று பொருள்படும். சாரணர்கள் சுற்றுலாச் செய்யும் பொழுது ஆங்காங்கு இயற்கை எழில் நிறைந்துள்ள நிலப் பரப்புகளைக் கண்டு களிக்கும் வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கும். மைல் கணக்காகப் பரந்து கிடக்கும் அந்த நிலத்தில் ஒரு பக்கம் அடர்ந்த காடு, வேறொரு பக்கம் ஒரு அழகான ஏரி, மற்றொரு பக்கம் ஒரு சிறு குன்று, இன்னொரு பக்கம் வளைந்து நெளிந்து ஓடும் ஒரு ஆறு, தொலைவில், ஒரு பெரிய மலை என்ற அந்த அழகு நிறைந்த காட்சி மனதை அப்படியே கவரலாம். அப்படிப்பட்ட காட்சிகளை சாரணர்கள் குறிப்புப் புத்தகங்களில் படமாக வரைந்துக் கொள்ளும் ஆற்றல் உடையவர்களாக இருப்பது நல்லது. அத்தகைய ஆற்றல் பழக்கத்தில்தான் வரும்.

### நிலப் படச் சட்டம்

நிலப்படம் வரைய தேவைப்படும் நிலப்படச் சட்டம் என்ற சிறு அமைப்பைச் சாரணர்கள் தாமாகவே செய்து கொள்ளலாம்.

24 செ. மீ. நீளமும் 20 செ. மீ. அகலமும் உள்ள உறுதியான காகித அட்டை ஒன்றை எடுத்து கத்தியால் அதன் நடுவில்

15 செ. மீ. × 12½ செ. மீ. அளவுள்ள ஒரு சன்னல் செய்யவேண்டும். அந்தச் சன்னலுக்கு நீளவாட்டில் 5 சன்னல் கம்பிகளும் அகலவாட்டில் 4 கம்பிகளும் அமைக்கவேண்டும். இந்தக் கம்பிகள் சன்னலை 2½ செ. மீ. × 2½ செ. மீ. அளவுள்ள சிறு சிறு சதுரங்களாகப் பிரிக்கும். இப்பொழுது நிலப்படச் சட்டம் தயாராய் விட்டது. பிறகு அதைக் கழுத்தில் தொங்கப் போட்டுக் கொள்ளவேண்டும்.



189. நிலப்படச் சட்டம்
(Panoram Sketching Frame)

நிலப்படச் சட்டத்தில் உள்ள மாதிரி அதே அளவுள்ள சன்னலையும் சன்னல் கம்பிகளையும் குறிப்புப் புத்தகத்தில் மெல்லிய கோடுகளால் வரைந்து கொள்ளவேண்டும்.

நிலப்படச் சட்டத்தை படத்தில் காண்பித்துள்ள மாதிரி கையில் எடுத்துப் பிடித்துக் கொண்டு தனக்கு முன் பரந்து கிடக்கும் நிலத்தை நிதானமாய்ப் பார்வையிட வேண்டும். நிலத்திலுள்ள முக்கிய அம்சங்கள் சட்டத்தில் உள்ள ''சன்னலில்'' எங்கெங்கு வருகின்றன என்பதைக் கவனித்து நிலப்படம் வரையலாம்.

பார்க்கும் பொழுது கண்ணுக்கு ஓரே தொலைவில் சட்டம் இடம் வலம் பெயர்ந்து விடாமல் இருப்பது முக்கியம்.

படம் வரைந்து முடிந்த பிறகு படத்தில் காண்பித்துள்ள அம்சங்களின் பெயரைக் குறிக்கலாம். அவற்றைப் படத்திலேயே எழுதாமல், அவற்றிலிருந்து கோடுகள் வரைந்து படத்தின் உச்சியில் வரிசையாக எழுதலாம்.



**முதல்படி**

(1) காண்கின்ற அம்சங்களைச் சட்டத்தில் உள்ள சதுரங்களைக் கொண்டு அவற்றிற்குரிய இடத்தை நிர்ணயித்தல்.




அந்த அம்சங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு எண் கொடுத்தல்

(2) சதுரங்களின் உதவியோடு படத்தை வரைதல்




(3) அம்சங்களுக்கு உரிய எண் கொடுத்து அவைகளிலிருந்து கோடுகள் இழுத்து அவற்றின் பெயரை எழுதல்

190. நிலப்படச் சட்டம் — உபயோகிக்கும் முறை
(How to use the Sketching Frame)

## XIV. காவற் பந்தல்களும் தங்குமிடங்களும்
(Bivouacs and Shelters)

சாரணர்கள் சாரண அலுவலாக பரந்த வெளிகளில் அல்லது காடு சார்ந்த இடங்களில் இரவைக் கழிக்க வேண்டியதாக வரலாம். அப்பொழுது அங்கு கிடைக்கக் கூடிய மரக்கிளைகள் தழைகள் முதலியவற்றைப் பயன்படுத்தித் தங்களுக்கு வேண்டிய காவற் பந்தல்களை அல்லது தங்கும் இடங்களை அமைத்துக் கொள்வார்கள்.





1. மரக்கவட்டையில் அமைக்கப்பட்டுள்ளது

2. கால்கள் நட்டு சாய்வாகக் கட்டப்பட்டுள்ளது



(3) தட்டுப் பந்தல் போன்றது

191. காவற் பந்தல்கள்
(Bivouacs)










192. சூலு குடிசை
(Zulu Hut)

வளைவாக அமைக்கப் பெற்றது. மெல்லிய மூங்கில் பிளாச்சிகளை (கீற்றுகளை) க்கொண்டு இவைகளைச் செய்தல் கூடும். 1, 2, 3 என்பன ஆரம்பம், அடுத்தபடி, முடிவு. வைக்கோலால் அல்லது பசும்புல்லால் கூரை வேயலாம்.

## XV. நோயாளித் தொட்டில்கள்
(Stretchers for Transport of Patients)

நோயாளிகளை ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்துக்கு எடுத்துச் செல்ல "ஸ்டிரெச்சர்" என்ற நோயாளிக் கட்டில் பயன் படுகிறது. அது இல்லாத இடங்களில் அங்கு கிடைக்கக்கூடிய பொருள்களைக் கொண்டே இத்தகைய தொட்டிலை நாம் அமைத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டு சாரண தண்டங்களும் இரண்டு மேல் அங்கிகளும் இருந்தால் நோயாளிக் கட்டில் ஒன்றை எளிதில் அமைத்துக் கொள்ள லாம்.

அங்கிகளின் கை உட்புறம் வரும்படி அதை உள்ளுக்கு இழுத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டு சாரண தண்டங்களும் இரண்டு கோணிப் பைகளும் இருந்தால், இரண்டு இடத்தில் தையலை ஒரு சிறிது பிரித்து விட்டு, தண்டங்களை கோணிப் பைக்குள் நுழைக்கலாம்.

இரண்டு தண்டங்களும் ஒரு கம்பளிப் போர்வையும் இருந்தால் அவைகளைக் கொண்டு நோயாளிக் கட்டில் அமைக்கலாம்.

சாரணர்கள் தங்கள் கையில் இருக்கும் கயிறுகளை ஒரு நீளக் கயிருக இணைத்து அப்புறம் அந்த நீளக்கயிற்ருல் நோயாளிக் கட்டில் கட்டலாம்.



193. நோயாளிக் கட்டில் — கயிற்றில் செய்தல்
(Rope Stretcher)

படத்தில் காண்பித்திருப்பதுபோல கயிற்றுக் கட்டிலைக் கட்ட வேண்டும். வளையங்கள் 90 செ.மீ. நீளம். அப்படி 9 வளையங்கள் அவைகளுக்குள்ள இடைவெளி 22 செ.மீ. மேல் வரிசையில் கட்டு கள் சாதாரண முடிச்சுகள். கீழ்வரிசையில் உள்ளவை தொடுப்புகள். தனிப்படங்கள் இவற்றை விளக்கும். நோயாளியை எடுத்துச்செல்லும் முறையைப் படம் விளக்குகிறது. கடைசியில் வரும் சாரணன் கயிற்றின் நடுவளையத்தைத் தன் கழுத்தைச்சுற்றிப்போட்டுக் கொண் டிருக்கிறுன். முன்னுல் போகிற சாரணன் கயிற்றின் இருநுனிகளையும் தன் கைகளில் கட்டி வைத்துக் கொண்டு கட்டிலை இழுத்துச்செல்லப் பின்னுல் உள்ள சாரணன் கட்டில் தொய்ந்து விடாதபடி பின்னுக்கு இழுத்தபடியே முன் செல்கிறுன்.

## XVI தடம் பிடித்தல் (Following Trail)

சைக்கிள் தடத்தைக் கூர்ந்து பார்த்தால் அது எந்தத் திசையை நோக்கிச் சென்றுள்ளது என்று கூறலாம். முதற்கண் தரப்பட்டுள்ள படத்தில் காண்பிக்கப்பட்டிருக்கும் சைக்கிள் தடத்தில் ஒரு சிறு கல் தரையில் அமுக்கப்பட்டு பின்னுக்கு தள்ளப்பட்டுள்ளதைக் காண் கிறோம். இது சைக்கிள் அம்புக்குறி காட்டும் திசையாகப் போயுள்ளது என்பதைக் குறிக்கின்றது. இரண்டாவதாகத் தரப் பட்டுள்ள படத்தில் காட்டப்பட்டிருக்கும் தடம் சைக்கிளின் முன் சக்கரம் ஒரு இடத்தில் திடீர் என்று விலகி சற்று தூரத்துக்கு அப்பால் மறுபடியும் தடத்தோடு சேர்ந்துள்ளதைக் காட்டுகிறது. அப்படி விலகிச் சேர்வதில் தடம் பிளவுபட்டுக் காண்பதோடு அது ஒரு நீண்ட வளையமாகவும் உள்ளது. சக்கரம் விலகி மறுபடியும் சேரும் இடத்தில்



194. சைக்கிள் தடம் அது சென்றுள்ள திசையைக் காட்டுகிறது

இந்த வளையம் ஒடுக்கமாக இருக்கும். அம்புக்குறி காண்பிக்கும் திசையில் போயுள்ளது என்பதை நாம் உணரலாம்.

சைக்கிள் போகும் திசைக்கு எதிராக சக்கரம் மண்ணை வாரி இறைத்திருக்கும். தடத்தில் காணப்படும் விரிவு (Loops) மெல்லிய தாக உள்ள திசையில் அது சென்றுள்ளது.

மோட்டார் வண்டிகளின் தடத்திலிருந்து அவைகள் போயிருக் கும் திசையை அறியலாம். மோட்டார் வண்டி மேடு ஏறிப் பள்ளத் தாக்கில் இறங்கும் இடத்தில் சக்கரத்தில் உள்ள ரப்பர் பட்டை விரிவு பட்டு காணப்படும்.

கல் ரப்பர் பட்டையில் அகப்பட்டுக் கொண்டால் அது முன் னுக்குத் தள்ளி அழுத்தப்பட்டு அப்புறம் பின்னுக்கு எறியப் படும்.

(1) என்ற இடத்தில் கல் முன்னுக்கு அமுக்கப்பட்டு அப்புறம் பின்னுக்கு அழுத்தப்பட்டுள்ளது.




195. மோட்டார் தடம் வண்டி சென்றுள்ள திசையைக் காட்டுகிறது

(2) சக்கரத்தின் ரப்பர் ''பட்டை'' பள்ளத்தில் விழுந்த இடத்துக்கு எதிரில் அது விரிவடைந்துள்ள அடையாளம் இருக்கும். இடம் இருந்து வலம் (1 என்ற அடையாளத்திலிருந்து 2 என்ற அடையாளத்தை நோக்கி)ச் சென்றுள்ளது எனலாம்.

மனிதர்களின் காலடித் தடங்களைக் கொண்டு அவர்கள் நடந்து போனார்களா, ஓடிப் போனார்களா, நடந்து போகும்போது உள்ள மூட்டை அல்லது கனத்த பொருள் எதையாவது எடுத்துக் கொண்டு போனார்களா என்றுள்ளதை அவர்கள் காலடித் தடத்திலிருந்து அறிந்து கொள்ளலாம்.




196. கால் தடக்களம் (Tracking Plot)

சாதாரணமாக நடந்து செல்கிறவர் அடித்தடங்கள் அநேகமாக நேராகவே காணப்படும். ஒரு நேர்கோடு வரைந்தால் அடித்தடங்கள் அந்தக் கோட்டைத் தொடும். நன்ருகப் பதிந்து காணப்படும்.

ஓடுகிறவருடைய தடங்களில் காலின் முற்பாகம் மட்டும் பதிந்து குதிக்கால் தரையில் படாமல் காணப்படும். தடங்களுக்குள்ள இடைவெளி மிகுதியாக இருக்கும்.

கனத்த பாரத்தை எடுத்துக் கொண்டு நடப்பவருடைய கால் தடங்கள் வரைந்துள்ள மத்தியக் கோட்டை விட்டு சிறிது தொலைவில் காணப்படும். தடங்களும் நெருக்கமாகக் காணப்படும். தடங்கள் அழுத்தமாகப் பதிந்திருக்கும்.

பின்பக்கமாக நடந்து செல்பவர்களால் தடங்கள் மத்தியக் கோட்டை பல இடங்களில் தொடும். பாதத்தின் முன் பக்கத்தை விட குதிக்கால்கள் அழுந்திக் காணப்படும்.

மனிதர்களுடைய கால் தடங்கள் மனிதனுக்கு மனிதன் முற்றிலும் மாறுபடும் இயல்புடையன. ஒரே மாதிரியான கால் தடம் உள்ள இரண்டு மனிதரைப் பார்க்கவே முடியாது. ஒவ்வொரு கால் தடத்துக்கும் சற்றும் மாறுபடாத 12 தனி அடையாளங்கள் உண்டு.

அவைகளாவன—

1) வளைகுடாவில் உள்ள அச்சின் நீளம்
2) ஐந்து தீவுகளின் அளவு, உருவம், அமைந்துள்ள இடம்
3) வடகரை, கீழ்க்கரை, மேல்கரை ஆகிய மூன்று கரைகளின் தோற்றம்
4) தென் முனையின் தோற்றம்
5) முக்கிய பூமியின் அளவும், உருவமும்
6) கழுத்தின் தோற்றம்.

அணியில் அல்லது படையில் உள்ள சாரணர்களின் கால் தடத்தை இந்த விதமாகக் கூர்ந்து கவனித்துப் பின் ஒருவரின் கால் அடியை வைத்து விளையாட்டுகள் அமைக்கலாம்.




197. கால் தடமும் அதன் பண்புகளும்
(Foot Print—Its characteristics)

## XVII கை "ஒட்டை"யும் டிகிரி அளவும்
### (Measuring Angles with the Spar)

வானத்தில் உள்ள நட்சத்திரங்கள் ஒன்றுக்கொன்று எவ்வளவு விலகிக் காணப்படுகின்றன என்பதை டிகிரி அளவில் கணக்கிட நாம் நம் கையை நீட்டி விரல்களைப் படத்தில் காண்பித்துள்ள மாதிரி விரித்துக் கணக்கிடலாம். இதற்கு ஒரு சிறு கணக்குப் போட்டுப் பார்த்துக் கொள்ள வேண்டும். படத்தில் உள்ளதுபோலக் கையை நீட்டி விரல்களை விரித்து வைத்துக் கொண்டு நாம் இருக்கும் அறையை ஒரு தரம் சுற்றி அளக்க அடுத்தடுத்துக் கையை எத்தனை தரம் அப்படி வைக்க வேண்டும் என்பதைப்பார்த்து தெரிந்துகொள்ள வேண்டும். இப்படி கிடைக்கின்ற எண்ணால் 360°யை வகுக்க வேண்டும். வகுத்துக் கிடைக்கும் எண் நம் நீட்டிய கையும் விரித்து வைக்கப்பட்ட விரல்களும் எத்தனை டிகிரி என்பதைக் குறிக்கும்.



198. கையால் கோணத்தை அளத்தல் (Measuring Angles by the Hand)

இங்கு தரப்பட்டுள்ள குறிப்புகள் சாரணர்களுக்குப் பயன்படக் கூடியன. முதல்தரச் சாரணச் சின்னத்துக்காக பயிற்சி பெறும் பொழுது இக்குறிப்புகள் அளிக்கும் சாரணக் கலைகளையும் கற்றுக் கொள்வது சாரணனுக்குள்ள ஆற்றலைப் பெருக்கும்.

## XVIII தீக்கடைதல் (Using Fire Drill)

தீக்கடைதல் ஒரு சிறந்த கலை. ஒரு காலத்தில் நம் மக்கள் எல்லோருக்கும் இந்தக்கலை தெரிந்திருந்தது. இப்பொழுதும் மலைவாசிகளும் ஆதிவாசிகளும் இக்கலையைப் பயன்படுத்தியே தங்களுக்குத் தேவைப்படும்பொழுது தீ மூட்டிக் கொள்கிறார்கள். இப்படித் தீ மூட்டுவதைத் தீக்கடைதல் என்பார்கள்.

யாகங்கள் நடக்கும்பொழுது அங்கு தேவையான நெருப்பைக் கடைந்தே உண்டு பண்ணுகிறார்கள்.

தீக்கடைவதற்கு அடியில் ஒன்றும் மேல் பக்கம் ஒன்றுமாக இரண்டு கொம்புகள் தேவை. சிற்சில மரங்களே இந்த மாதிரி தீக் கடைய உதவும். எவ்வித எண்ணெய்ப்பசையுமில்லா மரங்கள் மட்டுமே பயன்படும்.



199. சாரணன் தீக்கடைதல் (Scout - using Fire Drill) செவ்விந்தியர்கள் முறையும் இதுவே







200. தீக்கடைதல் கருவி (The Fire Drill)

அடியில் உள்ள கட்டை ஓரத்திலிருந்து V போன்ற ஒரு சிறு துண்டை வெட்டி எறிந்து அந்தக் கோணத்தை ஒட்டி மத்தை வைத்துக் கடைவதற்கு ஒரு சிறு பள்ளம் அமைத்துக் கொள்வார்கள்.

கடைகின்ற மத்தை அந்தப் பள்ளத்தில் வைத்து தேங்காய்ச் சிரட்டையால் (நார்) ஒருவர் அதனைப் பிடித்துக்கொள்ள, இன்னொருவர் மத்தைக் கயிற்றால் ஒரு சுற்று சுற்றிக்கொண்டு தயிர் கடைவதுபோலக் கடைய வேண்டும்.



201. ஆஸ்திரேலிய பழங்குடி மக்கள் தீக்கடைதல் முறை
(Anstralion Aborigines make fire this way)



202. போர்ணியோத் தீவில் உள்ள பழங்குடி மக்கள் தீக் கடைதல்
(Borneo man making fire)
கடைதல் என்பதைவிட அறுப்பது என்பது பொருந்தும்

கடையும்போது மரம் பொடி பட்டு பொடிகள் நெருப்பாக மாறும். நெருப்பாக மாறிய பொடிகள் அந்த V வெட்டு வழி யாக இலவம்பஞ்சில் விழச்செய் வார்கள். கரியில் விழுந்த நெருப்புக் கனிந்து பரவும். கனிந்து பரவிய நெருப்பை எளி தில் எரியக்கூடிய பொருள்கள் மேல் வைத்து ஊதித் தீ மூட்டு வார்கள்.

இப்படித் தீ மூட்டுவது உல கத்தில் பல இடங்களில் ஆதி மக்கள் இன்னும் பழக்கத்தில் வைத்திருக்கிறுர்கள்.

## XIX பாலம் அமைத்தல் (Bridge Building)

முதல்தரச் சின்னத்துக்குரிய பயிற்சி பெறுகையில் சாரணர்கள் மூங்கில்களையும் சவுக்குக் கழிகளையும் பயன்படுத்திப் பாலங்கள், குடிசைகள், கோபுரங்கள் அமைத்துப் பழக வேண்டும். இத்தகைய பயிற்சிக்குரிய தனிப்புத்தகங்கள் கில்வெல் சாரண ஆசிரியப் பயிற்சி நிலயத்தில் முன்னுள் முகாம் தலைவர் ஜான் தர்மன் என்ற பெரியாரால் எழுதப்பட்டுள்ளன. நம் சாரண இயக்கத் தந்தை பேடன்பவல் தன் ''சிறுவர் சாரணி''யத்திலும் பாலம் அமைத்தல் கலையைப்பற்றி விவரமாக எழுதியுள்ளார். அவர் விவரித்துள்ள இமயமலைப் பாலம் முன் 2-ம் தரச் சாரணன் என்ற ஏழாம் அத்தியாயத்தின் இறுதியில் தரப்பட்டுள்ளது.

பாலத்தட்டிகள் அமைத்து வேருெரு வகையான பாலங்கட்டு வதும் ''சிறுவர் சாரணியம்'' விளக்குகின்றது.



203. ஒற்றைக் கணவாய்ப் பாலம் (Single Lock Bridge)

# 9. ஜனாதிபதி சாரணன்

சாரணப்பயிற்சி ஒழுக்கத்தையும் உடல் நலத்தையும் பேணி வளர்க்கும் பயிற்சி. தன்னல உணர்ச்சியை மறக்கச்செய்து பிறர் நலம் பேணலில் பழக்கம் அளிக்கும் பயிற்சி. தனி ஒரு இளைஞனையும் கண்ணியம், கட்டுப்பாடு, கடமை உணர்ச்சி உள்ள வனாகத் திகழச்செய்யும் ஆற்றல் படைத்த பயிற்சி. அவன் ஒழுக்கத்தையும் உடல் வலிமையையும் பேணிப் பாதுகாத்து அவற்றைச் சமுதாயத் தொண்டில் ஈடுபடச் செய்ய வல்ல சக்தி படைத்த பயிற்சி. ஆயின் அது விளையாட்டு உருவத்தில் அமைக்கப் பெற்றுள்ள ஒரு பயிற்சி. சாரண இயக்கம் கண்ட பேடன்-பவல் பெரியாராலேயே அத்தகைய உருவம் சாரணப் பயிற்சிக்குத் தரப் பட்டுள்ளது.

சாரணப்பயிற்சி அரிய பெரிய நோக்கங்களைத் தன்னுள் அடக்கி உள்ளதாகக் காணப்படும் ஒரு அபூர்வ விளையாட்டு. சிறு சிறு சிறுவர் குழு ஆகிய அணி உருவத்தில் இயங்கும் அருமையான விளையாட்டு, பெரியவர் ஒருவர் பங்குகொண்டு பெரிய சகோதரன் ஸ்தானத்தில் செயலாற்றி மேற் பார்வை புரியும் கண்ணியமான விளையாட்டு. சமுதாயத்தில் பற்பல மக்களின் ஆதரவையும் ஒத்துழைப்பையும் பெற்று மிளிர்கின்ற விளையாட்டு, இந்த விளையாட்டு சாரண உணர்ச்சியுடன் விளையாடும் சிறுவர்களை ஒழுக்கத்தில் சிறந்த வர்களாக, ஆக்கத் திறன் உள்ளவர்களாக, சமுதாயத்தில் உள்ள மக்களுக்கு நற்பணி புரியும் ஆற்றல் படைத்தவர்களாகத் திகழச் செய்கிறது.

சாரணப் பயிற்சி பெற்றுப் படிப்படியாக முன்னேறியுள்ள ஜனாதிபதி சாரணன் எல்லா வகையிலும் உயர்வு பெற்றுள்ள சாரணன் ஆவான். ஒழுக்கத்தில் உயர்ந்தவன், சாரண நெறியி லிருந்து ஒரு சிறிதும் வழுவாதவன். இறை பக்தி நிறைந்தவன். இறைவனின் படைப்புகளிடத்தில் உண்மை அன்புடையவன். மக்களி டத்தில் மிக மரியாதையுடனும் பண்புடனும் நடந்துகொள்ளும் திறன் உடையவன். தன் பெற்றோர்களிடமும் தன் ஆசிரியர்களிடமும் ஏனைய பெரியோர்களிடமும் பணிவும் அன்பும் உடையவன். பள்ளியில், தான் வேலை பார்க்கும் இடத்தில், தனக்குரிய கடமை களைக் கண்ணும் கருத்துமாய்க் கவனிக்கும் இயல்புடையவன்.

ஆசிரியர்களுக்குக் கீழ்ப்படிந்து அவர்களிடம் குருபக்தியோடு நடந்து கொள்ளும் இயல்புடையவன். தன் வாழ்க்கையில் ஒழுங்கும் கட்டுப்பாடும் உடையவன் என்று எல்லோராலும் புகழ்ந்து போற்றப் படுபவன். உண்மையான நாட்டுப்பற்று உடையவன். நாட்டுக்கும் நாட்டினர்க்கும் தொண்டாற்றலில் ஆர்வமும் ஆற்றலும் உடையவன். எல்லோருடையவும் நல்லாசி பெற்றுள்ளவன்.

சாரணன் ஒருவன் இத்தகைய தன்மைகள் வாய்க்கப்பெற்ருல் அவனை நாம் ஜனதிபதி சாரணன் என்கிருேம். ஜனதிபதி சாரணன் என்ருல் குடியரசுத் தலைவர் சாரணன் என்று பொருள்படும். அவனை நாட்டின் நற்குடி மக்களுக்கே உரிய சாரணன் என்று கூறலாம். அந்தப்பதவி, மிக்க கண்ணியமுள்ள பதவி. மிகக் கௌரவமான பதவி. முக்கியமான கடமைகளைத் தருகின்ற பதவி.

நம் நாட்டுக்குடியரசுத் தலைவர் நம் பாரத சாரண சாரணிகள் சங்கத்துக்கு முக்கிய ஆதரவாளர். நாட்டின் எதிர்கால நற்குடி மக்களாகிய சாரணர்கள் சாரணிகளிடம் மிக்க மதிப்புடையவர். தன் பயிற்சியால், தன் ஒழுக்கத்தால், தன் உயரிய பண்புகளால் சிறப்பு அடைந்துள்ள சாரண சாரணிகளுக்கு குடியரசுத் தலைவராகிய ஜனதிபதி தன் பதவிப் பெயரையே தந்து பெருமைப்படுத்துவது பல ஆண்டுகளாகக் கையாளப்பட்டுவரும் சிறப்பு வாய்ந்த பழக்கம். ஒவ்வொரு ஆண்டிலும் அந்த ஆண்டு ஜனதிபதி சாரண சாரணிப் பதவிக்கு அருகதை பெற்றுள்ள சாரணர்களையும் சாரணிகளையும் நம் நாட்டின் தலைநகராகிய புதுடில்லி மாநகரில் ஜனதிபதி தம் அரண்மனைக்கு அழைத்து அவர்களுக்குத் தம் ஆசி தந்து சான்றிதழ்களை வழங்கி வருகிருர். அத்தகைய சான்றிதழை ஜனதிபதி யிடமிருந்து நேரில் பெற்றுக்கொள்ளும் வாய்ப்பினை நம் சாரண சாரணிகள் பெரும் மதிப்புடையதாகக் கருதுகிருர்கள்.

ஜனதிபதி சாரணப் பதவிக்கு என்று தனியான பயிற்சி எதுவும் இல்லை. சாரணன் என்ற முறையில் தான் பெறவேண்டிய பயிற்சி அனைத்தையும் தன் சாரணப் பயிற்சியோடு சாரணன் முடித்துக் கொள்கிருன். ஆயினும், சாரணத் துறையில் தான் கற்றறிந்து கொண்டுள்ள கொள்கைகளைக் கடைப்பிடித்து, தன் மனதைப் பக்குவப்படுத்திக்கொண்டு சாரணியத்தின் அருமை பெருமைகளை நன்குணர்ந்தவனுய், சாரண இயக்கத்துக்கு நல்ல பெயரையும், நல்ல மதிப்பையும் தேடித் தரவேண்டும் என்ற அவ்வெண்ணத்துக்கு உகந்த முறையில் தன் வாழ்க்கையை நடத்துவதே ஜனதிபதி சாரணனுக்கு உரிய பயிற்சி என்று கூறுவது ஒரு சிறிதும் மிகை ஆகாது. இந்தப் பயிற்சி முடிவடையும் பயிற்சி அல்ல. வாழ்நாள் முழுவதும் வழிகாட்டியாக அமையும் பயிற்சி.

சங்க நோக்கங்கள், முறைகள், விதிகள் அமைப்பு (A. P. R. O.) என்ற நம் சங்கத்துக்குரிய கட்டுப்பாடுகளை எடுத்துக் கூறும் புத்தகத்தில் ஜனாதிபதி சாரணர்கள் அப்பதவிபெறத் தாம் செய்ய வேண்டியனவற்றை விவரிக்கின்றது. சாரணன் முதல்தரச் சாரணனாக இருப்பது ஒரு முக்கிய நிபந்தனை. வனவியல் கயிறு, கடல் மாலுமிச்சின்னம், வாயு மாலுமிச்சின்னம் போன்ற சின்னங்கள், அல்லது இதர சின்னங்கள் பல பெற்றவனாக இருத்தல் வேண்டும் என்பதும் நிபந்தனைகளுள் ஒன்று. இன்னும் கூர்ந்து கவனித்தால் அவை சாரணனுக்குப் பல பொதுச் சேவைகளில் ஈடுபடுத்த எண்ணி அவைகளை எடுத்துக் கூறுவதோடு மாதிரிக்குச் சில அனுபவத்தையும் அளிப்பதாகத் தோன்றுகிறது. சாரணன் தொண்டாற்றப் பிறந்தவன். என் கடன் பணிசெய்து கிடப்பதே என்றவரின் பரம்பரையில் உதித்தவன். அன்பர் பணிசெய்ய எனை ஆளாக்கி விட்டு விட்டால் இன்பநிலை தானே வந்து எய்தும் என்ற துணிபு உடையவன். அவனை மக்கள் தொண்டு புரிய ஆளாக்கி விட்டுவிடுதலே ஜனாதிபதி சாரணச் சின்னம் பெற்றுக் கொள்வதின் நோக்கம் என்பதை நாம் உணர்ந்து கொள்வது அவசியம்.

ஜனாதிபதி சாரணச் சின்னம் பெறுவதோடு சாரணனின் வாழ்க்கை நின்றுவிடக் கூடாது. அந்தச் சின்னம்பெற்ற தேதியிலிருந்து அவனுடைய புது வாழ்வு ஆரம்பமாகிறது என்று கொள்ள வேண்டும். நாட்டுக்குத் தான் ஆற்றக்கூடிய தொண்டினைக் குறித்து அவன் சிந்திக்கவேண்டும். நாட்டில் உள்ள மக்களுக்கு அவன் ஆற்றவேண்டிய தொண்டுகளைப்பற்றி அவன் சிந்திக்கவேண்டும். தான் சிறுவன் ஆயினும் தனக்குள்ள வாய்ப்புகளைப் பயன்படுத்திப் பொதுச் சேவைகளில் அவன் ஈடுபட முன்வரவேண்டும். அதுவே அவனுக்குள்ள கடமை.

சாரணச்சங்க நோக்கங்கள், கொள்கைகள், விதிகள், அமைப்பு (A. P. R. O.) என்ற புத்தகத்தில் தரப்பட்டுள்ள தகுதிக் கட்டுப்பாடுகள் பின்வருமாறு :—

முதல்தரச் சாரணச் சின்னம் பெற்றபின், ஜனாதிபதி சாரண சின்னம் பெற விரும்பும் சாரணன் மாவட்ட ஆணையாளரால் (அச் சாரணனின் சாரண ஆசிரியரைக் கலந்து கொண்டு) தேர்ந்து எடுக்கப்பட்ட அடியில் குறிப்பிடப்படும் தொண்டுகளில் ஏதாவது ஒன்றில் ஈடுபடுதல் வேண்டும். அப்படி ஈடுபடுகையில் தான் அடைந்துள்ள சாரணத் திறமைகளை நன்கு பயன்படுத்திக் கொள்ளவும் வேண்டும்.

## 1. தொண்டுகள்

1. சிறுவர்கள் விளையாட்டில் ஒவ்வொருநாளும் இரண்டு மணி நேரமாக மூன்று நாள் கலந்து கொண்டு விளையாட்டை நடத்துவது

2. முதியவர் ஒருவருக்கு அல்லது நோயுற்றுள்ள ஒருவருக்கு ஒரு நாள் 6 மணி நேரத்துக்குக் குறையாமல் அவருக்குத் தேவையான சேவை செய்வது,

3. ஒருநாள் 3 மணி நேரத்துக்குக் குறையாமல் மருத்துவமனை ஒன்றில், அல்லது முதியவர்களுக்காக அல்லது குழந்தைகளுக்காக உள்ள நிலையம் ஒன்றில் தொண்டு புரிதல்,

4. ஒருநாள் 6 மணி நேரத்துக்குக் குறையாமல், உதவி விரும்பும் ஒருவருக்கு அவர் வீட்டைச் சுத்தம் செய்தல், உள் வீட்டை அழகுபடுத்தல், சமையல் செய்தல், தோட்டவேலை செய்தல், வீட்டைச் செப்பனிடுதல், வீட்டுக்கு வர்ணம் பூசுதல், விவசாயத் தொழில் அல்லது பண்ணைத் தொழில் ஆகிய ஏதாவது ஒருவேலையில் ஈடுபடுதல், ஈடுபட்டு அவர்களுக்குத் தொண்டாற்றல்,

5. ஒருநாள் 6 மணி நேரத்துக்குக் குறையாமல் மாநிலம், மண்டலம், மாவட்டம், தலசங்கம், இவைகளுக்குரிய பாசறைத் திடலில் தொண்டாற்றி அதை மேம்படுத்தல் அல்லது அங்குள்ள பாசறைப் பொருள்களை பழுதுபார்த்து, சரிபார்த்து, முறையாகக் கட்டி வைத்து மாநிலம், மண்டலம், மாவட்டம், தலசங்கம் ஆகியவைகளுக்குத் தொண்டுபுரிதல்,

6. வனவியல் துறையில் பயிற்சிக்குள்ள பொருள்களை சேகரித்து நகரத்தில் உள்ள குருளையர் மந்தை அல்லது சாரணர்படையொன்றுக்கு அன்பளிப்பாக வழங்குதல்,

7. ஒருநாள் 6 மணி நேரத்துக்குக் குறையாமல் இரண்டொரு சாரணர்களின் உதவியோடு அறுவடை அலுவல்களில், அல்லது பூங்கா அலுவல்களில் ஈடுபடுதல்,

8. வேறொரு மாவட்டம், மாநிலம், அல்லது நாட்டிலிருந்து வந்துள்ள ஒருவரை அழைத்துச் சென்று ஊர் பூராவையும் அல்லது தான் குடியிருக்கும் பேட்டையை, அல்லது அருகாமையில் உள்ள பட்டணம் அல்லது நகரத்தை நன்ருகக் காண்பித்துத் தொண்டு புரிதல்

இங்கு கூறியுள்ள 1 முதல் 8 வரையான தொண்டுகளில் ஏதாவது ஒன்றைச் செய்து முடித்தல் வேண்டும்.

1. வேறு மாநிலம் அல்லது மண்டலம் ஒன்றைப்பற்றி; அதில் உள்ள மக்களைப்பற்றி; நன்கு தெரிந்து கொண்டு அதைப்பற்றிக் குறிப்புப் புத்தகம் ஒன்று தயார் பண்ணுதல். குறிப்பு எழுதவேண்டிய மாநிலத்தை மாவட்ட ஆணையாளர் தேர்ந்து தெரிவிக்க வேண்டும். தேர்ந்துள்ள மண்டலம் சாரணன் இருக்கும் மண்டலத்தைத் தவிர வேறு மண்டலமாக இருத்தல் வேண்டும். (இது முடியாமலிருந்தால் பல நாட்டு சாரணியம், அதாவது சாரணியத்தின் பல நாட்டு ஈடுபாடு பற்றிய குறிப்புப் புத்தகம் தயார் பண்ணலாம்.)

2. முதல்தரச் சாரணச் சின்னம் பெற்றபின் ஜனாதிபதி சாரணச் சின்னத்திற்கு முயற்சிக்கும் காலத்தில் 30 மணி நேரத்திற்குக் குறையாமல் அங்கீகரிக்கப்பட்ட ஏதாவதொரு சமூக சேவை செய்தல் அவசியம்.

3. முதல்தரச் சாரணனாகவும் 14 வயது முடிந்தவனாகவும் உள்ளவன் சமூகத்தில், வீட்டில், தனது பள்ளிக் கூடத்தில், மற்ற இடங்களில் சாரணக் குறிக்கோளுக்கிணங்க தொண்டு செய்ய முயற்சிக்கிறான் என்பதைப் பிறர் உணரும்படி நடந்து கொள்ள வேண்டும்.

4. வனவியல் கயிறுக்குரிய கலைச் சின்னங்களில் ஒன்றையாவது, பாலைவனவாசிச் சின்னம் அல்லது வாயு விமானிச்சின்னம் அல்லது கடல் மாலுமிச் (Seaman) சின்னம் ஆகியவற்றில் ஒன்றையாவது பெற்றிருப்பதுடன் கீழ்க்கண்டவற்றுள் ஏதேனும் ஐந்து சின்னங்களையும் பெற்றிருக்க வேண்டும். அவற்றுள் முதலுதவி வல்லான், பாதை அறிதல் வல்லுநன், சின்னங்கள் இரண்டும் கட்டாயமாகப் பெறவேண்டியவை.

வாயுவிமானி, முதல் சிகிச்சையாளன், குடிமைக் கலைஞன், தீயணைத்தல் கலைவல்லான், வனக்கலை வல்லான், பழுதுபார்த்தல் கலைஞன், மொழிபெயர்ப்பாளன், சைகைப் பேச்சு வல்லான், பாதை விளக்கல் வல்லுநன், துறைமுக மாலுமி, பொது உடல் நலம் பேணி, தண்ணீர் விபத்தில் துணைவன் ஆகிய சின்னங்கள்.

ஆண்டுக்கு ஒருமுறை ஜனாதிபதி சின்னம் பெற்ற சாரணன் அச் சின்னத்திற்குரிய கலைச்சின்னங்களில் மறுதேர்வு பெறவேண்டுவதவசியம். இவைகளில் ஏதேனும் ஒன்றில் தேர்வுபெறத் தவறினால் ஜனாதிபதி சின்னத்தையணிவது கூடாது.

# 10. கலைப் பயிற்சியும் சாரண விருதுகளும்

சாரணப் பயிற்சி பொதுப்பயிற்சி, தனிப்பயிற்சி என இருவகைப் படும். சாரண இளம்பாதப் பயிற்சி, இரண்டாம்தரச் சாரணப் பயிற்சி, முதல்தரச் சாரணப் பயிற்சி, ஜனாதிபதி சாரணப் பயிற்சி என்பவை பொதுப்பயிற்சியில் அடங்குபவை. ஆனால், இவைதவிர பலதரப்பட்ட கலைப்பயிற்சி பெறும் வாய்ப்பும் சாரணர்களுக்கு உண்டு. இது ஒரு வகை தனிப்பயிற்சியாக அமையும். தனிப்பயிற்சி என்பது சாரணர் கள் தங்கள் தங்கள் இயற்கை நாட்டங்களுக்கேற்ப தங்களுக்குப் பிரியமான தனிக் கலைகள் அல்லது தனித் தொழில்களில் அவர்களை ஈடுப்படுத்தும் நோக்கத்தைக் கொண்டது. அப்படி ஈடுபடும் வாய்ப்பு அளிப்பது சாரணர்கள் உள்ளத்தில் புதையுண்டு கிடக்கும் கலை ஆர்வத்தையும் தொழில் ஆர்வத்தையும் தட்டி எழுப்பி வெளிக் கொண்டு வருவதற்குரிய தூண்டுதல் அளிப்பதாகும்.

கலைப் பயிற்சியும் தொழில் பயிற்சியும் அளிக்கவல்ல ஆற்றல் படைத்த இத்தனிப் பயிற்சிக்குரிய சின்னங்கள் ஆங்கிலத்தில் (Proficiency Badges) அல்லது (Merit Badges) எனப்படும். அவை நூற்றுக்கு மேல் உள்ளன. சாரணர்கள் தங்கள் நாட்டத்துக்குப் பொருந்துவனவற்றையே பெறுவதற்கு முயற்சி செய்தல் வேண்டும்.

கலைச் சின்னங்கள் பலப்பல. முதல் உதவி வல்லான், விற்கலை வல்லான், ஓவியன், உடற்பயிற்சி வல்லான், வனவாழ்க்கைக் கலைஞன், கூடைக் கலைவல்லான், தேனீக் கலைஞன், பறவைக் காவலன், இரும்புக்கலைவல்லான், எக்காளம் இசைப்போன், பாச றைக் கலை அறிஞன் என்பவை அவற்றுள் சில. எழுத்தன், ஆட்டுப் பண்ணைத் துணைவன், சைகைப் பேச்சுக்கலை நிபுணன், மறைந் தணுகல் வல்லான், தாரகைக் கலை வல்லான், நிலம் அளத்தல் நிபுணன், தடம் பிடித்தல் வல்லான் என்பன வேறு சில. அகில உலக நண்பன், சமூகத்திற் காப்புக் கலைஞன் என்பவை மற்றும் சில.

சாரணர்களுக்கு விருதுகள் தனிப்பயிற்சி அடிப்படையில் தரப் படுகின்றன. இவை நான்கு வகை. (1) இந்தி மொழியில் ''ஜங்கில்



204. பல்வேறு தனிப்பயிற்சிச் சின்னங்கள்.

கோப்'' என்ற வழங்கப் பெறும் வனவியல் கயிறு, (2) கடல் மாலுமிச் சின்னம், (3) வாயு விமான மாலுமிச் சின்னம், (4) பல்கலை விருதுக் கயிறுகள்—முதல்தரம், இரண்டாம் தரம், மூன்றும் தரம் என்பன.

### ஜங்கில் கோப்

இது வனவியல் கயிறு என்று பொருள்படும். வனவியலில் ஓரளவு தேர்ச்சி அடைந்துள்ள சாரணனுக்கு இது வழங்கப்படும்.



205. ஜங்கில் கோப்.

இந்த விருதுக் கயிற்றைச் சாரணன் தன் வலது தோளில் அணிய வேண்டும். இது கரும்பச்சை நிறமுடைய கயிறு. இதன் நுனியில் உள்ள குஞ்சத்தை வலது பைக்குமேல் காப்பு ஊசியால் தைத்துக்

கொள்ள வேண்டும். இந்த விருது முதல்தரச் சாரணர்களுக்கே உரியது. அவர்களுக்கு மட்டுமே அது வழங்கப்படலாம்.

பாசறைக்கலை அறிஞன், வனக்கலை வல்லான், இயற்கைக்கலை அறிஞன், ஆக்கல்கலை அறிஞன், தாரகைக்கலை நிபுணன், தடம் பற்றல் கலைவல்லான் ஆகிய ஆறு தனிப்பயிற்சிக் கலைச் சின்னங்களுள் ஏதாவது மூன்றினைப் பெற்றதும் இந்த விருது வழங்கப்படும்.

## கடல் மாலுமிச்சின்னம்

இந்தச் சின்னம் கடல் சாரணர்களுக்கு உரியது. இது கடல் சாரணர்களுக்கே வழங்கப்படும். அவர்கள் முதல்தரச் சாரணர்களாயிருப்பதோடு தோணிக்காரன், சுற்றுலாக் கலைஞன், இயற்கைக்கலை அறிஞன், தோணிக்கலை வல்லான், கடல் மீனவன், தாரகைக்கலை நிபுணன் ஆகிய தனிப்பயிற்சிக் கலைச்சின்னங்களில் ஏதாவது மூன்றினைப் பெற்றிருத்தல் வேண்டும்.

## வாயு விமான மாலுமிச் சின்னம்

இந்தச் சின்னம் வாயு விமானச் சாரணர்களுக்குரியது. அவர்களுக்கே இது வழங்கப்படும். அவர்கள் முதல்தரச் சாரணர்களாயிருப்பதோடு வாயுவிமானி, வாயு விமானப் பொறிஇயல் வல்லுநன், வாயு விமானம் செலுத்துவோன், வாயுவிமான அறிஞன், சுற்றுலாக் கலைஞன், இயற்கைக்கலை அறிஞன், தாரகைக்கலை நிபுணன் ஆகியவற்றுள் ஏதாவது மூன்றினைப் பெற்றிருத்தல் வேண்டும்.

வனக்கலைக் கயிறு, கடல் மாலுமிச் சின்னம். வாயு விமான மாலுமிச் சின்னம் ஆகிய மூன்றும் ஒரே தரத்தின.

## விருதுக் கயிறுகள்

விருதுக் கயிறுகள் தனிப்பயிற்சிக் கலைச்சின்ன எண்ணிக்கை அடிப்படையில், வழங்கப்படுகின்றன. ஆறு சின்னங்கள் பெற்றுள்ள



206. விருதுக்கயிறு

சாரணனுக்கு முதல் விருதுக்கயிறு அளிக்கப்படும். இது நீலம், பச்சை, ஆகிய இரு நிறங்களுள்ள கயிறு. இது முதல்தரச் சாரணர்களுக்கு வழங்கப்படும்.

பன்னிரண்டு தனிப்பயிற்சி சின்னங்கள் பெற்றுள்ள முதல்தரச் சாரணர்களுக்கு இரண்டாம் விருதுக்கயிறு வழங்கப்படும். இது சிவப்பு, வெள்ளை ஆகிய இரு நிறங்களுள்ள கயிறு.

பதினெட்டு தனிப்பயிற்சிக் கலைச் சின்னங்கள் பெற்றுள்ள ஜனாதிபதி சாரணர்களுக்கு மூன்றாம் விருதுக்கயிறு வழங்கப்படும். இது தங்கநிறம் பொருந்தியது.

விருதுக் கயிறு இடது தோளில் அணிய வேண்டும். கயிற்றின் நுனியிலுள்ள குஞ்சத்தை இடது பைக்கு மேலாக காப்பு ஊசியால் குத்திவைக்க வேண்டும்.

இரண்டாம் விருதுக்கயிறு வழங்கப்பட்டதும் முதல் விருதுக் கயிற்றை அணிதல் கூடாது. அதுபோலவே, மூன்றாம் விருதுக் கயிறு வழங்கப்பட்டதும் இரண்டாம் விருதுக் கயிற்றை அணிதல் கூடாது.

## பயிற்சி அளித்தல்

கலைச் சின்னங்களுக்காக அளிக்கப்படும் பயிற்சி தனிப்பயிற்சி ஆகும். ஒவ்வொரு சாரணனும் தான் விரும்பும் சின்னங்களுக்குரிய பயிற்சியைச் சாரண ஆசிரியர் உதவியோடு பெற்றுக் கொள்ள வேண்டும். சாரண ஆசிரியர் தானாகவே பயிற்சி தரலாம், அல்லது சாரணனைப் பிற ஆசிரியர்களிடம் அனுப்பிப் பயிற்சி பெறச் செய்யலாம். அல்லது ஒரு சில சின்னங்களுக்குரிய பயிற்சிக்காக சிறப்புப் பயிற்சிப் பாசறை நடத்தி உரிய பயிற்சிகளைத் தாமும் இதர ஆசிரியர்களின் ஒத்துழைப்போடும் அளிக்கலாம். அப்படி அமைக்கப்படும் பயிற்சிப் பாசறைகளில் எந்தெந்த சாரணர்களுக்கு அந்தப் பயிற்சி அவசியமாகுமோ அவர்கள் மட்டுமே சேரலாம். சாரண ஆசிரியர்கள் தங்கள் தங்களுக்குள்ள வசதிகளுக்கு ஏற்றபடி சிறப்புப் பயிற்சிப் பாசறைகள் அமைத்துக் கொள்வது விரும்பத் தக்கது.

கலைச் சின்னங்கள் பலப்பல. இவை சாரண சங்க நோக்கங்கள், கொள்கைகள், விதிகள், அமைப்பு (A. P. R. O.) என்ற புத்தகத்தில் விதி 413-ல் தரப்பட்டுள்ளன.

1. Airman-வாயு விமானத் தொண்டன்
2. Air apprentice-வாயு விமானிச் சீடன்
3. Air Mechanic-வாயு விமானப் பொறி அறிஞன்
4. Air Navigator-வாயு விமானப்பாதை காணி

5. Air Spotter-வாயு விமான வகை அறிஞன்
6. Ambulance man-முதல் சிகிச்சையாளன்
7. Archery-விற்கலை வல்லான்
8. Artist-ஓவியன்
9. Athlete -உடற்பயிற்சியாளன்
10. Backwoodsman-வனவாழ்க்கைக் கலைஞன்
11. Basket Worker-கூடைக்கலை வல்லான்
12. Bee Master. தேனீக்கலை வல்லான்
13. Bird Warden-பறவைக் காவலன்
14. Blacksmith-இரும்புக்கலை வல்லான்
15. Boatman-தோணிக்காரன்
16. Book Binder-புத்தகம் கட்டவல்லோன்
17. Braille-Braille Master-குருட்டெழுத்து அறிஞன்
18. Bugler-எக்காளம் இசைப்போன்
19. Camper-பாசறைக்கலை அறிஞன்
20. Carpenter-மரக்கலை அறிஞன்
21. Chemist-இரசாயனக் கலைஞன்
22. Citizen-நற்குடி-குடிமைக் கலைஞன்
23. Clerk-எழுத்தன்-எழுத்துக் கலைஞன்
24. Climber-மலையேறு கலை அறிஞன்
25. Coast Watchman-கடற்கரைக் காவலன்
26. Cook-சமையல் கலை அறிஞன்
27. Cyclist-மிதிவண்டிக் கலைஞன்
28. Dairyman-பால்பண்ணைக் கலைஞன்
29. Debater-பட்டிமன்றக் கலைஞன்
30. Electrician-மின்கலை அறிஞன்
31. Engineer-பொறியியல் வல்லான்
32. Entertainer-மகிழ்வித்தற்கலை வல்லான்
33. Explorer-ஆராய்ச்சியாளன்
34. Farmer-பண்ணைக்கலை வல்லான்
35. Fireman-தீயணைத்தற்கலை வல்லான்
36. Florist-பூக்கலை வல்லான்
37. Folk Dancer-பாமர நாட்டியக் கலைஞன்
38. Forester-வனக்கலை வல்லான்
39. Friend to Animals-பிராணி நண்பன்
40. Games Leader-விளையாட்டுக்கலை முதல்வன்
41. Gardener-தோட்டக்கலை அறிஞன்
42. Good Neighbour-உற்ற அயலான்
43. Gymnast-உடற்பயிற்சிக்கலை வல்லான்

44. Handyman-செப்பனிடுகலை வல்லான்
45. Healthyman-உடல்நலம் உடையவன்
46. Herbalist-பச்சிலைக் கலைஞன்
47. Hiker-சுற்றுலாக்கலை அறிஞன்
48. Home Nurse-நோயுற்றோர் துணைவன்
49. Horseman-குதிரையேற்றக் கலைஞன்
50. Hospitalman-மருத்துவமனைத் துணைவன்
51. Interpreter-இருமொழிக் கலைஞன்-துவிபாஷி
52. Interpreter to the Deaf-செவிடர் துவிபாஷி-செவிடர்க்கு விளக்குவோன்
53 Journalist-எழுத்தாளன்
54. Leather Worker-தோல் தொழில் வல்லான்
55. Marksman-குறிசுடல் வல்லான்
56. Mason-கட்டடக் கலைஞன்
57. Master-at-Arms-தற்காப்புக்கலை வல்லான்
58. Metal Worker-தகட்டுக்கலை வல்லான்
59. Miner-கனிஜக்கலை வல்லான்
60. Motor Mechanic-மோட்டார் பொறிக்கலை அறிஞன்
61. Musician-பாடகன்
62. Naturalist-இயற்கைக்கலை அறிஞன்
63. Oarsman-தோணிக்கலை வல்லான்
64. Pathfinder-பாதை விளக்க வல்லான்
65. Photographer-பரிதிப்படக் கலைஞன்
66. Pilot-துறைமுக மாலுமி
67. Pioneer-ஆக்கல் கலைஞன்
68. Piper-துருத்தி இசை அறிஞன்
69. Plumper-குழாயமைப்புக் கலைஞன்
70. Potter-மண்பாண்டக் கலைஞன்
71. Poultry Farmer-கோழிப்பண்ணைக் கலைஞன்
72. Printer-அச்சுக்கலை அறிஞன்
73. Prospector-கனிஜ ஆராய்ச்சியாளன்
74. Public Healthman-பொது உடல்நலம் பேணி
75. Reader-புத்தகம் படிப்போன்
76. Rescuer-தண்ணீர் விபத்தில் துணைவன்
77. Rigger-பாய் மரக்கலைஞன்
78. Rural Worker-கிராமத் தொண்டன்
79. Safety Man-முற்காப்பு அறிஞன்
80. Salesman-வியாபாரக் கலைஞன்
81. Scholar-நல்ல மாணவன்
82. Scribe-நல்ல எழுத்தன்

83. Sea Fisherman–கடல் மீனவன்
84. Sheep Farmer–ஆட்டுப்பண்ணைக் கலைஞன்
85. Signaller–சைகைப் பேச்சு வல்லான்
86. Silver Smith–வெள்ளிக்கலை வல்லான்.
87. Spinner–இராட்டைக்கலை வல்லான்
88. Stalker–மறைந்தணுகல் கலை வல்லான்
89. Starman–தாரகைக்கலை அறிஞன்
90. Surveyor–நில அளவுக்கலை வல்லான்
91. Swimmer–நீச்சல் கலை வல்லான்
92. Tailor-தையல் கலை வல்லான்
93. Telegraphist–தந்திக்கலை வல்லான்
94. Tracker–தடம்பிடித்தல்கலை அறிஞன்
95. Weatherman–வானிலைக் கலை அறிஞன்
96. Weaver–நெசவுக்கலை அறிஞன்
97. Wirelessman–ரேடியோக்கலை அறிஞன்
98. World Friendship–அகில உலக நண்பன்
99. Rural Engineer–கிராமியப் பொறியியல் வல்லான்
100. Civil Defence–சமூகத் தற்காப்புக் கலைஞன்
101. Desert Folk–பாலைவனக்கலை அறிஞன்
102. Camelman–ஒட்டகைக் கிழான்
103. Soil Conservation–பூமி அழிவு தடுப்புக் கலைஞன்

இப்படி 103 தனிப்பயிற்சிக் கலைச் சின்னங்கள் உள்ளன. இவை ஒவ்வொன்றையும் பெறுதற்குரிய பயிற்சியின் விவரங்களை சங்க நோக்கம், கொள்கை, விதிகள், அமைப்பு (A. P. R. O.) என்ற புத்தகத்தில் கண்டு கொள்ளலாம்.



# 11. சாரணப் பயிற்சிப் பாதுகாப்புகள்

சாரணப் பயிற்சி முறையின் தத்துவத்தை ஒரு சிறிது ஆராய்ந்து பார்த்தால் அந்தப் பயிற்சித் திட்டத்தை வகுத்துத் தந்த பேடன்-பவல் பெரியார் அதற்கு ஐந்து பாதுகாப்புகளை அமைத்துத் தந்துள்ளதாகப் புலப்படும். அவை தக்க சூழ்நிலை, தக்க கட்டுப் பாடு, தக்க மேற்பார்வை, தக்க பயிற்சித் திட்டம், தக்க பயிற்சி முறை என்பன.

## தக்க சூழ்நிலை

ஒழுக்கத்தை வளர்ப்பது சூழ்நிலை. உயரிய பண்புகளைக் கற் பிப்பது சூழ்நிலை. நற்குண நல்லொழுக்கத்தைக் கற்பிக்கும் நோக் கத்தைக் கொண்ட சாரணப் பயிற்சி சிறுவர்களுக்குத் தக்க சூழ்நிலை அமைத்துத் தருவதில் தன் முழுக்கவனத்தையும் செலுத்துகிறது. சாரணப் பயிற்சிக்கு உரிய சூழ்நிலை சாரண அணியும் சாரணப் படை யும் ஆகும். இரண்டும் மிக வல்லமை பொருந்திய சூழ்நிலை.

சாரண அணி என்பது எட்டுச் சாரணர்களைக் கொண்ட ஒரு சிறு குழு. எட்டு இல்லையாயின் ஏழு அல்லது ஆறு சாரணர்களாவது இருத் தல்வேண்டும். அவர்கள் அனைவரும் ஒருவாறு ஒத்த வயதினராகவே இருத்தல் அவசியம். வயதில் மிகுந்த ஏற்றத்தாழ்வு கூடாது. இந்த எட்டுப்பேரும் ஒரே கட்டுப் பாட்டுக்கு அடங்கி ஒரே நோக்கம் உடை யவர்களாய் இருத்தல் அந்தச் சூழ்நிலைக்கு இயல்பாய் அமைந்துள்ள வலுவைக் குறிக்கும். சாரண அணியை ஒரு சோதரக் குழு என்று கூறலாம். சாரண அணிகள் பூரண சுதந்திரம் உடையன. அவை கள் முழுப்பொறுப்புடையன. தாங்கள் தங்கள் காரியங்களைத் தாமே கவனித்துக் கொள்ளும் தன்மை உடையன. அவை தங்களுக்குரிய கடமைகளைத் தாமே நிறைவேற்றிக் கொள்ளும். அவைகளுக்கு மிகுந்த பொறுப்புணர்ச்சி உண்டு.

சாரண அணிக்குள்ள பொறுப்பை நிர்வகிக்க அவ்வணியில் உள்ள சாரணன் ஒருவனையே அணித் தலைவனாக நியமிக்கிறார்கள். அணித் தலைவனை நியமிக்கும் பொறுப்பு சாரண ஆசிரியருடையது. ஆயினும், அணியில் உள்ள சிறுவர்களைக் கலந்து கொண்ட பிறகே அவர் அணித் தலைவனை நியமனம் செய்வார்.

அப்படி நியமிக்கப்பட்ட அணித் தலைவன் தனக்குப் பிடித்தமான வனும் தன் அணியைச் சேர்ந்தவனுமாகிய இன்னொரு சாரணனைத் தன் உதவியாளனாக நியமித்துக்கொள்வான். அவனை உதவித் தலைவன் என்பர். அணித் தலைவனும் உதவித் தலைவனும் அணியின் நிர்வாகப் பொறுப்பைத் தங்களுக்குள் பகிர்ந்துகொண்டு அவர்கள் இருவரும் அணியின் முன்னேற்றத்துக்காக உழைப்பார்கள். ஆனாலும், அணியைப் பற்றிய முழுப் பொறுப்பும் அணித் தலைவனுடையதே ஆகும்.

அணியில் உள்ள சாரணர்கள் எல்லோரும் நல்ல ஒழுக்கம் உடையவர்களாகத் திகழ வேண்டும். சாரணப் பயிற்சித் துறையில் அவர்கள் படிப்படியாக முன்னேறிச் செல்ல வேண்டும். இவை சாரண அணித் தலைவனுடைய பொறுப்பு. அதற்குத் தகுந்த முறையில் அவன் தன் சாரண அணியின் நிர்வாகத்தை நடத்தவேண்டும்.

சாரணப்படை என்பது பல சாரண அணிகளைக் கொண்டது. ஒரு சாரணப்படையில் 12 சாரணர்கள் முதல் 24 சாரணர்கள் வரை இருக்கலாம். அதற்கு அதிகமாக இருக்கக் கூடாது. மாவட்டச் சாரண ஆணையாளர் அனுமதி இருந்தால் படையின் எண்ணிக்கை 32 வரை உயரலாம்.

சாரணப் படைக்குப் பொறுப்பு சாரண ஆசிரியர் ஆவர். ஒரு சாரணப் படைக்கு ஒன்று அல்லது இரண்டு உதவி ஆசிரியர்கள் இருப்பது அவசியம். அணிமுறையைப் பின் பற்றிச் சாரண ஆசிரியரும் உதவி ஆசிரியரும் படையை வாரத்துக்கு ஒரு முறை அல்லது இருமுறை கூட்டி, படைக்குரிய பயிற்சிகளைச் சாரண அணிகளுக்கு அளித்தல் அவர்கள் பொறுப்பு.

சாரணப் பயிற்சி முறையில் சாரணர்களைத் தனித் தனியாகக் கவனித்து அவர்களுக்குரிய சாரணப் பயிற்சியையும் தனித்தனி முறையிலேயே அளிக்கப்படவேண்டும். அதனாலேதான் சாரணப்படையில் உள்ள சாரணர்களின் எண்ணிக்கை 32க்கு மேற்படக்கூடாது என்ற நிபந்தனை ஏற்பட்டுள்ளது. சாரணப் பயிற்சி முறையை ஏற்படுத்தித் தந்த பேடன்-பவல் பெரியார் தான் தன் முழுத் திறமையையும் பயன்படுத்திப் பயிற்சி அளிப்பினும் தனக்கு 16 சாரணர்களுக்கே பயிற்சி அளித்தல் கடினமாக உள்ளது என்றும் ஏனைய சாரண ஆசிரியர்கள் தன்னைவிட இரு மடங்கு திறமை உடையவர்கள் என்று வைத்துக்கொண்டால் கூட அவர்கள் யாருமே தங்கள் சாரணப் படைகளில் 32 சாரணர்களுக்கு அதிகம் இருக்க அனுமதி தருதல் கூடாது என்று தான் எண்ணுவதாகவும் கூறியுள்ளார்.

சாரணப் பயிற்சி ஒவ்வொரு சாரணனும் தனித்தனியாகவே கற்றுக் கொள்ள வேண்டிய பயிற்சி. தான் கற்றுக் கொள்ளும் எதனையும் தானே செய்து பார்த்து அனுபவ முறையிலேயே தெரிந்து கொள்ள வேண்டிய பயிற்சி. சிறுவர்கள் சமுதாய வாழ்க்கைக்குத் தங்களை ஆயத்தம் பண்ணிக்கொள்கிற பயிற்சி. மனித வாழ்க்கைக்கு மிகவும் அவசியமாக உள்ள உயரிய பண்புகளைப் பயிற்றுவிக்கும் பயிற்சி. இப்பயிற்சிக்குரிய சூழ்நிலை அழகு பெற அமைந்துள்ள சாரண அணியும் சாரணப் படையுமே ஆகும். இச் சூழ்நிலை அமைப்பில் சாரண ஆசிரியர்கள் தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டுவது மிக அவசியம். அது போலவே அவைகளின் நிர்வாகத்திலும் பேடன்-பவல் பெரியார் கூறியுள்ளவற்றைப் பின்பற்றல் அவசியம் ஆகும். அணிகளை அணிமுறையில் நடத்துவதும், படைகளைக் கண்ணிய மன்றச் சார்பில் பராமரிப்பதும் அவர்களுடைய கடமையாக அமையும்.

## தக்க கட்டுப்பாடு

பேடன்-பவல் பெரியார் சாரணர்களுக்கென்றே சாரண நெறியை வகுத்துள்ளார். பத்துப் பிரிவுடைய இச்சாரண நெறி சாரணனுக்குரிய பண்புகளை ஒவ்வொன்ருக உணர்த்துகின்றது. சாரணன் எத்தகைய பண்புகள் பொருந்தியவன், அவன் இலக்கணம் என்ன என்பதையும் விளக்குகின்றது.

சாரணன் சாரண நெறிகளுக்கும் சாரண வாக்குறுதிக்கும் கட்டுப்பட்டவன். சாரணநெறி அவனுக்கு வாழ்க்கையில் வழிகாட்டியாக அமைந்துள்ளது. சாரண வாக்குறுதி அவன் வாழ்க்கைக்கு உயர்ந்த இலட்சியத்தை அளிக்கிறது. அவனுடைய வாழ்க்கையை பயனுள்ளதாக ஆக்குகிறது. இப்படியான கட்டுப்பாடு சாரணனுடைய வாழ்க்கையைச் செழிப்புறச் செய்கிறது. அவன் முன்னேற்றத்திற்கும் காரணமாக அமைகிறது.

சாரணன் தானுகவே தன் வாழ்க்கையைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டியவன். பிறருக்குப் பயந்து அவன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதில்லை. தானே தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதால் அவனுடைய மனச் சாட்சிக்குத் தெரிந்து அவன் சாரண நெறியிலிருந்து தவறுவதில்லை. வாழ்க்கையில் ஒவ்வொரு நிமிடமும் தன் மனச்சாட்சி எது நியாயம், எது செய்யத் தகுந்தது என்று உணர்த்துகிறதோ அதனைச் செய்கிருன்.

இத்தகைய கட்டுப்பாடான வாழ்க்கையே சாரணப் பயிற்சிக்கு அடிப்படையாக உள்ளது. கட்டுப்பா ான வாழ்க்கையைப் பின்பற்றுவது சாரணனின் முதற் கடமையாகக் கருதப்படும். சாரணப்

பயிற்சி பெற்று தன் அறிவுத்திறனையும் செயலாற்றும் திறனையும் பெருக்கிக் கொள்வது அவனுக்கு இரண்டாவதாக உள்ள கடமை.

## தக்க மேற்பார்வை

சாரணப் பயிற்சி சிறுவர்கள் கையிலேயே விடப்பட்டுள்ள பயிற்சி. அணித்தலைவன் பொறுப்பில் சாரணர்கள் தங்களுக்குரிய பயிற்சிகளைத் தாங்களே தேடிக்கொள்கிறார்கள். சாரணப் பயிற்சியாகிய இந்த வண்டியைத் தானாகவே ஓடவிட்டு அப்படி ஓடுவதனால் அதற்கு யாதொரு கெடுதியும் உண்டாகாதபடி அதைக் காப்பாற்றுவதற்குச் சாரண ஆசிரியரின் மேற்பார்வை அவசியம். சாரண அணியை அணிமுறையை ஒட்டி நடத்துவது அவர் கடமை. சாரணப்படையை கண்ணிய மன்றத்தின் சார்பில் நடத்துவதும் அவருக்குள்ள பொறுப்பு. இந்த முறையில் சாரண ஆசிரியர் படைக்கும் அணிக்கும் உரிய மேற்பார்வை செய்கிறார். சாரண அணியில் உள்ள சாரணர்கள் பெறுகின்ற பயிற்சி நல்ல முறையில் அமைந்துள்ளதா என்பதைக் கண்டறிவது அவருக்குள்ள முக்கிய பொறுப்பு.

இப்படிச் சாரண அணியையும் சாரணப் படையையும் மேற்பார்வை செய்து சாரணர்கள் பெறும் பயிற்சியைக் கண்காணிக்கிற சாரண ஆசிரியர் சில முக்கிய பண்புகள் உடையவராக இருக்க வேண்டும். சிறுவர்களிடம் அவருக்கு உண்மையான அன்பு வேண்டும். அவர் சிறுவர்களின் நன்மையையும் முன்னேற்றத்தையும் விரும்பி அவர்களுக்காக உழைக்கும் அறிவும் ஆற்றலும் படைத்தவராக இருக்கவேண்டும். சிறுவர்கள் மனதுக்குப் பிடித்தமானதும் அவர்கள் நன்மைக் குகந்ததுமான பயிற்சிகளை அவர்களுக்கு அளிக்கும் திறன்படைத்தவராகவும் இருத்தல் வேண்டும். சிறுவர்களோடு சிறுவனாக, அவர்களோடு நெருங்கிப் பழகி, அவர்களுக்கு இயல்பாக உள்ள விருப்பு வெறுப்புகளை நன்குணர்ந்து அவைகளுக்குத் தகுந்த முறையில் தன் பயிற்சித் திட்டத்தை அமைத்துக் கொள்ளும் திறன் உடையவராக இருத்தல் மிக முக்கியமானது. இப்படியான பல முக்கிய பண்புகள் உடைய சாரண ஆசிரியரின் மேற்பார்வை சாரணப் பயிற்சிக்கு நல்ல வெற்றி அளிக்கும்.

## தக்க பயிற்சிகள்

சாரணர்கள் ஈடுபடும் அலுவல்கள் பலப் பல. அவை ஒவ்வொன்றும் மனித வாழ்க்கைக்கு அவசியமான அரிய பண்டகளை வளர்க்கும் இயல்புடையது. அவை சாரணர்களைச் சமூக வாழ்க்கைக்கு ஆயத்தம் செய்யும் நோக்கத்தையும் கொண்டது.

சாரணர்கள் குடிசைகள் அமைக்கிறார்கள். கயிற்றால் பலதரப் பட்ட முடிச்சுகள் கட்டுகிறார்கள். பாலங்கள் அமைக்கிறார்கள்.

கைகளில் சிறு கொடிகளைப் பிடித்துக் கொண்டு தொலைவில் உள்ள தம் நண்பர்களோடு சைகைப் பேசிப் பழகுகிருர்கள். விபத்துகளில் அகப்பட்டுக் கொண்டுள்ளவர்களுக்குத் தகுந்த முதல் உதவி செய்யக் கற்றுக் கொள்கிருர்கள். தண்ணீரில் விழுந்து தத்தளிப்பவர்களை தப்பவைக்கும் முறைகளை முறையாகக் கற்றுக் கொள்கிருர்கள். தீ விபத்தில் அகப்பட்டுக் கொண்டுள்ளவர்களைத் தப்பவைக்கும் முறையைக் கற்றுத் தெரிந்துக் கொள்கிருர்கள். இயற்கை எழில், இயற்கை விசித்திரங்கள், இயற்கை அதிசயங்கள் இவைகளைக் கண்டு மகிழத் திறந்த வெளிவட்டாரங்களில் உல்லாசப் பிரயாணங்கள் செய்கிருர்கள். இயற்கையின் உண்மைகளை ஆராய்ந்து உணர்ந்து கொள்கிருர்கள். மரங்கள், செடிகள், கொடிகள், மிருகங்கள், பறவைகள், நட்சத்திரங்கள், கிரகங்கள் இவைகளைப் பற்றிப் பயிற்சி பெறுகிருர்கள். சுவடுபிடித்தல், அனுமானித்தல், உயரம் நீளம் கண் மதிப்பாகக் கணக்கிடல், தொலைவு கணக்கிடல். என்று பல வகையான பயிற்சிகளும் பெறுகிருர்கள். இவை தவிரத் தாங்கள் நல்ல உடல் நலம் உடையவராவதற்குரிய பயிற்சி, தங்களுக்கு நற்பண்புகள் உண்டாவதற்குரிய பயிற்சி, தன்னலம் மறந்து பிறர் நலம் பேணும் மனப்பான்மை வளர்வதற்குரிய பயிற்சி, தொண்டு மனப்பான்மை உடையவர்களாகத் தொண்டு புரிதலில் உண்மை ஆர்வம் படைத்தவர்களாவதற்குரிய பயிற்சி என்று பலவகையான பயிற்சிகளையும் பெறுகிருர்கள். இவை அனைத்தும் சாரணப் பயிற்சித் திட்டத்தில் அடங்கும்.

சாரணப் பயிற்சிகளுள் ஒருசில உடல் நலத்தை வளர்க்கும் இயல்புடையன; ஒருசில உடல் நலத்தைப் பேணும் இயல்புள்ளவை; ஒருசில சமுதாய வாழ்க்கைக்குப் பயன்படும் ஆற்றல் அளிப்பவை; பல உலகத்தோடு ஒத்துவாழும் உயர்ந்த கலையைக் கற்பிப்பன. இது பாராட்டுக்குரியது.

## தக்க பயிற்சி முறை

அணி நிர்வாகத்துக்குகந்த முறை அணி முறை எனப்படும். படை நிர்வாகத்துக்குகந்த முறை கண்ணிய மன்றத்தின் சார்பில் படையை நடத்துவது. அணி முறையும் கண்ணிய மன்றமும் சாரணியத்துகே உரிய நிர்வாக முறைகள். இவைகளின் தன்மை என்ன. அவைகளைப் பயன்படுத்துவது எப்படி என்பதைப் பேடன்–பவல் பெரியார் விளக்கி உள்ளார்.

அணியின் நிர்வாகத்துக்கு முழுப்பொறுப்பு அணித் தலைவன் என்பது அணி முறையின் அடிப்படைத் தத்துவம். ''தனித் தனியாய்க் கற்றல்'', ''செய்துபார்த்து அனுபவ முறையில் கற்றல்'' என்பவை இரண்டும் சாரணப் பயிற்சி கையாளும் கற்றல் முறை தனித்தனியாய்க் கற்றல் என்பது ஒவ்வொரு சாரணனும் தனித்

தனியாகக் கற்கவேண்டும், தனித்தனியாகக் கற்பிக்கப்பட வேண்டும் என்பதை உணர்த்தும். பள்ளி வகுப்புகள் போல சாரணர்களை ஒரு கும்பலாக வைத்துக் கொண்டு சொற்பொழிவு முறையில் பயிற்சி அளித்தல் அவ்வளவு பயன் தராது. கற்பிப் போரிடமிருந்து சாரணர்கள் தனித் தனியாகக் கற்றுக் கொள்ள வேண்டும். அது தவிர அவர்கள் தங்கள் தங்கள் சொந்த முயற்சியாலேயே கற்றுக் கொள்ளவேண்டும். அப்படித் தனியாகக் கற்பதும் கற்பிக்கப்படுவதை நன்கு தெரிந்து கொண்டுள்ள ஒருவரிட மிருந்து நேர்முகமாகக் கற்றுக்கொள்வது என்பதும் சாரணர்களுக்கு கற்பனவற்றை ஐயம் திரிபறக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பு அளிக்கிறது.

செய்து கற்றல் என்பது நிதர்சனமாக அனுபவ முறையில் கற்றலை உணர்த்தும். பயிற்சி பெறும்பொழுது சாரணர்கள் கையாளும் முறை இதுவே. எந்தக் கலையைக் கற்றாலும் அதை நிதர்சனமாக செயல் முறையிலேயே கற்றல்வேண்டும். செயல் முறையில் கற்றுக் கொள்ளாதது ஏட்டுச் சுரைக்காயாக இருக்கும். செயல்முறை தெரிந்து எதையும் ''செய்து கற்றல் முறை'' யிலேயே கற்றல்தான் பயன் அளிக்கும் என்பது சாரணப்பயிற்சி முறையின் முக்கியத் தத்துவம்.

அணித்தலைவர்களையும் சாரண ஆசிரியரையும் கொண்ட பஞ்சாயத்தைத்தான் கண்ணிய மன்றம் என்கிறோம். சாரண ஆசிரியர் மன்றத்து அங்கத்தினர்களில் ஒருவராயினும் கண்ணிய மன்றக் கூட்டத்தில் பங்கு கொள்ளும் பொழுது அவர் தன்னுடைய அபிப்பிராயத்தை வற்புறுத்தமாட்டார். அணித் தலைவர்களுக்கு தங்கள் தங்கள் அப்பிராயங்களை வெளியிடுவதற்குப் போதுமான அளவு சுதந்திரம் அளிப்பார். அவரவர்கள் உணர்வுப்படி பேசவும் முடிவுகட்டவும் வாய்ப்புக் கொடுப்பது அவர் கடமை. நல்ல முடிவுக்கு வர அவர்களைத் தூண்டுவதும் அவருக்குரிய பொறுப்பு. சாரண ஆசிரியர் இப்படி நடந்து கொண்டால் மட்டுமே அணித் தலைமைச் சிறுவர்களுக்கு நிர்வாகப் பொறுப்பை உணர்ந்து கொள்ள முடியும். சாரண அணிமுறையும் கண்ணிய மன்ற நடவடிக்கை களும் சாரணர்களுக்கும் அணித்தலைவர்களுக்கும் பொறுப்புப் பயிற்சியாய் அமைகின்றன. இது சாரணப் பயிற்சியின் முக்கிய அம்சம். ஒரு நாட்டு மக்கள், நாட்டு மக்களுக்காக நாட்டில் உள்ள மக்களை ஆட்சி புரிவதை நாம் குடி அரசு என்கிறோம். சாரணப் பயிற்சி குடி அரசு அடிப்படையில் அமைந்துள்ள பயிற்சி முறை. சாரணர்கள், சாரணர்களுக்காக, சாரணர்களை ஆட்சிபுரிவது தான் சாரணப் பயிற்சி.

# 12. படை அமைத்தலும் படை நடத்தலும்

புதிதாகச் சாரணப்படை அமைக்கும்பொழுது அதைச் சிறிய படையாகவே அமைப்பது நல்லது. அது பன்னிரண்டு அல்லது பதினறு சிறுவர்களைக் கொண்டதாக இருத்தல் நலம். அந்த சிறுவர்களை இரண்டு அணிகளாக அமைத்து, அணி ஒவ்வொன்றுக்கும் ஒரு அணித்தலைவனையும் ஒரு உதவித்தலைவனையும் நியமித்து அணிகளையும் படையையும் அணி முறையில் நிர்வாகம் செய்ய வேண்டும். இந்த அணிமுறை நிர்வாகம் படை ஆரம்பத்தில் இருந்தே செயல்பட வேண்டும்.

சிறியதாக அமைக்கப்பட்ட சாரணப்படை சில மாதங்களுக்குச் சிறியதாகவே இருக்கவேண்டும். இது மிகவும் முக்கியமாக உள்ளது. படையில் உள்ள சிறுவர்கள் இளம்பாதப் பயிற்சியிலும் இரண்டாம் தரச் சாரணப்பயிற்சியிலும் போதுமான தேர்ச்சி பெறுவது வரை படையை விரிவு பண்ணும் முயற்சியில் ஈடுபடக்கூடாது. அதுவரை இப்பொழுதுள்ள சிறுவர்களை வைத்தே படை நடத்தப்பட வேண்டும்.

முதலில் சேர்க்கப்பட்ட சிறுவர்கள் இளம்பாதப்பயிற்சியை நன்கு கற்றுக்கொள்வதற்கு ஏறக்குறைய இரு மாதங்கள் செல்லும். அவர்கள் இந்தப் பயிற்சியில் நல்ல தேர்ச்சியடைந்த பிறகு சின்னஞ் சூட்டல் சடங்குக்கு ஏற்பாடு செய்யவேண்டும். அவர்கள் சின்னம் பெற்றுச் சாரணர்கள் பதவியை அடைந்த பிறகு அவர்களுக்கு இரண்டாம்தரச் சாரணப் பயிற்சி அளிக்கவேண்டும். இந்தப் பயிற்சிக்கு ஏறக்குறைய ஆறு மாதங்கள் தேவைப்படலாம். இதற்குள் அவர்கள் இளம்பாதப்பயிற்சியும் இரண்டாம்தரப் பயிற்சியும் பெற்றிருப்பதோடு படை நடத்தற்குரிய அணிமுறையையும் அனுபவ முறையாக ஒரு சிறிது அறிந்துகொண்டிருப்பர். இப்படி அவர்கள் தேர்ச்சி பெற்றபின் படையை விரிவுபடுத்தும் முயற்சியை மேற்கொள்ளலாம்.

படை ஆரம்பிப்பதற்கு நமக்குத் தேவையாக உள்ள பன்னிரண்டு அல்லது பதினறு சிறுவர்களை நாம் தேர்ந்து எடுப்பது எப்படி? நாம் நிறுவ நினைக்கும் சாரணப்படை பள்ளிச்சார்புடையதாயின் பள்ளித் தலைமை ஆசிரியரே எல்லா ஏற்பாடுகளையும் செய்யவேண்டும். முன்னதாகவே அவர் பள்ளி ஆசிரியர்களுள் ஒருவரைச் சாரண ஆசிரியராகத் தேர்ந்து எடுத்திருப்பார். தேர்ந்தபின் அவரைச்

சாரண ஆசிரியப் பயிற்சிக்கு அனுப்பிவைத்து அவரும் பயிற்சி பெற்றுப் பள்ளிக்கு திரும்ப வந்திருப்பார். தலைமை ஆசிரியர் இப்பொழுது செய்யவேண்டியது படை அமைத்தலுக்கு வேண்டிய ஏற்பாடுகள் மட்டுமே. பள்ளி மாணவர்கட்கு ஒரு சுற்றறிக்கை விடுத்துச் சாரணப்பயிற்சி பெற விரும்பும் சாரண வயதுள்ள மாணவர் களைத் திரட்டி அவர்களுக்குச் சாரணப் பயிற்சியின் நோக்கத்தையும் அதன் அருமை பெருமைகளையும் எடுத்துக் கூறுவதோடு சாரண ஆசிரியரை அவைகளை நன்கு விளக்கக் கேட்டுக் கொள்ளவேண்டும். அதன்பின் ஒரு தேதியைக் குறிப்பிட்டு, சாரணப் பயிற்சி பெற விரும்பும் மாணவர்கள் தங்கள் பெற்றோர்களுடைய அனுமதிச் சீட்டுடன் வந்து சாரண ஆசிரியரிடம் தங்கள் பெயரைப் பதிவுசெய்து கொள்ளலாம் என்று அறிவித்து பெயர்ப் பதிவு செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். அதன் பிறகு பெயர்ப் பதிவு செய்து கொண்டுள்ள மாணவர்களுக்கு ஐந்து ஆறு நாட்கள் ஒருசில சாரணப்பயிற்சியும் சாரண விளையாட்டுகளையும் கற்பிக்க வேண்டும். அப்படிப் பயிற்சியும் விளையாட்டும் நடக்கும்பொழுது அவைகளில் பங்கு கொள்ளும் மாணவர்களைச் சாரண ஆசிரியர் நன்கு கவனித்தல் வேண்டும். அப்பொழுது அவர்கள் ஒவ்வொருவரிடமும் காணப் படும் பண்புகளைத் தெரிந்து கொள்ளவேண்டும். அவர்களுள் ஒழுக்கமும் கட்டுப்பாடும் உடையவர்களை, பொறுப்புணர்ச்சி பொருந்தியவர்களை, சாரணப்பயிற்சியில் நல்ல ஆர்வமும் அக்கறையும் உடையவர்களைப் பொறுக்கி எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படித் தேர்ந்து எடுத்துக் கொள்ளப்பட்ட பன்னிரண்டு அல்லது பதினறு மாணவர்களை வைத்து நம் சாரணப் படையை ஆரம்பிக்கலாம்.

பெயரைப் பதிவு செய்து பயிற்சியிலும் விளையாட்டுகளிலும் பங்கெடுத்துக் கொண்ட மாணவர்களின் எண்ணிக்கை இருபது அல்லது இருபத்து ஐந்தாக இருக்கலாம். நாம் எடுத்துக்கொண்ட வர்கள் தவிர மீதியாக உள்ளவர்களை ஒரு சில மாதங்களுக்குக் காத் திருக்கக் கேட்டுக்கொண்டு தேர்ந்து எடுக்கப்பட்ட சிறுவர்களுக்கு மட்டும் ஒருசில மாதங்களுக்குப் பயிற்சி அளிக்கவேண்டும். இவர் களுக்கு இளம்பாதப் பயிற்சியும் இரண்டாம்தரப் பயிற்சியும் ஒழுங் காக அளிக்க ஏற்பாடு செய்யவேண்டும். பயிற்சி அளிக்க வேண்டியது சாரண ஆசிரியரே. ஆரம்பம் முதலே அணிமுறைப் படை நிர்வாகத்தை அவர் கையாளுவது அவசியம். படையிலுள்ள சிறுவர்களும் இளம்பாதப் பயிற்சியையும் இரண்டாம்தரப் பயிற்சி யையும் ஐயம் திரிபற கற்றுத் தேர்ச்சி பெறவேண்டும். அதே நேரத்தில் அனுபவ முறையாக அணிமுறைப்படை நிர்வாகத்திலும் அவர்களுக்கு நல்ல பழக்கம் ஏற்படும். தாம் கற்க வேண்டியவை களை நல்ல பொறுப்புணர்ச்சியோடு கற்றுக் கொண்டார்களானல்

பின்னுல் நாம் படையை விரிவு பண்ணும்போது புதிதாகப் படையில் சேர்க்கப்படும் சிறுவர்களுக்கு அவர்கள் நல்ல முன் மாதிரியாக அமைவார்கள். படையும் நல்ல கட்டுப்பாடுடைய படையாகத் திகழும்.

பயிற்சிக்கான படைக்கூட்டங்கள் வாரம் இரண்டுமுறை நடப்பது அவசியம். அப்படி நடைபெறும்பொழுது கூட்டம் ஒன்றரை மணி நேரம் நீடிக்கவேண்டும். முறையாகக் கூட்டங்கள் நடை பெற்ருல் ஏழு எட்டுக்கூட்டங்கள் நடைபெற்றதும் இளம்பாதப் பயிற்சி முடிவடையும். அதன் பின்னர் இன்னும் இருபது அல்லது முப்பது கூட்டங்களில் இரண்டாம்தரப் பயிற்சி முடிவுபெறும். இரண்டு வகைப் பயிற்சிகளுக்குமாக ஒன்பது மாதங்கள் தேவைப்படலாம். படையில் உள்ள மாணவர்களும் இவைகளை நன்கு கற்றுக் கொண்டதன் பின், அதாவது படையை ஆரம்பித்து ஏறக்குறைய ஒன்பது மாத காலமானதும் நாம் காத்திருக்கக் கேட்டுக் கொண் டுள்ள பிற மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளலாம். அப்படிச் சேர்த்துக் கொள்ளப்படும் மாணவர்களின் எண்ணிக்கை பன்னிரண்டு அல்லது பதிஞறுக்கு மேற்படக்கூடாது.

படையிலுள்ள சாரணர்கள் தங்கள் இரண்டாம்தரச் சாரணப் பயிற்சியைப் பெற்றுக்கொள்ளும் போது புதிதாகச் சேர்க்கப்பட் டுள்ள மாணவர்கள் இளம்பாதப் பயிற்சி பெறவேண்டும். படையில் உள்ள அணித் தலைவர்களும் ஏனைய சாரணர்களும் புதிதாகச் சேர்ந் துள்ள மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கலாம். பயிற்சி அளிக்கும் போது பயிற்சி பெறுகிறவர்களுக்குத் தனித்தனியாகவும், செய்ய வேண்டுவது ஒவ்வொன்றையும் செய்து காண்பித்து அவர்கள் தாமே செயல்முறையில் செய்து கற்றுக்கொள்ள வேண்டும்.

படையில் உள்ள சாரணர்கள் படிப்படியாக இளம்பாதப்பயிற்சி, இரண்டாம்தரப் பயிற்சி, முதல்தரப் பயிற்சி என்று எல்லாவகையான சாரணப் பயிற்சிகளையும் கற்றுத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்படிப் பயிற்சி பெறவும் தங்கள் தங்கள் வாழ்க்கை முறையைச் சாரண நெறிப்படி சீர்திருத்தி அமைத்துக் கொள்வதற்கும் ஏற்பட்ட சூழ்நிலையைத்தான் சாரணப்படை என்கிருேம். படையை நடத்தும் பொறுப்புச் சாரண ஆசிரியருடையது. அந்த முக்கியமான கடமை யைச் செயலாற்றுவதில் அணித்தலைவர்களும் ஏனைய சாரணர்களும் அவருக்கு உறுதுணையாக அமைகிருர்கள்.

படை நடத்தல் என்பது இளம்பாதச் சின்னம், இரண்டாம்தரச் சின்னம், முதல்தரச் சின்னம் போன்ற சாரணச் சின்னங்கள் பெறு வதற்குரிய பயிற்சிகளை அளிப்பது மட்டும் அல்ல. பயிற்சிக்குரிய பலதரப்பட்ட செயல்களைச் செயலாற்றி அனுபவம் பெறுகின்ற வாய்ப்பினை சாரணர்களுக்கு அளிப்பதும், சாரணர்களை வெளிவட்டா ரங்களுக்கு அவ்வப்போது அழைத்துச் சென்று இயற்கையின்

அழகையும் இயற்கையில் உள்ள விசித்திரங்களையும் விநோதங்களையும் கண்டுமகிழ அவர்களுக்கு வாய்ப்புத்தருவதையும், இயற்கையின் சிறப்புகளைப் பற்றி அவர்களைச் சிந்திக்கவைத்து அப்படிச் சிந்திப்பதால் எல்லாம் வல்ல இறைவனுடைய பெருமையை ஒரு சிறிது உணர்ந்து கொள்ள வாய்ப்பு அளிப்பதும் படை நடத்தல் என்பதில் அடங்கும். படையை கண்ணிய மன்றத்தின் சார்பில் அணிமுறை என்ற முறையைப் பின்பற்றி நிர்வாகம் செய்வதும் படை நடத்தலில் அடங்கும்.

சாரணர்களுக்குரிய பயிற்சி மூன்று படிகளாக அமைந்துள்ளன. முதலில் இளம்பாதப் பயிற்சி; இது இரு மாதங்களில் முடிவுபெறும் பயிற்சி. இரண்டாவது, இரண்டாம்தரப் பயிற்சி; இது ஐந்தாறு மாதங்களில் முடிவடையக் கூடியது. பின்னர் முதல்தர சாரணப் பயிற்சி; இது முடிவடைய ஒன்பது அல்லது பத்து மாதங்கள் தேவைப் படலாம். சுறுசுறுப்பாக உள்ள சாரணன், தான் சாரணப் படையில் சேர்ந்த இரண்டாவதாண்டு முடிவில் முதல்தரச் சாரணனுக்குரிய தகுதியைப் பெறல் கூடும். ஜனாதிபதி சாரணனாகிய நான்காவது படி ஒன்று இருப்பினும் அதற்கென்று தனியாகப் பயிற்சி எதுவும் இல்லை. முதல்தரச் சாரணத் தகுதி பெற்ற பிறகு சாரணன் தனிக்கலைகள் சில வற்றில் ஈடுபட்டுச் சமூகத் தொண்டு சிலவற்றில் தேர்ச்சி பெற வேண்டும். எல்லாவற்றையும்விட மிக முக்கியமாக உள்ளது அவனுடைய ஒழுக்கமும் உயர் பண்புகளும் ஆகும். ஆகவே, ஜனாதிபதி சின்னத்துக்குரிய பயிற்சி அவன் சாரணப்படையைச் சேர்ந்த அன்றே ஆரம்பமாகிறது எனலாம். சுறுசுறுப்பாகத் தன் கடமைகளைச் செய்யும் சாரணன் தான் சாரணப்படையில் சேர்ந்ததில் இருந்து மூன்று ஆண்டுகளுக்குள் ஜனாதிபதி சாரணனுக்குரிய தகுதி பெறலாம் என்று கூறுவது மிகையாகாது.

குறிப்பு: பள்ளிச் சார்புடைய சாரணப் படை அமைத்தலுக்கு இங்குக் கூறியுள்ளவைகள் ஏனைய வகையான சாரணப் படைகளுக்கும் பொருந்தும். நிறுவ நினைக்கும் சாரணப்படை நிறுவனங்கள் சார்புடையதாக இருக்குமாயின் படை நிறுவுவதற்கு அவசியமான ஏற்பாடுகளை நிறுவனத்தார்கள் செய்யவேண்டும். அந்த நிறுவனத்தைச் சேர்ந்த சிறுவர்களைக் கொண்டு படை அமைக்கலாம். பள்ளி அல்லது நிறுவனங்கள் சார்பில்லாமல் பட்டணங்களிலும் கிராமங்களிலும் நிறுவப்படும் பொது மக்கள் சார்புடைய சாரணப் படைகளானால் (Open Troops) அந்தப் பேட்டையில் உள்ள பிரமுகர்களே தங்களை ஒரு செயல் குழுவாக அமைத்து, சாரணப்படை அமைக்கலாம். படை அமைத்தபின் படையை நடத்தல் எல்லா வகைச் சாரணப் படைகளுக்கும் பொது.

படைகளைப் பதிவு செய்தல் 21-வது அத்தியாயத்தில் விளக்கப் பட்டுள்ளது.

# 13. அணி முறையும் கண்ணிய மன்றமும்

சிறுவர்கள் விளையாடும் பொழுது சிறு சிறு குழுக்களாக நின்று விளையாடுகிறார்கள். ஏதாவது ஒன்றைச் செய்து முடிக்க விரும்பும் பொழுது சிறு சிறு குழுக்களாகவே நின்று செயலாற்றுகிறார்கள். இந்தச் சிறு குழுக்கள் அவைகளைச் சேர்ந்த ஒரு சிறுவனது தலைமைக்குக் கட்டுப்பட்டுத் தம் வாழ்க்கையை நடத்துகின்றன. நல்ல காரியங்களில் போலவே கெட்ட காரியங்களிலும் இந்தக் குழு உணர்ச்சி செயல்படுவதைக் காணலாம். இந்த உணர்ச்சி அவர்களை ஒற்றுமைப் படுத்துகிறது. அவர்களுக்கு ஒரு ஒருமைப் பாட்டுணர்ச்சியைத் தருகிறது. அவர்கள் ஒருவருக்கொருவர் மிகுந்த மதிப்புத் தருகிறார்கள், உண்மை விசுவாசத்துடன் நடந்து கொள்கிறார்கள். இது சிறுவர்கள் சமுதாயத்தின் இயல்பு.

சிறுவர்களின் வருங்கால நன்மையை மனதிற் கொண்டு அவர்கள் முன்னேற்றத்துக்காக சாரணப் பயிற்சித் திட்டத்தை வகுக்க முன்வந்த சாரண இயக்கத் தந்தை பேடன்-பவல் பெரியார் சிறுவர்களை ஒன்றுபடுத்த வல்லதும் அவர்களை ஆக்க வேலைகளில் ஈடுபடச் செய்யும் ஆற்றல் பொருந்தியதுமான இந்தக் குழு உணர்ச்சியை மிகச் சிறந்த, வியக்கத்தக்க முறையில் பயன்படுத்தி உள்ளார். அதுவே சாரண அணி முறை.

## அணி முறை

அணிமுறை என்பது சாரணப் பயிற்சி அளித்தல் முறையாகும். சிறுவர்களைக் கூட்டமாக வைத்துப் பள்ளி வகுப்புகள் நடத்தப் படுவதுபோல ஆசிரியர் உரையாற்ற சிறுவர்கள் அதனைக் கேட்டல் நல்ல பயன் தராது என்று நன்குணர்ந்த பேடன்-பவல் பெரியார் சாரணப் பயிற்சி அளித்தலை ''அணி''கள் என்ற சிறு சிறு குழுக்கள் அடிப்படையில் அமைத்துள்ளார்: அணி என்பது ஆறு அல்லது ஏழு அல்லது எட்டுச் சாரணச் சிறுவர்களைக் கொண்ட ஒரு சிறு குழு. சாரணப் பயிற்சி அளிப்பது இந்த அணி அடிப்படையில் இருக்கவேண்டும். சாரணர்களை ஏதாவது அலுவல்களில் ஈடுபடுத்து வதும் இந்த அடிப்படையிலேயேதான் அமையவேண்டும். அணியில் உள்ள ஒரு சிறுவனைத் தலைவனாகத் தேர்ந்து எடுத்துக் கொண்டு,

அணிக்குள்ள பயிற்சி அளித்தல் பொறுப்பு, செயலாற்றல் பொறுப்பு என்ற எல்லாப் பொறுப்புகளையும் அணியின் சார்பில் அவனிடம் ஒப்படைத்து, அந்தப் பலதிறப்பட்ட பொறுப்புகளை நிர்வகிக்க அவனைத் தூண்டுவது சாரண அணிமுறையின் அடிப்படைத் தத்துவம்.

எட்டுச் சிறுவர்களைக் கொண்ட அணி சாதாரணமாக உள்ள சாரண அலுவல்கள் எதனையும் பொறுப்பேற்றுச் செயலாற்றப் போதுமான வலு உடையதாக இருக்கும். ஆறு அல்லது ஏழு சிறுவர்களைக் கொண்ட அணிகள் அவ்வளவு வலு உடையன ஆகா. எண்ணிக்கை குறைந்த அணிகளும் தங்களுக்குத் தரப்பட்டுள்ள அலுவல்களைத் திறமையுடன் செயலாற்றலாம். ஆனாலும் அவைகள் எவ்வளவு விரைவாக தங்கள் எண்ணிக்கைக் குறைவை நிறைவு பண்ணலாமோ அவ்வளவு விரைவாக அவைகள் நிறைந்த எண்ணுள்ள அணிகளாக மாறவேண்டும்.

சாரணப் பயிற்சி, அணி அடிப்படையில் அளிக்கப்பட வேண்டிய பயிற்சி. ஆயினும், மூன்று, நான்கு அணிகள் ஒத்துழைத்து ஒரு சாரண ஆசிரியர் மேற்பார்வையில் இருப்பது அவ்வணிகளுக்கு நல்லது. சாரணப் பயிற்சியின் சில அம்சங்களுக்கு இந்தக் கூட்டுறவு அவசியம். இப்படிக் கூடிவாழும் அணிகளையே சாரணப்படை என்பர். மூன்று, நான்கு அணிகளைக்கொண்ட கூட்டுறவு, சாரணப் படையாகும் என்று கூறுவது பொருத்தமுடையது.

அணிமுறை என்பது அணித்தலைவனே அணிக்குப் பொறுப்பு என்றுள்ள கொள்கையைச் செயல்முறையில் கொண்டு வருவதாகும். ஆசிரியருக்கு அணித்தலைவனின் செயலாற்றும் ஆற்றலில் பூரண நம்பிக்கை இருப்பது அவசியம். அவன் சிறியவன் ஆயிற்றே. பொறுப்பைச் சரிவர நிறைவேற்றும் ஆற்றல் அவனுக்கு உண்டா? என்று வீணான ஐயப்பாடுகள் இருக்கக் கூடாது. சிறுவனாயினும் அவன் பொறுப்பு உணர்ச்சி உள்ளவன். நாம் தூண்டுதல் அளித்தால் அவன் தனக்குள்ள பொறுப்பை எப்படியும் நிறைவேற்றுவான், என்ற நம்பிக்கை ஆசிரியருக்கு வேண்டும். சாரணியம் என்பது ஒன்று, சாரணக்கலை என்பது மற்றொன்று. இது அறிவைப் பெருக்கும். முன்னது பண்புகளை வளர்க்கும். இந்த வேறுபாட்டை நன்குணர்ந்த சாரண ஆசிரியர் இத்தகைய நம்பிக்கை உடையவர் ஆவர். தன் அணித்தலைவர்களிடம் சிறு காரியங்களில் போலவே பெரிய காரியங்களிலும் நிறைந்த நம்பிக்கை வைப்பார். அணித் தலைவர்கள் பயிற்சி அடைந்துள்ள தலைவர்கள் அல்ல; அவர்கள் தலைவர்களாக பயிற்சிபெறும் சிறுவர்கள்; எதிர்காலத்தில் நாட்டின் நற்குடி மக்களாக, திறமை உடைய தலைவர்களாகத் திகழ்வதற்கு இப்பொழுது பயிற்சிபெறும் சிறுவர்கள்; இதை நாம்

ஒருபொழுதும் மறந்துவிடக் கூடாது. இப்பொழுது அவர்கள் பெறுகின்ற ப்யிற்சி தன்னுடன் இருக்கும் சிறுவர்களுக்காகப் பொறுப்பு ஏற்று அந்தப் பொறுப்பை நிர்வகிக்கக் கற்றுக்கொள்ளும் பயிற்சி. இந்த வாய்ப்பு எளிதில் கிட்டக்கூடிய வாய்ப்பு அல்ல. இத்தகைய அரிய வாய்ப்பைத் தன் அணித்தலைவர்களுக்கு அளித்து அவர்களுடைய ஆற்றலையும் செயல் திறனையும் பெருக்குவதைச் சிந்தித்துப் பார்க்கும் பொழுது அது நாட்டுக்குச் செய்யப்படும் சிறப்புடைய நற்றெண்டாகவே கருதப்படும்.

அணி ஈடுபடுகின்ற அலுவல்களில் அல்லது அது பங்கு கொள்ளும் விளையாட்டுகளில் அணிக்கு வெற்றி உண்டாகும்படி அணியை இயக்குவது அணித் தலைவனுடைய கடமைகளுள் முக்கிய மானது. அணி ஆற்றும் பொதுநலத் தொண்டுகளில் தன் சாரணர்கள் எந்த எந்த இடத்தில் எப்படியெப்படித் தொண்டு ஆற்றல் வேண்டும் என்று அணியோடு கலந்து ஆலோசித்துத் திட்டம் வகுத்து அந்த திட்டப்படி செயலாற்றுவது அணித்தலைவனுக் குள்ள பொறுப்பு. அணி பங்குகொள்ளும் விளையாட்டுகளில் எந்த முறையில் யார் யார் எப்படியெப்படி எந்தெந்தப் பொறுப்பேற்று விளையாடவேண்டும் என்று அணியோடு கலந்துகொண்டு திட்டம் வகுத்து, வகுக்கப்பட்ட திட்டப்படி செயலாற்றும் பொறுப்பு அணித் தலைவனுக்குள்ள பொறுப்பு. சாரணக் கலைப்பயிற்சியிலும், சாரண அணிக் கூட்டங்களிலும், சாரணப்படைக் கூட்டங்களிலும் அணித் தலைவனுக்குள்ள பொறுப்பு அதே தன்மை பொருந்தியது. தன் சாரணர்கள் சாரணக்கலை ஏணியில் எந்தெந்தப் படியில் இப்பொழுது இருக்கிறார்கள், எந்தெந்தப் படிக்கு ஏறிச்செல்ல வேண்டும் என்பதை முடிவுகட்டி அந்த முடிவுப்படி அவர்களுக்கு ஊக்கம் அளித்து அவர்களை முன்னேறச் செய்வதும் அணித்தலைவனுக்குள்ள பொறுப்பு களில் ஒன்று. அணி நிர்வாகம் என்றால் இந்த மாதிரியான பல பொறுப்புகளையும் ஏற்று நடத்துவது ஆகும்.

அணிக்குரிய எல்லாப் பொறுப்பையும் அணித்தலைவனிடம் விட்டுவிடுவது அணி முறையின் செயல்முறை. அணிமுறை சாரணப் பயிற்சியின் உயிர்நிலை. அணிமுறை தானே இயங்கும் முறை அல்ல. இயங்க வைத்தாலன்றி அது இயங்காது. அதை இயங்கவைக்கும் பொறுப்பு சாரண ஆசிரியருடையது. அவர் நம்பிக்கையோடு அதனை இயங்க வைத்தல் வேண்டும். சாரண ஆசிரியர் அணித் தலைவர்களுக்கு இரண்டொரு சலுகைகள் அளிப்பது அவசியம். அணித் தலைவர்களை ஒரு தனி அணியாகக் கருதி அந்த அணிக்கு நல்ல பயிற்சி அளித்து அவர்களைத் தங்கள் அணிகளைவிட இரண் டொரு படிக்குமேல் இருந்துவரும்படி செய்வது சாரண ஆசிரியருக்கு

மிக முக்கியமாக உள்ள கடமை. ''தன்னை அவர்கள் வேண்டும் போதெல்லாம் சந்திக்கலாம், தன் சாரணப் படையில் நடக்க இருக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றி விவரமாக அவர்கள் தெரிந்து கொள்ளலாம்'' என்பவை போன்ற சில தனி உரிமைகள் அவர்களுக்குத் தரப்படவேண்டும். மேலும், ஒவ்வொரு அணிக்கும் தேவைப்படும் தனிப்பாசறை தனிப்பயிற்சி போன்ற அணி நிகழ்ச்சிகளில் சாரண ஆசிரியர் அணித் தலைவர்களோடு ஒத்துழைத்து அவர்களுக்கு உதவிபுரிவதும் மிக அவசியம்.

சாரணப் பயிற்சியாகிய தேருக்கு அச்சாணியாக இருப்பது சாரணத் தலைவன். சாரணத் தலைவனின் முக்கியத்துவத்தை சாரண ஆசிரியர் தானும் நன்குணர வேண்டும், மற்றவர்களையும் அதை நன்குணரும்படி செய்யவேண்டும். இது மிகவும் முக்கியமானது.

## கண்ணிய மன்றம்

கண்ணிய மன்றம் என்பது சாரணப் படையை நிர்வகிக்கும் பஞ்சாயத்து என்று கூறலாம். படையின் கண்ணியத்தைப் பாதுகாப்பது அதற்குரிய கடமை. படையைச் சேர்ந்த அணிகளைச் சாரணக்கலை அறிவிலும் சாரணப் பண்பு வளர்ச்சியிலும் படிப்படியாக முன்னேற்றம் அடையச் செய்வதும் அதன் கடமையேயாகும். இந்தக் கடமைகளை படைக்கண்ணிய மன்றம் சாரண ஆசிரியரின் மேற்பார்வையில் நிறைவேற்றுகிறது.

அணித்தலைவர்களும் சாரண ஆசிரியரும் கண்ணிய மன்றத்தின் அங்கத்தினர்கள் ஆவர். படைத்தலைவன் இருப்பின் அவன் கண்ணிய மன்றத்தின் தலைவனாகப் பணிபுரிய வேண்டும். கண்ணிய மன்றக் கூட்டங்களை நடத்தும் பொறுப்பு, கூட்டத்தில் அங்கத்தினர் பேச்சுக்களைக் கண்காணித்தல், பரிசீலனை செய்யப்படும் பொருள்களை ஒரு முடிவுக்குக் கொண்டுவருவது, மன்றம் வந்துள்ள முடிவு என்ன என்பதை விளக்குதல் போன்ற பல பொறுப்புகள் தலைவருக்கு உண்டு.

படைத்தலைவன் இல்லாத படையானால், அணித்தலைவர்களுள் ஒருவனைத் தலைவனாகத் தேர்ந்து எடுத்துக்கொள்ள வேண்டும். அது போலவே இன்னொரு அணித்தலைவனை மன்றத்தின் செயலாளனாகத் தேர்ந்து எடுத்துக்கொள்ள வேண்டும்.

சாரண ஆசிரியரை மன்றத்தின் தலைவராகத் தேர்ந்து எடுப்பது கூடாது. அவர் தலைவராகச் செயலாற்றினால் அது அணித்தலைவர்கள் பெறக்கூடிய பொறுப்புப் பயிற்சியைப் பாதிக்கும். அத்தகைய பயிற்சிக்குப் போதுமான வாய்ப்பு இல்லாமல் போய்விடும்.

கண்ணிய மன்றக் கூட்டங்களில் பங்கு கொள்ளும் சாரண ஆசிரியர் பார்வையாளர் நிலையிலேயே செயலாற்றவேண்டும்.



207. கண்ணிய மன்றக் கூட்டம்—(C. O. H. Meeting)

அணித்தலைவர்கள்தாம் பொருள்களைப் பற்றி முடிவு செய்ய வேண்டும். நிகழ்ச்சி நிரலில் உள்ளவைகளுக்கு சாதகமாகவும் பாதகமாகவும், அவைகளை "ஒட்டியும்" "வெட்டியும்" பேசுவது அணித் தலைவர்களின் உரிமை. ஆசிரியர் அதில் தன்னை ஈடுபடுத் தாமல் இருப்பது நல்லது. அணித்தலைவர்களுக்கு மனம் திறந்து பேச அனுமதி தரவேண்டிய பொறுப்பு தலைவருக்கு உண்டு. அவர் அனுமதி தந்தாலும் ஆசிரியர் இடை இடையே பேச முன்வந்தால் அணித்தலைவர்கள் பொருள்களைப் பற்றி சிந்திப்பதில், அவைகளின் நன்மை தீமைகளை ஆராய்ந்து பார்ப்பதில் பின்வாங்குவார்கள்.

படையில் உள்ள உதவி ஆசிரியர், மன்றக் கூட்டங்களில் கலந்து கொள்ளும் பொழுது பார்வையாளர் என்ற முறையிலே கலந்து கொள்ளவேண்டும். மன்றத்தின் ஆலோசனைகளில், அதன் முடிவு களில் தலையிடல் ஆகாது.

மன்றக் கூட்டங்கள் மாதம் ஒரு முறை நடைபெறலாம். அவசியம் உள்ளபொழுது இரண்டு முறையும் கூடலாம். கூட்டங்கள் மிகக் கண்ணியமான முறையில் கூடவேண்டும். கூட்டம் கூடு வதற்குக் குறிப்பிடப்பட்டுள்ள நேரத்துக்குப் பல நிமிடங்களுக்கு முன்னேயே அங்கத்தினர்கள் கூடி தங்கள் தங்கள் இருக்கையில்

இருக்கவேண்டும். குறித்த நேரம் வந்ததும் தலைவர் கூட்டத்தை எச்சரித்து அதனை ஒழுங்கு நிலைக்குக் கொண்டுவருவர். உடனே நடவடிக்கைகள் ஆரம்பம் ஆகும்.

முதன் முதலில் முந்திய கூட்ட நடவடிக்கைகளைப்பற்றிய குறிப்பு (Minutes of the previous meeting) படிக்கப்படவேண்டும். செய்யப் பட்டுள்ள முடிவுகள் முறையாகப் பதிவு செய்யப்பட்டுள்ளனவா என்று கேட்டு கூட்டத்தில் யாரும் ஆட்சேபணை சொல்லவில்லை யானால் எழுதியுள்ள குறிப்பில் தன் கையெழுத்திடுவார். ஆட்சேபணை யிருப்பின் அவசியமான திருத்தங்களைச்செய்து அப்புறம் கையெழுத் திடுவார். இந்தக் குறிப்புப் புத்தகத்தை செயலாளர் பத்திரமாக வைத்திருப்பார். அதற்குரிய வேலைகள் முடிந்ததும் ஆசிரியரிடம் ஒப்படைத்துவிட வேண்டும்.

கண்ணிய மன்ற நடவடிக்கைகள் அணித்தலைவர்களாகிய அங்கத்தினர்களுக்கு குடி அரசு முறையில் அளிக்கப்படும் நிர்வாகப் பயிற்சி.

கண்ணிய மன்றக் கூட்டங்களில் அணித்தலைவர்கள் கூறுவது எல்லாம் தங்கள் தங்கள் அணியின் சார்பிலே கூறப்பட வேண்டும். நிகழ்ச்சி நிரலில் காணப்படும் பொருள்கள் அனைத்தும் அந்தக் கோணத்தில்தான் பரிசீலிக்கப்பட வேண்டும். அதற்கு அணித் தலைவர்கள் ஒவ்வொருவரும் கண்ணிய மன்றக் கூட்டத்துக்கு வருவதற்குமுன் தங்கள் தங்கள் அணியைக் கூட்டி அணியில் உள்ள தங்கள் சாரணர்களின் அபிப்பிராயத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வது மிக முக்கியமானது. அணியைக் கூட்ட வாய்ப்பு இருக்கு மானால் அப்படிச் செய்வது நல்லது. வாய்ப்பு இல்லாத ஒரு சில சந்தர்ப்பத்தில் தனித்தனியாக அணிச் சாரணர்களை சந்தித்துக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். அணிக்கூட்டம் அணிப் பஞ்சாயத்து (Patrol-in-Council) எனப்படும்.

சாரணப் பயிற்சி குடிமை உணர்ச்சியைத் தருவது, வருங்காலக் குடிமைப் பொறுப்புக்கு சாரணர்களை ஆளாக்கி விடுகிறது என்று கூறிக்கொள்ளும் சாரண ஆசிரியர்களாகிய நாம், கணணிய மன்றக் கூட்டங்களை நல்ல பயன் தரும் முறையில் செயலாற்றத் தவறக் கூடாது.



# 14. ஒழுங்கும் கட்டுப்பாடும்

ஒழுங்கும் கட்டுப்பாடும் சாரண வாழ்க்கை முறையின் சிகரங்கள். ஒழுக்கம் உள்ள வாழ்க்கைப் போற்றத் தகுந்த வாழ்க்கை. ஒழுங்கான வாழ்க்கை எப்படி அமைய வேண்டும் என்பதை நன்குணர்ந்த நம் முன்னோர்கள் அதன் அமைப்பை நமது இதிகாச புராணங்கள் வாயிலாக அழகிய கதை உருவத்தில் நமக்குத் தந்துள்ளார்கள். தெய்வப் புலமைத் திருவள்ளுவப் பெருந்தகை தம் திருக்குறளில் வையத்துநாம் வாழ்வாங்கு வாழ வழிவகுத்துத் தந்துள்ளார். நம் சாரண இயக்கத் தந்தை பேடன்-பவலாரும் சிறுவர்கள் நல்லொழுக்கத்தை எளிதில் அடையப் பத்துப் பிரிவுள்ள சாரண நெறியை அமைத்துத் தந்துள்ளார். சாரண நெறி ஒழுக்கத்தைக் கற்பிக்கின்றது. ஒழுக்கத்துக்கு அடிப்படையாக உள்ள கட்டுப்பாட்டை வற்புறுத்துகின்றது. சாரணப் பயிற்சி பற்பல கலைகளை கற்பிப்பது போல ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் கற்பிக்கின்ற ஒரு பயிற்சி.

சாரண நெறியைப் பின்பற்றுகிற வாழ்க்கை மிக்க ஒழுக்கம் உடைய வாழ்க்கையாக அமையும். சாரண நெறி வாய்மையை வளர்க்கிறது. உண்மை விசுவாசத்தையும் தொண்டு புரிதல் மனப்பான்மையைப் புகட்டுகின்றது. நட்பின் பெருமையை உணர்த்துகின்றது. நண்பனாக மட்டும் இருந்தால் போதாது. சகோதரனாகவும் இருத்தல் அவசியம் என்பதை வற்புறுத்துகிறது. செயலிலும் சொல்லிலும் விநயம் வேண்டும் என்பதை உணர்த்துகின்றது. இறைவன் சிருஷ்டிகளாகிய பிராணிகளிடத்தில் உண்மையான கருணையும் அன்பும் இருக்க வேண்டும் என்பதை வற்புறுத்துகிறது. கீழ்ப்படிதலும் கட்டுப்பாடும் உள்ள வாழ்க்கையின் பெருமையை உணர்த்துகின்றது. துயரங்கள் உற்ற காலத்தும் மனத் தளர்வு அடையக்கூடாது என்பதை வலியுறுத்துகிறது. சிக்கனமான வாழ்க்கையின் பெருமையை எடுத்துக் கூறுகின்றது. மனத்தில், பேச்சில், செயலில், தூய்மை அவசியம் என்பதை விளக்குகின்றது. இத்தகைய பண்புகளை வளரச் செய்யும் சாரண நெறியைப் பின்பற்றுவார்களானால் சாரணர்கள் நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைந்து நல்லொழுக்கம் உடையவர்களாகத் திகழ்வார்கள் என்பதற்கு ஐயமில்லை. சாரண நெறி பத்து முக்கிய பண்புகளை உருவாக்குகின்றது. அப்பண்புகளின் அருமை பெருமைகளை உணர்ந்து அவைகளைப் பேணும் பணியில் ஈடுபடுவதை

விட, உத்தமமான கடமை வேறு எதுவும் இல்லை சாரணர்களுக்கு ஒழுக்கத்தைக் கற்பிப்பது சாரண நெறியே.

கட்டுப்பாடு என்பது கடமையின் குரலுக்குக் கீழ்படிந்து நடப்பது. கட்டுப்பாடு இருவகைப்படும். உள்ளிருந்து செயல்படும் கட்டுப்பாடு ஒருவகை. அது ஒழுக்க உணர்ச்சி அடிப்படையில் உள்ளது. ஒழுங்கான வாழ்க்கைக்கு உதவியாக இருப்பது. இத்தகைய கட்டுப் பாடு நன்மை செய்யும். இதுவே சாரண இயக்கத்தில் உள்ள கட்டுப் பாடு. வெளியிலிருந்து செயல்படவைக்கும் கட்டுப்பாடு பயத்தின் அடிப்படையில் தோன்றியுள்ள கட்டுப்பாடு. யாருக்கோ, எதற் காகவோ பயந்து தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் கட்டுப்பாடு. இத்தகைய கட்டுப்பாடு நல்ல பயன் அளிக்காது. ஒரு கண்காணிப்பு இல்லையானால் கட்டுப்பாடும் இல்லாது போய்விடும். கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்வது தனக்கு உண்டாகக்கூடிய கெடுதியிலிருந்து தப்பித்துக் கொள்வதற்கே ஆகும். கடமைக்கும் இந்தக் கட்டுப் பாட்டுக்கும் எந்த வகையான சம்பந்தமும் இல்லை

சாரணப் பயிற்சியில் வளர்க்கப்படும் கட்டுப்பாடு ஒழுக்க உணர்ச்சி, கட்டுப்பாட்டுணர்ச்சி அடிப்படையில் பிறந்துள்ள கட்டுப் பாடு. சாரண ஆசிரியர்களும் சாரண அணித்தலைவர்களும் இத்தகைய கட்டுப்பாட்டுக்காகவே உழைத்தல் வேண்டும். இத்தகைய கட்டுப் பாடுமட்டுமே பொதுவாழ்வுக்குப் பயன்படக்கூடிய கட்டுப்பாடு.



# 15. சாரணப் பயிற்சியும் விளையாட்டுகளும்

சாரணப் பயிற்சி முறையில் விளையாட்டுகள் முக்கிய இடம் பெறு கின்றன. விளையாட்டுகள் உடற்பயிற்சி அளிக்கும், மன உற்சாகத் தைத் தரும், நல்ல பண்புகளையும் வளர்க்கும். விளையாட்டுகள் முறையாக நடைபெற்றால் அவை உடற்பயிற்சியோடு பண்புப் பயிற் சியும் அளிக்கும்.

சாரணர்கள் விளையாட்டில் ஈடுபடும்போது உரிய கட்டுப்பாட் டுடன் ஈடுபட வேண்டும். விளையாடும்போது சாரணர்கள் நியாய மான முறைகளையே கையாள வேண்டும். வெற்றிதான் குறி என்ற குறுகிய மனப்பான்மை சாரணர்களுக்கு பொருத்த முடையதல்ல. வெற்றி பெறுவதைவிட முக்கியமானது ஒரு சிறிதும் முறைதவராமல் விளையாட்டில் பங்கு கொள்வதே ஆகும். வெற்றி வரலாம், வராமற் போகலாம். ஆனால் தாங்கள் விளையாடின முறை கண்ணியம் பொருந்தியது, பாராட்டுக்குரியதாக இருந்தது என்ற பெயர்தான் பெருமை தருவது.

விளையாட்டுகளின் விதிகளை நன்குணர்ந்து கொண்டு, அவற்றை ஒரு சிறிதும் புறக்கணிக்காமல், எதிராளியை ஏமாற்றாமல், விதி களுக்கு அடங்கியே விளையாடுவதுதான் முறை. அது பாராட்டுக் குரியது. அப்படித்தான் விளையாட வேண்டும் என்ற மனப்பான் மையை நம் சாரணர்களுக்கிடையில் வளர்க்க நாம் முன் வர வேண்டும். அந்த மனப்பான்மையே பெருமையும் நல்ல மதிப்பையும் அளிக்க வல்லது. நாட்டுக்கு நன்மை பயக்கக் கூடியதும் அதுவே. அப்படியான நன் மதிப்பைப் பெறுவதே, ஒவ்வொரு சாரணனுடைய நோக்கமாக அமைவது மிக அவசியம். தன் சாரணப்படையின் கண்ணியத்தைக் காப்பதற்கு இப்படியான மனப்பான்மை இன்றிய மையாதது.

ஆனால் சாரண ஆசிரியர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய சிறு உண்மை ஒன்று உண்டு. விளையாட்டு நேரத்தில் சிறுவர்களாகிய சாரணர்கள் சிறிது பரபரப்புடன் நடந்து கொள்வது இயல்பு. அந்தப் பரபரப்பு அவர்களை நிலை பிறழச் செய்யலாம். அவற்றை அக்கறை யோடு கவனித்து அந்த இடத்திலேயே, உடனுக்குடன், அவர்களைத்

திருத்த வேண்டிய பொறுப்பு சாரண ஆசிரியர்களுக்கு உண்டு. திருத்துவது இன் சொல்லால் செய்யப்பட வேண்டும். ஆயினும் ஆசிரியர் கண்டிப்பாகவே இருத்தல் வேண்டும். அவர்கள் அதை மறந்து விடலாகாது.

சாரண விளையாட்டுகளை நடத்துகையில் அந்தந்த விளையாட்டுகளுக்குரிய விதிகளை சாரண ஆசிரியர்கள் மிகத் தெளிவாக ஒரு முறைக்கு இரு முறை விளக்க வேண்டும். அப்படிச் செய்வது மேற்கூறிய குறைகளைத் தடுக்கும். ஒரு சில சந்தர்ப்பங்களில் சாரணர்கள் இயற்றும் பிழைகள் அறியாமையினால் உண்டாவனவாகும். விதிகளைப் பொறுமையுடன் கேட்டுத் தெரிந்து கொள்ளாத காரணத்தினாலும் தவறுகள் ஏற்படலாம். சாரண ஆசிரியர்கள் மிகப் பொறுமையுடன் நடந்து கொள்ள வேண்டும். ஆனால் வேண்டும் என்று தவறிழைப்பதாக இருந்தால் மிகக் கடுமையாக அதைக் கவனித்தல் அவசியம்.

விளையாட்டுகளில் வெற்றி, சிறுவர்களுக்கு இறுமாப்பைத் தருவது இயல்பு. அதைப் போல தோல்வியும் மனச் சோர்வைத் தரலாம். வெற்றியையும் தோல்வியையும் ஒரே நிதானமுள்ள மன அமைதியுடன் ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மை சாரணர்களுக்கு மிக அவசியம். அதனை விளையாட்டுகள் மூலம் உண்டுபண்ணுவது சாரண ஆசிரியர்கள் கடமை.

## விளையாட்டுப் பிரிவுகள்

சாரண விளையாட்டுகளை பல பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. பொது விளையாட்டுகள். (Troop Games)

இவை அணிகள் என்ற பாகுபாடின்றி படையில் உள்ள சாரணர்கள் எல்லோரும் பங்கு கொள்ளும் விளையாட்டுக்கள். எல்லோரும் பங்கு கொள்வதால் படை உணர்ச்சி (Troop Spirit)யை வளர்க்க வல்லன.

இத்தகைய விளையாட்டுகள் படைப் பயிற்சிக் கூட்ட ஆரம்பத்தில் 10 அல்லது 15 நிமிடங்களுக்குப் பொருத்தமுடையன. இவை சாரணர்களை சுறுசுறுப்பாக்கி அன்று அவர்கள் செய்ய எண்ணும் அலுவல்களுக்கு அவர்களைத் தயார் பண்ணும் இயல்புடையன ஆகும்

இந்த விளையாட்டுகளில் ஒரு சிலருக்கே வெற்றி என்ற நிலை வரலாம். அதைச் சிற்சில வேளைகளில் தவிர்த்தல் அவசியம். அதற்காக விளையாட்டு விதிகளை ஒரு சிறிது மாற்றி அமைத்து ஓடும் திறமை உள்ளவர்கள் போலவே மற்றவர்களுக்கும் வெற்றி அளிக்கலாம்.

2. கட்சி விளையாட்டுகள் (Team Games) என்பன படையில் உள்ள சாரணர்களை இரண்டு கட்சிகளாகப் பிரித்து அந்த கட்சி களுக்கிடையில் போட்டியைத் தூண்டும் விளையாட்டுகள்.

3. அணிமுறைப் போட்டி விளையாட்டுகள் (Relay Games) என்பன அணி முறையில் நடத்தப்படும் போட்டி விளையாட்டு களைக் குறிக்கும். இவை அணியில் உள்ள ஒவ்வொரு சாரணனும் போட்டியில் தனக்குள்ள பங்கை நிறைவேற்றித் தன் அணிக்கு வெற்றி தேடித்தருகின்ற தன்மை உடையன.

4. ஐம்புலப் பயிற்சி விளையாட்டுக்கள் (Sense Training Games) என்பன சாரணர்களுக்குத் தங்கள் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன்களுக்கும் பயிற்சி அளிக்கும் விளையாட்டுக்கள்.

5. சாரணத் தேர்ச்சி விளையாட்டுகள் (Test Games) என்பன இளம்பாதன், இரண்டாம்தரச் சாரணன், முதல் தரச் சாரணன், என்ற பதவிகளுக்குரிய சாரணப் பயிற்சி அளித்தற்குள்ள விளையாட்டுகள்.

6. அமைதி விளையாட்டுகள் (Quiet Games) என்பன ஓடி ஆடிக் களைத்துள்ள சாரணர்கள் இளைப்பாறிக் கொண்டே விளையாடக் கூடிய விளையாட்டுகள்.

7. அணி விளையாட்டுகள் (Patrol Games) என்பன அணியில் உள்ள எட்டுச் சிறுவர்கள் மட்டும் தங்கள் தங்கள் விளையாட்டுத் திடலில் ஆடத் தகுந்த விளையாட்டுகள்.

8. பரந்த வெளி விளையாட்டுகள் (Wide Games) என்பன மிக விசாலமான வெளியிடங்களில் இரு கட்சிகளாக விளையாடத் தகுந்த விளையாட்டுகள்.

இந்த விளையாட்டுகளில் ஒரு கட்சியினர் போட்டுள்ள திட்டங்களை மறு கட்சியினர் தடுப்பார்கள்.

இந்த விளையாட்டுகளை விளையாடும் போது சாரணர்கள் எதிர் கட்சியினர் பார்வையில் சிக்கிக் கொள்ளாமல் மறைவாக இருந்தே விளையாடுவது மிக முக்கியமானது. இவைகளை விளையாடுவதில் போருக்குரிய பல முறைகளையும் கையாளலாம்.

9. இரவு விளையாட்டுகள் (Night Games) இவைகளும் போர் புரியும் முறையில் விளையாடப்படும் விளையாட்டுகளே ஆயினும் இரவில் மட்டுமே விளையாடக் கூடியவை.

இப்படியான பலதரப்பட்ட விளையாட்டுகளை விவரிக்கின்ற பல புத்தகங்கள் உள்ளன. அவை அனைத்தும் ஆங்கிலத்திலே உள்ளன. இப்புத்தகங்களுள் முக்கியமானவை (1) சாரண விளையாட்டுகள் — Scout Games — பேடன்-பவல் இயற்றியது (2) சாரணர்களுக்குரிய வெளி விளையாட்டுகள் — Out door Games for Scouts — ஜான் தர்மனும் ஹொர்பாட்டும் இயற்றியது. (3) சாரணர்களுக்குரிய உள் விளையாட்டுகள் — Indoor Games for Scouts — ரெக்ஸ் ஹேசல்வுட் இயற்றியது. (4) 1201 விளையாட்டுகள் — Y. M. C. A. பதிப்பு. (5) சிறுவர் சாரணியம் — Scouting for Boys. — பேடன்-பவல் இயற்றியது.

ஐந்தாவதாகக் கூறி உள்ள சிறுவர் சாரணியம் — Scouting for Boys — என்பது சாரணியத்தை விவரிக்கும் நூல் ஆக இருப்பினும் அதில் ஏராளமான விளையாட்டுகள் தரப்பட்டுள்ளன. இவை சாரணியத்துக்கு மிகவும் பொருத்தமுள்ளவை என்று சொல்லத் தேவை இல்லை.

சாரண ஆசிரியர்கள் இங்கு கூறப்பட்டுள்ள விளையாட்டுப் புத்தகங்களை நன்கு பயன்படுத்த வேண்டும். மேலும் ஒவ்வொருவரும் தனக்கு என்று சாரண விளையாட்டுக் குறிப்புப் புத்தகம் ஒன்று எழுதித் தயார் செய்துக் கொள்வதும் மிக அவசியம். பல புத்தகங்களில் இருந்து விளையாட்டுகளை அவ்வப்போது பொறுக்கி எடுத்து அவற்றைத் தங்கள் கைப் புத்தகத்தில் குறித்து வைத்துக் கொள்வது மிக நல்ல பழக்கம்.

விளையாட்டுகளைக் குறித்து வைத்துக் கொள்ளும் புத்தகங்கள் மாணவர்கள் பள்ளியில் உபயோகிக்கிற நோட்டுப் புத்தகம்போல் இருக்கவேண்டும். ஒரு பக்கத்தில் ஒரு விளையாட்டு என்ற முறையில் அந்தப் புத்தகம் எழுதப்படவேண்டும். மேலும் ஒவ்வொரு விளையாட்டைப் பற்றிச் சில விவரங்களும் தரப்படவேண்டும்.

1. விளையாட்டின் பிரிவு — அதன் பெயர்
2. எடுக்கப்பட்ட புத்தகத்தின் பெயர்
3. விளையாட்டுக்குத் தேவைப்படும் கருவிகள்
4. விளையாடும் முறை
5. விளையாடின தேதி — சாரணர்களின் வரவேற்பு (கருத்து)

சாரண ஆசிரியர்கள் பயிற்சிக் கூட்டங்களில் ஒவ்வொரு நாளும் என்னென்ன விளையாட்டுகள் விளையாடப்பட்டன, அவற்றைச் சாரணர்கள் எப்படி வரவேற்றார்கள், என்று குறித்து வைத்துக் கொள்ளுதல் அவசியம். ஒரே ஆட்டத்தை மறுபடியும் மறுபடியும்

விளையாடுவதால் சாரணர்களுக்கு அலுப்பு உண்டாகும். அதற்கு இடங்கொடுத்தல் கூடாது. புதுப்புது ஆட்டங்களை ஆட முயற்சி செய்யவேண்டும்.

விளையாட்டுகள் உடற்பயிற்சி அளிக்கின்றன. அவை பண்புப் பயிற்சியும் அளிக்கும் திறனுடையவை. விளையாட்டுகளை நல்ல முறையில் விளையாடவேண்டும். அதாவது நல்ல சூழ்நிலையில், நல்ல கட்டுப்பாடுடன் நல்ல உணர்ச்சியோடு விளையாடவேண்டும். சாரண ஆசிரியர்கள் அளிக்கிற விளையாட்டுகளை விளையாடுவதோடு சாரண அணித்தலைவர்களும் தங்கள் தங்கள் சாரணர்களுக்குப் பல மாதிரியான விளையாட்டுகள் விளையாடும் வாய்ப்பு அளித்தல் வேண்டும்.

சாரணர்களுக்குப் பொருத்தமுள்ள விளையாட்டுகள் ஒரு சில முன் மாதிரியாக இங்கு தரப்பட்டுள்ளன.

## 1. பொது விளையாட்டுகள்

1. **சிங்கமும் கூடும் :** சாரணர்கள் மூவர் மூவராகப் பிரிந்து கொண்டு அவர்களுள் ஒரு சிங்கமும் ஏனைய இருவர்கள் கூடாகவும் நிற்கவேண்டும். ஒருவரையொருவர் பார்க்கும்படி நின்று கொண்டு கைகளைக் கோர்த்துக் கொள்வது கூடு. ஆரம்பத்தில் சிங்கங்கள் கூட்டுக்குள் இருக்கவேண்டும். விளையாட்டை நடத்தும் நடுவர் ''இப்பொழுது சிங்கங்கள் கூடுவிட்டுக் கூடுபாயும்'' என்று அறிவித்து விட்டு, ''மாறுங்கள்'' என்று கட்டளையிடுவார். உடனே கூடுகள் கையை உயர்த்த சிங்கங்கள் வெளியேறி வேறொரு கூட்டில் நுழைந்து கொள்ளும். சிங்கம் நுழைந்ததும் கூடு மூடிக்கொள்ளும்.

விளையாட்டு நிபந்தனை : ஒரு சிங்கம் ஒருதரம் இருந்த கூட்டுக்குள் மறுபடி உடனே நுழையக் கூடாது. அதற்கு அடுத்த முறை நுழையலாம்.

2. **திருடர்களின் கிராமம் :** சாரணர்களை நால்வர் நால்வராக நான்கு அல்லது ஐந்து வரிசையாக நிற்கவைக்க வேண்டும். அவர்கள் எல்லோரும் ஒரு திசையைப் பார்த்த வண்ணம் நின்று தங்கள் கைகளைக் கோர்த்துக்கொள்ள வேண்டும். அப்புறம் எல்லோரும் தாங்கள் நிற்கும் நிலையிலேயே வலம் திரும்பவேண்டும். இப்பொழுது மறுபடியும் தங்கள் கைகளை முன்போல கோர்த்துக் கொள்ளவேண்டும். விளையாட்டு நடுவர் ''வலம் திரும்பு'' ''வலம் திரும்பு'' என்று கட்டளை தந்து கைகோர்த்திருப்பதை சரிபண்ணிக் கொள்ளவேண்டும், சாரணர்கள் கைகோர்த்து நிற்பது கிராமத்திலுள்ள தெருக்கள். ''வலம் திரும்பு'' என்று கட்டளை இடும் போது தெருக்கள் மாறி அமைவதுபோலாகும்.

தெருவாகப் பணியாற்றும் சாரணர்கள் தவிர வேறு இரண்டு சாரணர்கள் வேண்டும். அவர்களுள் ஒருவன் திருடன், இன்னொருவன் காவலன். தெருக்களை மாற்றி அமைத்து நடுவர் காவலனிடம் பிடிபடாத வண்ணம் திருடனைக் காப்பாற்றுவார். ''வலம் திரும்பு'' என்று கூறலாம், அல்லது ''மாற்றம்'' என்று கூறுவதே போதும்.

3. **கண் இழந்த சிலந்தி :** மரக்கிளை ஒன்றில் ஏழு எட்டுக் கயிறுகளைத் தொங்கவிட்டு ஒவ்வொரு கயிற்றையும் ஒரு சாரணன் பிடித்துக்கொள்ள வேண்டும். அதில் ஒரு சாரணனை மட்டும் கண்ணைக் கட்டிவிட்டு அவன் கையில் தினசரிப் பத்திரிகைச் சுருள் ஒன்று கொடுக்க வேண்டும். ஆட்டம் ஆரம்பமானதும் கண் கட்டப் பட்டுள்ள சாரணன் மற்றவர்களை விரட்டி விரட்டித் தன் கையில் உள்ள பத்திரிகைச் சுருளைக்கொண்டு அடிப்பான். சாரணர்கள் யாருமே தன் கயிற்றை விட்டுவிடக்கூடாது. அதைப் பிடித்துக் கொண்டே விளையாட வேண்டும். கயிறுகள் ஒன்றோடு ஒன்று பின்னி சிலந்திவலை போல இருக்கும். சற்று நேரத்துக்குப் பிறகு வேறொரு சிலந்தியைப் போட்டு விளையாட்டைத் தொடரலாம்.



208. கண் இழந்த சிலந்தி
(The Blind Spider)

வசதி இருக்குமானால் பத்துப் பன்னிரண்டு கயிறுகளைக் கட்டி விட்டுக்கொண்டு அதே எண்ணிக்கை உள்ள சாரணர்கள் விளையாடலாம்.

4. **மூன்று பேர் ரதம் :** சாரணர்கள் மூவர் மூவர்களாக, ஒருவர் முன்னும் இருவர் பின்னும் நின்று ரதத்தை அமைக்க வேண்டும். ரதங்கள் எல்லாம் வரிசையாக ஒரு கோட்டில் நிற்க வேண்டும். 4 மீட்டர் தொலைவில் உள்ள கோட்டுக்கு ரதத்தை ஓட்டிச் செல்லவேண்டும். இது போட்டியாக விளையாடப்பட வேண்டும்.

5. **சுழல் ராட்டினம் :** தரையில் கட்டுத் தறி ஒன்றை அடித்து ஒன்றரை அல்லது இரண்டு மீட்டர் நீளமுள்ள கயிற்றின் ஒருமுனை தறியிலும் இன்னொருமுனை ஒரு சாரணனின் காலிலும் கட்டி வைக்க வேண்டும். இந்தக் கட்டுத் தறியைச்சுற்றி பல வேறு பொருள்களைப் போட்டு வைக்கவேண்டும். பாக்கியுள்ள சாரணர்கள் அந்தப் பொருள்களை எடுத்துக்கொண்டு ஓடப்பார்ப்பார்கள். தறியோடு கட்டப்பட்டு நிற்கும் சாரணன் அவர்கள் எடுத்துக்கொண்டு போவதைத் தடுக்கும் முறையில் இலேசான புளிய முத்துப்பை ஒன்றை நீளக் கயிற்றில் கட்டி வைத்துக் கொண்டு அதைச் சுழற்றிக் கொண்டிருப்பான். அதையும் மீறி பொருள்களை எடுக்கும் சாரணர்களுக்கு வெற்றி.

விளையாட்டு நிபந்தனை : பை சுழலும் போது 20 அல்லது 30 சென்டிமீட்டர் உயரம் தான் சுழலலாம். அதிக உயரம் கூடாது.

6. **நச்சுப் பொய்கை :** விளையாட்டு மைதானத்தில் இரண்டு மூன்று நச்சுப் பொய்கைகளை அமைக்கவேண்டும். அவைகள் ஒன்றுக்கொன்று 2 அல்லது 3 மீட்டர் தொலைவில் இருக்கவேண்டும். நச்சுப் பொய்கை என்பது தரையில் வரையப்பட்டுள்ள வட்டங்கள். சாரணர்கள் எல்லோரும் கைகளைக் கோர்த்துப் பிடித்துக்கொண்டு ஒவ்வொருவரும் தங்களுக்கு அடுத்துள்ள சாரணர்களை நச்சுப் பொய்கையில் கால்பட வைக்கவேண்டும்.

விளையாடும்போது கோர்த்துள்ள கையை விட்டுவிடக் கூடாது.

7. **தண்டம் உஷார் :** சாரணர்களை வட்டமாக நிற்க வைத்து, வட்டத்தின் மத்தியில் விளையாட்டு நடுவர், சாரணர் தண்டம் ஒன்றைத் தரையில் நட்டமாக வைத்து அது விழுந்து விடாதபடி ஒரு விரலால் அதைத் தாங்கிக் கொண்டிருப்பார் வட்டத்தில் நிற்கும் சாரணர்களை எண் எடுக்கக் கட்டளை தர வேண்டும். எண் எடுத்து முடிந்ததும் ஏதாவது ஒரு சாரணனை அவன் எண்ணால் அழைத்து, தண்டத்தின் மீதிருக்கும் தன் கையையும் எடுத்துவிடுவார். தண்டம் தரையில் விழுவதற்கு முன் அழைத்து வந்த சாரணன் அதனைப் பிடித்துக் கொள்ளவேண்டும். தண்டத்தைப் பிடித்துக் கொண்டால் அவன் அணிக்கு ஒரு மதிப்பெண். தண்டம் கீழே விழுந்தால் அவன் அணி இரண்டு மதிப்பெண் இழக்கும்.



209. சாரணச் செக்காட்டம்

8. **சாரணச் செக்காட்டம் :** சாரணன் ஒருவன் நடுவில் நிற்க ஏனைய சாரணர்கள் அவனைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு தங்கள் காலால் அவன் கால்களை அமுக்கிப் பிடிக்கிறார்கள். நடுவில் நிற்பவன் தன் உடம்பை விரைப்பாகவைத்துக் கொண்டு உட்கார்ந் திருப்பவர்கள் மேல் விழுகிறான். அவனை உட்கார்ந்திருக்கும் சார ணர்கள் தங்கள் கையால் தள்ளி விடுகிறார்கள். நடுவில் நிற்பவன் செக்குச் சுற்றுவது போலச் சுழன்று கொண்டு வருகிறான். ஒரு நிமிடம் ஆனதும் வேறொரு சாரணன் நடுவில் நிற்க விளையாட்டு முன் போலவே நடக்கிறது.

9. **பாசறைத் திருடன் :** இது பாசறையில் விளையாட வேண்டிய விளையாட்டு, கைக்குட்டை அகலத்தில் உள்ள ஒரு சிவப்புத்துணியை எல்லோரும் பார்க்கும்போது ஒரு மரக் கிளையில் அல்லது வேறெங்காவது பகிரங்கமாக விரித்து வைக்கவேண்டும். விளையாட்டு நடுவர் ஒவ்வொரு சாரணனிடமும் சென்று அவன் ஈடுபட் டுள்ள சாரண அலுவல்களுக்கு இடைஞ்சல் இல்லாத முறையில் ரகசி யமாக அவனிடம் ''இன்று திருடன் வருவான், ஜாக்கிரதை'' என்று சொல்வார். ஆனால் ஒரு சாரணனிடம் மட்டும் அதைச் சொல்லும் போது கூடுதலாக ''நீ தான் அந்தத் திருடன்.'' ''இரயில் நிலையம்'' அல்லது ''அஞ்சல் நிலையம்'' என்று ஒரு இடத்தையும் குறிப்பிடுவார். பகிரங்கமாகப் போட்டு வைக்கப்பட்ட அந்தச் சிவப்புத் துணியை யாருக்கும் தெரியாமல் எடுத்துக் கொண்டு ரயில் நிலையத்துக்கு அல்லது வேறு குறிப்பிட்ட இடத்துக்கு ஓடி அங்கு ஒளிந்து கொள்ள வேண்டும் என்று பொருள். அதன்பின் சாரணர்கள் தங்கள் தங்கள் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருக்கையில் சிவப்புத் துணி விரித்து வைத்திருந்த இடத்தில் இல்லை என்பதைக் கவனித்த ஒரு

சாரணன் திருடுபோய் விட்டது என்பதற்கு அடையாளமாக அபாயக் குறியை எழுப்பி, சாரணர்கள் எல்லோரையும் சேர்த்துக் கொண்டு ஓடிப் பல இடங்களிலும் தேடிக் கடைசியில் திருடன் இருக்கும் இடத்தை அடைந்து திருடனைப் பிடிப்பார்கள்.

**குறிப்பு:** இந்த விளையாட்டுக்கு ஒருமணி நேரம் தேவைப்படும். திருடன் ஒளிந்து கொள்ளும் இடம் பாசறையிலிருந்து அண்மையில் இருக்க வேண்டும். அரை கிலோ மீட்டர் அல்லது ஒரு கிலோ மீட்டர் தொலைவு இருக்கலாம். ஒளிவதற்கு நல்ல இடம் அவசியம்.

## 2. கட்சி விளையாட்டுகள்

1. **கைக்குட்டை எனக்கு:** சாரணர்களை இரண்டு கட்சிகளாக அமைத்து, இருகட்சிகளும் ஒன்றையொன்று பார்த்தவண்ணம் எதிர் எதிராக நிற்கவேண்டும். இரண்டு கட்சிக்கும் இடையில் 4 மீட்டர் தொலைவு இருக்கவேண்டும். இரண்டு கட்சிகளிலும் உள்ள சாரணர்கள் வலம் இருந்து இடமாக எண்ணிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டு கட்சிகளுக்கும் நடுவில் ஒரு கைக்குட்டையைத் தரையில் விரித்துப் போட வேண்டும். அப்படி இல்லையானால் அது, கட்டுத் தறியின் மேல் போட்டு வைக்கப்படலாம்.

இரு கட்சியிலுள்ள சாரணர்களும் தங்கள் எண்ணிக்கைப்படி இரண்டு இரண்டு பேர்களாக வந்து கைக்குட்டையை எடுத்துக் கொண்டு தங்கள் கட்சிக்கு ஓடிவிடவேண்டும்.

ஓடிச் சென்ற உடனே எடுத்துக் கொள்வது என்பது முடியாத காரியம். ஒரு சாரணன் கைக்குட்டையைத் தொட்டபின் அடுத்த சாரணன் அவனைத் தொட்டுவிட்டால் முந்தின சாரணன் தன் உயிரை இழப்பான். ஆகவே, இரு சாரணர்களும் ஓடி வந்து தக்க தருணத்துக்குக் காத்திருந்து எதிராளி ஏமாந்து இருக்கும் பொழுது கைக்குட்டையை எடுத்துக் கொண்டு ஓடிவிடவேண்டும்.

விளையாட்டு நடுவர் ஒரு எண்ணைக் கூறின உடன் அந்த எண்ணுடைய இரு சாரணர்களும் கைக்குட்டையை நோக்கி ஓடிப்போய் அங்கு உரிய தருணத்துக்காகக் காத்திருந்து தங்கள் காரியத்தை முடித்துக் கொள்ள வேண்டும்.

2. **சேவல் போர்:** கையைக் கட்டிக் கொண்டு நொண்டியடித்துக் கொண்டு புஜத்துக்குப்புஜம் தாக்குவது சேவல் போர் எனப்படும். போர் செய்யும் பொழுது கையை அவிழ்த்து விடக் கூடாது, காலும் தரையில் படக் கூடாது, நொண்டி யடிக்கும் காலிலேயே நிற்க வேண்டும்.

இரண்டு அல்லது மூன்று மீட்டர் விட்டம் உள்ள வட்டம் ஒன்றை விளையாட்டு மைதானத்தில் வரைந்து கொண்டு அதனுள் போர் புரிய வேண்டும் வட்டத்துக்கு வெளியில் ஒவ்வொரு அணியிலிருந்து ஒரு சாரணன் ஆயத்தமாக நிற்க வேண்டும். நடுவர் ஊதலை ஊதின உடன் கை கட்டி நொண்டி அடித்து வட்டத்துக்குள் சென்று ஒருவரோடொருவர் போர் புரிய வேண்டும். கடைசியில் மிஞ்சுகிற சாரணன் அணிக்கு ஒரு மதிப்பெண். அப்படி மதிப்பெண்களைக் கூட்டி எந்த அணிக்கு மிகுதி மதிப்பெண் வருகின்றனவோ அதற்கு வெற்றி.

3. **பாசறை ஹாக்கி :** சாரணர்களை இரண்டு கட்சிகளாகப் பிரித்து ஒன்ருேடொன்று போட்டியிட்டு விளையாடக் கூடிய ஆட்டம். கட்சிகளுக்கும் தனித்தனி இரண்டு ''கோல்''. பந்துக்கு டென்னிஸ் பந்து போதுமானது. விறகுக் கட்டைகளை பந்து மட்டைகளாகப் பயன் படுத்தலாம். விறகுக் கட்டையால் பந்தைத் தட்டிக்கொண்டு போய் கோலில் போட வேண்டும்.

4. **பாசறைக் கால் பந்து:** சாரணர்களை இரண்டு கட்சியாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். இந்த விளையாட்டுக்குக் கால் பந்தை உபயோகிக்கலாம். அல்லது பழைய துணிகளை இறுகப் பந்துபோல் தைத்து வைத்துப் பயன்படுத்தலாம். இரண்டு கட்சிக்கும் இரண்டு ''கோல்'' அமைத்து ஆடவேண்டும்.

5. **பாசறை எறிபந்து :** இந்த ஆட்டத்தை ''வாலிபால்'' என்பதைப்போல விளையாடலாம். வலைக்குப் பதில் ஒரு நீளக் கயிற்றினை இரண்டு மரங்களில் கட்டிக் கொள்ளலாம். ஒரு அணி இன்னொரு அணியோடு விளையாடலாம். அல்லது சாரணர்களை இரண்டு கட்சியாகப் பிரித்துக்கொண்டு இருகட்சியாக விளையாடலாம்.

6. **பாசறை அடிபந்து :** ''கிரிக்கட்'' ஆடுவதுபோல ஆடக் கூடிய ஆட்டம். ஒருகட்சி பந்துவீச முன்வந்துள்ளபோது மறுகட்சியினர் ஒருவர் ஒருவராக வந்து பந்து அடிக்கலாம். ''ஓட்டங்கள்'' கணக்கிடுவதற்காக ஒரு இடத்தில் ''கிரிக்கட் தளம்'' (Pitch) ஒன்று வேண்டும். அதன் இருபக்கத்திலும் மூன்று மூன்று கொம்புகள் தரையில் நட்டுவைக்க வேண்டும். ஆனல் எளிதில் விழுந்த விடக் கூடிய நிலையில் நட்டுவைக்கப் படவேண்டும். பந்து எல்லையைத் தாண்டினுல் ஆறு ஓட்டங்கள். எல்லைவரைச் சென்றுவிட்டால் நான்கு. ஆட்டத்தில் ஒருகட்சிக்கு ஒரு ''இன்னிங்ஸ்''.

7. **பேய்ப் பந்து :** சாரணர்களை இரண்டு கட்சிகளாகப் பிரித்து ஒரு கட்சி வட்டத்துக்குள்ளும் மறு கட்சி வெளியிலும் நிற்பார்கள். வெளியில் நிற்போர் கால்பந்து ஒன்ருல் உள்ளிருக்கும்

சாரணர்களைக் குறிபார்த்து எறிவார்கள். உள்ளிருப்பவர்கள் தப்பித்துக்கொள்ளப் பார்ப்பார்கள். பந்து பட்டவர்கள் தங்கள் உயிரிழப்பார்கள். ஒருகட்சியை முழுமையாக வெளியேற்றப் பிடிக்கும் நேரம் எவ்வளவு என்று கணக்கிட்டு, மிகுந்த நேரம் ஆட்டத்தை யிழக்காமல் விளையாடுகிற கட்சிக்கு வெற்றி.

## 3. அணிப்போட்டி விளையாட்டுக்கள்

1. **வடம் வலித்தல் :** நான்கு அணிகள் இந்த வடம் வலித்தல் போட்டியில் பங்கு கொள்ளலாம். வடத்தின் இருநுனியையும் இணைத்துக் கட்டி, கட்டியுள்ள வடத்தைத் தரையில் ஒரு சதுரமாக வைக்கவேண்டும். அப்புறம் கயிற்றை ஒட்டி ஒரு சதுரம் வரையவேண்டும். பிறகு முதல் சதுரத்திலிருந்து 2 மீட்டர் தொலைவில் அதற்கு வெளியில் இன்னும் ஒரு சதுரம் வரைந்து கொள்ளவேண்டும்.

உள்ளே இருக்கும் சதுரத்தில் நின்றுகொண்டு நான்கு அணிகளும் வடம் வலிக்கும். அந்தந்த அணிகள் தங்கள் தங்கள் அருகிலுள்ள வெளிச் சதுரத்துக்கு மற்றவர்களை இழுத்துச் சென்று சதுரத்தின் பக்கத்தைத் தாண்டிச் செல்லவேண்டும். அப்படி இழுத்துச் செல்லும் அணிக்கு வெற்றி.

2. **பலசரக்கு :** சாரணர்கள் கூடி இருக்கும் பொழுது சிறு கைப்பெட்டி ஒன்றைத் தூக்கிக்கொண்டு சாரண ஆசிரியர் அல்லது சாரணர்களுக்குத் தெரிந்த ஒருவர் வருகிறார். பிறகு தன் பெட்டியைத் திறந்து அதனுள் இருக்கும் பொருள்களை ஒவ்வொன்ருக வெளியில் எடுத்து எல்லோருக்கும் காண்பித்து விட்டு அதனைப்பற்றி இரண்டொரு வார்த்தைகள் கூறுகிறார். கடைசியாகப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு போய்விடுகிறார். மற்ற அலுவல்கள் நடந்து கொண்டிருக்கும். அரைமணி நேரம் அல்லது ஒருமணி நேரத்துக்குப் பிறகு சாரணர்கள் தாங்கள் கண்ட பொருள்களை வரிசையாக எழுதவேண்டும். இது ''கிம்'' விளையாட்டைச் சேர்ந்த விளையாட்டு.

3. **நற்பணிப் போட்டி :** குறிப்பிட்ட ஒரு கால அளவில் ஒரு அணி எத்தனை நற்பணிகள் செய்கிறதென்பதையும் அவை எத்தகைய நற்பணிகள் என்பதையும் கவனிக்க வாய்ப்பு அளிக்கும் போட்டி. ஒவ்வொரு அணியையும் ஒவ்வொரு திசையில் அனுப்பி அங்கு அவர்களுடைய முயற்சியால் எந்த மாதிரி எத்தனை நற்பணிகள் செய்யும் வாய்ப்புக் கிடைக்கின்றன என்று பார்க்க வேண்டும். புறப்பட்ட நேரத்தில் இருந்து 3 மணி நேரம் நற்பணி செய்துவிட்டு அவர்களை படைக் கூடத்துக்கு வரச்சொல்லலாம்.

1௨'

கட்டுத்தறிகள்
3'-2" இடைவெளி
உருட்டும்
கட்டை 3' நீளம்

3'௨"

6'

3'௨''

1௨''

கட்டை 3' நீளம்



210. கட்டை உருட்டல்
(Log Rolling)

வந்தபிறகு அவரவர்கள் செய்த நற்பணிகளை விவரிக்கச் சொல்ல வேண்டும்.

4. **கட்டை உருட்டல் :** இதை அணிப் போட்டியாக விளையாடலாம். ஒவ்வொரு சாரணனும் இந்தக் கட்டையை உருட்டவேண்டிய முறையில் உருட்டவேண்டும். ஒருவன் செய்து முடித்ததும் அதே அணியில் உள்ள இன்னொருவன் உருட்ட வேண்டும். அப்படி அணியில் உள்ள எல்லாரும் உருட்டி முடிந்ததும் எத்தனை நிமிடங்கள் ஆயின என்பதைக் கவனித்துக் கொள்ளவேண்டும். அப்படி ஒவ்வொரு அணிக்கும் கணக்கிட வேண்டும். வரைந்துள்ள கோடுகளுக்கு வெளியே கட்டை போனால் அப்படிச் சென்ற ஒவ்வொரு தடவையும் ஒருமதிப்பெண் இழக்கவேண்டும். கட்டுத்தறிகளில் கட்டை மோதினால் அப்படி மோதின ஒவ்வொரு தடவையும் ஒரு மதிப்பெண் இழக்கவேண்டும். கடைசியில் எந்த அணி குறைவாக மதிப்பெண் இழந்துள்ளதோ அதற்கு வெற்றி.

5. **தவளைப் பந்தயம் :** ஒன்றுக்கொன்று 5 மீட்டர் இடை வெளியுள்ள இரண்டு இணைகோடுகளை வரைந்து ஒருகோட்டில் சாரண அணிகள் விளையாட்டு வரிசையில் நிற்க வைக்க வேண்டும். ஒவ்வொரு அணியிலிருந்தும் ஒரு சாரணன் எதிர் கோட்டில் தன் அணிக்கு எதிராக நிற்கவேண்டும். நடுவர் ஊதலை ஊதி ஆட்டத்தை ஆரம்பித்ததும் ஒவ்வொரு அணியிலும் முதலில் நிற்கும் சாரணன் தவளை தத்துவது போலவே தத்தித் தத்திச் சென்று அங்கு நிற்கும் சாரணனை ஒரு முழுச்சுற்று சுற்றி விட்டு எழுந்து ஓட்டமாக ஓடித் தன் அணியில் அடுத்து உள்ள சாரணனைத் தொடவேண்டும். தொட்டதும் அவன் தவளைபோல் தத்திச் சென்று எதிர் கோட்டை அடைந்து அங்குள்ள சாரணனை ஒரு முழுச்சுற்றுச் சுற்றி அப்புறம் எழுந்து ஓடிவந்து அடுத்த சாரணனைத் தொடவேண்டும். இப்படி அணியில் உள்ள ஒவ்வொருவரும் செய்ததும் அணியில் உள்ள சாரணர்கள் ஒன்றுபோல எழுந்து நிற்கவேண்டும். தங்கள் அலுவலை முதலாவதாக முடித்த அணிக்கு வெற்றி.

6. **பாம்பு சட்டை உரித்தல் :** அணிகள் விளையாட்டு வரிசை யில் நின்று கொண்டு குனிந்து பிறகு ஒவ்வொரு சாரணனும் தன் இடக்கையைத் தன் கால்களுக்கு நடுவில் பின்னாலும், வலக்கை யைத் தனக்கு முன்னாலும் நீட்டவேண்டும். அப்படிச் சாரணர்கள் கைகளைக் கோர்த்துக் கொண்டு வரிசையாகப் பின்னுக்கு நகர்ந்து கைகளை விடாமலே தரையில் மல்லாந்து படுத்துக்கொள்ள வேண்டும். கைகளை விடாமலே உடனே எழுந்திருந்து அது போலவே முன்னுக்குச் செல்லவேண்டும். இந்த வேலையை எந்த அணி முதலில் முடிக்கிறதோ அந்த அணிக்கு வெற்றி.

7. **அணி ஓட்டப் பந்தயம் :** அணிகள் விளையாட்டு வரிசையில் ஒரு கோட்டில் நிற்கவேண்டும். அவைகள் நிற்பதற்கு எதிரில் ஓடவேண்டிய தொலைவைக் குறிக்க இன்னொரு கோடு வரைந்து அதில் ஒரு கல்லும் வைக்கவேண்டும். பந்தயம் ஆரம்பிப்பதற்கு முன்னால் ஒவ்வொரு அணியிலும் உள்ள முதல் எண் சாரணன் கையில் மாத்திரைக் கோல் ஒன்று கொடுக்கவேண்டும். போட்டி ஆரம்பமான உடன் முதல் எண் சாரணர்கள் ஓட்டமாக ஓடி எதிர்ப் பக்கம் உள்ள கோட்டை அடைந்து அப்புறம் அங்குள்ள கல்லைச் சுற்றிவந்து பழயபடி தன் அணிக்கு ஓடி அங்கு அடுத்த சாரணனிடம் மாத்திரைக் கோலைக் கொடுக்கவேண்டும். அவனும் அது போலவே ஓடவேண்டும். பூரா வேலையையும் முதலில் முடிக்கிற அணி வெற்றி பெறும்.

## 4. ஐம்புலப் பயிற்சி

1. **கடற்கொள்ளைத் தலைவன் :** இரண்டு மீட்டர் ஆரை உள்ள வட்டத்தின் நடுவில் கண் கட்டப்பட்ட கடற்கொள்ளைத் தலைவன் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அவனுடைய கத்தி அவன் பக்கத்தில் தரையில் குத்தி வைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அணியிலிருந்தும் ஒரு சாரணன் வட்டத்துக்கு அருகில் வந்து நிற்கிறான். நடுவர் ஊதலை ஊதினதும் மூவர்களும் சந்தடி செய்யாமல் வட்டத்துக்குள் சென்று கத்தியை எடுத்துக்கொண்டுவர முயல்கிறார்கள். யாராவது வருகிற சத்தத்தைக் கேட்டுக் கடற்கொள்ளைத்தலைவன் தன்கையால் சத்தம் வரும் திசையைச் சுட்டிக் காட்டினால் வந்தவர் உயிர் இழப்பார். கத்தியை எடுத்துக்கொண்டு போகும்பொழுது கையைக் காண்பித்தாலும் அப்படியே.

2. **அங்குஸ்தானைத் தேடல் -** சாரணர்களை வெளியே அனுப்பிவிட்டுச் சாரண ஆசிரியர் ஏதாவது ஒரு புதுப்பொருளை அறைக்குள்ளே எளிதில் பார்த்துக்கொள்ள முடியாத, ஆனால் கூர்ந்து பார்த்தால் கண்ணுக்குத் தென்படக்கூடிய இடத்தில் வைக்க வேண்டும். இதற்குப்பின் சாரணர்களை அறைக்குள் அழைக்க, அவர்கள் வந்து, முன் இல்லாத பொருள் இப்பொழுது அறையில் இருப்பது என்ன என்று தேட வேண்டும். அவர்களுள் யாராவது அப் பொருளைப் பார்த்து விட்டால் பார்த்தவர் உடனே உட்கார்ந்துவிட வேண்டும். சற்று நேரத்துக்குப் பிறகு கண்டவர்கள் காணாதவர்களுக்குக் காண்பிக்க வேண்டும்.

3. **வாசனை அறியவல்ல மூக்கு -** சிறு காகிதப்பைகளுக்குள் வாசனை பொருந்திய பல பொருள்களைப் போட்டு வைக்க வேண்டும். உதாரணமாக—ஒன்றில் வெங்காயம், இன்னொன்றில் காப்பித்தூள், இன்னொன்றில் சீரகம், இன்னொன்றில் மிளகு, இன்னொன்றில்

மல்லிகைப்பூ என்று இருக்கலாம். அவைகளை மூன்று அல்லது நான்கு அடிக்கு ஒன்ருக வைத்துவிட்டு சாரணர்களை ஒவ்வொரு வராக வந்து பைக்குள் வைக்கப்பட்டிருக்கும் பொருள்களை முகர்ந்து பார்த்து அவை என்னென்ன என்று கூறும்படி சொல்லலாம் சாரணர் கள் உடனுக்குடன் கூறலாம். அல்லது எல்லாவற்றையும் முகர்ந்து பார்த்த பிறகு ஒரு இடத்தில் உட்கார்ந்து கொண்டு அவைகளை வரிசையாக எழுதலாம்.

4. **பேய் வீடு** - கதவு மூடியிருக்கிற வீட்டுக்குள்ளிருந்து பல ஒலிகள் கேட்கின்றன, அவை என்ன? என்பது இந்த விளையாட்டு.

சாரண ஆசிரியர் தம் சாரணர்களோடு அறைக்கு வெளியே உட்கார்ந்துகொள்ள வேண்டும். தன் உதவி ஆள் அறைக்குள்ளி ருந்து பல ஒலிகளை எழுப்புவார். அவை என்ன என்ன என்பதை விளையாட்டு முடிந்தபிறகு வரிசையாய் எழுத வேண்டும். அவர் எழுப்பக்கூடிய ஒலிகள்—தண்ணீரைக் குடத்திலிருந்து அண்டாவில் ஊற்றுவது; அரிக்கேன் லாந்தரில் எண்ணெ ஊற்றி அதை விளக்கு எரிக்கத் தயார் பண்ணுவது; புத்தகத்தைத் திடீரென்று மூடுவது; வந்த பத்திரிகையைப் பிரித்துப் படிப்பது; மேஜை நாற்காலிகளை இடம் விட்டு வேறு இடத்தில் போடுவது; கால் பந்துக்குக் காற்று அடிப்பது; சைக்கிள் வண்டியை அதன் பரணில் இருந்து இறக்கித் துடைத்துக் காற்றடித்து வைத்தல் முதலியன.

5. **சீருடை மாற்றம்** - சீருடை அணிந்துள்ள சாரணன் எளிதில் அறிந்துகொள்ள முடியாத சில மாற்றங்களைச் செய்து கொண்டு சாரணர்கள் முன்னிலையில் ஒரு நிமிட நேரம் நிற்றல் மற்றவர்கள் மாற்றங்களை எழுதல். இது உற்றுப்பார்த்தல் பயிற்சி.

சீருடை அணியாமல் சாதாரண உடை அணிந்த ஒருவரைச் சாரணர்கள் முன் நிற்க வைத்து ஆசிரியர் அவரோடு சில நிமிடங்கள் உரையாடலாம். ஐம்பொறிப் பயிற்சிக்காக இது நடத்தப்படுகிறது என்று சாரணர்களுக்கு தெரிவிக்க வேண்டியதில்லை. அவர் போய் ஐந்து அல்லது பத்து நிமிடத்துக்கப்பால் மறுபடியும் வரவேண்டும். இப்பொழுது அதே ஆடையை சில மாற்றங்களுடன் அவர் அணிந்து வரவேண்டும். அவர் போனபிறகு சாரணர்களை அவர் ஆடையை விவரிக்கும்படி கூறலாம்.

"சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்" என்ற ஐந்துக்கும் உரிய பயிற்சி அவசியம். ஒளி, ஓசை, நாற்றம் என்றவைகளுக்கு அமைத்துள்ளதுபோலவே சுவைக்கும் நாற்றத்துக்கும் உரிய பயிற்சி களையும் அமைத்துக் கொள்ளலாம்.

6. **உற்றுப்பார்த்தல் சுற்றுலா** - விளையாட்டு நடுவர் அணிகளை அணி அமைப்பில் சுற்றுலாவுக்கு அழைத்துச் செல்வார். அப்படிச் செல்லும்பொழுது சாரணர்கள் கூர்ந்து பார்த்துப் பழக வேண்டும். சாரணன் ஒவ்வொருவனும் தான்போகும் வழியை நன்ருக ஆராய்ந்து பார்த்துச் செல்ல வேண்டும். அப்பொழுது தான் கவனிக்க வேண்டியதாக உள்ள எதனையும் கண்டால் உடனுக்குடனே நடுவரிடம் தெரிவிக்க வேண்டும். தான்சேகரிக்க வேண்டிய பொருள்கள் கிடைத்தால் அவற்றை நடுவரிடம் கொண்டுபோய்க் கொடுக்க வேண்டும். நடுவர் உடனுக்குடன் சாரணனுக்குள்ள மதிப்பெண்ணைக் குறித்துக் கொள்வார். அப்படிக் குறித்துக் கொள்வதற்குச் சாரணர்கள் பேர் எழுதப்பட்டுள்ள காகித அட்டை தயாராக வைத்திருப்பார்.

மதிப்பெண்கள் இந்தப் பட்டியலில் உள்ளதுபோல கொடுக்கப் படும் :

| | |
|---|---|
| கண்டெடுத்த தீக்குச்சு ஒன்றுக்கு— | 1 மதிப்பெண் |
| கண்டெடுத்த பொத்தான் ஒன்றுக்கு— | 1 மதிப்பெண் |
| பறவைகளின் கால் அடையாளம்-பார்த்தது— | 2 மதிப்பெண் |
| அறிமுகம் இல்லாத ஒருவர் ஆடையில் ஒட்டு-பார்த்தது | 2 மதிப்பெண் |
| சிவப்பும் வெள்ளையும்-மாடு-பார்த்தது— | 2 மதிப்பெண் |
| பறந்து சென்ற புரு-பார்த்தது— | 2 மதிப்பெண் |
| உட்கார்ந்திருந்த சிட்டுக்குருவி-பார்த்தது— | 1 மதிப்பெண் |
| மாமரம்-கண்டது-மதிப்பெண்— | 1 மதிப்பெண் |

## 5. தேர்ச்சி விளையாட்டுகள்

1. **முடிச்சுகள் கட்டுதல்** - விளையாட்டு மைதானத்தில் ஒரு கோட்டை ஒட்டி அணிகள் விளையாட்டு வரிசையில் நிற்க வேண்டும். அந்தக் கோட்டிலிருந்து 4 மீட்டர் தொலைவில் இன்னும் ஒரு கோடு வரைந்து அதில் ஒவ்வொரு அணிக்கும் ஒரு ''முடிச்சுச் சட்டம்'' அமைக்க வேண்டும். முடிச்சுச் சட்டத்தின் பக்கத்தில் அணியில் உள்ள கயிறுகள் வைக்கப்பட வேண்டும்.

ஒவ்வொரு அணிக்கும் ஆறு சாரணர்களும் ஆறு கயிறுகளும் தேவைப்படும்.

இந்த விளையாட்டு அணிகளுக்குள் ஒரு போட்டியாக அமையும்.

ஆட்டம் ஆரம்பம் ஆனதும் முதல் சாரணன் ஓடிச்சென்று ஒரு கயிற்ருல் குறுக்குச் சட்டத்தில் விளையாட்டு நடுவர் கட்டளைப்படி அவர் குறிப்பிட்ட முடிச்சைக் கட்டிவிட்டு தன் அணிக்குச் சென்று அடுத்த சாரணனைத் தொட வேண்டும். அவனும் அப்படியே ஓடிச்

சென்று தனக்குக் கட்டளையிடப்பட்ட முடிச்சை சட்டத்தில் அடுத்த பக்கத்தில் கட்டி விட்டு அணிக்கு ஓடிவந்து மூன்றுவது சாரணனைத் தொட வேண்டும். அப்படி வரிசையாக ஆறு சாரணர்களும் தங்கள் தங்களுக்கிடப்பட்ட கட்டளையை நிறைவேற்ற வேண்டும். கடைசியில் நடுவர் கட்டின முடிச்சுகளைச் சரிபார்த்து மதிப்பெண் வழங்குவார்.

### நடுவர் கட்டளை

1-வது சாரணன்—யானைக் கொலுசும் தடுப்பு முடிச்சும் போட்டு விட்டுச் சட்டத்தின் காலில் இன்னும் ஒரு யானைக் கொலுசு.

2-வது சாரணன்—சட்டத்தில் யானைக் கொலுசு-அப்புறம் படிமுடி

3-வது சாரணன்—சட்டத்தில் யானைக் கொலுசு-அப்புறம் தூளிமுடி

4-வது சாரணன்—சட்டத்தில் யானைக் கொலுசு-அப்புறம் செம்படவன் முடி

5-வது சாரணன்—சட்டத்தில் யானைக் கொலுசு-அப்புறம் ஆட்டிடையார் முடி

6-வது சாரணன்—சட்டத்தில் யானைக் கொலுசு-அப்புறம் வளைய முடி

2. **தீ மூட்டல் போட்டி** - இந்தப் போட்டியில் அணிகள் விறகுச் சுள்ளிகள் முதலியவற்றைச் சேகரிப்பது, அவற்றை முறையாக அடுக்குவது, ஒரு தீக்குச்சைப் பயன்படுத்தி தீ மூட்டுவது ஆகிய சாரண அலுவல்களைச் செய்து முடிக்கும் முறையைக் கவனிப்பது போட்டியின் முதற்படி. இதோடு போட்டியை முடித்துக் கொள்ளலாம்.

இன்னும் ஒரு தடவை, நீளக்கயிறு ஒன்றைத் தரையிலிருந்து 40 செ.மீ. உயரத்தில் கட்டிவைத்துக் கொண்டு அந்தக் கயிற்றுக்குக் கீழே முறையாகத் தீமூட்டி அதை எரியப் பண்ணுவது போட்டியின் இரண்டாவது படி.

இன்னும் அடுத்தபடியாக குறிப்பிட்ட பாத்திரத்தில் குறிப்பிட்ட அளவு தண்ணீரைக் கொதிக்க வைப்பது. போட்டியை இப்படிப் பல விதமாக நடத்தலாம்.

3. **திசையறிதல்**- விளையாட்டு மைதானத்தில் ஒரு பெரிய வட்டம் வரைந்துகொள்ள வேண்டும். திசைஅறி கருவியின் உதவியோடு வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு, வடகிழக்கு, தென் கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு என்ற எட்டுத் திசைகளையும் அந்த வட்டத்தில் குறிப்பிட வேண்டும். இந்த எட்டுத் திசைகளிலும்

எட்டுச் சாரணர்களை நிற்க வைத்து, தான் நிற்கும் திசைகளை நன்றாக நினைவுபடுத்திக் கொள்ளச் சொல்ல வேண்டும். விளையாட்டு நடுவர் இரண்டு திசைகளைக் குறிப்பிட்டதும் அந்தத் திசைகளில் நிற்கும் சாரணர்கள் தங்கள் தங்கள் இடத்தை மாற்றிக்கொள்ள வேண்டும்.

இந்த ஆட்டத்தின் அடுத்தபடி 16 திசைகளையும் வரைந்து 16 சாரணர்களை நிற்க வைத்து விளையாடுவது.

இதற்கு அடுத்தபடியாக விளையாட்டில் தபால் கார்டு, தபால் கவர், புத்தகக்கட்டு, தந்தி, ஆகாய விமானம் என்பவற்றை புகுத்தி விளையாடுவது. கார்டு ஊர்ந்து செல்லும். கவர் நடந்து செல்லும். தந்தி நொண்டி அடித்துச் செல்லும். புத்தகக்கட்டு நின்ற நிலையில் சுழன்றுகொண்டு போகும். விமானம் விரைந்து ஓடும். திசை மாறும்போது சாரணர்கள் ஊர்ந்தும், நடந்தும், நொண்டி அடித்தும், சுழன்று சுழன்றும், விரைந்து ஓடியும் செல்வார்கள்.

4 **தீபாவளிப் பட்டாசு** - இது முதல் உதவிப் பயிற்சி அளிக்கவல்ல விளையாட்டு. எங்கோ பட்டாசு வெடிக்கும் சத்தம் கேட்கின்றது. ஏதோ விபத்து. நான்கு அணிகளும் ஓடிப்போய்ப் பார்க்கின்றன. அங்கே விபத்துக்குள் அகப்பட்டுக் கொண்டவர்கள் நான்குபேர். ஒவ்வொருவருக்கும் என்ன நேர்ந்துள்ளது என்பதை அவர்கள் ஆடையில் தொங்கவிட்டிருக்கும் சீட்டுகள் விளக்குகின்றன. ஒவ்வொரு அணியும் ஒருவருக்கு சிகிச்சை அளிக்கிறது.

முதல் விபத்து — கை எலும்பு முறிவு
2-வது விபத்து — காரை எலும்பு முறிவு
3-வது விபத்து — வெட்டுக் காயம்-முன்கையில்
4-வது விபத்து — கொதிநீர்க் காயம்-காலில்

இந்த விபத்துக்குள்ள சிகிச்சை அளித்துவிட்டு விபத்து அடைந்தவர்களை மருத்துவமனைக்குக் கொண்டு போகவேண்டும்.

5. **சாரண விதிகள்** - நான்கு அணிகளும் நான்கு கதை நடித்துக் காண்பிக்க வேண்டும். கதைகள் சாரண விதியை விளக்கும் இயல்புடையதாக இருக்கவேண்டும்.

6. **தொலைவு கணக்கிடல்** - அணியில் உள்ள எட்டுச் சாரணர்களுக்கு ஆளுக்கு ஒரு கட்டுத்தறி கொடுக்கவேண்டும். அவர்களை விளையாட்டு மைதானத்தில் இருக்கும் பெரிய மாமரத்தை நோக்கிச் செல்லக் கட்டளை இடவேண்டும். சாரணர்கள் 20 மீட்டர் தொலைவு கணக்கிடவேண்டும். மாமரத்தை நோக்கிச் செல்லும்

பொழுது மரத்துக்கும் தனக்கும் உள்ள தொலைவு 20 மீட்டர் என்று தான் நினைக்கும் இடத்தில் கட்டுத்தறியை அடிக்கவேண்டும் அப்புறம் அடிக்கப்பட்டுள்ள கட்டுத்தறியின் தொலைவை அளந்து பார்க்கவேண்டும்.

7. **நிமிடம் கணக்கிடல் -** மற்ற விளையாட்டுகளுக்கு நடுவில் சாரணர்களுக்கு நிமிடம் கணக்கிடப் பயிற்சி அளிக்கலாம். ஆசிரியர் தன் ஊதலை ஊதினதும் நேரத்தைக் கணக்கிட ஆரம்பம் செய்யவேண்டும். ஒரு நிமிடநேரம் கணக்கிடுவதானால் ஒவ்வொரு சாரணனும் ஒரு நிமிடம் ஆய்விட்டது என்று நினைக்கும் போதுதான் எழுந்து நிற்கவேண்டும். ஆசிரியர் தன் கடிகாரத்தைப் பார்த்து சரியா தப்பா என்பதை கவனித்துக் கொண்டு அவர்களுக்குச் சொல்வார். (1001 முதல் 1060 வரை வரிசையாக மனத்துள் எண்ணினால் ஒரு நிமிடமாகும்)

## 6. அமைதி விளையாட்டுகள்

1. **கூட்டல் கணக்கு -** சாரணர்கள் வட்டமாக உட்கார்ந்து கொள்ளவேண்டும். ஒரு சாரணன் தான் பார்ப்பதை விளக்குவான். அடுத்தவர்களும் அப்படியே தான் பார்ப்பதை விளக்கவேண்டும்.

முதல் சாரணன், ''நான் இருக்கும் இடத்தில் இருந்து பார்த்தால் ஒரு சிவப்புக் கயிறு தெரிகிறது.'' என்று சொல்லலாம். அடுத்த சாரணன் ''நான் இருக்கும் இடத்தில் இருந்து பார்த்தால் ஒரு சிவப்புக் கயிறும் ஒரு பச்சைப்பந்தும் தெரிகிறது.'' என்று முதல் சாரணன் சொன்னதையும் தான் கண்டதையும் சேர்த்துச் சொல்ல வேண்டும். அப்படியே ஒவ்வொருவரும் செய்ய வேண்டும்.

2. **பூனையா? ஐயோ பாவம் -** சாரணர்கள் வட்டமாக உட்கார வேண்டும். யாரும் சிரிக்கக்கூடாது. ஒரு சாரணன் கை கால்களால் ஊர்ந்து சென்று எல்லோரையும் சிரிக்க வைக்கும் முயற்சியில் ஈடுபடுவான். வட்டத்திலுள்ள ஒரு சாரணன் முன் போய் நின்று கொண்டு பூனை போல நடித்து ''மியாவ்'' ''மியாவ்'' என்று பல விதமாகக் கத்துவான். பூனை செய்வதுபோல சாரணன் உடம்பில் உரசுவான். அந்தப்பூனை முன் உள்ள சாரணனும் பிற சாரணர்களும் தங்கள் சிரிப்பை அடக்கிக் கொள்ளவேண்டும். பூனை வட்டத்தில் இருக்கும் ஒவ்வொரு சாரணரையும் சிரிப்பு மூட்டும். அந்தப்பூனை போனபின் வேறு ஒரு பூனை வரலாம்.

3. **பஞ்சவர்ணக்கிளி -** வட்டத்தில் முதலாவதாக உள்ள சாரணன் ஏதாவது ஒன்றை வருணிக்கவேண்டும். சொல்லும்

சொல்லோடு அடைமொழியும் வேண்டும். முதல் சாரணன் ''பஞ்ச வர்ணக்கிளி'' என்றதும் வட்டத்தில் உள்ள அனைவரும் வரிசையாக பஞ்சவர்ணக்கிளி என்பர். இரண்டாவது சாரணன் இன்னும் ஒன்றை அடைமொழியோடு வருணிப்பான். அவன் ''சிவப்பு நாய்'' என்றால் எல்லோரும் அதை வரிசையாய்ச் சொல்வார்கள். மூன்றாவது வேறொரு சொல்லும் அடைமொழியும் கூறவேண்டும். அப்படி எல்லாரும் ஒரு சொல்லும் அடைமொழியும் கூறியான பிறகு முடுக்கின இயந்திரம் தளர்த்தப்படும். இப்பொழுது கடைசியில் சொன்னவற்றை முதலிலும் அதற்கு முந்தினதை இரண்டாவதாகவும் அப்படிச் சொல்லப்பட்ட எல்லாச் சொற்களையும் வரிசையாக ஒவ்வொருவரும் சொல்லவேண்டும்.

## 7. அணி விளையாட்டுகள்

1. **சாரண சர்க்கஸ் போட்டி** - அணியில் உள்ள சாரணர் கள் இரண்டு இரண்டு பேராகப் பிரிந்து கொள்ளவேண்டும். அதில் ஒரு சாரணன் தரையில் உட்கார்ந்து கொண்டு முழங்காலின்மேல் அடுத்த சாரணனைத் தாங்கி அவன் கைகளைப் பிடித்துக்கொள்ள வேண்டும். அவர்கள் இரண்டு பேரும் இப்பொழுது முன்னுக்குச் சாய்ந்து எழுந்திருந்தால் படத்தில் காண்பித்துள்ளது போல நிற்க லாம். இப்படி நிற்பதை ஒரு போட்டியாக விளையாடலாம்.




211. சர்க்கஸ் போட்டி
(Circus competition)

2. **பொய்க்கால் நடை** - சாரண தண்டத்தைப் பொய்க் காலாக அமைத்துப் பொய்க்காலில் நடக்கும் போட்டி நடத்தலாம். தரையிலிருந்து 15 அல்லது 20 சென்டி மீட்டர் உயரத்தில் தண்டத் தைச் சுற்றி நூல் கயிற்றை அல்லது சணல் நூலை இறுக வரிய வேண்டும். ஒவ்வொரு சாரணனுக்கும் இரண்டு பொய்க்கால்கள் இருக்க வேண்டும். கட்டை விரலாலும் அதற்கடுத்த விரலாலும் பொய்க்காலை இடுக்கிக் கொண்டு தண்டத்தின் மேல் பாகத்தைக் கையால் பிடித்துக்கொண்டு நடக்கலாம்.

3. **ஒத்துழையாத் தள்ளுவண்டி** - இரண்டு இரண்டு சாரணர் களாகப் பிரித்து விளையாடக் கூடிய விளையாட்டு. போட்டியாகவும் நடத்தலாம். ஒருவன் குனிந்து கைகளை யூன்றி நடக்கவேண்டும். மற்றவன் வண்டியைத் தள்ளுகிறவனாக இருப்பான். வண்டியைத் தள்ளுகிற சாரணன் முன்னவனது கால்களைத் தன் அக்குளில் இறுகப் பிடித்துக் கொள்ளவேண்டும். முன்னவன் தன்னிஷ்டப்படி கைகளா லேயே நடப்பான். ஆனால் அவனை வண்டியாகப் பாவித்து நடத்துகிற இரண்டாமவன் அவனிஷ்டப்படி போகாதபடி தடுத்துத் தன் குறிப்புப் படி நடத்துவான். ஆரம்பத்துக்குரிய சைகை செய்த உடன் வண்டி யைத் தள்ளவேண்டும். ஒத்துழையாத வண்டி ஆகையால் அது அங்கும் இங்கும் இழுக்கும். ஆயினும் வண்டியைத் தள்ளும் சாரணன் போகவேண்டிய திசைக்குத் திருப்பி வண்டியை அந்தத் திசையில் செலுத்தவேண்டும். ஐந்து நிமிடமாவதும் எந்தத் தள்ளு வண்டி மிகுந்த தொலைவு வந்துள்ளது என்று தீர்மானிக்க வேண்டும்.

4. **காலை வலித்தல்** இரண்டு இரண்டு சாரணர்களாக விளையாட வேண்டிய ஆட்டம். இரண்டு சாரணர்களும் தங்கள் இடது கைகளை இணைத்து வலது கைகளால் தங்கள் இடது கால் களைப் பிடித்துக் கொண்டு வட்டமாகக் குதித்துக் குதித்து வரவேண்டும்.

5. **பார்வை இழந்த சிலந்தி** - இந்த விளையாட்டை அணி விளையாட்டாகவும் விளையாடலாம்.

6. **மூன்று பேர் ரதம்** இந்த விளையாட்டையும் அணி விளையாட்டாக விளையாடலாம்.

7. **கண்ணிழந்தோர் பயணம்** - அணியை இரண்டு பிரி வாகப் பிரித்து ஒருபிரிவு அணித்தலைவனுடனும் இன்னும் ஒன்று உதவித் தலைவனுடனும் செல்லவேண்டும். இரண்டு பிரிவுகளும் தங்கள் கண்களைக் கட்டிக்கொண்டு தலைவன் அல்லது உதவித்

தலைவனைப் பின்பற்றிச் செல்லவேண்டும். அவர்கள் தங்கள் தங்கள் சாரணர்களை முதலில் ஒரு அமைதியான இடத்திற்குக் கொண்டு செல்வர். அங்கு நின்ற நிலையிலேயே பலமுறை திருப்பப்பட்டு தற்போது திசை உணர்ந்து கொள்ள முடியாத நிலையில் இருப்பார்கள். அப்புறம் தங்கள் தங்கள் சாரணர்களோடு அணித் தலைவன் ஒரு திசையாகவும் உதவித்தலைவன் பிறிதொரு திசையிலும் செல்வார்கள். போகும் பாதை முன்னதாக அவர்கள் இருவரும் முடிவு செய்த பாதை. அப்படி அழைத்துச் செல்லும்போது எவ் வளவு தெளிவாகத் திசையையும் தங்கள் பாதைகளையும் உணர்ந்து கொள்ள முடியுமோ அவ்வளவு தெளிவாக உணர்ந்துகொண்டு படைக் கூடத்தை அடைந்த பிறகு தாங்கள் சென்ற பாதையைப் படம் வரைந்து காட்டவேண்டும். அதோடு என்ன என்ன அடையாளங்களைக் கொண்டு பாதையைக் கண்டுகொண்டார்கள் என்றும் விளக்கவேண்டும். அழைத்துச் செல்லும் பாதையில் ஒரு இடத்தில் ''பெட்ரோல்'' விற்பனை நிலயம், இன்னொரு இடத்தில் மீன்கடை, இன்னும் ஒரு இடத்தில் பலகாரக்கடை போன்றவைகளும், வேறு இடங்களில் பேருந்து நிற்கும் இடம். சினிமாக் கொட்டகைகள், போக்குவரத்து வாகனங்களைத் தடுத்து நிறுத்தியிருக்கும் சாலை சந்திப்புகளும் இன்னும் வேறு இடங்களில் தபால்பெட்டி, முள்கம்பிவேலி முதலியவைகளும் இருப்பின் அவர் களுக்கு அது ஐம்புலப் பயிற்சியாக அமையும்.

## 1. விசால வெளி விளையாட்டுகள்

**1. சேர சோழ பாண்டியர்:** சோழர்களிடத்தில் சேரர் களுக்கும் பாண்டியர்களுக்கும் பகை. அவர்களுக்கிடையில் ஒற்றுமை இல்லை. ஆகையால் அவர்கள் ஒன்று சேர்வார்கள் என்று சொல்ல இடமில்லை.

சோழ தளபதி தன் வீரர்களை அனுப்பிப் போருக்கு அவசிய மான சிலவற்றைச் செய்யக் கட்டளை இடுகிறுர்:—''பாசறை அமைக்க நீங்கள் ஒரு நல்ல இடத்தைத் தேர்ந்து எடுத்து சேரர் களையும் பாண்டியர்களையும் துவம்சம் செய்யப் பீரங்கிகளை அந்த இடத்தில் அமையுங்கள். பாசறையில் இருந்து அதற்கு 20 மீட்டர் தொலைவில் இரு பக்கமும் இரண்டு காவல் நிலையம் அமைத்து அதில் இராப் பகலாக எப்பொழுதும் இரண்டு காவல் வீரர்கள் இருந்து பணியாற்றச் செய்யுங்கள். இந்தக் காவல் வீரர்கள் அடிக்கடி மாறிக்கொள்ள வேண்டும். அவர்கள் எதிரிகளைக் கண்ணுற்ருல் அவர்கள் எண்ணிக்கை, அவர்கள் போகும் திசை, அவர்கள் கையாளும் போர்த் தந்திரம் முதலியவற்றை அறிந்து எனக்குத் தெரிவிக்க வேண்டும்.

''பாசறையில் கொடிக்கம்பம் நிறுவி ஒரு கொடியை ஏற்றி வைக்கவேண்டும். விறகு சேகரித்துத் தீ மூட்டிப் புகை உண்டு பண்ணி புகைச் சைகைகள் உதவியால் எனக்கு விவரம் தெரிவிக்க வேண்டும். உங்கள் அணிக்கொடியை உயரமான மரக்கிளையில் பறக்கவிடவேண்டும். மரங்களையும் செடிகளையும் நன்ருகக் கவனித்து அவற்றின் இலைகளையும் பூக்களையும் சேகரித்துக் கொண்டு வர வேண்டும். ஏனெனின் பச்சிலை நமக்கு வேண்டிய மருந்துகளுக்குப் பயன்படும். மாலை 5 மணிக்கு நடுவர் தம் ஊதலை ஒலித்ததும் உடனே படைக்கூடத்துக்கு நீங்கள் எல்லோரும் வந்துவிடவேண்டும். அங்கு கண்டவைகளை எழுதி என்னிடம் கொடுத்துவிட வேண்டும். சேகரித்த பொருள்களையும் கொண்டுவந்து தரவேண்டும்.''

சேர தளபதியும் பாண்டிய தளபதியும் தங்கள் தங்கள் போர் வீரர்களுக்கு தனித்தனி கட்டளை இடுகிருர்கள். இவை இரண்டும் ஒரே மாதிரியானவை :—''சேர வீரர்களுக்கு, நீங்கள் சோழ வீரர்கள் கண்ணில் படக்கூடாது. அதுபோலப் பாண்டியர்கள் கண்ணிலும் படக்கூடாது. இருசாரார்களையும் நெருங்கிப் பார்க்கவேண்டியவை களைப் பார்த்துவிட்டு நடுவர் ஊதல் ஒலிக்கும் நேரமாகிய மாலை 5 மணிக்கு நீங்கள் படைக்கூடம் வந்து அறிக்கை எழுதி எனக்குத் தரவேண்டும்.'' பாண்டிய வீரர்களுக்கும் இதுபோல ஒன்று—ஆனுல் அதில் ''பாண்டியர்களுக்கு'' என்று இருக்கவேண்டும். ''அதுபோல் பாண்டியர்கள்'' என்ற இடத்தில் ''அதுபோல் சேரர்கள்'' என்றும் இருக்கவேண்டும்

சாரணர்கள் எண்ணிக்கை: சோழர்கள் 10 அல்லது 15 பேர் இருக்கலாம். அல்லது அதற்கும் கூடுதலாக இருக்கலாம். சேரர்கள், பாண்டியர்கள்—6 அல்லது 7 பேர் போதும்.

சோழர்கள் செய்யவேண்டியவை என்னென்ன என்பது சேரர் களுக்கும் பாண்டியர்களுக்கும் தெரியாது. அவர்கள் அவற்றை மறைந்திருந்து தெரிந்து கொள்ளவேண்டும்.

அவசியமாக உள்ள பொருள்களை வேறு யாருக்கும் தெரியாமல் கொண்டு போய் இடத்தில் வைத்துவிடுவது நல்லது. அல்லது அந்த அணித் தலைவனிடம் ஒரு பட்டியல் தந்து, போர்க்களத்துக்குப் போகும்போது அவற்றையும் எடுத்துச் செல்லச் சொல்லவேண்டும்.

பீரங்கிகள் என்பது சாரண தண்டத்தினுல் செய்யப்பட்ட பாலத் தட்டிகள்.

ஆட்டத்தை 2 அல்லது 3 மணிக்கு ஆரம்பித்தால் 5 மணிக்கு முடிப்பது எளிது.

**2. கொடிகளைக் காத்தல் :** இரண்டு அணிகள் ஒரு கட்சி யாகவும் வேறு இரண்டு அணிகள் வேறொரு கட்சியாகவும் இரண்டு கட்சியாக விளையாடலாம். விளையாடுவதற்கு ஒரு கிலோமீட்டர் சதுரமான இடம் தேவை. அதில் மரம் செடி கொடிகள் நிறைய இருக்கவேண்டும். ஒவ்வொரு கட்சிக்கும் மூன்று கொடிகள் கொடுக்கப்படும். அவைகளை அவர்கள் தங்கள் தங்கள் எல்லை களில் நட்டு வைக்கவேண்டும். 50 மீட்டர் தொலைவில் வந்ததும் கொடிகள் தென்படும்படி நட்டுவைக்கப் படவேண்டும். ஒரு கட்சியினருடைய கொடிகளுக்கும் அடுத்த கட்சியினரின் கொடி களுக்கும் இடையில் 500 மீட்டருக்குக் குறையாமல் இருக்க வேண்டும். இரு கட்சிகளும் தங்கள் தங்கள் கொடிகளுக்கு 50 மீட்டர் தொலைவில் நிற்கவேண்டும். அதைவிட நெருங்கக் கூடாது.

இரண்டு கட்சியிலும் சாரணர்கள் தங்கள் முழங்கைக்கு மேலாக கம்பளி நூல் கட்டியிருப்பார்கள். இரு கட்சிக்கும் இந்த நூல் வெவ் வேறு நிறத்திலிருக்கும். கம்பளி நூலை எதிரிகள் அறுத்து எறிய முயற்சிப்பார்கள். கம்பளி அறுந்து போனால் எதிரிகளால் கொல்லப் பட்டான் என்று பொருள். ஒவ்வொரு சாரணனும் தன் உயிரை நன்கு பாதுகாத்துக் கொள்ளவேண்டும். ஒருவர் உயிரைப் பறிக்க இரண்டு பேர் சேர்ந்து வரவேண்டும்.

ஒரு சாரணன் எதிரி கொடிகளுள் ஒன்றைத்தான் எடுக்கலாம். கொடியை எடுத்ததும் நடுவரிடம் சென்று அதைக் கொடுத்துவிட வேண்டும்.

விளையாட்டு ஆரம்பம் செய்வதற்கும் முடிப்பதற்கும் உரிய அடையாளங்களை முன்னதாகவே தீர்மானம் செய்யவேண்டும். உரிய அடையாளத்தை உபயோகித்து ஆட்டத்தை ஆரம்பம் செய்ய வேண்டும். ஒரு மணி நேரம் விளையாடின பிறகு ஆட்டத்தை முடித்துக் கொள்ளலாம்.

சாரணர்கள் ஒளிந்து சென்று எதிரி கொடிகளைக் கைப்பற்ற வேண்டும். சாரணர்கள் கும்பலாகச் செல்லாமல் இரண்டொருவர் ஒரு பக்கமும் இன்னும் வேறு இரண்டொருவர் இன்னொரு பக்கம் அப்படிப் பரவலாகச் சென்று வெற்றி அடையவேண்டும்.

முதல் உயிர் இழந்ததும் நடுவரிடம் சென்று இன்னும் ஒரு உயிர் பெறலாம்.

ஆட்டம் முடிவில், ஒவ்வொரு கொடிக்கும் ஐந்து மதிப்பெண், எதிரியின் உயிர் ஒவ்வொன்றுக்கும் ஒரு மதிப்பெண் கொடுத்து வெற்றி தோல்வியைத் தீர்மானம் செய்யலாம்.

**3. ரகசியத் தகவல் :** சோழர்களுக்கும் பாண்டியர்களுக்கும் போர் நடந்து கொண்டிருக்கிறது. சோழர் சேனை இரண்டாகப் பிளவு பட்டு ஒருசிறு பகுதி தொலைவில் அகப்பட்டுக் கொண்டுள்ளது. சோழத் தளபதி அந்தப் பகுதிக்குத் ''தகவல்'' எழுதித் தன் வீரர் களிடம் கொடுத்தனுப்புகின்றார்.

''தகவல்'' என்பது 10 செ. மீ. × 4 செ. மீ. காகிதத்துண்டு. இதை எந்தவிதம் வேண்டுமோ அப்படி மறைத்து எடுத்துச் செல்லலாம். யார் வேண்டுமோ அவர்கள் கொண்டு போகலாம். பாண்டிய வீரர்கள் அதைத் தடுக்கவேண்டும். பாண்டியர்கள் எதிரிகளை விரட்டிப் பிடிக்கலாம். பிடிபட்ட விரர்களைச் சோதனை செய்யலாம். ''தகவல்'' அகப்பட்டால் அதைக் கைப்பற்றினதற்கு 20 மதிப்பெண். கடைசிவரை சோழ வீரர்களிடமே இருந்த தானால் அவர்கட்கு 10 மதிப்பெண். வீரர்கள் தங்கள் கையில் வெவ்வேறு நிறமுடைய கம்பளி நூல் கட்டியிருப்பர். பிடிபட்டால் உயிர் இழப்பார்கள். இரண்டாவது ஒருதரம் உயிர் பெறலாம். எதிரி கையில் உள்ள கம்பளி நூல் ஒன்றுக்கு ஒரு மதிப்பெண். இப்படி மதிப்பெண்களைக் கணக்கெடுத்து வெற்றி தோல்வி தீர்மானம் பண்ண வேண்டும். ஆட்டத்தை ஒருமணி நேரம் ஆடலாம்.

## 2. இரா விளையாட்டுகள்

**1. தந்திக் கம்பியை அறுத்தல் :** இந்த விளையாட்டு இளநிலவு உள்ளபொழுது விளையாடலாம். சாரணர்களை இரண்டு கட்சியாகப் பிரித்துக்கொண்டு ஒரு கட்சி தந்திக் கம்பியை அறுப்பவர்களாகவும் இன்னொரு கட்சி தந்திக் கம்பியைப் பாதுகாப்பவர்களாகவும் விளையாடலாம்.

20 மீட்டர் நீளமுள்ள கயிறு ஒன்று வேண்டும். அதனைப் போதுமான தொலைவுள்ள இரண்டு மரங்களில் கட்டிவைக்க வேண்டும். தரையிலிருந்து ஒரு மீட்டர் அல்லது ஒன்றேகால் மீட்டர் உயரத்தில் அதைக் கட்டவேண்டும். இதுதான் தந்திக்கம்பி. கம்பி ரொம்பத் தொலைவாகக் காணப்பட்டால் நடுவில் இரண்டு மூன்று இடங்களில் குழிதோண்டிச் சாரண தண்டம் நட்டு அதில் கயிற்றைக் கட்டி வைக்கலாம்.

தந்திக் கம்பியை வெட்டுவது என்பது இந்தக் கயிற்றில் தங்களு டைய கயிறுகளால் சதுரமுடி, அல்லது யானைக்கொலுசு, அல்லது வளையமுடி கட்டுவது. கட்டின கயிற்றை அங்கேயே விட்டுவிட வேண்டும். ஆட்டமுடிவில் அதைப் பெற்றுக்கொள்ளலாம்.

விளையாட்டை அரைமணி நேரம் விளையாடலாம்.

தந்தியை வெட்டவரும் நாசவேலைக்காரர்கள் தங்கள் இடது கைப் புஜத்தில் ஒரு கம்பளிநூல் கட்டியிருக்கவேண்டும். இந்த நூல் இவர்களுடைய ''உயிர்'' ஆக அமையும். கயிற்றில் இவர்கள் முடிச்சுக் கட்டும்போது காவலர்கள் இவர்களைத் தடுப்பர். தடுப்ப தோடு அவர்களை விரட்டிப் பிடிக்கலாம். பிடிபட்டால் அவர்கள் ''உயிர்'' இழப்பார்கள். காவலர்கள் தந்திக்கம்பியை வெட்டுகிற வர்களை ஓடிஓடித் துரத்துவார்கள். உயிர் இழந்த சாரணன் நடுவர் இடம் போய்க் கேட்டு மறு உயிர் பெறலாம். பெற்றதும் ஆட்டத்தில் பங்கு கொள்ளலாம். இரண்டுதரம் உயிர் பெறலாம். படிமுடிச்சுக் கட்டினால் 1 மதிப்பெண்ணும், யானைக்கொலுசு கட்டினால் 2 மதிப் பெண்ணும், வளையமுடி கட்டினால் 3 மதிப்பெண்ணும் உண்டு. கட்டின முடிச்சுகளை யாரும் அவிழ்க்கவோ உலைக்கவோ கூடாது.

30 நிமிடம் விளையாடின பிறகு, மதிப்பெண்களைக் கணக்குப் பார்க்கவேண்டும். தந்திக் கம்பியைக் காக்கும் கட்சிக்கு அவர்கள் வென்ற ஒவ்வொரு ''உயிரு''க்கும் 5 மதிப்பெண் வீதம் கிடைக்கும்.

**2. சுங்கத் திருடர்கள்:** சாரணர்களை இரு கட்சிகளாகப் பிரித்து ஒரு கட்சி சுங்கத் திருடர்களாகவும் இன்னொரு கட்சி சுங்கக் காவலர்களாகவும் விளையாடலாம்.

20 மீட்டருக்கு 20 மீட்டர் சதுரத்தின் நாலு கோணங்களிலும் நாலு ஹரிக்கேன் விளக்குகள் வைக்கவேண்டும். இந்தச் சதுரத்தின் நடுவில் ஒரு சிவப்பு லாந்தர் வைக்கவேண்டும். சுங்கவரி கொடாத பறிமுதல் சொத்து சிவப்பு லாந்தர் பக்கத்தில் ஒரு பெட்டியில் வைக்கப்பட்டுள்ளது. சுங்கத் திருடர்கள் அவைகளை எடுத்துக் கொண்டு ஓடப்பார்க்கிறார்கள். காவலர்கள் சதுரத்துக்கு வெளியில் நின்று காவல் புரிகிறார்கள்.

விளையாட்டு ஒருமணி நேரம் வரை நடக்கலாம்.

சுங்கத்திருடர்கள் தங்கள் இடது புஜத்தில் கம்பளிநூலைக் கட்டி யிருப்பார்கள். அந்தக் கம்பளிநூல் அவர்களது ''உயிர்''. இரண்டு காவலர்கள் சேர்ந்து ஒரு திருடனைத் துரத்திப் பிடிக்கலாம். பிடி பட்டால் திருடன் கையில் கட்டப்பட்டிருக்கும் கம்பளிநூலை அறுத்துப் பத்திரமாக வைத்திருந்து ஆட்டம் முடிவில் நடுவரிடம் கொடுக்க வேண்டும். பிடிபட்டு உயிரிழந்த திருடன் நடுவர் இருக்கும் இடம் சென்று கேட்டால் அவனுக்கு இன்னும் ஒரு ''உயிர்'' கொடுப்பார். அப்படி இரண்டுதரம் உயிர் பெறலாம்.

திருடன் யாராவது சதுரத்துக்குள் புகுந்தால் அவனைத் துரத்திக் கொண்டு காவலர்களும் சதுரத்துக்குள் செல்லலாம். திருடன் போகவில்லையானால் காவலர்களும் உள்ளே போகக்கூடாது.

குறிப்பிட்ட 1 மணி நேரத்துக்குள் திருடர்கள் சுங்கப் பறிமுதல் சொத்தை எடுத்துக்கொண்டு ஓடி வந்துவிட வேண்டும். கொண்டு வந்துவிட்டால் அவர்கட்கு வெற்றி.

பெட்டியை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டால் திருடர்களுக்கு 20 மதிப்பெண். காவலர்கள் பிடித்த ''உயிர்'' ஒவ்வொன்றுக்கும் ஒரு மதிப்பெண்.

3. **மாயா பொக்கிஷம்** - சாரணர்களை இரண்டு கட்சியாகப் பிரிக்கவேண்டும். ஒரு கட்சியில் 10 அல்லது 12 பேர் இருக்கலாம். இரண்டு கட்சிகளும் மாயா இனத்தவர்கள்தான், ஆனால் நீண்டபகை. பொக்கிஷம் இருக்கும் இடத்தைத் தலபடமாக வரைந்து இரண்டு கட்சிகளுக்கும் கொடுக்கவேண்டும். படம் 8 திசைக ளடிப் படையில் வரையப்பட்டு ஒவ்வொரு திசையிலும் எத்தனை தப்படி போகவேண்டும் என்பதையும் அறிவிக்கும் வகையில் அமைக்கப் படவேண்டும். இடைஇடையே முக்கிய கட்டடங்கள் அல்லது எளிதில் புரிந்து கொள்ளக்கூடிய பிற அடையாளங்கள் இருப்பின் அவைகளையும் படத்தில் தரவேண்டும். தலபடத்தின் உதவியால் பொக்கிஷத்தைத் தேடி எடுக்கவேண்டும்.

இரண்டு கட்சிக்கும் ஒரே தலபடத்தின் இரண்டு நகல்களைக் கொடுக்கலாம். அப்படியானால் எல்லாச் சாரணர்களும் அநேக மாக ஒரே இடத்தில் காணப்படுவார்கள். இதைவிட இரண்டு கட்சிக்கும் வெவ்வேறு இடங்களிலிருந்து ஆரம்பமாகிக் கடைசியில் பொக்கிஷம் இருக்கும் இடத்துக்குக் கொண்டுபோய் விடக்கூடிய படங்கள் நல்லது.

பொக்கிஷம் என்பது சிறுவர்கள் தின்னக்கூடிய பொருள் எது வாகவும் இருக்கலாம். மாம்பழம், வாழைப்பழம், வறுக்கப்பட்டுள்ள வேர்க்கடலை, மிட்டாய் முதலியவை பொருத்தமுடையன. இவற் றைக் காகிதத்தில் அல்லது நல்ல துணியில் கட்டி வைத்து ஆழக்குழி தோண்டி அதில் புதைத்து விடுவது அவசியம். பொக்கிஷத்தை எடுக்கிற கட்சிக்கு வெற்றி.

ஆட்ட முடிவில் இரண்டு கட்சியிலுள்ள சாரணர்களும் பொக்கி ஷத்தைப் பங்கிட்டுக் கொள்வார்கள்.

# 16. சாரணப் பாசறை வாழ்க்கை

சாரணப் பாசறை வாழ்க்கை என்பது இயற்கை எழில் நிறைந்துள்ள விசாலமான வெளியிடங்களில் தங்குதற்குரிய வசதிகளையும் ஏனையவசதிகளையும் அமைத்துக்கொண்டு சாரணக் கட்டுப்பாட்டுடன் சாரண நெறியைப் பின்பற்றி ஒருசில நாள் உல்லாச வாழ்க்கை நடத்துவது ஆகும். சாரண வயதுடைய சிறுவர்களுக்குப் பாசறை வாழ்க்கை மிக்க கவர்ச்சிகரமான வாழ்க்கை. அது மிகுந்த மகிழ்ச்சி அளிக்கவல்லது. சாரணர்களுக்கு அது வித விதமான நூதன அனுபவங்களை அளிக்கும், சாரணர்களின் ஒழுக்கத்திலும் பண்பாட்டிலும் அக்கறை கொண்டுள்ள சாரண ஆசிரியருக்கு அது ஒரு அரிய வாய்ப்பாகவும் அமைகிறது.

சாரணப் பாசறை வாழ்க்கையின் முக்கிய நோக்கம் சாரணர்களிடையில் ஒழுக்கத்தையும் நல்ல பண்புகளையும் வளர்ப்பது. தன்னடக்கம், தன்னம்பிக்கை, தன்னலம் மறுத்துப் பிறர்நலம் பேணும் மனப்பான்மை, இறைபக்தி, நாட்டுப்பற்று, தொண்டாற்றும் மனப்பான்மை, கடமை உணர்ச்சி, கட்டுப்பாடு, சோதரப்பண்பு போன்ற நற்பண்புகளை வளர்க்கச் சாரணப் பாசறை வாழ்க்கை உதவுவது போல வேறெதுவும் உதவுவதில்லை.

சாரணப் பாசறை வாழ்க்கையில் சாரணர்கள் தங்களுக்கு எல்லா வசதிகளையும் தாங்களே தேடிக் கொள்கிறார்கள். தங்கள் கூடாரங்களைத் தாங்களே அமைத்துக் கொள்கிறார்கள். தங்கள் உணவைத் தாங்களே சமைத்துக் கொள்கிறார்கள். இப்படிச் செய்வதால் அவர்களுக்குத் தன்னம்பிக்கை உண்டாகிறது. கால அட்டவணை அமைத்து ஒழுங்காகவும் குறித்த காலம் தவறாமலும் தாங்கள் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யவேண்டிய நேரத்தில் செய்வதனால் தம் நேரத்தைப் பயன்தரும் முறையில் செலவு செய்யக் கற்றுக் கொள்கிறார்கள். காலையில் கொடியைச் சுற்றிநின்று இறை வணக்கமும், கொடி வணக்கமும் செய்கிறார்கள். உணவு நேரங்களில் இறை வணக்கம் செய்கிறார்கள். நாள் முடிவில் பாடித் தீயைச் சுற்றி நின்று தேசியகீதம் பாடுகிறார்கள். இப்படி இறை உணர்ச்சியும் நாட்டுப்பற்றையும் வளர்த்துக் கொள்கிறார்கள். பாசறையில் சாரணர்கள் ஒரே குடும்பத்தினர் போல நடந்து

கொள்கிறார்கள். ஒருவருக்கொருவர் ஒத்தாசையாக இருக்கிறார்கள். பாசறையைக் கூட்டுறவு உணர்ச்சியோடு நடத்துகிறார்கள். சோதர உணர்ச்சி வளர்ச்சி அடைகிறது. சாரணர்கள் தங்கள் தங்கள் வேலைகளை நல்ல கடமை உணர்ச்சியுடனும் கட்டுப்பாட்டுணர்ச்சியுடனும் செய்து பழகுகிறார்கள். ஒருவருக்கொருவர் உதவியாயிருந்து பாசறையின் பொது நலத்துக்காக உழைக்கிறார்கள். இதனால் தொண்டு புரியும் மனப்பான்மை உண்டாகிறது. இப்படிப் பல உயரிய பண்புகளைச் சாரணப் பாசறை வளர்க்கும் இயல்புடையதாக அமைந்துள்ளது. இதனாலேயே சாரணப் பாசறை சாரண ஆசிரியருக்கு ஒரு அருமையான வாய்ப்பு எனக் கருதப்படுகிறது.

பாசறை வாழ்க்கை சாரணப் பயிற்சிக்கு மிகவும் முக்கியமாக உள்ள பயிற்சி. சாரணப் படைகள் ஆண்டுக்கு ஒருமுறை, அல்லது இருமுறை, வெளி இடங்களுக்குச் சென்று பாசறை அமைத்து, ஒருவாரம் அல்லது ஐந்து, ஆறுநாள் பாசறை வாழ்க்கை நடத்துவது மிக அவசியம். பாசறை செல்வது சிறுவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கவல்ல அபூர்வ அனுபவம். வெளியிடங்களுக்குப் போவது என்றாலே சிறுவர்கள் மகிழ்ச்சி அடைவர். வெளிவட்டாரங்களில் ஒரு சில நாள் தங்கும் வாய்ப்பு என்பது அவர்கள் மனத்தை அப்படியே கொள்ளை கொண்டுவிடும். வெளியிடங்களில் இயற்கை எழில் நிறைந்த சூழ்நிலையில் தங்களுக்குத் தேவையான வசதிகளைத் தாமே அமைத்துக் கொண்டு உண்மையான உள்ளன்போடு ஒருவரோடொருவர் பழகுவதும், பாசறையில் தங்களுக்குள்ள கடமைகளை நல்ல பொறுப்புணர்ச்சியுடன் நிறைவேற்றுவது அவர்களுக்கு உண்மையான மகிழ்ச்சியை உண்டாக்கும் இயல்புடையன.

## பாசறையில் பயிற்சி

பாசறையில் சாரணர்கள் தங்கள் நேரத்தை நல்ல பயனுள்ள முறையிலேயே செலவு செய்யவேண்டும். கால அட்டவணையில் பயிற்சிக்காகப் போதுமான நேரம் ஒதுக்கி வைப்பது அவசியம். முற்பகலில் இரண்டு மணிநேரமும் பிற்பகலில் அதுபோலவே இரண்டு மணிநேரமும் பயிற்சிக்காக ஒதுக்கிவைப்பது நல்லது. அந்த நேரத்தை முக்கியமான பயிற்சிக்காகப் பயன் படுத்தவேண்டும்.

சாரணப் பயிற்சி என்றால் இரண்டாம்தர, முதல்தரச் சாரணருவதற்கு பயிற்சி மட்டும் அல்ல. பாசறையைப்பற்றியும் பாசறையைச் சுற்றி உள்ள இடங்களில் வாழும் மக்களைப் பற்றியும் அவர்கள் வாழ்க்கை முறையைப்பற்றியும் தெரிந்துகொள்வதும் அடங்கும். அது

போலவே இயற்கைச் செடிகொடிகளைப் பற்றியும், பறவைகள் பிராணிகள் போன்றவைகளைப் பற்றியும் தெரிந்து கொள்வதும் அடங்கும். இவை போலவே, வாழ்க்கைக்குப் பயன்படும் பல காரியங்களைப் பற்றியும் செயல்முறையில் கற்றுத் தெரிந்து கொள் வதும் அடங்கும்.

பாசறைக் காலத்தில் சாரணர்களுக்கு இயற்கையைப் பற்றிய பல விஷயங்கள் தெரிந்துகொள்ள நல்ல வாய்ப்புண்டு. மரங்கள் செடிகள், கொடிகள், ஆகிய தாவரங்கள் தங்கள் வாழ்க்கையில் எப்படி வெற்றி பெறுகின்றன, பிராணிகளுக்கும் பறவைகளும் தங்கள் வாழ்க்கையை எப்படி அமைத்துக் கொள்கின்றன என்பது போன்ற விவரங்களைத் தெரிந்து கொள்வது மிக முக்கியமானது. பாசறையில் உள்ள பொழுது அதற்காகச் சிறு சிறு சுற்றுலாச் செல்வது மிக அவசியம். அப்படிச் சுற்றுலாச் செல்லும் பொழுது மரம், செடி, கொடிகளில் காணப்படும் வியத்தகு காட்சிகளைக் கண்ணுற்று அவைகளைப் பற்றி சிந்தித்தல் நல்ல பயன் தருவதாகும். அது போலவே, ஆகாயத்தில் உள்ள நட்சத்திரங்களைப் பற்றியும், சூரியனது குடும்பம் என்று கணக்கிடக் கூடிய கோள் உலகங் களைப் பற்றியும் எவ்வளவு தெரிந்து கொள்ள முடியுமோ அவ்வளவு தெரிந்து கொள்ளவும் வேண்டும். நட்சத்திரங்களை ஆகாயத்தில் அடையாளம் கண்டு கொள்ளவும் கற்றல் வேண்டும். இயற்கை யைப் பற்றிய அறிவு, வளர வளர இயற்கைக்கு அதிபதியாகிய இறைவனைப் பற்றிய உணர்ச்சி சிறிது சிறிதாகத் தோன்றி நன்கு வளரும்.

பாசறையில் பயிற்சிதவிர விளையாட்டுகளும் நடைபெறும். பாசறை எல்லைக்குள் விளையாடத் தகுந்த விளையாட்டுகள் மிகப்பல. அவற்றை விளையாடுவார்கள். அவை தவிரப் பாசறைக் காலத்தில் இரண்டொரு விசால வெளி விளையாட்டுகளையும் விளையாடுவார்கள்.

பாசறை வாழ்க்கையில் மிக முக்கியமாக உள்ளவைகளுள் ஒன்றுபாடித்தீ. இரவு உணவு அருந்திய பின் சாரணர்கள் மனம் பாடித்தீயையும் அங்குள்ள நிகழ்ச்சிகளையும் நாடும். நிகழ்ச்சிகள் அவர்கள் மனதில் அழியாத ஒரு திரைபடமாக மாறும். வருங் காலத்தில் அந்த நிகழ்ச்சிகளை அவர்கள் தங்கள் மணக்கண் முன் கண்டு மகிழ்வார்கள்.

சாரணப் பாசறை என்பது இத்தகைய அரிய அனுபவங்களைக் குறிக்கும்.

## பாசறைத்திடல் (Camp Site)

பாசறை மனோரம்மியமான சூழ்நிலையில் அமைக்கப்பட வேண்டும். அது இயற்கை எழில் நிறைந்துள்ள சூழ்நிலையில் இருக்க வேண்டும். நகரங்கள், பட்டணங்களுக்கு வெளியே அவைகளுக்கு நான்கு அல்லது ஐந்து கிலோமீட்டர் தொலைவில் இருக்கலாம். பாசறைத்திடலில் நல்ல குடிதண்ணீர் வசதி இருக்கவேண்டும். ஆறு அல்லது சிறு ஓடை இருப்பின் மிக நல்லது. பாசறைத் திடலை ஒட்டி, மரம் நிறைந்த தோப்புகள் இருப்பின் சமையலுக்கும், பாடித்தீ அமைக்கவும், அவசியமான விறகு சேகரித்துக் கொள்ளமுடியும். இந்தவசதி இல்லையென்றால் விறகு விலைக்கு வாங்கிக் கொள்ளும் வசதி இருக்க வேண்டும். பாசறை வாழ்க்கைக்கு அவசியமான பால், தயிர், நெய், காய்கறி, இதர பண்டங்கள் வாங்கிக் கொள் வதற்கும் வசதியிருக்க வேண்டும். இவைகளுக்குரிய கடைகள் மூன்று நான்கு கிலோமீட்டர் தொலைவுக்குள் இருத்தல் நல்லது. பாசறைக்கு அருகில் மருத்துவ வசதிவேண்டும். சிறிது தொலைவில் மருத்துவமனை இருப்பின் நல்லது. அழைக்கும்பொழுது பாசறைக்கு வரக்கூடிய மருத்துவர் ஒருவரை அமர்த்திக்கொண்டால் மருத்துவ மனையைப்பற்றி அக்கறை இல்லை. பாசறைத்திடலுக்கு ரயில்வசதி, பேருந்துவசதி அவசியம். இந்த நிலையங்களிலிருந்து பாசறை மூன்று நான்கு கிலோமீட்டர் தொலைவுக்குள் இருக்கவேண்டும். பாசறையி லிருந்து சில கிலோமீட்டர் தொலைவுகள் சாரணர்கள் உல்லாசப் பிரயாணமாகச் சென்று பார்க்கத் தகுந்த இயற்கைக்காட்சிகள், நிறுவனங்கள், நீர்த்தேக்கங்கள், ஏரிகள் முதலியனவும் இருப்பின் மிக நல்லது.

பாசறைத்திடலில் போதுமான கூடாரங்கள் அமைத்துக்கொள்ள வசதி வேண்டும். கூடாரங்கள் இல்லையானால் கொம்புகள் ஓலைக்கீற்று முதலியவைகளைக் கொண்டு சிறுசிறு குடிசைகள் அமைத்துக்கொள்ள வசதிவேண்டும். கூடாரங்கள் அல்லது குடிசைகள் அமைக்கப்படும் இடங்கள் சுற்றும் உள்ள தரையைவிட சற்று உயரமாகவே இருக்க வேண்டும். மழை வந்தால் தண்ணீர் தேங்கி நிற்காமல் சீக்கிரமாக ஓடிவிடக்கூடிய இடமாக இருக்கவேண்டும்.

களிமண் தரை பாசறைக்குகந்ததல்ல. நல்ல வெய்யில் உள்ள போது தரை இறுகிக் கருங்கல் போலக் காணப்படும். இலேசான மழையிலும் மண் பிசுபிசு என்றாகிவிடும். காலில் ஒட்டிக் கொண்டு தொந்தரவு கொடுக்கும். மணல், மணல்பாங்கான தரையும் கூடாரத்துக்கு உகந்ததல்ல. மணல் தரையில் கூடாரக்கட்டுத்தறி களை நிலைநிறுத்துவது முடியாதுபோகும். பாறைகள், கற்கள் நிறைந்துள்ள கெட்டித்தரையும் கட்டுத்தறிகளை அடிப்பதற்கு இடம்

தராது. இத்தகைய பூமிகளை விட்டு ஏனைய மாதிரியான பூமிகளைத் தேர்ந்து கொள்ளவேண்டும்.

செழிப்பான புல் வளர்ந்துள்ள தரை பாசறைக்குகந்ததல்ல. பல வகையான பூச்சிகள் புல்லுக்குள் காணப்படலாம். தவிர, மழை வந்தால் பூமி இலேசில் உலராது. காலைப்பனியிலும் அப்படியே. இலேசாகப் புல் வளர்ந்துள்ள தரை பாசறைக்குகந்ததாகும். அப்படி யான இடங்களில் பக்கத்துத்தரையைவிட ஒருசிறிது உயரமாகஉள்ள பூமி கூடாரங்கள் அமைக்கப் பொருந்தும்.

மரங்கள் நிறையஉள்ள தோப்புக்களின் மத்தியில் ஆங்காங்கு உள்ள வெளியிடங்களில் கூடாரங்கள் அமைக்கலாம். அடர்ந்த மரங்களுக்குக் கீழே கூடாரம் அமைத்தல் கூடாது, காற்று மழை உள்ள பொழுது மரக்கிளைகள் ஒடிந்து கூடாரத்தின் மேல் விழலாம், மின்னல் இடியாலும் அபாயம் உண்டாகலாம்.

பாசறைத்திடலைத் தேர்தெடுப்பது திடலைச் சென்று பார்வையிட்ட பிறகுதான் செய்யவேண்டும். சென்றுபாராமல் தேர்ந்துகொள்வது ஏமாற்றத்தைத் தரலாம். சில மாதங்களுக்குமுன் நேரில் போய்ப் பார்த்த திடல் இப்பொழுதும் அப்படியே இருக்கும் என்று எண்ணக் கூடாது. முன் நாம் போய்ப்பார்த்த பொழுது எல்லா வசதிகளும் இருந்தனவே, இப்பொழுதும் அப்படியேதான் இருக்கும் என்று எதிர் பார்ப்பது நல்லதல்ல. மறுபடியும் திடலைப் போய்ப் பார்ப்பது அவசியமாகும்.

திடலைப்போய்ப் பார்வையிடும் போது முக்கியமாகக் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. மிகக் கடுமையான மழைபெய்தால் அல்லது கொடிய புயல்காற்று வீச நேர்ந்தால், அந்தத் திடல் எப்படி இருக்கும் என்று மனக்கண்ணால் கற்பனைசெய்து பார்த்துக் கொள்வது அவசியம். அப்படியான சூழ்நிலை ஏற்பட்டால் நாம் தப்பித்துக் கொள்ள இடம் இருப்பதாகத் தோன்றவில்லையானால் அந்த இடத்தை விட்டுவிட்டு வேறு ஒரு இடத்தைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

திடலைப்பார்க்கச் சாரண ஆசிரியரோ அல்லது சாரணர்கள் குழுவோ போகும் பொழுது பாசறைக்கு வேண்டிய சில முக்கிய ஏற்பாடுகளையும் செய்யலாம். அவை : பால், தயிர், நெய், முதலி யவைகளுக்கான முன் ஏற்பாடு, மருத்துவரைச் சந்தித்துப் பாசறைக்கு அவரை வரக் கேட்டுக்கொள்ளும் முன் ஏற்பாடு, ரயில் நிலையம் அல்லது பேருந்து நிலயத்திலிருந்து பாசறைச் சாமான்களை எடுத்துச் செல்ல வண்டிகளுக்கு முன் ஏற்பாடு போன்றன.

## பாசறை நடத்தல் (Camping)

பாசறை நடத்த மிகப் பொருத்தமுள்ள காலம் கோடைவிடு முறை நாட்களே. ஒவ்வொரு சாரணப் படையும் இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தையும் விடுமுறை ஆரம்பத்துக்கு ஒரு மாதத்துக்கு முன்னதாதவே செய்து முடிக்கவேண்டும். எல்லா முடிவுகளும் கண்ணிய மன்றத்தில் செய்யப்படுவது அவசியம். சாரண ஆசிரியர் தானுகவே முடிவுக்கு வந்துவிடாமல் அணித்தலைவர்களின் உதவியோடு முடிவுசெய்வது அவசியம். எந்த இடத்தில் பாசறை அமைக்கலாம், எத்தனை நாள் பாசறை நடைபெறவேண்டும், ஒவ்வொரு சாரணனும் எத்தனை ரூபாய் கட்டவேண்டும் என்பது போன்ற எல்லா விவரங்களையும் கண்ணியமன்றத்தில் முடிவுசெய்து, அதற்குப்பிறகு முடிவுசெய்யப்பட்ட விவரங்களைப் படைக்கூடத்தில் விளம்பரப் பலகையில் விளம்பரம் செய்யவேண்டும்.

பாசறை விவரங்களை முடிவு செய்யும் கண்ணிய மன்றக்கூட்டத்தில் பாசறைக்குரிய சில உட்குழுக்களையும் நியமனம் செய்வது அவசியம். பாசறை முன் ஏற்பாடுகளைச் செய்து முடிக்க ஒரு உட்குழு ; இன்னொன்று போக்குவரத்து ஏற்பாடுகளைச் செய்ய ; மற்ருென்று உணவு ஏற்பாடுகளைச் செய்ய ; இன்னும் ஒன்று பாசறை நிகழ்ச்சிகளை வரையறுத்துத் திட்டம் வகுக்க ; இன்னும் ஒன்று கேளிக்கைகளுக்குப் பொறுப்பு ஏற்று அவைகளை நடத்த என்று ஐந்து செயற்குழுக்கள் தேவைப்படும்.

**முன்ஏற்பாடுகள்** என்பன பாசறைக்குரிய இடத்தைப் பார்வையிட்டுத் தேர்தல். பாசறைக் காலத்தில் தேவைப்படும் உணவுப் பொருள்கள் பால், தயிர், நெய், கறிகாய், விறகு போன்றவைகளுக்கு முன்னதாக ஏற்பாடு செய்தல், மருத்துவரைச் சந்தித்து அவர் இசைவுபெறல்.

**போக்குவரத்து ஏற்பாடுகள்** என்பன சாரணர்களுக்கும் பாசறைப் பண்டங்களுக்கும் ரயில் வசதி, பேருந்து வசதி ஏற்படுத்தல், ரயில் பிரயாணத்துக்குரிய சலுகைக்கு ஏற்பாடு செய்தல், படைக்கூடத்தில் இருந்து ரயில் நிலையத்துக்கும், ரயில் நிலையத்தில் இருந்து பாசறைக்கும் வண்டிவசதிகள் ஏற்பாடு செய்தல், அது போல திரும்பி வரும் பொழுதும் வசதிகள் அமைத்தல்.

**உணவு ஏற்பாடுகள்** என்பன கடைக்குச் சென்று உணவுப் பொருள்களை வாங்குவது, அவைகளைப் பக்குவப் படுத்துவது, பாசறைக்கு எடுத்துச் செல்லத் தகுந்த விதத்தில் அவைகளைக்கட்டி வைப்பது.

**நிகழ்ச்சி ஏற்பாடுகள்** என்பன பாசறை நாட்களுக்குரிய நிகழ்ச்சிகளை வரையறுத்துத் திட்டம் வகுத்தல், எங்கெங்கு செல்ல வேண்டும், எதெதைப் பார்க்கவேண்டும் என்பதை முடிவுகட்டுவது, அதற்கு வேண்டிய வசதிகளுக்கு ஏற்பாடு செய்தல்.

**கேளிக்கை ஏற்பாடுகள்** என்பன பாசறை நாட்களில் சாரணர்கள் விளையாடக்கூடிய விளையாட்டுகளுக்கும் பங்கெடுத்துக் கொள்ளக்கூடிய பாடித்தீ நிகழ்ச்சிகளுக்கும் முன் ஏற்பாடுகள் செய்தல்.

இந்த முன் ஏற்பாட்டுக் குழுக்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு அணித்தலைவன் அல்லது அனுபவம் உள்ள ஒரு உதவித் தலைவன் அல்லது வேறு சாரணன் குழுத்தலைவனாக இருக்கலாம். சாரண ஆசிரியர் எல்லாக்குழுக்களையும் மேற்பார்க்க வேண்டும். குழுக்கள் ஏதாவது முடிவுக்கு வருமுன் சாரண ஆசிரியரைக் கலந்தே முடிவுக்கு வரவேண்டும்.

## விளம்பரம் (Publicity)

பாசறையை விளம்பரம் செய்யும் போது பாசறை பற்றிய அறிக்கைகளுடன் அதைப் பற்றிய படங்கள், நிலப்படங்கள், வரை படங்களும் விளம்பரப் பலகையில் போடப்படவேண்டும்.

பாசறை நடக்கும் இடத்தையும், எந்தத் தேதி முதல் எந்தத் தேதிவரை நடைபெறும் என்பதையும் விளம்பரம் செய்வதோடு, பாசறைக் காலத்தில் என்னென்ன முக்கிய நிகழ்ச்சிகள் நடைபெறும் என்பதையும், பாசறைக்குக் கட்டணம் எவ்வளவு என்பதையும் அறிக்கையில் குறிப்பிடவேண்டும்.

பாசறைக்கு வர விரும்பும் சாரணர்கள் தங்கள் பெற்றோரின் இசைவுக் கடிதத்துடன் எந்தத் தேதிக்குள் கட்டணத் தொகையைக் கட்டவேண்டும் என்பதையும் இந்த விளம்பரத்தில் குறிப்பிட வேண்டும்.

பாசறைக்குரிய முகவரி எந்தத் தேதியில் எந்த இடத்தில் எத்தனை மணிக்குப் பாசறை செல்லும் சாரணர்கள் கூடவேண்டும் என்றும் பாசறை முடிந்த பிறகு எப்பொழுது திரும்பி வருவார்கள் என்பதையும் குறிப்பிடுவது அவசியம்.

இவை தவிர, பாசறையைப் பார்க்க விரும்பும் பெற்றோர்கள் என்று வரலாம், வருவதற்கு என்னென்ன வசதிகள் இருக்கின்றன, எத்தனை மணிக்கு வர வேண்டும். எத்தனை மணிக்குத் திரும்பலாம் என்பதையும் விளம்பரத்தில் அறிவிப்பது அவசியம்.

## பாசறை அமைப்பு (Camp Lay Out)

சாரணர்களின் பாசறை ஒரு சிறு கிராமம் போலத் தோற்றம் அளிக்கும். பாசறை வட்டமாக அமைக்கப்பெறும். இந்த வட்டத்தில் அணிகள் தனித்தனி திடல்களில் தங்கள் கூடாரங்களை அமைத்துக் கொள்ளும். ஆசிரியர்களும் தனியிடத்தில் தங்கள் கூடாரங்களை அமைத்துக் கொள்வார்கள். உணவுப் பண்டங்களுக்குரிய கூடாரமும் பயிற்சிப் பொருள்களுக்குரிய கூடாரமும் தனி இடங்களில் அமைக்கப் பெறும். அணிகளுக்குரிய கூடாரங்கள் ஒன்றுக்கொன்று 20 அல்லது 30 மீட்டர் தொலைவில் இருக்கும். ஆசிரியர்களின் கூடாரம் இன்னும் அதிகமான தொலைவில் இருக்கும்.

அணிகள் தங்கள் கூடாரத்தை ஒட்டி மர நிழலில் தங்களுக்கு வேண்டிய சமையல் திடலை அமைத்துக் கொள்ளும். போதுமான தொலைவில் தங்களுக்கு வேண்டிய ஒதுங்கும் இடங்களை அமைத்துக் கொள்ளும்.

உணவுப் பண்டங்களுக்குரிய கூடாரத்தை ஒட்டி பொதுச் சமையல் திடல் ஒன்று அமைக்கப்பெறும்.

ஆசிரியர்களின் ஒதுங்கும் இடம் உரிய தொலைவில் அமைக்கப் பெறும்.

பாசறைத்திடலின் நடுவில் வசதி உள்ள ஒரு இடத்தில் கொடி வட்டம் அமைக்கப்பெறும். இங்கு பாசறைக் காலத்தில் ஒவ்வொரு நாளும் காலையில் சாரணர்கள் அணி வகுத்து நின்று இறை வணக்கம், கொடி வணக்கம் செய்வார்கள்.

இந்த வட்டத்துக்கு அருகில் பாசறை விளம்பரப்பலகை அமைக்கப் பெறும். அதன் அருகில் கடிதங்களுக்காக ஒரு சிறு கடிதப் பெட்டி வைக்கப்பெறும்.

பாசறையில் பொதுவாக எந்தத் திசையை நோக்கிக் காற்று வீசுகிறது என்பதைக் கவனித்து அதற்குப் பொருந்தும் முறையில் சமையல் திடல்களும், ஒதுங்கும் இடங்களும் அமைக்கப்பெறும். இவை தனித்தனியே அணிக்கொன்றுகவோ, மொத்தமாகப் படை முழுவதுக்குமோ அமைக்கப்பெறும்.




பாசறை அமைப்பு (Camp Lay Out)




அணிகளுக்குத் தனித்தனி திடல் கொடுக்க முடியாத இடங்களில் படைப் பாசறைக்குரிய அமைப்பு

1. அணிகள் தனித்தனி கூடாரங்களில் தங்கும் இடம் 2. குளியல் இடம் 3. ஒதுங்கும் இடம் 4. உணவருந்தும் பந்தல்கள் அல்லது கூடாரம் 5. ஓய்வுக்குரிய இடம்—முதல் உதவிக்குரிய இடம் 6. சமையல்களம்—கழிவு நீர்க்குழி, காய்ந்த குப்பைக்குழி, விறகுப் பட்டரை, விறகு திருத்தம் செய்யும் இடம், பாசறைக் காளவாய், முதலியன.

213. பாசறை அமைப்பு—வேறு
(Alternative Method of Camp Lay Out)

## கூடாரம் அமைப்பு (Tent Petching)

கூடாரங்கள் பலவகை. சாரண அணிகளுக்கும் சாரணப் படைகளுக்கும் பொருத்தமாக உள்ள கூடாரங்கள் வீடு போன்ற தோற்றமுடையன. இரண்டு பக்கத்தில் ''கூரை''யும் உச்சியில் ''முகடு''ம் உடைய வீடுகள் போன்ற தோற்றம் உடையதால் அவைகளை முகட்டுக் கூடாரங்கள் (Ridge Tents) என்னலாம். இவை 12 அடி × 12 அடி. ஒரு சில 14 அடி × 14 அடி ஆகவும் இருக்கும். இவைகளுச்குள் எட்டுச் சாரணச் சிறுவர்கள் தங்குவதற்குப் போது மானது.




1. கூடாரக்கால் (Upright) கூடாரக்கதவுகளும் இங்குள்ளன.
2. முகட்டுக் கழி (Ridge Pole)
3. கூடாரக் கட்டுக்கயிறு (Guy Line)
4. கூடாரச் சுவரின் அடிப்பாகம் (Bottom of Tent Walls)
5. கூடாரச் சுவர் (Tent Wall)

214. முகட்டுக் கூடாரம் (Ridge Tent)

முகட்டுக் கூடாரங்கள் இரண்டு கால்களின் (Uprights) மேல் நிற்கும். முகட்டிலும் ஒரு முகட்டுக் கழி (Ridge Pole) உண்டு. கூடாரத்துணி நான்கு பக்கத்திலும் இழுத்துக் கட்டப்பட்டிருக்கும். கட்டுக்கயிறு (Guy-Lines) கட்டுத்தறிகளில் (Tent Pegs) கட்டப் பட்டிருக்கும்.

கூடாரத்தை அமைத்தல் ஒருகலை. அமைத்தல் என்பது கூடா ரத்தைப் பிரித்து அதன் பிறகு அதன் கால் மூங்கில், முகட்டு மூங்கில், கட்டுக்கயிறுகள் உதவியால் நிலையாக நிற்க வைத்தல் ஆகும்.

கூடாரம் அமைக்கப்படும் பூமி மட்டமாகவும் சுற்றும் உள்ள பூமியைவிடச் சற்று உயர்ந்ததாகவும் இருக்க வேண்டும். மழை வந்தால் தண்ணீர் தேங்கி நிற்கக் கூடாது.

கூடாரத்தை எந்த இடத்தில் எந்தத் திசையைப் பார்க்க அமைக்க வேண்டுமோ அதை முடிவு செய்து கொண்டு கூடாரத்தின் கால்களும் நான்கு மூலைகளும் எங்கெங்கு வரும் என்பதை முடிவு செய்து கொள்ள வேண்டும். அதன் பின் கூடாரத்தின் இரு கால்களையும் முகட்டு மூங்கிலையும் உரிய முறையில் கூடாரத்துணியுடன் பொருத்த வேண்டும். அதன் பின் அவைகளைத் தூக்கி நிற்கவைக்க வேண்டும். அப்படி நிற்க வைக்கும் பொழுது கால்களுக்கு அடையாளம் செய்யப்பட்டுள்ள இடத்தில் கால்கள் வரவேண்டும். இப்படி நிற்க வைத்தபின் மூலைகளுக்குரிய இடங்களில் மூலைகளை இழுத்துப் பிடித்துக் கொண்டு கட்டுத்தறிகளை அடித்து அவைகளில் மூலைக்கயிறுகளைக் கட்ட வேண்டும்.

மூலைக்கட்டுத்தறிகள் கூடாரத்தின் நீளத்துக்கும் அகலத்துக்கும் பொதுவான ஒரு கோணத்தில் (135°) அமையும்.

மூலைக்கயிறுகளை இப்பொழுது தாற்காலீகமாகக் கட்டிவைத்து விட்டுப் பின்னர் பக்கவாட்டில் உள்ள கயிறுகளைக் கட்டவேண்டும். இவைகள் கூடாரச் சரிவுக்கு ஏற்ற முறையில் இழுத்துக்கட்டப்பட வேண்டும். கூடாரத்தில் தைக்கப்பட்டிருக்கும் நாடாவுக்கு நேராகவும் இருக்கவேண்டும்.

பக்கவாட்டுக் கட்டுத்தறிகளும் மூலையில் உள்ள கட்டுத்தறியும் ஒரு நேர் கோட்டில் அமைய வேண்டும்.

இதன்பின் எல்லாக் கயிறுகளும் சரியான முறையில் கட்டப்பட்டிருக்கின்றனவா என்று சரிபார்க்க வேண்டும்.

சரியாக அமைக்கப்பட்ட கூடாரத்தின் இரண்டு சரிவுகளும் விரைப்பாக இழுபட்டு நிற்கும். சுருக்கம் இருக்காது. கூடாரத்தின் பக்கங்களும் கோணல் இல்லாமல் அழகாக அமைந்திருக்கும்.

கூடாரத்தின் முன் பின் உள்ள கதவுகளை உரிய முறையில் வரிந்து மூடி விட்டு கட்டுத்தறிகளையும் கட்டுக்கயிறுகளையும் சரிபார்த்தால் கூடாரம் அழகாக அமையும்.

கட்டுத்தறி கட்டுக்கயிற்றுக்கு எதிர்பக்கம் சற்றுச் சாய்வாக (தூக்கு நிலையிலிருந்து 30° சாய்வாக) இருக்கவேண்டும். கட்டுத்தறியை தரையில் அடிக்கும்போது கட்டுத்தறியில் காலை வைத்து சிறிது அழுத்திக்கொண்டிருந்தால் நமக்குத் தேவையான சாய்வு ஏற்படும்.



215. பலத்த காற்றுக்கு முற்காப்பு

முக்கிய கட்டுக்கயிறுகளை கூடாரத்தின் இருமருங்கிலும் படத்தில் உள்ளதுபோல் குறுக்கே இருந்து கட்டவேண்டும். மழைத் தண்ணீருக்கும் போக்கு அமைத்தல் அவசியம்.

கட்டுக் கயிற்றை கட்டுத் தறியில் கட்டுவதற்குப் பயன் படுத்தக்கூடிய முடிச்சுகள் இரண்டு : (1) கட்டுக்கயிற்றை கட்டுத் தறியைச் சுற்றிக் கொண்டுவந்து அதன் நுனியை நீளப்பாகத்தோடு வடக்கயிற்றுத் தொடுப்பால் கட்டுவது; (2) கட்டுக்கயிற்றை கட்டுத் தறியைச் சுற்றிக்கொண்டு வந்து நுனியை இரண்டு ''அரை முடிச்சுகள்'' வழியாக இழுத்தல்.

கூடாரம் அமைத்தற்கு அதை அதற்குரிய கோணிப்பையில் இருந்து வெளியில் எடுக்கும்பொழுது அதை எப்படி மடித்து வைக்கப் பட்டிருக்கிறது, கட்டுக் கயிறுகள் எப்படி உள்ளன என்பதைக் கூர்மையாய்க் கவனித்தால், பாசறை முடியும்பொழுது கூடாரங்களை எப்படி மடிக்கவேண்டும் என்பதை நன்கு தெரிந்து கொள்ளலாம்.



216. கட்டுக்கயிற்றை உறுதிப்படுத்தல்—

கூடாரங்களை மடித்து அவைகளுக்குரிய பைகளில் போட்டு வைக்குமுன் அவைகளை வெயிலில் நன்கு உலர வைக்கவேண்டும். நன்ருய் உலர்ந்தபின் மட்டுமே அவைகளை மடிக்கலாம். ஈரம் ஒரு சிறிது இருந்தாலும் கூடாரத்துணி மட்கி, வலுவிழக்கும்.



217. கூடாரத்தின் மேல் விழும் மழைத் தண்ணீருக்குப் போக்கு விடுதல்

நன்ருய் உலர்ந்த பிறகு கூடாரத் துணியை நன்ருக உதறித் தரையில் விரித்து வைத்துக்கொண்டு, கட்டுக்கயிறுகளை ஒவ்வொன்ருகக் கைவிரல்களில் சுற்றித் தனித்தனிச் சுருட்டாகக் கட்டி விரித்து வைக்கப்பட்டுள்ள துணியில் போடவேண்டும். முகட்டுக் கயிறுகளை

மட்டும் அப்படியே விட்டு வைக்கவேண்டும். அப்புறம், துணியை மூன்று மடிப்பாக மடித்து, அதன்பின் அதைப் பாய் சுருட்டுவது போலச் சுருட்டவேண்டும். சுருட்டும்போது விட்டுவைக்கப் பட்டுள்ள முகட்டுக் கயிற்றை ஒருவர் இழுத்துப் பிடித்தால் அது கூடாரத்தைச் சுற்றிக் கட்டிக்கொள்ளும். கூடாரத்தை அதற்குரிய கோணிப்பையில் போடலாம்.

## சமையல் களம் அமைப்பு

## (Kitchen Lay Out)

பாசறைக் காலத்தில் சமையலும் சாப்பாடும் வெளியிடங் களிலேயே நடைபெறும். அணிகள் தங்களுக்கு வேண்டிய வசதி களைத் தாங்களே அமைத்துக் கொள்ளும்.

சமையல் கூடத்தில் பொதுவாக அங்கு வீசும் காற்றுக்குப் பொருந்தும் முறையில் சமையல் அடுப்பு அமைக்கப்பட வேண்டும். அடுப்பில் உண்டாகும் புகை சமையல் கூடத்துக்கு உட்பக்கம் வருவது கூடாது. அடுப்பு இருக்கும் இடத்துக்குப் பொருந்தும் முறையில் சமையல் கூடத்தில் உள்ள ஏனைய வசதிகள் அமைக்கப் படவேண்டும்.

சமையல் கூடத்தில் அவசியமாக உள்ளவை: சமையல் அடுப்பு; சமையல் பாத்திரங்கள் பரண்; தண்ணீர் அண்டா வைக்கும் இடம்; கறிகாய் திருத்துவதற்கு மேஜை; பாத்திரங்களைச் சமையல் செய்யும்பொழுது அவ்வப்போது கழுவிக்கொள்ள இடம்; தண்ணீர் கொட்டுவதற்கு ஒரு குழி; காய்ந்த குப்பை போடுவதற்கு ஒரு குழி; சமையல் கூடத்தில் இரண்டு மூன்று மீட்டர் தொலைவில் விறகுப் பந்தலும் விறகுதறிக்க ஒரு தறிக்கட்டையும் வேண்டும்.

சமையல் கூடத்தை ஒட்டி அல்லது அதன் ஒரு பக்கத்தில் குடி தண்ணீர்ப் பானையும் அதன் பக்கத்தில் பானையிலிருந்து தண்ணீரை எடுப்பதற்கு ஒரு தனிப்பாத்திரமும் வேண்டும். இந்தப் பாத்திரத் தால் பானையிலிருந்து தண்ணீரை எடுத்து லோட்டாக்களில் விட்டுக் குடிக்கவேண்டும்.

## 218. சமையல் களம் அமைப்பு (Kitchen Lay-out)




1. அடுப்பு
2. கழிவு நீர்க்குழி காய்ந்த குப்பைக் குழி
3. பாத்திரப் பரண்
4. பாத்திரம் கழுவத் தண்ணீர்
5. 6. { சமையலுக்குத் தண்ணீர்
7. சமையல் செய்யப் பட்ட உணவுப் பொருள்கள்
8. உணவுச் சாலை
9. உணவுத்தட்டு
10. குவளைகள்
11. குடிநீர்
12. பாத்திரம் கழுவும் இடம்

குறிப்பு : சமையலுக்குத் தேவையாகும் விறகு சுள்ளி முதலியவை அடுப்பு இருக்கும் இடத்துக் கருகாமையில் விறகுப் பட்டரையில் இருக்கும்.



219. பாசறைப் பாத்திரப் பரண் (Gadget for Kitchen Vessels)

மெல்லிய மூங்கில் கீற்றுக்களால் அமைக்கக்கூடிய இந்தப் பாத்திரப் பரண் பாசறைச் சமையல் களத்தில் அவசியம் இருக்கவேண்டிய தொன்று. படத்தில் காண்பித்துள்ளது போலப் பல பொருள்களை அடுக்கிவைக்கக் கூடியதாக இருக்கலாம், அல்லது சமையலுக்குப் பயன்படும் பாத்திரங்களை மட்டும் வைப்பதற்காக அமையப்பெறலாம்.







1. தண்ணீர்க் குவளைப் பரண் (Mug Tree) 2. உணவுத் தட்டுப் பரண் (Plate Rack) 3. கை கழுவும் கிண்ணம் (Wash basin)

220. சமையல்கூட வசதி அமைப்புகள் (Kitchen Gadgets)



221. தூக்குச்சட்டியை இறக்குவதற்குரிய அமைப்பு

தூக்குச்சட்டிகளை அடுப்பிலிருந்து இறக்கிவைப்பதற்கு இந்த அமைப்பு பயன்படும். ''அமைப்பு'' என்பது நீண்ட கைபிடி உள்ள ஒரு கவட்டைக் கம்பு. பாத்திரத்தில் உள்ள நீரைக் கொட்டுவதற்கும் பயன்படும்.

222. பாத்திரங்களை அடுப்பின் மேல் தொங்கவிடுவதற்குரிய அமைப்பு (Pot-Hooks)












223. ''சிப்பாவா'' உணவு மேஜை (Cheppawa Dining Table)

உணவுத் தட்டுகளை அடுக்கி வைக்கப் பரண், லோட்டாக்களைத் தொங்கவிட கிளைகளுள்ள சிறு மரக்கொம்பு, உட்கார்ந்து உணவருந்த ஒரு மேஜை, அதை ஒட்டி ஒரு இருக்கை ஆகிய இவைகள் சமையல் கூடத்தைச் சேர்ந்த வசதிகள் ஆக அமையும்.

## கூடாரத்தில் வசதிகள் (Tent Gadgets)

சாரணர்கள் தங்கும் கூடாரத்தை ஒட்டி கூடார வாழ்க்கைக் குரிய சில வசதிகள் வேண்டும். பெட்டிகளை அழகாய் அடுக்கி வைப்பதற்கு ஒரு உறுதியான பரண்; அரிக்கேன் விளக்கைத் தொங்கவிடுவதற்குக் கிளைகளுள்ள ஒரு கம்பம்; அணியைப் பற்றிய அறிக்கைகளுக்கு ஒரு விளம்பரப் பலகை; கம்பளங்கள் துணிகள் முதலியவற்றைக் காயப்போட இரண்டு மரங்களில் இணைக்கப் பட்டுள்ள கயிறு; பாதரட்சைகளுக்கு ஒரு பரண்; சாரண தண்டங்களை அடுக்கிவைக்க ஒரு பரண்; பாதரட்சைகளிலிருந்து மண்ணைத் துடைத்தகற்றப் பொருத்தமான அமைப்பு, என்று பல வசதிகளை அமைத்துக் கொள்வது அவசியம்.

உணவுத் தட்டுகளுக்கும் தண்ணீர் அருந்தும் லோட்டாக் களுக்கு உரிய அமைப்புகள் கூடாரத்தின் பக்கத்தில் இருப்பதும் பொருத்தம் உடையதே.

## விறகுப்பரண் (Firewood Store)

இங்கு விறகு சிறுசிறு கட்டைகளாகத் தறிக்கப்பட்டு, ஒரு ஓரத்திலும், அவற்றை இரண்டு மூன்றாகப் பிளக்கப்பட்டு அவை களுக்கடுத்தாற் போலவும், வைக்கப்பட்டிருக்கும். இவை களுக்கு அடுத்தாற்போல சிறுசிறு சுள்ளிகள்; அல்லது சிறிது சிறிதாகப் பிளக்கப்பட்டுள்ள கட்டைகள் வைக்கப்பட்டிருக்கும். இந்த விறகுக் கட்டைகள் தரைமேல் வைக்கப்பட்டால் தரையில் உள்ள ஈரம் அவைகளுக்குப் பரவும். ஆகையால் நீள வாட்டில் இரண்டு மூன்று நீளக்கட்டைகளைப் போட்டுப், பின் அவற்றின் மேல் கட்டைகளை அடுக்கி வைப்பது நல்லது. இப்படி அடுக்கி வைக்கப் பட்டுள்ள விறகு மழையில் நனைந்து போகாதபடி கூரை அமைத்துக் கொள்வது அவசியம். கூரையை வைக்கோலால் அல்லது மரத் தழைகளால் வேய்ந்து கொள்ளவேண்டும்.




முகட்டுக் கூடாரம் (Ridge Tent)



பாதரட்சைப் பரண் (Shoe Rack)




பாதரட்சையில் உள்ள களிமண்
துடைத்தலுக்குரிய அமைப்பு
(Mud Scraper)



விகான் கொடிக்கம்பம்
(Wigan Flag Staff)



பாசறை மேஜை (Camp table)

224. முகட்டுக் கூடாரமும் வசதி அமைப்புகளும்.



225. விறகுப் பட்டை —(Firewood Store)

மழை நேரத்தில் ரப்பர் அல்லது பிளாஸ்டிக் துணியால் மூடிவைக்கலாம்.





226. சமையல் களத்துக்கு அவசியமான ஆயுதங்கள்
கைக்கோடரி—(Hand axe)
''புஷ்'' கைவாள் —
(Bush saw)

விறகு தறிக்கவும் விறகு பிளக்கவும் கோடரியைப் பயன்படுத்தலாம். அல்லது கைவாள் (Hand saw) அல்லது வில்வாளைப் (Bow saw) பயன்படுத்தலாம். கோடரியால் தறிக்கும் பொழுது விறகு ஒரு சிறிது சேதமாகிறது. வாளைப் பயன்படுத்தும் போது அவ்வளவு சேதம் இல்லை.

விறகு தறிக்கவும், பிளக்கவும், தறிக்கட்டை (Chopping block) அவசியம். கோடரியால் தறிக்கும் போது கோடரி 45° அளவில் விறகின் மேல் படவேண்டும். வலது பக்கமும் இடது பக்கமும் மாற்றி மாற்றி வெட்டவேண்டும். மூன்று முறை ஒரு பக்கமும் மூன்று முறை மறுபக்கமும் வெட்டுவது நல்ல பயன்தரும். வாளால் விறகு தறிக்கும் போதும் தறிக் கட்டைப் பயன்படும். கோடரியால் தறிக்கும் பொழுது விறகுக் கட்டையைத் தறிகட்டையின் மேல் நன்ருகப் பதிய வைத்துக் கொண்டு தறிக்க வேண்டும். கனம் குறைந்த கட்டைகளை ஒருபுறம் வெட்டியே தறித்துவிடலாம். கனம் உள்ள கட்டைகளை மறுபுறமும் வெட்ட வேண்டியதாக வரும்.

விறகைப் பிளப்பதற்கு நுனியிலிருந்து பிடித்திருக்கும் இடத்தை நோக்கி சிறிது சிறிதாகப் பிளந்து கொண்டு வரவேண்டும். இதற்கும் விறகுக்கட்டை நன்ருகப் பதியும்படி தறிக்கட்டை மேல் வைக்கப்பட வேண்டும்.



227. பாகுபாடு செய்துள்ள விறகு
(Graded Firewood)

## கழிவு நீர்க்குழி (Grease Pit, or Wet Pit)

இது ½ மீட்டர் × ½ மீட்டர் இருக்கலாம். அதை விடச் சிறிய தாகவும் இருக்கலாம். இதன் ஆழமும் ½ மீட்டர் இருக்கலாம். கழிவுத் தண்ணீரை இதனுள் கொட்டும் போது அதை ஏற்றுக் கொள்ள ஒரு சிறு பாத்திரம் வைப்பது நல்லது. அதில் உள்ள தண்ணீரை அவ்வப்போது கொண்டு போய் வெய்யில் நன்ருக அடிக்கும் இடத்தில் கொட்டி விட வசதியாக இருக்கும். அப்படி கொட்டப்படும் இடம் மிக ஒதுக்கமான இடமாயிருக்க வேண்டும். கொட்டும் கழிவுத் தண்ணீரில் உள்ள வேறு பொருள்களைத் தங்கவைக்க ஒரு சல்லடை (Grease Trap) அமைத்துக்கொள்ள வேண்டும். இது மெல்லிய கொம்புகளால் செய்யப்படலாம். செய்த பிறகு அகலமுள்ள காட்டு இலைகளால் வேயப்படலாம்.



228. கழிவு நீர்க்குழி
(Wet Pit)

## கழிவுப் பொருள்குழி (Rubbish Pit or Dry Pit)

இந்தக் குழியும் முன்னதைப் போலவே ½ மீட்டர் × ½ மீட்டர் இருக்கலாம். ஆழம் ½ மீட்டர் இருந்தால் போதும். சமையல் செய்து கொண்டிருக்கையில் உணவுப் பொருள்கள் வைக்கப் பட்டிருந்த காகிதப்பைகள், கறிகாய் திருத்தியபின் எஞ்சிய கழிவுப் பொருள்கள் என்பனவற்றை இந்தக் குழியில் போட்டுவைத்து மாலையில் பாசறைக் காளவாயில் (Incinerator) எரித்து விடலாம். கழிவு நீர்க்குழியில் உள்ள சல்லடையையும் காளவாயில் எரித்து விடலாம்.

## சமையல் அடுப்பு (Cooking Fire)

சமையல் செய்யப் பயன் படுத்தப்படும் அடுப்புகள் பலவகை. சந்தர்ப்பத்துக்குத் தகுந்த விதமாக அவை மாறுபடுகின்றன. மூன்று கற்களை வைத்து சமையல் அடுப்பு அமைக்கலாம். அவைகள் தரையில் பதிந்து நிற்கவேண்டும். அவைகளின் உயரமும் 20 சென்டி மீட்டர் இருக்க வேண்டும். இதனை வண்டிக்காரன் அடுப்பு என்பார்கள். பொங்கல் அடுப்பு என்றும் சொல்லலாம். பொங்கலின் போது அளவாக அமைக்கப்பட்ட மூன்று மண் கட்டிகளைக் கொண்டு அடுப்பு அமைக்கிறார்கள். மண் வெட்டியால் ஒரு பள்ளம் தோண்டி அதை அடுப்பாக உபயோகப் படுத்தலாம். அதனைக் குழி அடுப்பு (Trench Fire) என்பர். செங்கல்களை நீளமாக இரண்டு வரிசையில் அடுக்கி நடுவில் உள்ள பள்ளத்தில் விறகை எரியவிட்டால் அது சமையலுக்குரிய அடுப்பாகிறது. இதுவும் குழி அடுப்பு வகையில் சேரும். இரண்டு கவட்டைக்கால்களை நட்டுவைத்து அவைகளின் மேல் ஒரு குறுக்குக்கம்பு போட்டு அதற்கு நேர் கீழாகத் தீ மூட்டினால் அது **மரம் வெட்டுவோர் அடுப்பு** (Lumberman's Fire) ஆகும். ஒரு நீளக்கொம்பின் ஒரு நுனி தரையில் உறுதியாகப் பதிக்கப்பட்டு, அதன் மத்தியை ஒரு கவட்டைக்கம்பு சற்று உயரத்தூக்க, உயரமாக உள்ள மறுநுனியின் கீழ் தீமூட்டினால் அது **துலா அடுப்பு** (Crane Fire) ஆகும். மரம் வெட்டுவோர் அடுப்பிலும் துலா அடுப்பிலும் சமையல் செய்யப் பாத்திரத் தொங்கட்டங்கள் வேண்டும்.

இரண்டு பெரிய பச்சை மரத்துண்டுகளை ஒன்றுக்குப் பக்கத்தில் மற்றொன்றை வைத்து நடுவில் உள்ள பள்ளத்தில் தீ மூட்டினால் அது **வேட்டைக்காரர்** அடுப்பு (Hunter's Fire) எனப்படும். சமையல் செய்யப் பாத்திரங்களை மரத்துண்டுக்கு மேல் வைக்கலாம். இரண்டு விறகுக்கட்டைகளைத் தரையில் தறிபோல, ஆனால் சிறிது சாய்வாக இறக்கி, அந்தச் சரிவில் விறகுக் கட்டைகளை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கிக் கொண்டு சரிவுக்கு முன் பக்கத்தில் தீ மூட்டினால் அது **வெப்பத்தைப் பின்னுக்குத் தள்ளி அடுப்பு** (Reflector Fire) எனப்படும். தரையில் நான்குகால் இறக்கி அவைகளின் மேல் கழிகளைப் பரப்பி மேஜை செய்து அதின் மேல் 10 சென்டி மீட்டர் கனத்துக்கு மண்பூசி அந்தப் பூச்சுக்குமேல் கல் அடுப்பு அமைப்பது **மேடை அடுப்பு** அல்லது **மேஜை அடுப்பு** (Altar Fire) ஆகும்.



229 அடுக்குச் செங்கல் அடுப்பு (Brick Fire)




1. துலா அடுப்பு (Crane Fire or Gypsy Fire)

2. மரம் வெட்டுவோர் அடுப்பு (Lumberman's Fire)







4. வெப்பத்தைபின் தள்ளி அடுப்பு (Reflector Fire)




3. வேட்டைக்காரர் அடுப்பு (Hunter's Fire)




5. குழி அடுப்பு (Trench Fire)



6. மேடை அடுப்பு (Altar Fire)

230. பலவகை அடுப்புகள் (Fires for Cooking)

இவைகள் எல்லாம் சமையல் செய்ய உதவும் தீ வகைகள் அல்லது அடுப்புகள் என்னலாம். இவை தவிர, சாரணர்கள் பயன் படுத்தும் வேறொரு தீ வகையும் உண்டு. அது நட்சத்திரத் தீ (Star Fire) அல்லது வெள்ளித் தீ எனப்படும். மூன்று பருமரத் துண்டு களால் அமைந்த இத் தீ வனவிலங்குகள் பாசறை எல்லைக்குள் வராதபடி அவற்றைத் தடுக்கப் பயன்படும். நான்கு ஐந்து நாள் ஒரே இடத்தில் தங்க வேண்டியதாக உள்ள பொழுது வெள்ளித் தீ அமைத்தல் நல்லது.

வெள்ளித் தீ அமைப்பதற்கு கூம்புக் கோபுரத் தீ ஒன்றை அமைக்கவேண்டும். இந்தக் கோபுரம் இரண்டு அடுக்காக இருத்தல் வேண்டும். சுள்ளிகளால் அமைக்கப் பெற்று எளிதில் நெருப்புப் பிடிக்கக்கூடிய கோபுரம் ஒன்று உள் பக்கமாகவும் அதைச்சுற்றி விறகுக் கட்டைகளாலாகிய கோபுரம் ஒன்று அதன் வெளியிலும் வேண்டும். இவைகளை முதலில் எரியவிடவேண்டும். அவை நன்ருக எரியத் தொடங்கினதும் மூன்று பருமரத்துண்டுகளை எரியும் தீயைச் சுற்றி, ஒத்த இடைவெளிவிட்டு, ஒரு நுனி தீயில் பட மறு நுனிகள் மூன்றும் 120°, 120°, 120° தொலைவில் இருக்கும் படிக்கு அவற்றை வைக்க வேண்டும். நடுவில் எரியும் நெருப்பு இந்த பருமரத்துண்டு களின் நுனியிலும் பிடிக்கும். கூம்புக் கோபுரத் தீ எரிய எரிய இந்த நெருப்பு வலுவடையும். கூம்புக் கோபுரம் எரிந்து அணைந்த பின்னும் தீப்பற்றிக்கொண்டுள்ள மூன்று நுனிகளும் விளக்கு எரிவது போன்று கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்கும். இரண்டு நாழிகைக்கு ஒரு தரம், எரியும் நுனிகள் ஒன்ருேடொன்று படும்படி தள்ளி வைத்துக் கொண்டு வந்தால், எவ்வளவு நேரம் வேண்டுமானலும் எரியும். இந்த வெள்ளித் தீயைச் சுற்றிச் சாரணர்கள் படுத்து உறங்கலாம்.



231. வெள்ளித்தீ (Star Fire)

பாசறைகளில் சாரணர்களுக்கு மிகப் பொருத்தமான அடுப்பு மேஜை அடுப்பேயாகும். தரையிலேயே உட்கார்ந்து கொண்டு சமையல் செய்வதைவிட நின்று கொண்டு சமையல் செய்வது சௌகரியமாக இருக்கும். மேஜையின் உயரம் சமையல் செய்யும் சிறுவர்களின் உயரத்தைப் பொறுத்தது. உயரம் மட்டமாக இல்லாமல் மிகுதியாக இருந்தால் சமையல் பாத்திரங்களை அடுப்பில் இருந்து இறக்கும் பொழுது அபாயம் உண்டாகலாம். அப்படி அபாயத்துக்கு இடம் கொடுக்காமல் உயரத்தை மட்டாகவே அமைத்துக் கொள்ள வேண்டும்.

## சமையல்கள் அமைப்பு—வேறு வகை

சமையல்கள் அமைப்பில் களத்தின் நடுவில் சமையல் அடுப்பை அமைப்பதும் உண்டு. ஒரு அணி மட்டும் சிறு பாசறையாக உள்ள போது இந்த அமைப்பு மிகப் பொருத்தமாக உள்ளது.




1. சமையலுக்குரிய பண்டங்கள் 2. சமையல் பக்குவங்கள் செய்யும் இடம் 3 தண்ணீர் அண்டா 4. உணவருந்தும் இடம் 5. அடுப்பு 6. பாத்திரங்கள் பரண் 7. கழிவு நீர்க்குழி 8. காய்ந்த குப்பைக்குழி 9. பாத்திரங்களைத் துலக்கும் இடம்

232. சமையல் களம் அமைப்பு (Kitchen Lay out)

இங்கு தரப்பட்டுள்ள படத்தில் அடுப்பு நடுவில் உள்ளது. ஏனைய வசதிகள் அனைத்தும் அதைச் சுற்றிலும் உள்ளன. அம்புக்குறி காற்றடிக்கும் திசையைக் குறிக்கும்.

சமையல் செய்யும் இடத்தைக் கயிறு கட்டிப் பிரித்து அமைப்பது மிக அவசியம். சமையல் செய்பவரும், அவருக்கு உதவி செய்பவரும் மட்டுமே அதனுள் போகலாம் என்ற நிபந்தனை வேண்டும். உதவியாளர்கள் என்பது தண்ணீர், விறகு முதலியவைகளைக் கொண்டு வந்து தருபவர்களைக் குறிக்கும்.

சமையல்கள எல்லையைக் குறிக்கக் கட்டப்படும் கயிறு 90° நேர் கோணங்களைக் கொண்ட ஒரு நீண்ட சதுரமாக இருக்க வேண்டும். உள்ளே வர, போக ஒரு பக்கத்தில் வசதி செய்யப்பட வேண்டும். எல்லைக் கயிறு கட்டிக் குறிக்கப்பட்டிருக்கும்பொழுது, அதனைத் தாண்டிப் போவதும் வருவதும் கூடாது. வழியே ஏகுக, வழியே மீளுக என்பது மிக முக்கியமானது.

சமையல் களத்தில் இருக்க வேண்டிய வசதிகள் இன்னும் சில உள்ளன.

## (I) நெய், பால் உறி (Camp Larder)

இதைப் போன்ற அமைப்பு பாசறையில் மிகவும் உபயோகமுள்ளதாக இருக்கும். இந்த அமைப்பைச் சுற்றி, மேலும், கீழும், எல்லாப் பக்கமும் மெல்லிய துணியால் மூடி வைத்து அமைப்பை நீண்ட ஒரு கயிற்றில் கட்டி உயர்ந்த மரத்தில் கட்டி வைக்கலாம். வேண்டும்போது இறக்கவும், அவசியமில்லாத போது மரத்தின் மேல் ஏற்றிக் கொள்ள வசதி அமைத்துக் கொள்ள வேண்டும். நெய், பால் முதலியவற்றைப் பாதுகாத்தற்கு இது பயன் படும்.



233. நெய் பால் உறி
(Camp Larder)

சிறு சிறு துண்டு வைக்கோலால் நிரப்பி வைக்கப்பட்டுள்ள, (அடுத்த பக்கம் காணப்படும்) பெட்டி சமையல் செய்துள்ள உணவை ஆறிப் போகாமல் பாதுகாக்கும் இயல்புடையது: ஓரளவு வெந்துள்ள பொருள்களையும் முழுவேக்காடு அடைய உதவி செய்யும்.

சாதிக்காய்ப் பெட்டி, அதன் மூடி ஆகிய இரண்டின் உள் பக்கத்தில் பழைய சேதித் தாள்களை ஒட்ட வேண்டும். எந்தெந்தப் பாத்திரங்களை வைக்க விரும்புகிருேமோ அவைகளுக்கு இடம் விட்டுவிட்டு ஏனைய இடங்களை வைக்கோல் துண்டுகளால் நிரப்ப வேண்டும். மெல்லிய துணியால் வைக்கோல் துண்டுகளை அவற்றின் வடிவத்தைக் கெடுக்காமல் மூட வேண்டும். பாத்திரங்களின் மேல் பக்கம் மூடுவதற்காக வைக்கோல் துண்டுகளால் நிரப்பப்பட்ட ஒரு தலையணையும் வேண்டும். பெட்டி அழகாகச் செய்யப்பட வேண்டும். அதாவது அது நன்ருக, இறுகலாக மூடப்படக்கூடியதாக இருப்பது மிக அவசியம். பெட்டிக்குக் கீல் (Hinges) பூட்டுப் போடுவதற்குரிய பாட்லாக்கு'' (Hasp and Staple)-ம் வேண்டும்.


234. வைக்கோல் சமையல் பெட்டி (Norwegian Hay Box)

நன்ருக முற்றுப்பெற்ற இந்தப் பெட்டி சமையல் செய்யப்பட்ட உணவை அதன் வெப்பம் குறைந்து விடாமல் வெகு நேரம் பாதுகாக்கும். ஓரளவு வெந்துள்ள சாதத்தை அதில் உள்ள தண்ணீரோடு இந்தப் பெட்டியில் வைத்தால் சிறிது நேரத்தில் முற்றிலும் வெந்துவிடும். ஓட்ஸ் (Oats) கஞ்சி காய்ச்சுவதற்கு மிகவும் உகந்தது.


235. பாசறை ரொட்டிக்கிடங்கு (Camp Oven)

இது பாசறை அமைப்புகளில் முக்கியமான தொன்று. இதில் மூன்று பாகங்கள் உள்ளன. முன் தரையில் காணப்படுவது தீ அடுப்பு—குழியாக அமைந்தது. விறகுக் கட்டையை எரிக்க வசதி யுள்ளது. நடுவிலுள்ளது மண்ணெண்ணெய்த் தகரம். காலியாக உள்ளது. தகரத்தை அடுப்புக்கு மேல் பதித்து நன்ருகப் பிசைந்த மண்ணுல் மூடப்பட்டுள்ளது. மண் வெப்பத்தை நெடு நேரம் வைத்துக் கொண்டிருக்கும். மூன்ருவதாக உள்ளது, புகைப்போக்கி இது நீண்ட குழாய், இரும்பினுல் உள்ள குழாய் அல்லது மண்ணு லாயது. இதை அடுப்பில் உள்ள புகை மேல் எழும்பும் வகையில் மண்ணில் புதைத்து வைக்கவேண்டும்.

இந்த அமைப்பை ரொட்டிக்கிடங்கு என்னலாம். பாசறையில் பிஸ்கட் (Biscuit) அல்லது ரொட்டி செய்யப் பயன்படுத்தலாம்.

பிஸ்கட் அல்லது ரொட்டி போன்றவற்றின் மாவை ஒரு பாத்தி ரத்தில் வைத்து அதைத் தகரத்துள் வைக்கவேண்டும். சிறு ஓட்டுத்துண்டுகளுக்குமேல் பாத்திரத்தை வைக்க வேண்டும். வெப் பம் நிறைந்த காற்று, ரொட்டி அல்லது பிஸ்கட்டைப் பக்குவப்படுத் தும் இயல்புடையது.

## சாரணச் சமையல் முறைகள்

தற்போதுள்ள சாரணச் சமையல் முறைகள் நம் வீடுகளில் கையாளப்படும் முறைகள் மட்டும் அல்ல. பெரும்பாலும் வீட்டில் நாம் செய்வது போலவே சாரணர்கள் தங்கள் சமையலைச் சாதா அடுப்புகளில் செய்கிருர்கள். ஒவ்வொரு நேரத்தில் சாதா அடுப்புக் கட்டுவதை விட்டுவிட்டு புது மாதிரியான, ஆனுல், மக்கள் பழக் கத்தில் இருந்து வரும் அடுப்புகளை அமைத்து அவற்றில் தங்கள் உணவுகளை நவீன முறையில் சமைத்துக் கொள்கிருர்கள்.

நூதனத்தையும் விசித்திரத்தையும் விரும்பும் சிறுவர் சிற்றுள்ளம் அடுப்புகளையே பயன் படுத்தாமல் வேறு சில நூதன முறைகளைக் கையாளுகின்றது. அந்த முறைகளைச் ''சமையல் பாத்திரங்களில் லாமல் சமையல் செய்தல்'' (Cooking without Vessels) என்னலாம்.

## 1. அலுமினியத் தகட்டுச்சமையல்
(Aluminium Foil Cooking)

இவற்றுள் முக்கியமாக உள்ளது அலுமினியத் தகட்டுச் சமையல் எனப்படும். கடையில் இதற்குரிய தகடுகளை விற்கிருர்கள். காகிதம் போன்ற அலுமினியத் தகடுகள் காகித அளவுகளிலேயே (20" × 30") உள்ளன. தகடு ஒன்று அரை அல்லது முக்கால்

ரூபாய் விலையில் வாங்கலாம். நான்காகக் கிழித்தால் துண்டு ஒவ்வொன்றிலும் இருவருக்கு வேண்டிய உணவைத் தயார் செய்து கொள்ள முடியும்.

இந்த நவீனத்தை அனுபவித்துப் பார்த்தால் தான் அதன் அருமை பெருமை தெரியவரும்.

சாதம், சாம்பார், ரசம் என்றுள்ள உணவு தயாரிக்க இந்த அலுமினியத் தகடு பயன்படாது. ஆனால் புதுப் புது முறையான சமையல் செய்து பழக, புதுப் புது ஆராய்ச்சி செய்து வெற்றி காண்பதோடு பசித்த வேளையில் விசித்திரமான முறையில் வயிற்றையும் நிறைத்தற்குச் சிறப்பாக உள்ளது.

நாம் உண்ண விரும்பும் காய் கறிகளைத் திருத்தி அவைகளுடன் உப்பு, எலுமிச்சை ரசம், பச்சைமிளகாய் போன்றவைகளையும் கலந்து கொண்டு அலுமினியத் தகட்டில் நன்ருக, அதாவது தீ வெப்பத்தால் உண்டாகும் ஆவிகள் வெளிப் போகாதபடி நாலு பக்கமும் தகட்டை மடித்து மடிப்புக்கு மேல் மறுமுறையும் மடிக்க வேண்டும். இரவு குளிர்காயும் நேரத்தில் குளிருக்காக ஏற்றி வைத்துள்ள தீயில் விழும் தீக்கங்குகளை ஒன்று சேர்த்து அவற்றுக்குள் நாம் தயார் செய்துள்ள அலுமினியத் தகட்டுப் பொட்டலத்தைப் புதைத்து வைத்தால் அதனுள்ளீருக்கும் காய்கறி பத்து நிமிடங்களில் நன்ருக வெந்து விடும். அக் காய்கறிகள் அவைகளிலிருந்து வரும் ரசத்திலேயே வெந்து உண்பதற்கு மிக உருசியாய் இருக்கும். பிறகு கோதுமை மாவைச் சப்பாத்தி செய்வதற்குப் பிசைவதுபோலப் பிசைந்து அதனைக் கயிறுபோல் உருட்டி பசும் கொம்பு ஒன்றில் அடி முதல் நுனிவரை வரும்படிச் சுற்றி அதை அனலில்வேகவைக்கலாம். அதை "ரொட்டி"யாகவும், முன்னதை ரொட்டிக்கு "உபகரணமாக"வும் உண்ணலாம்.

இந்த முறைகளிலீருந்து **"காட்டாளி சமையல் முறை"** (Backwoods cookery) ஒரு சிறு படியாக அமையும்.

ஈரக்கட்டைகள் காய்ந்து விறகாகப் பயன்படவும், நீண்ட நேரத்திற்குக் குளிரைப் போக்கவும் கீழ்கண்டவாறு இரண்டு வகையாகத் தீமூட்டிப் பயன்படுத்தலாம்.



236. கோபுரத் தீ—(Pagoda Fire)





237. மரவீட்டுத் தீ (Log Cabin Fire)

## 2. காட்டாளி சமையல் முறை (Backwoods Cookery)





















238. காட்டாளி சமையல் (Backwoods Cookery)

காட்டாளி சமையல் என்பது காட்டில் அதிலும் மக்கள் நடமாட்டம் ஒரு சிறிதுமில்லாத இடங்களில், அங்கு வாழும் காட்டாளிகள் செய்யும் சமையல்முறை என்று பொருள்படும்.

இவர்கள் சமையல் செய்யப் பாத்திரங்களைப் பயன்படுத்தாமல், மண்ணைத் தோண்டித் தீ வளர்த்து, அந்தத் தீயை அப்புறப் படுத்தி விட்டுக் கிழங்குகளை அந்தக் குழியில் போட்டு அவைகளை மண்ணால் அல்லது கூழாங்கற்களால் மூடி விடுவார்கள். எரியும் தீயில் கூழாங்கற்களைக் கொட்டிவைத்துப் பின் அந்த வெப்பமுள்ள கற்களைப் பயன்படுத்திக் காய்கள், கிழங்குகள் முதலிய வற்றை வேக வைப்பார்கள்.

இங்கு படங்களில் காண்பித்துள்ள சில அந்தச் சமையல் முறையைச் சேர்ந்தன. அவற்றுள், முதல்படம் கோதுமை மாவைப் பிசைந்து பச்சைச் கம்பில் சுற்றிவைத்துக் கொண்டு அதை அனலில் வேகவைப்பது; இரண்டாவது படம் தக்காளித் துண்டுகளையும் இறைச்சித் துண்டுகளையும் ஒரு பச்சைக் கம்பில் கோர்த்து வேகவைப்பது; மூன்றாவதாக உள்ளது பாசறையில் ரொட்டியைத் தட்டை தட்டையாக வெட்டி அதனை வாட்டுதற்கு உதவுவது; நான்காவது கோதுமை மா சுற்றி வைத்துள்ள கம்பை அனலில் மேலும் கீழும் ஒன்றுபோல வேகவைத்தற்குரியது; ஐந்தாவதாக உள்ளது இறைச்சித் துண்டுகளைக் கவட்டைக் கொம்பில் குத்திவைத்து அப்புறம் தீயில் வேகவைப்பது.

நம் நாட்டில் வாழும் மலைப் பளிங்கர்கள் (Jungle tribes) இவைகளை யொத்த முறைகளைக் கையாளுகிறார்கள்.

## 3. காகிதத்தில் பானங்கள்
## (Making Coffee on Paper)

படம் வரைதற்குரிய சற்றுத் தடித்த காகிதத்தாளில் காப்பி, தேயிலை முதலிய பானங்கள் தயாரித்தல்கூடும். மேற்புறம் தண்ணீருள்ள காகிதத்தைத் தீ அனல் எரித்துவிடாது. காகிதத்தை ஒரு சிறு பாத்திரம்போல் அமைத்துக் கொண்டு அதில் வேண்டிய அளவு தண்ணீர் விட்டுத் தீக்கங்குகள் மேல் வைத்தால் சில நிமிடங்களுள் தண்ணீர் காய்ந்து, கொதிநிலைக்கு வரும். காப்பிப்பொடி அல்லது தேயிலையைப் போட்டு அவசியமான பானம் தயார் பண்ணலாம். இறுகிய பால் (Condensed Milk) இருப்பின் அதில் சர்க்கரையும் இருக்கும். இந்தப் பாலை நாம் செய்து வைத்துள்ள பானத்துடன் கலந்துகொள்ளலாம். பருகுவதற்கு இனிமையாக இருக்கும்.

இம்மாதிரியான ஒரு நூதன முறையில் அரிசியைச் சாதமாகவும் சமைக்கலாம். தரையில் ஒரு இருப்புச்சட்டி உருவத்தில் குழி தோண்டிக்கொண்டு அதைக் கையால் அழுத்தி மெதுவாகப் பண்ணிக்கொண்டு அதில் தீ வளர்க்கவேண்டும். மண்குழி நன்றாகச் சூடு அடைந்த பிறகு அதில் உள்ள தீ சாம்பல் முதலியவற்றை அப்புறப்படுத்திவிட்டு அகலமான வாழை இலையைக் குழிக்குள் பதிக்கவேண்டும். பதிக்கும்போது அது கிழிந்து போகாமல் குழி உருவத்தில் அமைக்கவேண்டும். இலை கருகிவிடக்கூடாது. இலையில் தண்ணீரும் அரிசியும் போட்டு, அகலமான ஒரு தகரத் தட்டால் மூடிக்கொண்டு அந்தத் தட்டின்மேல் தீயை வளர்க்கவேண்டும். ஒருசில நிமிடங்களுக்குப் பிறகு அரிசி வெந்து சாதமாக மாறிவிடும்.

அளவாகத் தண்ணீர் வைத்திருந்தால் சாதம் நன்ருக வெந்து தனித் தனியாக இருக்கும். தண்ணீர் சற்று மிகுதியாக இருந்தால் சாதமும் தண்ணீரும் கலந்த ''கஞ்சி''யாக இருக்கும். உண்பதற்கு இரண்டும் சுவையுள்ளதாகவே இருக்கும்.

கிழங்கு வகைகள் பலவற்றைத் தீயில் சுட்டுத் தின்னுவதும், பனம்பழம், சோளக்கதிர் போன்றவையையும் அதே மாதிரிப் பக்குவம் பண்ணித் தின்பதும், நம்நாட்டு மக்களுக்கு நன்கு தெரிந்தவை.

புதுப்புது முறைகளைக் கையாளுவதில் புத்துணர்ச்சி அமைந்துள்ளது. பாசறை செல்கையில் சிலநாள் ''மாமூலான'' முறைகளைக் கையாளினும் ஒருசில நாள் புதுப்புது வழிகளைப் பின்பற்றுவது நல்லது

## 4. காகிதக் குவளை (Paper Cup)




1, 2 சதுரமான காகிதத்தை மூலைக்குமூலை மடிக்கவேண்டும்.
3, 4 மடித்த காகிதத்தை மறுபடியும் மடிக்கவேண்டும்.
5 படத்தில் உள்ளதுபோல் நீண்டுள்ள நுனியைச் செருக வேண்டும்.
6 பின்னர் குவளையைக் கையில் எடுத்து அதற்குரிய உருவத்தைக் கொடுத்தல் வேண்டும்.

239. காகிதக்குவளை செய்முறை

## ஒதுங்கும் இடம் (Latrine)

சாரணப் பாசறையில் மிக மிக முக்கியமாக உள்ள இடங்கள் இரண்டு. ஒன்று சமையல் கூடம். இன்னொன்று ஒதுங்கும் இடம். இவை இரண்டும் சுகாதாரத்துக்கு மிகவும் அவசியமாக உள்ளது.




1. சிறுநீர்க்குழி 2. மலக்குழி

மேல் படத்தில் உள்ள குழிகளில் முதலாவது சிறுநீர்க்குழி. ஏனைய இரண்டும் மலக்குழிகள்.

240. ஒதுங்குமிடம் (Latrine)

நாம் உண்ணும் உணவில் சுத்தமான பாகம் இரத்தத்தோடு கலந்து உடல்வளரச் செய்கிறது. உணவின் பயனற்ற பாகம் மலமாகவும் சிறுநீராகவும் வெளியேறுகிறது. இவை வெளியேறுவது நமது உடல் நலத்துக்கு மிகமிக அவசியம். இதை நன்குணர்ந்த சாரணர்கள் பாசறை அமைக்கும்பொழுது சுகாதாரத்துக்குப் பொருத்தமான முறையில் ஒதுங்கும் இடங்களையும் அமைத்துக் கொள்கிருர்கள். அமைப்பதோடு நின்று விடாமல் அவற்றைப் பாசறைச் சுகாதாரத்துக்கு ஏற்ற முறையில் பராமரிப்பதும் தங்களுக்குள்ள முக்கிய கடமையாகக் கருதுகிருர்கள்.

ஒதுங்கும் இடத்தில் மலம் கழிக்க ஒரு குழியும் சிறுநீர் கழிப்பதற்கு ஒரு குழியும் அமைக்கப்பட வேண்டும்.

மலம் கழிப்பதற்குள்ள குழி முக்கால் அல்லது ஒரு மீட்டர் நீளமும் 20 அல்லது 25 சென்டி மீட்டர் அகலமும் 40 அல்லது 50 சென்டி மீட்டர் ஆழமும் இருக்க வேண்டும். குழியைத் தோண்டும் போது மிகக் கவனமாய்த் தோண்ட வேண்டும். குழியின் நான்கு பக்கங்களும் நேர் தூக்காகவே இருக்க வேண்டும். மரங்களின் அல்லது புல் முதலிய வற்றின் வேர் இருந்தால் அவற்றைக் கத்தியால் அகற்றிவிட வேண்டும்.





**ஒதுங்குமிட அடையாளம்**

பாசறை முடிவில் பாசறைத் திடலைச் சுத்தம் செய்த பிறகு ''ஒதுங்கும் இடம்'' அமைத்த இடத்தை அடுத்து வரும் சாரணர்களுக்குஉணர்த்துவதற்காகச் செய்யப்படும் அடையாளங்கள் இவை.

241. பழைய ஒதுங்குமிடம் அடையாளம்

(Used latrine Sight)

குழியிலிருந்து எடுக்கப்படும் மண்ணைப் பொடியாக்கி குழிக்கரு காமையில் கொட்டி வைக்கவேண்டும். மலம் கழித்த பிறகு அந்த மண்ணால் அதை மூடிவிடவேண்டும். மூடுவதற்கு மண்ணை எடுப்பதற்குப் பலகையால் செய்யப்பட்ட ஒரு துடுப்பு வைக்கப்பட வேண்டும் அல்லது தேங்காய் ஓட்டையும் பயன்படுத்தலாம்.

மலம் கழிக்கக் குழி ஒன்று அமைப்பது போலவே சிறுநீர் கழிப்பதற்கென்று ஒரு தனிக்குழி அமைத்துக் கொள்வது அவசியம். இது சதுரமாகவோ வட்டமாகவோ இருக்கலாம். சதுரமானால் 30 சென்டி மீட்டர் × 30 சென்டி மீட்டர், வட்டமானால் 30 சென்டி மீட்டர் விட்டமுடையதாக இருக்கலாம். ஆழம் 60 சென்டி மீட்டர் இருக்க வேண்டும். அடியிலிருந்து 30 சென்டி மீட்டர் உயரத்துக்கு சிறு சிறு கூழாங்கற்களால் இந்தக் குழியை நிரப்பிவிட வேண்டும். இந்தக் குழி நல்ல வெய்யில் விழக்கூடிய இடத்தில் அமைக்கவேண்டும்.

ஒதுங்கும் இடத்தைச் சாரணர்கள் சுகாதார உணர்ச்சியோடு சுகாதார முறைப்படி உபயோகப்படுத்துவார்கள். கழிக்கப்படும் மலத்தை உடனுக்குடன் உதிர் மண்ணால் மூடிவிடுவது சுகாதாரத்துக்கு அவசியமான ஒரு செயல். இந்தக் கடமை சரிவரச் செய்யப்படவேண்டும் என்பதற்காகவே. மண் குவியலும் அதன் அருகில் ஒரு துடுப்பும் வைக்கப்பட்டுள்ளது, இதை ஒருபோதும் சாரணர்கள் மறந்துவிடக்கூடாது. மலம் நன்ருக மூடப்படாவிட்டால் ஈ மொய்க்கும். மொய்க்கின்ற ஈக்கள் நம் உணவைப் பாழ்பண்ணும். உணவு பாழடைந்தால் பாசறையில் உள்ளவர்களின் உடல்நலம் பாழாகும். இதைத்தடுக்கும் நோக்கத்தோடுதான் இவ்வளவு அக்கறையோடு ஒதுங்கும் இடம் அமைத்திருக்கிறோம் என்பதை மறக்கலாகாது.

## பாசறைக் கால அட்டவணை (Daily Routine)

பாசறை அலுவல்கள் ஒழுங்காகவும் கட்டுப்பாட்டுடனும் குறித்த காலம் தவருமலும் நடைபெற வேண்டும். பல உயர்ந்த பண்புகளை அளிக்கவல்ல பாசறை வாழ்க்கை குறித்த காலம் தவருமை என்ற மிக முக்கியமான பண்பையும் அளிக்க வல்லதாக இருக்கவேண்டும். குறித்தகாலம் தவருமையாகிய பழக்கம் தனி ஒவ்வொரு சாரணனுக்கும் நன்மை செய்வதுபோல நாட்டுக்கும் நன்மையளிக்க வல்லது.

சாரணர்கள் படுக்கையை விட்டு 5 மணிக்குத் துயில் எழுந்திருக்க வேண்டும். எழுந்திருந்ததும் சிறிது உடற்பயிற்சி செய்ய வேண்டும். அதன் பிறகு தாங்கள் தங்கின இடங்களைச் சுத்தம்

செய்யவேண்டும். கூடாரங்களைக் காலி செய்துவிட்டு படுக்கை முதலி யவற்றைக் காற்றில் உ ல ர வைக்கவேண்டும். அதுமாதிரி முந்தின நாள் அணிந்த ஆடைகளையும் காற்றில் உ ல ர ப் போடவேண்டும் தாங்கள் சமையல் செய்த அடுப்பில் உள்ள சாம்பலை வாரி அப்புறப் படுத்திவிட்டு சமையல் கூடத்தை துப்புரவாகவும் ஒழுங்காகவும் வைக்கவேண்டும். தங்கள் அணித்திடலின் எல்லாப் பாகத்தையும் சுத்தம் செய்யவேண்டும். ஒதுங்கும் இடங்களைப் போய் பார்வை யிட்டு அவைகளைச் சுத்தமாகவும் சுகாதார முறைக்கு ஏற்பவும் வைக்கவேண்டும். தங்களுக்கு வேண்டிய காலைச் சிற்றுண்டியைச் சமைத்து வைக்கவேண்டும். பின்னர் எல்லோரும் தங்கள் உடம்பைச் சுத்தம் செய்துவிட்டு சீருடை அணிந்து காலையில் நடக்க வேண்டிய இறை வணக்கம் கொடிவணக்கங்களுக்குத் தங்களை ஆயத்தம் பண்ணிக் கொள்ளவேண்டும்.

ஒவ்வொரு அணியும் தங்கள் அலுவல்களை முறைப்படி செய்து முடிக்கவேண்டும். பிறகு சிற்றுண்டியருந்தி காலையில் சமையலுக்கு உபயோகப்படுத்தப்பட்ட பாத்திரங்களைத் துலக்கி வைத்துவிட்டுச் சாரண ஆசிரியர் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

பின்னர் ஆசிரியரும் உதவி ஆசிரியர்களும் அணிகளைப் பார்வை யிட வருவார்கள். அணியில் உள்ள சாரணர்கள் அணிவகுத்து நின்று ஆசிரியரை வரவேற்பார்கள். அவர் அணித்திடலின் பல பாகங்களையும் சுற்றிப் பார்ப்பார். கூடாரத்தை, சமையல் கூடத்தை, சுற்றுப்புறங்களை, ஒதுங்கும் இடங்களைச் சுற்றிப் பார்ப்பார். அது போல பாசறைத்திடலில் பொதுவாக உள்ள இடம் அனைத்தையும் சுற்றிப் பார்ப்பார். இப்படிப் பார்வையிடுதல் முடிவானதும் எல்லா அணிகளும் கொடிக்கம்பத்துக்கு எதிரே அணிவகுத்து நிற்கும். சாரண ஆசிரியரும் மற்ற ஆசிரியர்களும் அங்குவர அணிகள் அவர் களை வரவேற்கும். பிறகு இறை வணக்கமும் கொடி வணக்கமும் நடைபெறும். பலவிதமான பயிற்சிகள் நடைபெறும். ஆறு, குளம் இருந்தால் தண்ணீர் விளையாட்டுகள் நடைபெறும். அப்புறம் நண் பகல் உணவு. பிறகு கட்டாய ஓய்வு. பின்னர் பயிற்சிகள், விளை யாட்டுகள். மாலையில் ஏதாவது சிற்றுண்டி. அதன்பின் விளை யாட்டுகள். பிறகு சற்று ஓய்வு. இரவு உணவு முடிந்ததும் பாசறை நிகழ்ச்சிகள். பின் ஒருவருக்கொருவர் விடை பெற்றுக் கொண்டு தங்கள் தங்கள் கூடாரம் சென்று துயில்வது.

பாசறையில் சாரணர்கள் இவ்விதமாகத் தங்கள் நேரத்தைத் திட்டமிட்டுப் பயன்தரும் முறையில் செலவு செய்வார்கள்

சாரணப் பாசறையின் கால அட்டவணை அடியிற் குறிப்பிட்டுள்ள படி இருக்கலாம். படைகள் தங்கள் தங்கள் தேவைக்குப் பொருந்தும் வகையில் இதை மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

| | |
|---|---|
| காலை 5.30 | துயில் எழுதல்<br>காலைக் கடன்கள்<br>உடற்பயிற்சி<br>கூடாரம், சமையல்கூடம், சுற்றுப்புறம் முதலிய வற்றை சுத்தம் செய்தல்<br>படுக்கை முதலியவற்றை வெய்யிலில் உலரவிடுதல், காலைச் சிற்றுண்டி |
| 7.30 | அணிகளை, அணித்திடல்களை, ஆசிரியர் பார்வையிடல்<br>இறை வணக்கம்<br>கொடி வணக்கம் |
| 8.30 | முதல் 10.30 வரை பயிற்சிகள் |
| 10.45 | முதல் 12.00 வரை குளித்தல், நீந்துதல், தண்ணீர் விளையாட்டுகள் முதலியன |
| 12.30 | நண்பகல் உணவு |
| மாலை 1.30 | முதல் 2.15 வரை கட்டாய ஓய்வு |
| 2.30 | முதல் 4.00 வரை பயிற்சிகள் |
| 4.30 | மாலைச்சிற்றுண்டி |
| 5.15 | முதல் 6.30 வரை விளையாட்டுகள் |
| 7.30 | மாலை உணவு |
| 8.30 | பாடித்தீ நிகழ்ச்சிகள் |
| 9 45 | இறை வணக்கம்—விடைபெறல் |
| 10.15 | பாசறையில் அமைதி |

## பாசறைக் கட்டுப்பாடு

பாசறை பயன்தரும் முறையில் நடக்கவேண்டுமானல் ஒழுங்கும் கட்டுப்பாடும் இருப்பது அவசியம். சாரணர்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டியாக சாரண நெறியும் சாரண வாக்குறுதியும் இருக்கின்றன. ஆயினும் அவர்கள் பாசறை வாழ்க்கையில் பங்கு கொள்ளும்பொழுது எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைத் தெரிவிக்கும் முறையில் ஒரு சில பாசறை விதிகள் அவசியம். முன் மாதிரியாக சில விதிகள் இங்கு தரப்பட்டுள்ளன.

# பாசறை விதிகள் (Camp Rules)

1. சாரண நெறியே இந்தப் பாசறைக்கும் நெறி

2 அணிகள் தங்கள் தங்கள் திடலில் தனித்தனியாக தங்கள் பாசறை வாழ்க்கையை நடத்தும்

3. ஆசிரியர்கள் அணித்திடல்களைப் பார்வையிட வரும் பொழுதும், இறை வணக்கம், கொடி வணக்கம் நடக்கும்பொழுதும், காலைப்பயிற்சிகள் நடைபெறும் பொழுதும், சாரணர்கள் சீருடை அணியவேண்டும். அதுபோல சாரணர்கள் அணி அணியாகவோ, படையாகவோ, தனித்தனியாகவோ பாசறை எல்லைக்கு வெளியில் போகவேண்டி வ ந் தா ல் அப்பொழுதும் சீருடை அணிந்தே போக வேண்டும்.

4. பாசறையின் எல்லைகள் கொடிகளால் குறிப்பிடப் பட்டுள்ளன. சாரணர்கள் பாசறை எல்லைக்கு வெளியே செல்வது கூடாது. செல்லவேண்டியதாக ஏற்பட்டால் கடமை அலுவலர் அனுமதிச்சீட்டு பெற்று செல்லலாம். ஒவ்வொரு நாளும் ஒரு உதவி ஆசிரியர் அல்லது அணித் தலைவர்களுள் ஒருவர் கடமை அலுவல ராக நியமனம் செய்யப்படுவர்.

5. ஆறு, ஏரி, நீந்துகுளம் போன்றவைகளில் குளிப்பது சில கட்டுப்பாடுகளுடன் இருக்கும். தண்ணீரில் இறங்கும் முன் அதற் குரிய அனுமதி தரப்பட்டுள்ளதா என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

6. விபத்து ஏதாவது நேர்ந்தால் அது எவ்வளவு சிறிய விபத் தாக இருந்தாலும் உடனே கடமை அலுவலருக்குத் தெரிவிக்க வேண்டும். இது அணித்தலைவனுடைய கடமை. அணித்தலைவன் இல்லாதபொழுது சாரணர்களில் ஒருவர் தெரிவிக்க வேண்டும். அதுபோலவே உடம்புக்கு அசௌகரியம் ஏதாவது ஏற்பட்டாலும் உடனே தெரிவித்துவிட வேண்டும்.

7. நண்பகல் கட்டாய ஓய்வு வேளையில் பாசறையில் முழுஅமைதி நிலவ வேண்டும். சாரணர்கள் யாரும் சந்தடி செய்தல் கூடாது. பாசறையில் அங்கும் இங்கும் நடந்து திரிதல் கூடாது. புத்தகங்களைப் படிக்கலாம். குறிப்புகள் எழுதலாம். பாசறைப் படங்கள் வரைய லாம்.

8. சாரணர்கள் பாசறை ஒழுங்குடன் இயங்கும். பாசறை இடமும் அங்குள்ள பொருள்களும் ஒழுங்குடன் காணப்படும். பாசறையில் எங்கும் சுத்தமாக இருக்கும்.

இங்கு தரப்பட்டுள்ள விதிகள் பாசறைகளில் பொதுவாகத் தேவைப்படுவன. சமய சந்தர்ப்பத்துக்குத் தகுந்தவாறு இவைகளை மாற்றிக் கொள்ளலாம்.

தண்ணீரில் இறங்கிக் குளிப்பதைப்பற்றி நம் ''நோக்கங்கள், கொள்கைகள், விதிகள் அமைப்பு'' என்ற புத்தகத்தில் சில கட்டுப்பாடுகள் உள்ளன. சாரண ஆசிரியர்கள் அவைகளைச் சரிவரக் கற்றுத் தெரிந்துகொள்ள வேண்டும். அவற்றுள் முக்கியமாக உள்ளது ''குளியல் காப்பு அணி'' அமைத்துக் கொள்வதாகும். நன்ருக நீச்சல் தெரிந்த இரண்டு சாரணர்கள் தண்ணீரில் இறங்காமல் கரையில் நின்றுகொண்டு குளித்துக் கொண்டிருக்கும் சாரணர்களைக் கண்காணித்த வண்ணம் இருப்பது. அபாயத்தில் யாராவது காணப்பட்டால் உடனே தண்ணீரில் குதித்து அவர்களைக் கரையேற்றுவது அவர்கள் பொறுப்பு. இத்தகைய காப்பு அணி இல்லாமல் ஆசிரியர்கள் தங்கள் சாரணர்களை ஆழமான தண்ணீரில் இறங்க அனுமதித்தல் கூடாது.

## பொறுப்பு அணி (Duty Patrol)

பாசறைக்குரிய பொதுப் பொறுப்புகள் பல. பாசறையில் உள்ள சாரணர்களை அட்டவணையில் குறிப்பிட்டுள்ள நேரத்தில் எழுப்புவது. அட்டவணைப்படி நிகழ்ச்சிகள் காலாகாலத்தில் நடக்க சாரண அணிகளைத் தூண்டுவது, ஆசிரியர்கள் அறிக்கைகள் விடுத்தால் அவைகளை அணிகளுக்குத் தெரிவிப்பது. கொடி வணக்கத்துக்காக முன் ஏற்பாடுகளைக் காலாகாலத்தில் செய்தல். பயிற்சிகள், விளையாட்டுகளுக்குத் தேவைப்படும் பொருள்களைச் சேகரித்து ஆசிரியரிடம் கொடுத்தல், பாடித்தீக்குள்ள முன்னேற்பாடுகளைக் கவனித்தல் போன்ற பல முக்கியமான காரியங்கள் கவனிக்கப்பட வேண்டும். இந்தப் பொறுப்பை ஒவ்வொருநாளும் அணிகளில் ஒன்று ஏற்று நடத்தும். இதைப் பொறுப்பு அணி என்பர்.

பொறுப்பு அணிக்குரிய கடமைகளை வரையறுத்து விளம்பரப் பலகையில் போட்டு வைத்தால் சாரண அணிகளுக்கு வசதியாக இருக்கும்.

## பொறுப்பு அணிக்குரிய கடமைகள்
(Duties of the Duty Patrol)

1. பாசறையில் உள்ள சாரணர்களைக் காலையில் குறித்த நேரத்தில் துயில் எழச் செய்வது

2. கொடி வணக்கத்துக்காகக் கொடியை மடித்துக் கட்டி கொடிக்கம்பத்தின் உச்சியிலேற்றி வைத்தல்

3. பாசறை அறிக்கைகளை அவ்வப்போது பாசறை விளம்பரப் பலகையில் போடுவது

4. பாடித்தீ நிகழ்ச்சிகளுக்குரிய ஆடல் பாடல் முதலியவற்றை அணிகளின் ஒத்துழைப்புடன் சேகரித்து நிகழ்ச்சி நிரல் தயாரித்தல்.

5. பாடித்தீயை குறித்த நேரத்தில் மூட்டி, சாரணர்களை உட்கார வைத்துவிட்டு, ஆசிரியருக்குத் தகவல் கொடுத்தல்.

6. பாசறையிலிருந்து கடிதங்களை அஞ்சல் நிலையத்துக்கு அனுப்புதல். அஞ்சல் நிலையத்திலிருந்து வரும் கடிதங்களை அந்தந்த அணிகளுக்குக் கொடுத்தல்.

7. பாசறையில் உள்ள பொது இடங்களைச் சுத்தமாக வைத்தல்.

8. பாசறைப் பயிற்சிக் கருவிகள், விளையாட்டுக் கருவிகள் ஏனைய பண்டங்கள் ஆகியவைகளைத் தேவைப்படும்பொழுது ஆசிரியர்களுக்குக் கொடுத்தல், அவைகளைப் பேணல், அவைகளின் உபயோகம் முடிந்ததும் அவைகளை எடுத்த இடத்தில் அல்லது அவைகளைத் தந்த ஆசிரியரிடம் கொடுத்தல்.

9. இவை தவிர அவ்வப்போது ஆசிரியர்கள் தரும் கட்டளைகளையும் நிறைவேற்றல்.

## விளையாட்டுகள் (Games)

மாலைச் சிற்றுண்டி அருந்தினதும் சாரணர்களின் மனம் விளையாட்டுகளில் நாடும். வழக்கமாக விளையாட்டு மைதானங்களில் அவர்கள் விளையாடும் விளையாட்டுகள் பலவற்றைப் பாசறைக்குள் விளையாடலாம். பாசறையில் நடக்கும் பயிற்சிகளை விளையாட்டாக விளையாடலாம். பள்ளிப் பயிற்சி நடக்கும்பொழுது விளையாட முடியாத பலவகை விளையாட்டுகளில் சில பாசறைக் காலத்தில் விளையாடலாம். அவைகள் விசாலவெளி விளையாட்டு எனப்படும்.

இந்த விசாலவெளி விளையாட்டுகளுக்கு சாரணர்களை இரண்டு கட்சிகளாகப் பிரித்து, ஒரு கட்சி எதையோ செய்து முடிக்க எண்ணி முனைந்து பாடுபடும்பொழுது இன்னொன்று அதைத் தடுக்கும் பணியில் ஈடுபட்டு முனைந்து பாடுபடும். இதற்கு வெகு விசாலமான விளையாட்டிடம் தேவை. நாலு அல்லது ஐந்து கிலோ மீட்டர் நீளமும் அகலமும் உள்ள இடம் தேவை.

இந்த மாதிரியான விளையாட்டுகள் போர்போலப் போர் முறையிலேயே நடைபெறும். விளையாட்டுக்குரிய விதிகளை முன்னதாகவே வரையறுத்து இரு கட்சியினருக்கும் நன்கு விளக்க வேண்டும் எதிரியைக் ''கைது செய்வது எப்படி'', ''கொல்வது எப்படி'' என்பதைத் தெளிவு படுத்த வேண்டும். கம்பளி நூல் இடதுகை முண்டாவில்கட்டி எதிரி அதனை அறுத்து விடாமல் அதைப் பாதுகாக்கச் செய்வது ஒரு முறை. கம்பளி நூலை அறுத்து விடுவது கொல்வதாகும். ஒரு கட்சியில் உள்ள இருவர் ஒரு எதிரியைத் துரத்திப் பிடித்தால் அவர் கைதியாகிறார் என்பது இன்னொன்று. கொல்லப்பட்டவர்களும் கைது செய்யப்பட்டவர்களும் அப்படியே ஆட்டத்திலிருந்து விலகிக் கொள்ளாமல் இன்னும் விளையாட வாய்ப்புத் தரும் முறையில் ஆட்டத்தின் நடுவர்கள் அவர்களுக்கு ''மறு உயிர்'' அளிப்பது நல்ல பழக்கம். விளையாட்டு கொடியைப் பாதுகாக்கும் விளையாட்டாக இருந்தால் அது வைக்கப்பட்டுள்ள இடத்திலிருந்து 40 மீட்டர் அல்லது 50 மீட்டர் தொலைவுக்குள் அதனைக் காக்கும் கட்சியினர் நிற்கக்கூடாது. ஆயின், எதிரி ஒருவர் நுழைந்தால் அவரைத் துரத்திக் கொண்டு உள் செல்லத் தடையில்லை என்பது போன்ற நிபந்தனைகளைப் பின்பற்றச் செய்வது பொருத்தமுடையது. சாரணர்கள் இரண்டு மூன்று எண்ணிக்கைகளடங்கிய எண்களை காகித அட்டையில் பதித்து அதனைத் தங்கள் நெற்றியில் கட்டிக் கொள்வதும் அந்த எண்ணைப் படித்து நடுவரிடம் சொன்ன உடன் நடுவர் அந்த எண்ணுடையவர் இறந்து விட்டதாக முடிவு சொல்வதும் இம்மாதிரியான விளையாட்டுகளுக்குப் பொருந்தும்.

விசால வெளி விளையாட்டுகள் விளையாட இரண்டு மணி நேரத்துக்கு அதிகமாகவே தேவைப்படும். விளையாடும் சாரணர்கள் நேர்மையுடனும் கட்டுப்பாடுடனும் விளையாடுவார்களானால் அவை மறக்க முடியாத விளையாட்டுகளாக அமையும்.

## பாடித்தீயும் பாடித்தீ நிகழ்ச்சிகளும்

பாசறை வாழ்க்கை சாரணர்களுக்கு மகிழ்ச்சி அளிக்கவல்ல வாழ்க்கை. அது அவர்கள் மனதைக் கவரும் வாழ்க்கை ஆயினும் பாசறை வாழ்க்கையில் அவர்கள் மனதை அப்படியே கொள்ளை கொள்ளும் இயல்புடையன பாடித்தீயும் அங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளுமே ஆகும்.

பாடித்தீ நிகழ்ச்சிகள் பொழுதுபோக்குக்காக அமைந்துள்ளன. பகல் முழுதும் பொறுப்பான பல அலுவல்களைச் செய்து, பல பயிற்சிகளைப் பயின்று, களைத்துப்போய் இருக்கும் சாரணர்கள் நாள் முடிவில் பாடித்தீயை வளர்த்து அதைச் சுற்றி அமர்ந்து கொண்டு ஆடல்

பாடல் முதலிய கேளிக்கைகளில் ஈடுபட்டு மனநிறைவையும் நிம்மதியையும் தேடுவது இயற்கை. பாடித்தீ நிகழ்ச்சிகள் இவைகளை அளிக்கின்றன. தவிர, இவை சாரணர்கள் எல்லோரும் ஒன்று, வாழ்க்கையில் ஒரே நோக்கத்தைக் கொண்டவர்கள் என்ற ஒற்றுமை உணர்ச்சியை அளித்து ஒருவரோடு ஒருவரை நட்பு என்ற பாசத்தால் பிணைத்து விடுகின்றன. பொழுதுபோக்காக அமையப் பெற்றுள்ள பாடித்தீ நிகழ்ச்சிகள் வெறும் பொழுதுபோக்காக இருந்து விடாமல் சாரணர்களின் கலை ஆர்வத்தையும் கலை உணர்ச்சியையும் வளர்ப்பது போல நல்லொழுக்கத்தையும் கட்டுப்பாட்டுணர்ச்சியையும் வளர்க்கின்றது.

### பாசறைப் பயிற்சி

பாசறைப் பயிற்சி பல திறப்பட்ட பயிற்சி. பாசறை அமைப்பு ஒரு தனிப்பயிற்சி. பாசறையை அமைக்குமுன் அதற்குரிய பல காரியங்களைச் சிந்தித்து முடிவு கட்டுவது ஒரு பயிற்சி. பாசறை அமைப்பில் சுகாதாரத்துக்குரிய சௌகரியங்களை அமைத்துக் கொள்வது ஒரு பயிற்சி. முறையான கால அட்டவணை அமைத்து அந்த அட்டவணைப்படி செயலாற்றுவது ஒரு முக்கிய பயிற்சி. பயிற்சி அளித்தற்கு ஒரு திட்டம் வகுத்துக் கொள்வதே ஒரு பயிற்சி. பாசறைக்குரிய செயல் குழுக்கள் அமைத்து அவைகள் செயலாற்றிப் பாசறையை வெற்றிபெறச் செய்வது ஒரு பயிற்சி. இப்படிப் பல வகைப் பயிற்சிகளைத் தன்னுள் அடக்கி உள்ளது சாரணப் பாசறை வாழ்க்கை.

சாரணப் பாசறை வாழ்க்கை வையத்து வாழ்வாங்கு வாழக் கற்றுத் தருகின்றது என்றால் அது மிகையாகாது.

## பாடித்தீப் பாட்டுகள்

### பாட்டு 1. பாடித்தீயில் பல இசைக்கருவிகள்

1. தொஜன கனகப் புயமங்கே
   கீஜியானந்தா புளுட்டா (தொஜன)

2. தொஜன கனகப் புயமங்கே
   கீஜியானந்த கோணேப்பிரஸ்தா
   கொங்கங்கரி கோணேப்பிரஸ்தா
   புளுர புளுர புளுட்டமங்கி
   கீஜியானந்தா புளுட்டா (தொஜன)

3. தொஜனக் கனகப் புய மங்கே
கீஜியானந்த கிளாரிநெற்ரு
கிளக் கிளக் கிளரிநெற்ரு
கொங்கங்கொங்கரி கோணேப்பிரஸ்தா
புளூர புளூர புளூட்டமங்கி
கீஜியானந்தா புளூட்டா (தொஜன)

4. தொஜனக் கனகப் புயமங்கே
கீஜி யானந்த வயலிஞ
கிங்கங் கிங்கரி வயலிஞ
கிளக் கிளக் கிளக்கரி கிளாரிநெற்ரு
கொங்கங் கொங்கரி கோணேப்பிரஸ்தா
புளூர புளூர புளூட்ட மங்கே
கீஜி யானந்த புளூட்டா (தொஜன)

5. தொஜனக் கனகப் புயமங்கே
கீஜி யானந்த கெட்டில் டிரம்ஞ
டிர்ர டிர்ர கெட்டில் டிரயஞ
கிங்கங் கிங்கரி வயலிஞ
கிளக் கிளக் கிளக்கரி கிளாரிநெற்ரு
கொங்கங் கொங்கரி கோணேப்பிரஸ்தா
புளூர புளூர புளூட்டமங்கே
கீஜியானந்தா புளூட்டா (தொஜன)

6. தொஜனக் கனகப் புயமங்கே
கீஜி யானந்த டிரயங்கில்ஞ
டிங் டிங் டிங்காரி டிரயாங்கில்ஞ
டிர்ர டிர்ர கெட்டில் டிரம்ஞ
கிங்கங் கிங்கரி வயலிஞ
கிளக் கிளக் கிளக்கரி கிளாரிநெற்ரு
கொங்கங்கொங்கரி கோணேப்பிரஸ்தா
புளூர புளூர புளூட்டமங்கி
கீஜி யானந்த புளூட்டா (தொஜன)

இது அபிநயத்தோடு பாடவேண்டிய பாட்டு. ஒவ்வொரு இசைக் கருவியைக் குறிப்பிடும்போதும் அதற்குரிய தனி அபிநயம் இருக்க வேண்டும், ''புளூர'' என்னும்போது நாதசுரம் வாசிப்பது போலக் கை இருக்கும், ஆனல் முன்னும் பின்னும் செல்லும். ''கோணேப் பிரஸ்தா'' என்னும்போது கை நாதசுரம் வாசிப்பதுபோல இருப்ப தோடு உடம்பு முன்னும் பின்னும் ஆடும். ''கிளாரிநெற்ரு'' என்னும் போதும், ''வயலிஞ'' என்னும் போதும், ''கெட்டில் டிரம்ஞ'' என்னும் போதும், ''டிரயாங்கில்ஞ'' என்னும் போதும் அந்தந்த இசைக்கருவி வாசிப்பதுபோல் அபிநயம் வேண்டும்.

## பாட்டு 2. தம்புசாமியின் தோட்டம்

1. தம்புசாமிக் கொரு தோட்டம் இருக்குது
   தாமரைப் பாக்கத்திலே
   அந்தத் தோட்டத்திலே நாய்கள் உண்டு
   தாமரைப் பாக்கத்திலே
   அங்கே–ஒரு-ளொள்–ளொள் !
   இங்கே ஒரு ளொள்-ளொள் !
   எங்கும் ஒரு ளொள்–ளொள் !
   தாமரைப் பாக்கத்திலே (தம்பு)

2. தம்பு சாமிக்கு ஒரு தோட்டம் இருக்குது
   தாமரைப் பாக்கத்திலே
   அந்தத் தோட்டத்திலே ஆடுகள் உண்டு
   தாமரைப் பாக்கத்திலே
   அங்கே ஒரு மே—மே !
   இங்கே ஒரு மே—மே !
   எங்கும் ஒரு மே—மே !
   தாமரைப் பாக்கத்திலே (தம்பு)

இப்படி பூனைகள், மயில்கள், வாத்துகள் என்று வரிசையாய்ப் பாடிக் கொண்டே போகலாம். "பூனைகள் உண்டு" என்று பாடும்போது "மியாவ்–மியாவ்" என்றும், "மயில்கள் உண்டு" என்று பாடும் போது "மியாக்–மியாக்" என்றும், "வாத்துக்கள் உண்டு" என்று பாடும் போது "குவாக்-குவாக்" என்றும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

## பாட்டு 3. ஜாணி ஜோக்கர் (இந்தி)

1. ஜாணி ஜோக்கர் பஜா பஜாத்தா
   டும் டும் டும் டும்
   தும்ரீ பஜாத்தா (ஜாணி)

2. ஜாணி ஜோக்கர் பஜா பஜாத்தா
   டப் டப் டப் டப்
   டோலக் பஜாத்தா (ஜாணி)

3. ஜாணி ஜோகர் பஜா பஜாத்தா
   ரீ ரீ ரீ ரீ
   வயலின் பஜாத்தா (ஜாணி)

## பாட்டு 4. ஓடப் பாட்டு

ஏல ஏலோ ஏலேலோ
ஏல ஏலோ ஏலேலோ

1. மண்ணை நம்பி, ஏலேலோ —
மரம் இருக்க, மரம் இருக்க—அயிலேசா

2. மரத்தை நம்பி,—ஏலேலோ—
கிளையிருக்க, கிளையிருக்க—அயிலேசா

3. கிளையை நம்பி—ஏலேலோ—
கோலிருக்க, கோலிருக்க—அயிலேசா

4. கோலைநம்பி, ஏலேலோ—
இலையிருக்க, இலையிருக்க—அயிலேசா

5. இலையை நம்பி,—ஏலேலோ—
பூவிருக்க, பூவிருக்க—அயிலேசா

6. பூவை நம்பி,—ஏலேலோ—
பிஞ்சிருக்க, பிஞ்சிருக்க—அயிலேசா

7. பிஞ்சை நம்பி,—ஏலேலோ
காயிருக்க, காயிருக்க—அயிலேசா

8. காயை நம்பி, —ஏலேலோ—
பழமிருக்க, பழமிருக்க—அயிலேசா

9. பழத்தை நம்பி,—ஏலேலோ—
கிளி இருக்க, கிளி இருக்க—அயிலேசா

10. (அதுபோல) உன்னை நம்பி — ஏலேலோ
நாம் இருக்கோம்
நாம் இருக்கோம்
அயிலேசா

## பாட்டு 5. செந்தமிழ் நாடு (கும்மி)
(அமரகவி பாரதியார் பாடல்)

1. செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்திபிறக்குது மூச்சினிலே (செந்தமிழ்)

2. வேதம் நிறைந்த தமிழ்நாடு—உயர்
வீரம் செறிந்த தமிழ்நாடு—நல்ல
காதல் புரியும் அரம்பையர்போல்—இளங்
கன்னியர் சூழ்ந்த தமிழ்நாடு (செந்தமிழ்)

3. நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு (செந்தமிழ்)

4. கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின்—மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு (செந்தமிழ்)

7. வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென்றோர்—மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு (செந்தமிழ்)

## 6. சூலுப்போர் வீரர்கள்

சுவாசி இனத்தைச் சேர்ந்த சூலு வீரர்கள் புலியை வேட்டை ஆடுகிறார்கள். முதலில் புலியைச்சுற்றி கம்பீரமாக நடப்பார்கள். பிறகுக் குதித்து ஓடுவார்கள். கடைசியாக தங்கள் வேல்களைப் புலியின் தொண்டையில் இறக்குவார்கள்

### (பாட்டு)

1. அழுத்திப் பிடியுங்கள் (Swazi, Warriors)
சுவாசி வீரர்களே ! அப்படியே அமுக்குங்கள்
(Swazi Cheifs) சுவாசித் தலைவர்களே

(தாளத்துக்கும் ஒத்து கம்பீரமாக நடந்து கொண்டு பாடவேண்டும்)

2. ஹே சிகா சும்பா ! சும்பா ! சும்பா ! !
ஹே சிகா, சும்பா ! சும்பா ! சே ! !
ஹா ஹா ! ஹாய்யா ஹா ! ஹாய்யா ஹாய்யா ஹாய்ய ஹை
ஹா ஹா ! ஹாய்யா ஹா ! ஹாய்யா ஹாய்யா ஹாய்யா ஹா !

(விரைவாகக் குதித்துக் குதித்தோடவேண்டும்)

3. வா–அ–அ–அக்

(எல்லோரும் தங்கள் வேல்களைப் புலியின் தொண்டையில் இறக்குகிற அபிநயம் செய்யவேண்டும். அப்பொழுது புலி கதறுகிறது.)

### பாட்டு 7. மூன்று குருட்டு எலி

மூன்று குருட்டு எலி
மூன்று குருட்டு எலி
ஓடிப் போவதைப் பார்
ஓடிப் போவதைப் பார்
அம்மா பின்னாலே ஓடராங்கோ
அம்மா பின்னாலே ஓடராங்கோ
கத்தியாலே வாலை வெட்டராங்கோ
கத்தியாலே வாலை வெட்டராங்கோ
இத்தைப்போலத் தமாஷ்(நாம்) பார்த்ததில்லை
இத்தைப்போலத் தமாஷ்(நாம்) பார்த்ததில்லை

(மூன்று குருட்டு எலி)

### பாட்டு 8. இலங்கை எரியுதே

இலங்கை எரியுதே !
இலங்கை எரியுதே !
அதோ பார் !
அதோ பார் !!
தீ ! தீ !!
தீ ! தீ !!
ஐயோ தண்ணீர் சற்றும் இல்லையே
ஐயோ தண்ணீர் சற்றும் இல்லையே

(இலங்கை எரியுதே)

### பாட்டு 9. கிங்கங் குலிகுலி
மேலைநாட்டுப் பாட்டு

கிங்கங் குலிகுலி குலிகுலி
கிங்கங்கோ ! கிங்கங்கோ !
ஹே—லா—ஹேலச்சேலா !
ஹே—லா—ஹேலச்சேலா !
கிங்கங்கோ ! கிங்கங்கோ !
சலவா—சலவா—சலவா—சலவா
கிங்கங்கோ ! கிங்கங்கோ !

(கிங்கங்குலி)

## பாட்டு 10. கிலிகிலி

மேலைநாட்டுப் பாட்டு

கிலி கிலி கிலி கிலி
வாச் வாச் வாச் வாச்
கேயூ கிங்கங் கா—வா—!
கிலிகிலி கிலிகிலி
வாச் வாச் வாச் வாச்
கேயூ கிங்கங் கா—வா!
ஹே! ஹோ! ஹெச்—சா—மா!
ஹெச்சாமா—பொலி—வாமா!
ஹே! ஹோ! ஹெச்—சா—மா!
ஹெச்சாமா—பொலி—வாமா!

(கிலிகிலி)

## ஊக்க ஒலிகள் (Yells)

### 1. ஜிலேபிவாலா

முதல் சாரணன் — ஜிலேபிவாலா! (தணிந்த குரல்)
எல்லோரும் — அச்சா! (அதே குரல்)
முதல் சாரணன் — ஜிலேபிவாலா! (உயர்ந்த குரல்)
எல்லோரும் — அச்சா! (அதே குரல்)
முதல் சாரணன் — ஜிலேபிவாலா! (உரத்த குரல்)
எல்லோரும் — அச்சா! (அதே குரல்)

இதுபோலவே முதல் சாரணன் வேறு தின்பண்டங்களின் பெயரை மூன்று குரலில் கூற மற்றச் சாரணர்களும் ''நல்லது! கொடு'' என்று மூன்று குரலிலும் பதில் இறுக்கலாம்.

### 2. ஜீ இமாலையா

முதல் சாரணன் : ஜீ இமாலையா! (தணிந்த குரல்)
மற்றச் சாரணர்கள் : ஜீ! (அதே குரல்)

இப்படி இன்னும் இரண்டு தரம் படிப்படியாய்க் குரலை உயர்த்திச் சொல்ல வேண்டும்.

### 3. அடிஜி

மேல்நாட்டு ஊக்க ஒலி

அடிஜி! அடிஜி!
அ! உ! அ!!
ஸிஸ்—பூம்—பா!
ஸிஸ்—பூம்—பா!
அ—உ—அ!
ஆ!

## 4. என் செய்வோம்

1. முதல் சாரணன் — என் செய்வீர் ?
   மற்ற சாரணர்கள் — ஒத்தாசை
2. முதல் சாரணன் — என் செய்வீர் ?
   மற்ற சாரணர்கள் — கிராம சேவை
3. முதல் சாரணன் — என் செய்வீர் ?
   மற்ற சாரணர்கள் — தேச சேவை
4. முதல் சாரணன் — என் செய்வீர் ?
   மற்ற சாரணர்கள் — ஒத்தாசை ! கிராம சேவை !!
   தேச சேவை !!!

## 5. பக்தி செய்வோம்

1. முதல் சாரணன் : பக்தி செய்வோம்
   மற்ற சாரணர்கள் : இறைவனுக்கு ;
2. முதல் சாரணன் : சேவை செய்வோம்
   மற்ற சாரணர்கள் : நாட்டுக்கு ;
3. முதல் சாரணன் : தொண்டு செய்வோம்
   மற்ற சாரணர்கள் : மக்களுக்கு ;
4. முதல் சாரணன் : வணக்கம் செய்வோம்
   மற்ற சாரணர்கள் : பெரியோருக்கு.

# வேறு நிகழ்ச்சிகள்

**1. தவளைக் கச்சேரி:** பாடித்தீ நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளும் சாரணர்களை ஐந்து பிரிவுகளாகப் பிரித்துக்கொண்டு ஒவ்வொரு பிரிவினர்க்கும் ஒரு சொற்றொடர் கொடுத்து அதை அவர்கள் இடைவிடாது உச்சரித்துக் கொண்டே இருக்கும்படி கேட்டுக் கொள்ள வேண்டும்.

| | | |
|---|---|---|
| முதல் பிரிவு கூறவேண்டுவது | | " வர வர பத் " |
| இரண்டாவது பிரிவு : | ,, | " வித்தெடு விதையெடு " |
| மூன்ருவது பிரிவு : | ,, | " எடைக்கெடை " |
| நான்காவது பிரிவு : | ,, | " தண்டெடு தடியெடு " |
| ஐந்தாவது பிரிவு : | ,, | " பேப்பே : பேப்பே !! " |

இந்த ஐந்து சொற்றொடர்களும் கலந்து ஒலிப்பது மழைக் காலத்தில் தவளைகள் ஒன்றுகூடி ஒலிப்பது போல் இருக்கும்.

இவை போலவே இன்னும் வேறு ஐந்து சொற்றொடர்களையும் பயன் படுத்தலாம். அவை " ஙண மண ", " அற கற ", " தயிர் பச்சடி ", " காரப் பூந்தி ", " பட பட " என்பன.

## 2. சர்க்கஸ்

சர்க்கஸ் கம்பெனிகள் விளையாடுவது போல இரண்டு அல்லது மூன்று அணிகள் ஒன்று சேர்ந்து விளையாடலாம். குதிரைகள் ஓட்டம்; கம்பியில் நடத்தல்; சிங்கத்துடன் விளையாடுதல்; ஊஞ்சல் விளையாட்டு; யானை விளையாட்டு; பாரம் தூக்குதல் போன்ற விளையாட்டுக்களை நடத்தலாம். அந்தந்த விளையாட்டுகளுக்கு முன்னதாக வேலையாட்கள் செய்வதையும் அப்புறம் அந்தந்த கலைஞர் வந்து செய்யும் பயிற்சிகளையும் கற்பனை சக்தியால் சித்தரித்துக் காட்டலாம்.

எடுத்துக்காட்டாக:

1. கம்பியில் நடத்தலுக்கு—நான்கு ஐந்து பேர் ஒரு நீளக் சயிற்றை உயரத்தில் பிடித்து இழுத்து அப்புறம் தறியில் கட்டுவது போல பாவனைபண்ணிக் கொண்டே கயிற்றைத் தரையோடு தரையாக விட்டுவிடுதல். கம்பி ஏறி விளையாடும் நங்கையை உயரத்தில் ஏற்றிவிடுவதுபோல் நடித்துத் தரையிலேயே விட்டுவிடல், அந்த நங்கை கையில் குடை ஒன்றைப் பிடித்துக்கொண்டு வரிந்து நிற்கும் கயிற்றில் நடப்பதுபோல நடித்தல்—

2. இரண்டு மூன்று சாரணர்கள் குதிரைகள்போல சர்க்கஸ் வட்டத்தில் ஓடுதல்—வட்டத்தின் நடுவில் நின்றுகொண்டு நீண்ட சாட்டையொன்றை அடித்து அவைகளை ஓடச் செய்தல்—குதிரைகள் செய்வதுபோல பெட்டிகளைத் திறக்க வைத்து அவைகளிலிருந்து கைக்குட்டைகளை எடுத்தல்.

3. சாரண தண்டம், சாரணர்கள் முடிச்சுகட்டும் கயிறு, முதலியவற்றால் கூடு கட்டி சிங்கத்தை அதில் அடைத்து கூடாரத்துக்குள் கொண்டுவருதல், அதனோடு விளையாடுதல்.

இவை போல்வனவற்றைச் சாரணர்கள் பார்த்திருப்பார்களானதால் அவற்றைக் கற்பனைச் சித்திரமாகக் காண்பித்தல் மிகுந்த மகிழ்ச்சி தரும்.

## 3. இசைக் கச்சேரி

வாய்ப்பாட்டு, பிடில், மிருதங்கம், ஜாலரா, கடம் எல்லாமே ஊமையாக அமைக்கப்பட்ட இசைக் கச்சேரிக்குப் பாடித்தீ நடை

பெறும்பொழுது சாரணர்கள் நல்ல வரவேற்புத் தருவார்கள். இசைக் கருவிகளைப் பாசறையில் உக்கிராண அறையிலிருந்து தேர்ந்தெடுப்பது நல்லது. ஒரு கொழுத்த புடலங்காய் பிடிலாகவும் ஒரு நீள முருங்கைக்காய் பிடிலின் வில்லாகவும், நீண்ட பூசணிக்காய் மிருதங்கமாகவும், இரண்டு லோட்டாக்கள் தாளம்போடும் ஜாலராவாகவும், சிறு கைப் பெட்டி சுதிப்பெட்டியாகவும் பயன்படுத்தலாம். கலைஞர்கள் எல்லோரும் இசைக் கச்சேரி நடக்கும்பொழுது என்னென்ன நடக்குமோ அதை நடித்துக் காண்பிக்கவேண்டும்.

### 4. மருத்துவ அறுவை

நோயாளியை அவனுடைய அயலார்கள் மருத்துவ மனைக்குக் கொண்டுவருகிறார்கள். மருத்துவர் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும் என்று தீர்மானம் செய்கிறார். அவருடைய உதவியாளர் அறுவைக்கு வேண்டிய ஆயுதங்களைக் கொண்டு வருகிறார். மயக்கத்துக்கு மருந்து கொடுக்கிறார்கள். பின்னர் அறுவை நடக்கிறது—நோயாளி காலை வெட்டுவதுபோல வாளால் மரக்கட்டையை அறுக்கிறார்—வயிற்றை அறுக்கிறார். வயிற்றுக்குள்ளிருந்து கத்தி, சிறு கோடரி, கயிற்றுச்சுருள், ஊதல், சோப்பு டப்பா, கண்ணாடி, சீப்புப் போன்றவைகளை ஒவ்வொன்றாய் வெளியில் எடுத்து விட்டு வயிற்றைத் தைத்து நோயாளியைக் குணப்படுத்துகிறார். நல்ல அபிநயம் இந்த நிகழ்ச்சிக்கு சிறப்புச்செய்யும். நோயாளி, மருத்துவர், உதவியாளர் உள்ள இடத்தை நல்ல வெளிச்சத்தில் அமைத்து ஒரு மெல்லிய வேட்டியால் திரையெழுப்பி மற்றவர்கள் பார்க்கும்படி செய்தால், திரையில் படும் நிழல் தத்ரூபமாகக் காணப்படும்.

### 5. அமைதி விளையாட்டு

அமைதி விளையாட்டுகளில் சில பாடித்தீக்கு மிகப் பொருத்தமுடையதாக இருக்கும்: உதாரணமாக—

1. ஒன்று, இரண்டு, மூன்று என்று வரிசையாக எண்ணுதல். பாடித்தீ வட்டத்தில் இப்படி வரிசையாக எண்ணலாம். 1, 2, 3, 4, 'ஐந்து' என்பதற்குப்பதில் அத்திக்காய் என்று சொல்ல வேண்டும். அப்புறம் ஆறு ஆனதும் 'ஏழு' என்று சொல்லாமல் எள்ளுக்காய் என்று சொல்ல வேண்டும். அப்புறம் '5' '7' அதன் பாகங்கள் வரும் இடங்களில் (10, 14, 15, 17, 20, 21, போல) அத்திக்காய், எள்ளுக்காய் என்று சொல்லவேண்டும். இது வேடிக்கையாக இருக்கும். சொல்லத் தவறும் சாரணன் தோற்றவனாகக் கருதப்படுவான்.

2. பாடித்தீயிலிருந்து ஒரு சிறு கொள்ளிக் கட்டையை எடுத்து பாடித்தீ வட்டத்தில் ஒருவர் கையிலிருந்து அடுத்தவர் கைக்கு கொடுப்பது. கொடுக்கும்போது தீயை வாயால் ஊதிவிட்டுக் கொடுக்க வேண்டும். தன் கையிலிருக்கும்போது தீ அணைந்து போகக் கூடாது அடுத்தவரிடம் கொடுத்து ஒவ்வொருவரும் தான் தப்பித்துக் கொள்ளவேண்டும்.

## 6. நடித்துக்காட்டல்

மக்கள் சமுதாயத்தில் பல பிரிவினர்களுக்குரிய ஆட்டங்கள் உரிய முறையில் ஆடுவது. பாடித்தீயில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு நல்ல மகிழ்ச்சி அளிப்பதோடு அந்தந்தப் பிரிவினர்களிடம் நட்பை யும் நமக்குள்ள மதிப்பையும் வளர்க்க உதவும்.

இவைகளை நடித்துக்காட்டலைப் போலவே மக்களிடையில் காணப்படுகின்ற குறைகளையும் நடித்துக்காண்பித்தல் நல்ல பயன் தரும். ஆனல் யாருக்கும் மனவருத்தம் ஏற்படக்கூடிய முறையில் கேலியாக நடிக்கக்கூடாது.



# 17. சாரணச் சுற்றுலா

## (Hiking)

சாரணச் சுற்றுலா என்பது சாரணன் ஒருவன் தனித்து, அல்லது இரண்டொரு சாரணர்கள் சேர்ந்து, அண்மையில் உள்ள வெளியிடங்களில் இயற்கையன்னையின் எழில் நிறைந்த காட்சிகளைக் கண்டு மகிழ்வுற, அல்லது வேறு குறிப்பிட்ட ஏதாவது நோக்கத்தோடு, நடந்து சென்று திரும்புவதைக் குறிக்கும். ஆங்கிலத்தில் இது 'Hiking' எனப்படும்.



242. சாரணர்கள் சுற்றுலா (Scout Journey or Hike)

அப்படி நடந்து செல்லும்போது சாரணர்கள் தமக்கு வேண்டிய வசதிகள் யாவற்றையும் தாமே அமைத்துக்கொள்ளும் கடமைப்பாடு உடையவர்களாதலால் தங்களுக்குத் தேவையாகும் உணவுப் பொருள்களை, உணவு சமைத்துக்கொள்ளத் தேவைப்படும் பாத்திரங்களை, தங்கள் துணிமணிகளை, தேவைப்படும் ஏனைய பொருள்களைத் தங்களுடனேயே எடுத்துச் செல்வது சாரணச் சுற்றுலாவுக்குரிய கட்டுப்பாடுகளுள் ஒன்று.

**சுற்றுலாச் செல்லும்போது :—**

சாரணர்கள் தாங்கள் காண்பனவற்றைக் கூர்ந்து கவனித்துக் கொண்டும், உடனுக்குடன் குறிப்புகள் எழுதிவைத்துக் கொண்டும்,

படங்கள் வரைந்து கொண்டும், மெதுவாகவே செல்வது சாரணச் சுற்றுலாவுக்குரிய இயல்பு. தாங்கள் காண நேர்ந்தனவற்றை நன்றாக ஊன்றிப் பார்த்து, அவைகளைப் பற்றிய விவரங்களை ஆராய்ந்து அறிந்துகொண்டு சுற்றுலாச் செல்லும் சாரணர்கள் தங்கள் பயணத்தில் ஈடுபடுவார்கள். ஆங்காங்கு சிறிது தங்கி ஓய்வெடுத்துக் கொண்டும், அவ்வப்போது உணவு சமைத்து, உண்டு, களைப்பாறிக் கொண்டும் சாவகாசமாகச் செல்வார்கள். தாங்கள் தங்களோடு எடுத்துச்செல்லும் பொருள்களைத் தனி அமைப்புப் பெற்ற முதுகுப் பை (Ruck Sack) களில் முறையாக அடுக்கிவைத்து எடுத்துச் செல்வார்கள். பையின் இருபுறமும் உள்ள நாடாக்களுக்குள் தங்கள் இரு கைகளையும் தோள்வரை நுழைத்துப் பையை முதுகில் நன்கு பதியும்படி வைத்து அதனை எடுத்துச் செல்வது சாரணச் சுற்றுலாவுக் குரிய ஒரு முக்கிய அடையாளமாகக் கருதலாம்.

கைகளிரண்டும் ''காலி''யாக உள்ளதால் சுற்றுலாச் செல்லும் சாரணர்கள் தங்கள் சாரண தண்டத்தையும், தாம் செல்லும் பிராந்தியத்துக்குரிய தலபடத்தையும், திசையறி கருவியையும், தம் குறிப்புப் புத்தகத்தையும் வசதியுடன் எடுத்துச்செல்ல முடியும். மேலும் சாரண தண்டத்தால் அவ்வப்போது அளவுகள் எடுத்துக் கொள்ளவும், தலபடத்தை அவ்வப்போது பிரித்துப் பார்த்துத் தாம் செல்லும் திசையை திசையறி கருவியின் உதவியால் நிர்ணயித்துக்கொள்ளவும் அவர்களுக்கு வசதி அளிக்கிறது. குறிப்புகள் எழுத வேண்டிய நேரங்களில் குறிப்பு எழுதிக் கொள்ளவும் நல்ல வசதி இருக்கின்றது.




243. முதுகுப் பை—சாதாரணமானது
(Ruck Sack–Ordinary)




244. முதுகுப் பை—சட்டத்தில் அமைக்கப்பட்டது
Ruck Sack–Fitted on a Frame

சாரணன் தம்முடன் கொண்டு செல்லும் பொருள்களுள் தன் கைக்கோடரியும் ஒன்றாக இருப்பது மிக அவசியம். சுற்றுலா வாழ்க்கையில் பலவிதங்களில் அது பயன்படும். சுற்றுலாவின்போது

சமையலுக்குரிய விறகு தறிக்க, தறித்த விறகைப் பிளக்க, தனக்குத் தேவையாக உள்ள அநேக அவசர அமைப்புக்களை (Camp gadgets) அமைத்துக்கொள்ள அது பயன்படும். அதனைச் சாரணன் இணையற்ற நண்பன் என்று கருதுவது மிகமிகப் பொருத்தமாயுள்ளது. தலபடமும் திசையறி கருவியும் சாரணனுடைய வேறிரு இணையற்ற நண்பர்களாகும். குறிப்புகள் எழுதும் குறிப்புப் புத்தகமும் நாளடைவில் விலைமதிக்க முடியாத சிறப்பு வாய்ந்த ஒரு பொக்கிஷமாகவே திகழும். அதைப் பிரித்துப் படிக்கும் சாரணன் தான் பெற்ற அனுபவங்கள் ஒவ்வொன்றையும் தன் மனக்கண்முன் அப்படியே கண்டு மகிழ்ச்சியடைகிறான்.

முதல்தரச் சாரணப் பயிற்சி பெறும்பொழுது சாரணன் கோடரிக் கலையையும் திசையறி கலையையும் தலபடக் கலையையும் குறிப்பெழுது கலையையும் நன்கு கற்றுத் தெரிந்து கொள்கிறான். பயிற்சி பெற்ற பின் இந்தக் கலைகளில் அவனுக்குள்ள தேர்ச்சியை நிதானிக்கும் வகையில் ஒரு முழு நாள் சாரணப் பயணம் (24 hours journey) என்ற தேர்வு அவனுக்குத் தரப்படுகிறது. இந்தத் தேர்வுக்கு, அவன் தன்னந் தனியனாக, அல்லது பிறிதொரு சாரணனுதவியுடன் பயணம் செல்லலாம். தேர்வில் வெற்றி பெற்ற சாரணன் தன் விடுமுறை நாட்களில் சிலவற்றைச் சுற்றுலாச் செய்வதில் ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும். சுற்றுலாச் செல்வது அனுபவம் வாய்ந்த சாரணர்களுக்கு ஓய்வுநேரப் பொழுதுபோக்காக அமையும். சாரணர்களுக்கும் திரிசாரணர்களுக்கும் இதைவிட மேம்பாடுடைய பொழுது போக்கு வேறு இருக்க முடியாது.

சுற்றுலா ஒவ்வொன்றும் ஒரு பகல் அளவு; அல்லது பகலும் இரவுமாகிய ஒரு நாள் அளவு; அல்லது இரண்டு மூன்று நாள் அளவுள்ளதாக இருக்கலாம். சுற்றுலாவுக்குப் பகற்பொழுதைப் பயன்படுத்தி மாலையில் இருட்டுவதற்கு முன் தங்குதற்குரிய இடத்தை நாடி அங்கு தங்கி இரவு உணவைச் சமைத்து உண்டு ஓய்வெடுத்துக் கொள்வதோடு, இரவு நேரங்களில் அண்ட சராசரங்களாகிய கிரகங்கள், நட்சத்திரங்கள் முதலியவைகளைப் பற்றித் தங்களுக்குள்ள அறிவை விரிவடையச் செய்வது சாரணர்கட்குரிய கடமை. அவைகளிடம் காணப்படும் அதிசயங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்வதும் சிந்திப்பதும் அவர்கட்குரிய கடமைகளே. அப்படி சிந்திக்கச் சிந்திக்க நாம் காண்கின்ற எல்லாவற்றையும் சிருஷ்டி செய்து அவைகளை அதிசயப்படக்கூடிய விதத்தில் முறையாகப் பரிபாலனம் செய்யும் இறைவனுடைய அருமை பெருமையை ஒரு சிறிது உணர்ந்து கொள்ளும் வாய்ப்பும் சுற்றுலாச் செய்யும் சாரணனுக்குக் கிடைக்கிறது.

சாரண யாத்திரை செல்லும் சாரணன் தான் செல்லும் பாதையின் இருபக்கங்களிலும் காணப்படுகின்றவைகளை நன்ருய்க் கவனிக்க வேண்டும். ஊன்றிப்பார்க்க வேண்டியவைகளை ஊன்றிப் பார்த்து உற்று நோக்கவேண்டியவைகளை உற்றுநோக்கி ஒவ்வொன்றையும் நன்கு புரிந்து கொள்ளவேண்டும். யாத்திரை செய்யும் பொழுது தான் காண்கின்ற மக்களைப்பற்றி, அவர்கள் வாழ்க்கை முறையைப் பற்றி, அவர்கள் ஈடுபட்டிருக்கும் தொழில்முறையைப் பற்றி எவ்வளவு தெரிந்துகொள்ள வசதி இருக்கிறதோ அதற்குத் தகுந்த அளவு தெரிந்து கொள்ளவேண்டும்.

அது போலத் தான் காணநேரிடும் பிராணிகளைப் பற்றியும் புள்ளினங்களைப் பற்றியும் தெரிந்து கொள்ளவேண்டும். வளர்ப்புப்பிராணிகளைப்பற்றித் தெரிந்து கொள்வது போலவே வனத்தில் வாழும் பிராணிகளைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும். பறவைகளை ஊன்றிப் பார்த்து அவைகள் என்ன இனம், எங்கு வாழ்கின்றன, எங்கு கூடுகட்டுகின்றன என்பது போன்ற குறிப்புகளைச் சேகரித்துக் கொள்ள வேண்டும். கண்கூடாகப் பார்த்து உணர வேண்டும். மரக்கிளைகளில் சிலவற்றைப் பார்க்கலாம். ஒருசில கூட்டம் கூட்டமாகப் பறந்து செல்லும், சென்று தரையில் இறங்கும், இரை தேடும். இவைகளை நேரில் பார்த்துத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பைச் சாரணர்கள் தவற விடக்கூடாது.

வனத்தில் உள்ள பிராணிகள் தாங்கள் போகிற பாதையில் சற்றுமுன் போயிருக்கலாம். தான் தங்கும் இடங்களில் அவைகள் முதல்நாள் இரவு தங்கியிருந்தால் அவைகளின் கால் தடங்கள் காணக்கிடக்கும். சாரணர்கள் பிராணிகளின் தடங்களுக்காக, பறவைகளின் தடங்களுக்காக, நடந்து கவனித்தல் வேண்டும். அப்படியான தடங்கள் தட்டுப்பட்டால் அவற்றின் மாவச்சு (Plaster Cast) செய்து பத்திரப்படுத்திக் கொள்ளவேண்டும். அந்த மாதிரியான வாய்ப்புகள் மிக அருமையானவை.

சுற்றுலாச் செல்லச் செல்ல அத்தகைய சாரண வாழ்கையில் ஈடுபடுகின்ற சாரணர்கள் தங்கள் நாட்டையும் நாட்டின் பெருமைகளையும் உணர்ந்து கொள்கிருர்கள். நாட்டில் உள்ள மக்களின் வாழ்க்கை முறையை நன்கு தெரிந்து கொள்கிருர்கள். அந்த மக்களோடு ஒன்றுபட்ட உணர்வும் அவர்கள் பெறுகின்றனர்.

சுற்றுலாச் செய்யும் சாரணர்கள் நாள் ஒன்றுக்கு பத்து அல்லது பதினைந்து கிலோ மீட்டர் தொலைவு செல்வது போதுமானது. மிகுதியான தொலைவு செல்ல ஆசைப்படுவது சுற்றுலாவின் நோக்கத்தை மறந்து விடுவதாகும். தொலைவு செல்வதைவிட முக்கிய

மானது தான் காண்பவைகளை உற்றுநோக்கி அவைகளைப்பற்றி அறிந்து கொள்ளவேண்டியவற்றை நன்கறிந்து கொள்வதாகும்.

சுற்றுலாக் குறிப்புகள் குறிப்புப் புத்தகத்தில் ஒன்றன் பின் ஒன்ருகத் தேதி வரிசையில் எழுதப் படவேண்டும். ஒவ்வொரு குறிப்புக்கும் தனித்தனி துண்டுப் படங்களும், புகைப்படங்களும், வரைப்படங்களும் இணைக்கப்பட வேண்டும். எழுதும் குறிப்பு சுருக்கமாகவும் தெளிவாகவும் இருத்தல் வேண்டும். நடந்து சென்ற கால அளவு, நடந்துள்ள தொலைவு, நடக்கும் அந்த நேரத்தில் ஆங்காங்கு காணப்பெற்றவை, இவை மூன்றையும் மூன்று பத்திகளாக அமைத்துக் குறிப்பு எழுதுவது பின்னல் குறிப்பைப் படிக்கின்றவர்களுக்கு, நடைபெற்றவை, நடந்த நேரம், நடந்த இடம் முதலியவற்றை எளிதில் புரியவைக்கும். இப்படி எழுதப்பட்டுள்ள ஒரு குறிப்புப் புத்தகம் எழுதியவரின் சிறப்புடைய சாரண வாழ்க்கைக்கு நன்மதிப்புக்குரிய நற்சான்ருக அமையும்.

சாரணர்களின் பாசறை வாழ்க்கை சாரணர்களுக்கே உரியது. அது போலவே, சாரணர்கள் செய்யும் சுற்றுலாவும் அவர்களுக்கே உரியது எனலாம். இரண்டும் அவைகளில் பங்கு கொள்ளும் சாரணர்களுக்கு பாராட்டுதற்குரிய நல்ல நல்ல பலன்களைத் தருவனவாக உள்ளன.

## சுற்றுலாவுக்கு பயன்படும் கம்பள உறங்கும் பை
## (Blanket Sleeping Bag)

குளிர் மிகுதியாக உள்ள நாட்களில், அல்லது குளிர் மிகுதியான இடங்களில் சாரணர்கள் இரண்டு கம்பளிகளைப் பயன்படுத்தி நல்ல குளிர் தாங்கக் கூடிய படுக்கை தயாரித்துக் கொள்வார்கள்.

மேல் படத்தில் இரண்டு கம்பளிகளை ஒன்றன்மேல் ஒன்று வைக்கும் முறை காண்பிக்கப்பட்டுள்ளது. இரண்டு கம்பளிகளுக்கும் அடியில் உள்ளது ரப்பர் தரைப்பாய் (Rubber Ground-Sheet), இதன் ரப்பர் பாகம் கீழ் இருக்கும். ரப்பர் பக்கம் தரையோடு சேர்ந்திருக்கும்.



245. கம்பள உறங்கும் பை
(Blanket Sleeping Bag)

அடுத்தபடியாக கம்பளிகளை ஒன்றன்மேல் ஒன்ருக மடிக்க வேண்டும். மடித்த பிறகு கால்பக்கத்தில் ஒரு சிறு மடிப்புச் செய்து கொள்ள வேண்டும். படத்தில் (அதாவது கீழ் உள்ள படத்தில்) காண்பித்திருப்பது போல பெரிய காப்பு ஊசிகளைக் குத்தவேண்டும். சாதாரண காப்பு ஊசியைக் குத்துவது எளிதில்லை. இதற்கென்றே தனிக் காப்பூசிகள் கடையில் கிடைக்கும். அவைகளுக்கு ''ப்ளாங்கெட் பின்'' (Blanket Pin) என்று பெயர்.

தூங்கும் நேரத்தில் கம்பளிகளின் நடுவில் நுழைந்து தூங்க வேண்டும். கழுத்துப் பக்கத்தில் நம் சட்டைகளுக்குள்ள ''கழுத்து மடிப்பு'' (Collar) போல மடித்துக் கொண்டால் நல்ல வசதியாக இருக்கும்.

மிகுந்த குளிர் உள்ள இடங்களில் கம்பளிகளை நல்ல வெயிலில் போட்டுப் பிறகு அவற்றைத் ''தூங்கும் பை''யாக அமைத்து மடித்து வைத்திருந்தால் இரவு ''கதகத'' என்று இருக்கும்.



# 18. படைக்கூடம்

படைக்கூடம் என்பது நண்பர்கள் என்ற அடிப்படையில் ஒரு படையில் உள்ள சாரணர்கள் ஒன்றுகூடி ஒருவரோடொருவர் அளவளாவி இருத்தற்குரிய தனி இடம் என்று பொருள்படும். படைக்கூடம் பெரிய கட்டடமாக இருக்கவேண்டியதில்லை. பள்ளிவகுப்பு அறை அளவுள்ள ஒரு அறை இருப்பின் போதுமானது. ஒரு சிறு அறையே ஆயினும் படைக்கூடம் சாரணர்களுக்குத் தனி உரிமை உள்ள இடமாக இருக்கவேண்டும்.

படைக்கூடத்தில் படையில் உள்ள ஒவ்வொரு அணிக்கும் ஒரு கோணம் (Patrol corner) தனியாக ஒதுக்கப்பட வேண்டும். அணிகள் தங்கள் தங்கள் தனிக் கோணங்களை அழகுபெற அலங்கரித்து வைப்பார்கள். தங்கள் அணிப்பறவை அல்லது அணிப்பிராணியின் உருவத்தை மரத்தில் செதுக்கியும் அல்லது படமாகவரைந்தும் அங்கு வைப்பார்கள். தங்கள் அணிக்குரிய படங்களை அங்கு தொங்கவிடு வார்கள். தாங்கள் செய்துள்ள கைத்திறப் பயிற்சிப் பொருள்களை அங்கு ஒழுங்காக அடுக்கிவைப்பார்கள். தங்களுடைய அணி நடத்தியுள்ள இயற்கைச் சுற்றுலாவின்போது தாங்கள் சேகரித்துள்ள இயற்கைப் பொருள்களைத் தனி அணிக் கண்காட்சியாக அல்லது படைக்கண்காட்சியின் ஒரு தனிப் பிரிவாக அடுக்கி வைப்பார்கள்.

படைக்குப் பொதுவாக உள்ள பயிற்சிக் கருவிகளும் விளையாட்டுக் கருவிகளும் படைக்கூடத்தின் பொது அலமாரிகளில் அல்லது பெட்டிகளில் வைக்கப்பெறும். பயிற்சி நாட்களில் சாரணர்கள் அன்றைய பயிற்சிக்கு வேண்டியவற்றைப் பொறுக்கி எடுத்து பயிற்சிக் களத்துக்குக் கொண்டு போவார்கள். பயிற்சி முடிந்ததும் அவைகளைக் கொண்டுவந்து முன்னிருந்தபடியே ஒழுங்காக வைப்பார்கள்.

படைக்கூடத்தில் கண்ணியமன்றக் கூட்டங்கள் நடைபெற வசதி இருக்கவேண்டும். கூடத்தின் ஒரு தனிப்பாகத்தில் மன்றத்தோர் உபயோகத்துக்கென இருக்கைகளும் வேண்டும், மேஜையும் இருக்கைகளும் சாரணர்களாலேயே செய்யப்பட்டவையானல் மிக நல்லது.

படைக்கூடத்தில் பயிற்சி நாட்களில் பயிற்சிக்கு முன்னும் பின்னும் சாரணர்களும் அவர்கள் அணித்தலைவர்களும் இங்கு கூடிப் பிரிவார்கள். சாரணப்பயிற்சி வெளியிடங்களில் அளிக்கப்பட வேண்டிய பயிற்சி. ஆகையால் படைக்கூடம் பயிற்சிக்கூடமாகப் பயன்படுத்தப்பட மாட்டாது. ஆயினும் மழைபோன்ற அசௌகரியம் உள்ளபொழுது பயிற்சிக்காகவும் படைக்கூடம் பயன்படுத்தப் படலாம்.

சாரணப் படைக்கூடத்தில் சாரண விதிகளையும் சாரண வாக்குறுதியையும் அழகுபெற எழுதிச் சுவர் ஒட்டிகளாகத் தொங்கவிடலாம். அவற்றைக் கண்ணுறும் சாரணர்களைச் சிந்திக்கவைக்கும் முறையில் அவை அமைந்திருக்க வேண்டும். சாரணப் படைக்கூடத்தில் ஒரு பக்கத்தில் படையிலுள்ள சாரணர்களின் முன்னேற்ற அளவைக் குறிக்கும் சுவரொட்டிகளும் தொங்கவிடப்படவேண்டும். அவைகளைக் கண்ணுறும் சாரணர்களுக்கு அவை ஊக்கம் அளிக்கும். மேலும் தங்கள் தங்கள் சாரணப் பயிற்சியில் இன்னும் எந்த எந்த தேர்வுகள் பாக்கியாக உள்ளன என்பதையும் அவர்களுக்கு நினைவூட்டும். இதற்குச் சாரணகள் முன்னேற்றக் குறிப்பு (Progress Record) என்று பெயர்.

சாரணப் படைக்கூடத்தில் நல்ல பார்வையான இடத்தில் சாரண இயக்கத் தந்தையாகிய பேடன்-பவலாரின் உருவப்படம் வைக்கப் படவேண்டும். அதன் பக்கத்தில் அவர் மனைவியார் படமும் அவசியம் வைக்கப்பட வேண்டும். உலகத்திலுள்ள சாரண சாரணிகள் இவர்கள்பால் செலுத்தவேண்டிய நன்றிக்கடன் மிகமிகப் பெரிது.

படைக்கூடத்தின் புகுமுக வெளிச்சுவரில் படையின் பெயரும் முகவரியும் பொறித்த பலகையொன்று தொங்கவிடப்பட வேண்டும். படைக்கூடத்தை அமைத்து அதைப் பராமரிக்கும் முறையும் சாரணர்களுக்கு ஒருநல்ல பயிற்சியாகவே அமையும். கூடத்தில் நுழையும் போதே சாரண இயக்கத்தின் கண்ணியத்தையும் கட்டுப்பாட்டையும் அவர்கள் உணர்ந்து கொள்வார்கள். நுழைந்த பின் அங்கு காணப்படும் ஒழுங்கும் துப்புறவும் அவர்கள் மனத்தைக் கவரும். அணி மூலைகளில் உள்ள ஒழுங்கும் அவைகளின் அழகியதோற்றமும் அவர்கள் உள்ளத்தில் அணி உணர்ச்சியை உண்டுபண்ணும். ஆங்காங்குள்ள சுவரொட்டிகள் படையில் உள்ள சாரணர்களின் ஒழுங்காகப் பயிற்சியில் முன்னேறிச் செல்கிறார்கள் என்பதை உணர்த்தும். இன்னும் சில படையின் பழம்பெருமையையும் உணர்த்தும். ஆகவே -படைக்கூடம் அமைப்பதும் சாரணர்களுக்கு நல்ல பண்புப் பயிற்சி ஆகும்.

# 19. சாரண ஆசிரியர்

சாரணப் பயிற்சி இரண்டு பெரிய கல் தூண்களின் உச்சியில் அமைக்கப் பட்டுள்ள சிறப்பு வாய்ந்த ஒரு அரை வளையக் கட்டடம். உறுதி வாய்ந்த இவ்விரு தூண்களில் ஒன்று **இறைநம்பிக்கை,** இன்னொன்று **நாட்டுப்பற்று.** இவ்விரண்டு தூண்களையும் இணைக்கும் வளைவு **சாரணப் பயிற்சி.** அது இறைவனிடம் அன்பும் பக்தியும் கொண்டுள்ள சிறுவர்களை அவர்களின் உடல் நலம், உள நலம், ஆத்தும நலம் ஆகிய நலன்களை வளர்த்து ஆளாக்கி, நாட்டின் நலத்துக்குரிய நற்றொண்டு புரியும் ஆர்வமும் ஆற்றலும் படைத்த நற்குடி மக்களாகத் திகழச் செய்யும் உயரிய நோக்கம் உடையது.

தூண்களை இணைக்கும் அரை வளையம் நன்றாகச் செதுக்கி மெருகிடப்பட்டுள்ள கருங்கற்களால் அமைத்த சிறப்புடைய கட்டடம். கற்கள் ஒவ்வொன்றும் சாரண இளைஞர்களின் விருப்பத்தை உணர்ந்து அதற்கு இணங்க அமைக்கப்பட்டுள்ள பயிற்சிகளைக் குறிக்கும். இந்தக் கற்கள் மிக நல்ல முறையில் பண்படுத்தப் பட்டுள்ளன. ஒன்றோடொன்று மிக நல்ல முறையில் இணைக்கப் பட்டுள்ளன. அவை **சாரண நெறி, சாரண வாக்குறுதி,** என்ற உயர்தர சிமிட்டியின் உதவியால் அமைக்கப் பட்டுள்ளவை. ஆயினும் அந்த வளைவு நல்ல உறுதிபெற்று, நிலையாக நின்று, தன் நோக்கங்களை நிறைவேற்ற வேண்டுமானால் அந்த அழகிய வளைவின் நடுவிலே பொறுப்புணர்ச்சி நிறைந்த ஒரு மகுடக்கல் (Keystone) அவசியம். அத்தகைய மகுடத்தை அமைத்த உடன் அதற்கு அடியில் உள்ள ஒவ்வொரு கல்லும் அமைவுபெற்று அதனதன் இடத்தில் நன்கு பதிந்து உறுதிபெற்று கட்டடம் முழுமைக்கும் உறுதி அளிக்கும் இயல்புபெற்றுத் திகழ்கின்றது. இத்தகைய அருமையான சிறப்பு வாய்ந்த மகுடமே **சாரண ஆசிரியர்.**

சாரணப் பயிற்சி உறுதியான அடிப்படையில் அமைந்துள்ளதே ஆயினும் அப்பயிற்சியின் தத்துவங்கள் யாவை, பயிற்சி வெற்றகரமாகச் செயல் படுவதற்கு எத்தகைய சூழ்நிலை அமையவேண்டும், எத்தகைய கட்டுப்பாடுகள் அவசியம், எந்தெந்தப் பயிற்சிகள் எந்தெந்த முறையில் கையாளப் படவேண்டும் என்ற பல பிரச்னைகளுக்கு விடைகண்ட சாரண ஆசிரியரே தன் சாரணர்களுக்கு உகந்த முறையில் பயிற்சி அளிக்கும் திறன் படைத்தவர் ஆவர்.

இது சாரணப்பயிற்சியில் உள்ள உண்மைகளில் மிகப் பெரிய உண்மை. சாரணப் பயிற்சியை வெற்றிகரமாகச் செயல்பட வைப்பது சாரண ஆசிரியரின் அறிவையும், ஆற்றலையும், ஆர்வத்தையும் பொறுத்துள்ளது என்பது தெளிவு.

சாரண ஆசிரியருக்கு அவசியமான பண்புகள் மூன்று.

(1) அவர் சிறுவர்களின் மனப்பான்மை படைத்தவராய் இருத்தல் வேண்டும். சிறுவர்களின் ஆர்வத்தை நன்குணர்ந்தவராய் இருத்தல் வேண்டும். அவருக்கு முதியவர்களுக்குரிய உலக அனுபவமும் வேண்டும்.

(2) அவர் சிறுவர்களிடத்தில் அன்பும் அனுதாபமும் இருப்பதோடு அவர்களின் விருப்பு வெறுப்புக்களை நன்குணர்ந்தவராய் இருத்தல் மிக அவசியம். சாரண ஆசிரியர் தம் இளமைப் பருவத்தையும் அப்பொழுதைய விருப்பு வெறுப்புக்களையும் நினைவூட்டிக்கொள்ளும் திறமை உடையவராய் இருத்தல் வேண்டும். அப்படி இருப்பின் தங்கள் சாரண இளைஞர்களுக்கு எத்தகைய பயிற்சி எவ்வெப்போது அளித்தல் வேண்டும், எந்த முறையில் அளித்தல் வேண்டும் என்று முடிவுகட்டும் திறமை எளிதில் உண்டாகும்.

(3) அவர் சாரண இளைஞர்களோடு உண்மையான அன்பும் ஆதரவும் உடையவராய் இருத்தலும் அவர்களோடு எளிதில் நட்புக் கொள்ளும் இயல்புடையவராக இருத்தலும் மிக அவசியம். உண்மை அன்பு உடையவர்கள் உண்மை அக்கறை கொண்டவர்களாவார்கள். அப்படி இருப்பதால் தன் சாரணர்கள் நல்ல பண்புடையவர்களாய்த் திகழவேண்டும் என்ற ஆசை உண்டாகும். அவர்களுக்குப் பயிற்சி அளித்தலில் அவருக்கு உண்மையான விருப்பமும் அக்கறையும் உண்டாகும்.

இந்தப் பண்புகள் மூன்றும் மிக முக்கியமான பண்புகள். அவைகள் சாரண ஆசிரியர்களுக்கு இன்றியமையாதன.

சாரண ஆசிரியர்கள் உணர்ந்து கொள்ளவேண்டிய உண்மைகள் மூன்று.

(1) சாரணப்பயிற்சி ஒரு வகையில் செடி கொடிகளின் தன்மை வாய்ந்தது. ஆதவனின் கிரணங்களும் தூய்மையான காற்றும் எப்படித் தாவர வர்க்கத்துக்கு அவசியமோ அப்படி சாரணப் பயிற்சிக்கும் அவசியம். அத்தகைய திறந்த வெளியிடங்களில் மட்டுமே அது செழிப்புடன் வளரும் என்ற உண்மையைச் சாரண ஆசிரியர் உணர்ந்து கொள்வது அவசியம். திறந்த வெளிப்புற இடங்கள் சாரண இளைஞர்களின் மனதைக் கவர்வதுபோல மற்றெந்த

இடங்களும் அவர்கள் மனதைக் கவரமாட்டா. பள்ளியில் உள்ள கூடங்களிலும், வீட்டில் உள்ள அறைகளிலும், மற்றும் பல வகையான கட்டடங்களிலும் சாரணர்களைக் கூடச்செய்து அவை களில் வைத்து அளிக்கப்படும் பயிற்சி சாரணப் பயிற்சி ஆகாது. சாரண இளைஞர்கள் அதை விரும்ப மாட்டார்கள். அது நல்ல பயன் அளிக்காது, சாரணப் பயிற்சிக்கு திறந்த வெளியிடங்களே பொருத்தமுடையன. அப்படியான சூழ்நிலையிலேதான் பயிற்சி அழகுபெற நடக்கும், அங்கே எதிர்பாராத பல நல்வாய்ப்புக்களும் உண்டாகும் என்பதை சாரண ஆசிரியர்கள் உணரவேண்டும்.

(2) சாரணப் பயிற்சியில் செயல் முறைதான் முக்கியம். எதைக் கற்பதானாலும் "செய்தே கற்க" வேண்டும். அதுவும் கூட்டமாகக் கற்காமல் "தனித் தனியான முறையிலேயே கற்றல் வேண்டும்".

சாரண இளைஞர்கள் பலபேர்களை ஒரு கூட்டமாகக் கூட்டி வைத்து நடத்தப்படும் எந்தப் பயிற்சியும் நல்ல பலன் தராது. பயிற்சியை ஒவ்வொருவருக்கும் தனித் தனியாகவே அளித்தல் வேண்டும். எதைச் செய்து பார்ப்பதானாலும் தனித்தனியாகவே செய்து பார்க்க வேண்டும். கற்கும் முறை அதுவே. சாரணர்களைக் கூட்டமாக வைத்து சொற்பொழிவு ஆற்றிப் பயிற்சி தர முயல்வது பயனற்றதாகும். கற்கவேண்டிய எதனையும் செய்து கற்றல் முறையி லேயே கற்றல் அவசியம். இது இரண்டாவது உண்மை.

(3) சாரண இளைஞர்களின் விருப்பத்தை நன்கு உணர்ந்து கொண்டு அதற்கேற்ப அளிக்கப்படும் பயிற்சியே பயன் உடைய பயிற்சி ஆகும். அவர்கள் விருப்பத்துக்கு மாறாக உள்ள பயற்சியால் பயன் இல்லை.

இளைஞர்களுக்கு இயற்கையாகச் சில விருப்பு வெறுப்புகள் உண்டு. சாரண ஆசிரியர் அவற்றை உணர்ந்துகொண்டு இளைஞர் களின் விருப்ப அடிப்படையில் அமைந்துள்ள பயிற்சிகளையே அளிக்க முயற்சி செய்ய வேண்டும். அவைகளையும் அவர்கள் அறிவுக்கும் ஆற்றலுக்கும் பொருந்தும் முறையில் அளித்தல் அவசியம். இது மூன்றாவது உண்மை.

சாரண ஆசிரியர்களுக்குரிய கடமைகள் இரண்டு.

1. இவற்றுள் சாரண இளைஞர்களுக்குத் தாங்கள் ஓர் உலகப் பேரியக்கத்தின் அங்கத்தினர்களாய் இருக்கிறோம் என்ற உணர்ச்சியை உண்டு பண்ணுவது முதல் கடமை. சாரண இயக்கத்தில் சேர்கையில் சாரணர்கள் தங்களைத் தனித்தனியாக

உள்ளவர்கள் என்று எண்ணிக்கொள்ளுதல் இயல்பு. இப்படியான தப்பெண்ணத்தை மாறச் செய்து கூட்டுணர்ச்சியை உண்டுபண்ணி அதைப் படிப்படியாக அதிகரிக்கச் செய்வது சாரண ஆசிரியரின் கடமைகளுள் ஒன்று. நாம் எல்லோரும் ஒரே சாரணப் படையில் அங்கத்தினர் என்ற ''படை உணர்ச்சி'' முதலில் வரும். நாம் எல்லோரும் ஒரே இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் என்ற ''இயக்க உணர்ச்சி'' பின்னால் வரும். சாரண ஆசிரியர் இத்தகைய உணர்ச்சியை உண்டுபண்ண முயற்சி செய்வது மிக அவசியம்.

2. சாரணர்களுக்குரிய பயிற்சியைத் ''தான் ஒருவரே அளித்தல் வேண்டும், மற்றவர்களிடம் விடக்கூடாது. அப்படி விடுவதானால் தனக்குப் போதிய ஆற்றல் இல்லை என்ற எண்ணத்தை உண்டுபண்ணி விடுவோம்'' என்று எண்ணுவது தவறு என்பதை உணர்ந்து கொள்வது அவசியம். இது இரண்டாவது கடமையாகும்.

சாரணப் பயிற்சி பல தரப்பட்ட பயிற்சி. பயிற்சி அனைத்தையும் ஒருவரே கற்றுத் தருவது என்பது முடியாத காரியம். சாரணப் பயிற்சி அளித்தல் பொறுப்பைச் சாரண ஆசிரியர் தம் அணித் தலைவர்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும். தாம் தம் அணித் தலைவர்களுக்கு பயிற்சி அளிக்க வேண்டும். தாம் கற்பித்தவற்றை அணித்தலைவர்கள் தங்கள் அணியில் உள்ள சாரணர்களுக்குக் கற்பிக்க வேண்டும். அணிமுறை என்பது இதுவே ஆகும். இரண்டாவதாக, அணித்தலைவர்களுக்குப் பயிற்சி அளிக்கும் பொறுப்பை சாரணச் ஆசிரியர் தன் உதவி ஆசிரியர்களோடு பகிர்ந்து கொள்ளவேண்டும். இது போலவே சாரணக் கலையில் நல்ல புலமை பெற்றுள்ள ஏனைய சாரண ஆசிரியர்களையும் பிறரையும் அவ்வப்போது அழைத்து சில முக்கிய பயிற்சிகள் அளிக்கும் வாய்ப்பு அவர் களுக்குத் தருவதும் அவசியம்.

இவ்விரண்டும் ஆசிரியர்களின் இரண்டு முக்கிய கடமைகள் ஆகும்.

சாரண ஆசிரியரை மூத்த சகோதரனுக்கு ஒப்பிடுவது மிகமிகப் பொருத்தமுடையது. சாரண இயக்கத் தந்தை அவ்விதம் ஒப்பிடுகிறார். சாரண ஆசிரியரின் அலுவல்களையும் அவருக்கு உள்ள கடமைகளையும் எண்ணிப் பார்க்கையில் அவரை மூத்த சகோதரன் என்பதைவிட வேறு ஒப்பு உவமை கூற இயலாது என்பது புலப்படும். சாரண ஆசிரியர் பதவியைப் பள்ளி ஆசிரியர் பதவிக்கு ஒப்பிடுதல் பொருந்தாது. சமயத் துறையில் சமய போதனைப் பணியாற்றும் சமயபோதகர்கள் பதவியோடும் அதனை ஒப்பிடல் பொருத்தமுடையதல்ல. இராணுவத் துறையில் பணிபுரியும் இராணுவ அதிகாரிகள்

பதவிக்கு ஒப்பிடுதலும் கூடாது. இவர்களுக்குள்ள அலுவல்களும் கடமைகளும் வேறு மாதிரியானவை.

மூத்த சகோதரன் தன் இளம் பிராய அனுபவங்களையும் நினைவுகளையும் இன்னும் தன் மனதில் வைத்திருப்பவன். அதோடு பயிற்சிகளின் ஏற்றத்தாழ்வை சாரணர்களைப் போலவே அதே கோணத்தில் ஆராய்ந்து முடிவுகட்டும் ஆற்றல் படைத்தவன். மேலும் விளையாட்டுகளிலும் பயிற்சிகளிலும் இளைய சகோதரர்களாகிய சாரணச் சிறுவர்களுக்கு வழிகாட்டியாக இருந்து அவைகளில் ஆர்வத்துடன் கலந்து கொள்ளும் ஆற்றல் படைத்தவன். குடும்பப் பெருமையையும் குடும்பப் புகழையும் எப்படிப் பாதுகாக்க வேண்டுமோ அப்படிப் பாதுகாக்கும் திறனும் உடையவன்.

அன்பின் அடிப்படையில் பணியாற்றும் சாரண ஆசிரியர் நட்பினாலும் அனுதாபத்தாலும் தன் சாரணர்களோடு பிணைக்கப்பட்டுள்ளார். அவர்கள் விளையாட்டுகளிலும், அவர்களுக்குரிய சாரண அலுவல்களிலும் ஆர்வத்துடன் கலந்து கொள்கிற சாரண ஆசிரியரை அவர்கள் மூத்த சகோதரனுக்கு ஒப்பிடுவது மிகவும் பொருத்தமுடையது.

சாரணியம் ஒரு நூதன வாழ்க்கை முறை. சாரணர்களின் வாழ்க்கை கண்ணியமானது, கட்டுப்பாடு உடையது, கடமைகளுக்குப் பூரண முக்கியத்துவம் அளிப்பது. சாரணப் பயிற்சி சிறுவர் வாழ்க்கையை சாரண நெறிக்கு இணங்கும் வகையில் திருத்தி அமைக்கும் பயிற்சி. இத்தகைய பயிற்சியில் ஈடுபாடுடைய ஆசிரியர்களை, தங்கள் முழுமனதோடு சாரணர்கள் முன்னேற்றத்துக்காக உழைக்கும் ஆசிரியர்களை, மக்கள் இனத்துக்கே தொண்டாற்றும் மனப்பான்மை பொருந்திய ஆசிரியர்களை, நம் தாய் நாட்டின் நன்மைக்காக உழைக்கும் நல்ல உழைப்பாளிகள் என்றும் இறைவனுடைய உண்மைத் தொண்டர்கள் என்றும் கருதுவதில் ஒரு சிறிதும் தவறு இல்லை.

## சாரண உதவி ஆசிரியர்

சாரண ஆசிரியருக்கு என்னென்ன பண்புகள் அவசியமோ அவைகள் உதவி ஆசிரியருக்கும் அவசியமே. படை நடத்துவதில் பங்கு கொள்ளும் உதவி ஆசிரியர் சாரண ஆசிரியரை முன் மாதிரியாகக்கொண்டு இந்தப் பண்புகளைத் தானும் பெற்றுக் கொள்ள வேண்டிய முயற்சி செய்வார். உதவியாசிரியருக்கு சாரண ஆசிரியர் ஆற்றவேண்டிய தொண்டு ஒன்று உண்டு. அதாவது அவருக்கு

நல்ல மதிப்புத் தந்து, படை அலுவல்களிலும் படை நிர்வாகத்திலும் அவரை நன்கு கலந்துகொண்டு அவர் அபிப்பிராயங்களைத் தெரிந்து கொள்வதும், படை நடத்துவதில் அவருக்குப் பங்கு தருவதும் ஆகும். உதவி ஆசிரியருக்கு அவசியமான வசதிகள் தந்து சாரணப் பயிற்சியில் முன்னேறிச் செல்ல அவருக்கு வேண்டிய வாய்ப்புக்களும் வசதிகளும் அளிக்க வேண்டும். மாவட்ட, மாநிலச் சாரண ஆணை யாளர்கள் முதலிய பெரியோர்கள் படைக்கு வருகை தரும்பொழுது அவரை அவர்களுக்கு உரியமுறையில் அறிமுகம் செய்துவைத்து, படையின் நிகழ்ச்சிகளில் அவருக்கு முக்கிய பங்கு தந்து, அவரு டைய திறமையை அந்த விருந்தினர்கள் உணர்ந்து கொள்ள வாய்ப் பும் தரவேண்டும்.

சாரணப் பயிற்சியும் படை நிர்வாகமும் கூட்டுறவு முறையில் செயல்பட வேண்டியவை. உதவியாசிரியரின் பங்கு மிகமிகச் சிறப்பு வாய்ந்தது.



# 20. சாரணச் சங்கம்

சாரணப் பயிற்சி உலகத்தில் உள்ள ஏறக்குறைய 108 நாடுகளில் இப்பொழுது செயல்பட்டு வருகிறது. இவற்றுள் சில பெரிய நாடுகள், சில சிறிய நாடுகள். ஒவ்வொரு நாட்டிலும் சாரண இயக்கத்தை உரிய முறையில் செயல்படுத்த அந்தந்த நாடுகளில் தனித்தனி சாரண சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. நம் இந்திய நாட்டிலும் **''பாரதச் சாரண சாரணிகள்''** (Bharat Scouts of Guides)என்ற பெயருடைய ஒரு சங்கம் சாரண இயக்கத்தைச் செயல்படச் செய்கிறது.

## தேசிய அமைப்பு

**பாரதச் சாரணர் சாரணிகள் சங்கத்தின்** தேசியத் தலைமை நிலையம் புது டில்லியில் இருக்கிறது. **''ரிங்ரோடு, 16வது நம்பர்''** என்பது இந்த தேசிய நிலையத்தின் முகவரி. இந்தச் சங்கம் **தேசியப் பேரவை** (National Council) ஆட்சிக்குள் அடங்கியது. தேசியப் பேரவை நிரந்தர சந்தாத்தொகை செலுத்தியுள்ள சந்தாதாரர் களையும் சாரண இயக்கத்தில் ஈடுபட்டுள்ள சில முக்கிய ஆணையர் களையும் அலுவலர்களையும் கொண்டது. இந்தப் பேரவை மூன்றுண்டு களுக்கு ஒரு முறை கூடித் தங்கள் தலைவரை, உபத்தலைவர்களை, பொக்கிஷதாரை, தேசிய ஆணையாளரைத் தேர்ந்தெடுக்கும். அதே நேரத்தில் **தேசிய நிர்வாகக் குழு** (National Executive Committee) ஒன்றையும் தேர்ந்தெடுக்கும். தேசியப் பேரவையினர் சாரண சாரணிகள் சங்கத்தின் நிர்வாகப் பொறுப்பை இந்த நிர்வாகக் குழுவிடம் ஒப்படைத்துள்ளார்கள்.

**தேசிய ஆணையாளர்** (National Commissioner) சாரண சாரணிகள் சங்கத்துக்கே, அதாவது சாரணர்கள் சாரணிகள் என்ற இரு பிரிவுக்கும் பொதுவாக உள்ள ஆணையாளர். சாரண சாரணி கள் இயக்கத்துக்குரிய முழுப் பொறுப்பையும் இவரே ஏற்று நடத்து பவர். தேசிய நிர்வாகக் குழுவுக்கு உகந்த முறையில் இயக்கத் தைச் செயல்படுத்துவது இவருடைய பொறுப்பு.

**சாரணப் பேராணையாளர்** (Chief Commissioner—Scouts) சாரணர்களுக்குரிய பொறுப்பையும் **சாரணிப் பேராணையாளர்** (Chief Commissioner—Guides) சாரணிகளுக்குரிய பொறுப்பையும் ஏற்று

நடத்துகிறார்கள். இவர்களை தேசிய ஆணையாளர் நியமிக்கிறார். இவர்கள் இருவருக்கும் உதவிபுரிய இரண்டு **துணைப் பேராணையாளர்** களையும் அவரே நியமனம் செய்வார். அதுபோலவே இரண்டு **பல நாட்டு ஆணையாளர்களையும்** (International Commissioners) அவர் நியமனம் செய்வார். இந்தத் துணைப் பேராணையாளர்களுள் ஒன்று சாரணப் பிரிவுக்கும் இன்னொன்று சாரணிகள் பிரிவுக்கும் ஆகும். அதுபோல பல நாட்டு ஆணையாளர்களுள் ஒன்று சாரணப் பிரிவுக்கும் இன்னொன்று சாரணிகள் பிரிவுக்குமாகும்.

இவை தவிரத் தேசியத் தலைமை அலுவலகத்தில் **அமைப்பு, ஆசிரியப் பயிற்சி** என்ற இரு முக்கிய துறைகளும் இருக்கின்றன.

அமைப்புத் துறையில் செயலாற்றுபவர்கள்—

**தேசிய அமைப்பு ஆணையாளர்** (National Organising Commissioner)

**தேசிய இணை-அமைப்பு ஆணையாளர் (சாரணர் பிரிவு)** (Joint National Organising Commissioner–Scouts). **3. தேசிய இணை-அமைப்பு ஆணையாளர் (சாரணிகள் பிரிவு)** (Joint National Organising Commissioner—Guides) என்ற அலுவலர்கள்.

பயிற்சித் துறையில் செயலாற்றுபவர்கள்:— **தேசியப் பயிற்சி ஆணையாளர் (சாரணர் பிரிவு)** (National Training Commissioner —Scouts) **தேசியப் பயிற்சி உதவி ஆணையாளர் (சாரணர் பிரிவு) தேசிய பயிற்சி ஆணையாளர் (சாரணியர் பிரிவு) தேசியப் பயிற்சி உதவி ஆணையாளர் (சாரணிகள் பிரிவு)** என்ற அலுவலர்கள்.

ஆசிரிய ஆசிரியைப் பயிற்சி தேசிய நிலையம் மத்தியப் பிரதேச மாநிலத்தில் பச்மாரி (Pachmarhi) என்ற இடத்தில் உள்ளது.

## மாநில அமைப்பு

சாரண இயக்க நிர்வாகத்துக்காக நம் பாரத நாடு பல சாரண மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. தற்போது அவற்றின் எண்ணிக்கை 28 ஆகும். இந்திய ரயில்களை ஒன்பது மாநிலங்களாகவும் நாட்டின் ஏனைய எல்லைகளை பத்தொன்பது மாநிலங்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. இவை (1) டெல்லி, (2) பஞ்சாப், (3) உத்திரப் பிரதேஷ், (4) பீகார், (5) அஸ்ஸாம், (6) மத்தியப்பிரதேஷ், (7) குஜராத், (8) மகாராஷ்டிரம், (9) கோவா, (10) மைசூர்,

(11) ராஜஸ்தான், (12) தமிழ்நாடு, (13) ஆந்திரப்பிரதேஷ், (14) கேரளா, (15) அரியானு, (16) ஜம்மு-காச்மீரம், (17) நாகாலாந்து, (18) பாண்டிச்சேரி, (19) மேற்கு வங்காளம், (20) தென் ரயில்வே, (21) மேற்கத்திய ரயில்வே, (22) வட ரயில்வே, (23) வடகிழக்கு ரயில்வே, (24) மேற்கு மத்திய ரயில்வே, (25) தெற்கு மத்திய ரயில்வே, (26) கிழக்கு ரயில்வே, (27) தென் கிழக்கு ரயில்வே, (28) வடகிழக்கு எல்லைப்புற ரயில்வே என்பன.

ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள சாரண சங்க அமைப்பு டில்லித் தலைமை நிலையத்தின் அமைப்பை ஒத்துள்ளது. சாரண மாநிலம் ஒவ்வொன்றிலும் **மாநிலப் பேரவை** (State Council) ஒன்று சங்கத்தின் நிர்வாகத்துக்குப் பொறுப்பாக உள்ளது. ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு **மாநில நிர்வாகக் குழுவும்** உண்டு. மாநிலப் பேரவை தேர்ந்தெடுக்கும் **மாநிலப் பேராணையாளர்** (State Chief Commissioner) சாரணர்களுக்கும் சார்ணிகளுக்கும் பொது. அவரால் நியமிக்கப்பட்ட **மாநிலச் சாரண ஆணையாளர்** (State (Commissioner for Scouts) சாரணர்கள் பிரிவுக்கும், **மாநிலச் சாரணிகள் ஆணையாளர்** (State Commissioner for Guides) சாரணிகள் பிரிவுக்கும், பொறுப்புடையவர்கள். அவர்களுக்கு உதவி புரிய ஒவ்வொரு பிரிவுக்கும் **அமைப்பு ஆணையாளர் (சாரணர் பிரிவு)** (State Organising Commissioner—Scouts) ஒரு அமைப்பு ஆணையாளர் (சாரணிகள் பிரிவு) (State Organising Commissioner–Guides) உண்டு. அவர்களைத் தவிர **உதவி மாநில அமைப்பு ஆணையாளர்களும்** (Asst—State Organising Commissioners) உண்டு. மேலும் ஒவ்வொரு பிரிவுக்கும் உதவி மாநில ஆணையாளர்களும் நியமிக்கப் படுகின்றனர்.

மாநிலப் பேரவை **மாநில நிர்வாகக் குழு** State Executive Committee) ஒன்றைத் தேர்ந்தெடுத்து நிர்வாகத்தை அதனிடத்திலும் மாநிலப் பேராணையாளரிடத்திலும் ஒப்படைத்துள்ளது. இந் நிர்வாகக்குழு ஒரு பொருளாளரைத் தேர்ந்தெடுக்கிறது. மாநிலப் பேராணையர் மாநிலச் செயலாளர், இணைச்செயலாளர் ஆகியோரையும் நியமிக்கிருர்.

குருளையர் குழு, சாரணப்படை, திரிசாரணக் குழு முதலியவற்றின் அமைப்பு, மாநிலச் சாரண அமைப்பு ஆணையாளர் (State Organising Commissioner—Scouts) கண்காணிப்பில் இருக்கும். சாரண ஆசிரியர் பயிற்சி **மாநிலப் பயிற்சி ஆணையாளர்** (Head Quarters Commissioner for Training) கண்காணிப்பில் உள்ளது.

# மாவட்ட அமைப்பு

ஒவ்வொரு சாரண மாநிலமும் அவற்றில் உள்ள நிலவரி அல்லது கல்வித்துறை மாவட்டங்களை ஒட்டி சாரண மாவட்டங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு மாவட்டச் சங்கமும் (District Association) பல தலச் சங்கங்களும் (Local Associations) உண்டு. சாரண சங்கத்துக்குள்ள எல்லா அலுவல் களையும் இந்தச் சங்கங்களே செயலாற்றுகின்றன.

ஒவ்வொரு மாவட்டத்திலும் சாரணர்களுக்காக ஒரு ஆணை யாளரும் (District Commissioner for Scouts) சாரணிகளுக்காக ஒரு ஆணையாளரும் (District Commissioner for Guides) ஆக இருவர் இருப்பார்கள். மாவட்ட ஆணையாளர்களுக்கு உதவிக்காக மாவட்ட உதவி ஆணையாளர்களும் (Assistant District Commissioners) உண்டு பாரதச் சாரண சாரணியர் சங்க அமைப்பு முதலிய எல்லா விவரங்களும் சங்க நோக்கங்கள், கொள்கைகள், விதிகள் (A.P.R.O), என்ற நூலில் தரப்பட்டிருக்கின்றன.



# 21. சாரணத் தொகுப்பும், தொகுப்பு நிர்வாகமும்

சாரணப் பயிற்சி சிறுவர்களின் வயதுக்கும் அவர்கள் மன நிலைக்கும் பொருத்தமுள்ள வகையில் குருளையர் பயிற்சி, சாரணர் பயிற்சி, திரிசாரணர் பயிற்சி என்று மூன்று பிரிவுகளாக உள்ளது. குருளையர் பயிற்சி குருளையர் குழு வாயிலாகவும் சாரணர் பயிற்சி சாரணர் படை வாயிலாகவும், திரிசாரணர் பயிற்சி திரிசாரணர் குழு வாயிலாகவும் அளிக்கப் படுகிறது. ஆகையால் குருளைக்குழு, படை, திரிசாரணர் குழு என்பன ஒரு சாரணத் தொகுப்பாகக் கருதப்படு கிறது.




குருளையர் மந்தை, சாரணர் படை, திரி சாரணர் குழு என்ற மூன்றினையும் கொண்ட சாரணத் தொகுப்பு **நிறைத்தொகுப்பு (Complete Group)** எனப்படும். இவை மூன்றில் ஏதாவது ஒன்று அல்லது இரண்டு குறைவாக இருக்குமானால் அது **குறையுள்ள தொகுப்பு** (Incomplete Group) எனப்படும்.

ஒரு தொகுப்பில் உள்ள சிறுவர்களுக்கு மூவகைப் பயிற்சி யையும் அதே தொகுப்பில் பெற்றுக்கொள்ளும் வாய்ப்பு இருப்பது நல்லது. ஆகவே குறைத் தொகுப்புகள் எவ்வளவு விரைவாக நிறைத் தொகுப்புகளாக மாறமுடியுமோ அவ்வளவு விரைவாக மாறுதல் விரும்பத்தக்கது.

ஆயின் நம் நாட்டில் சாரணப் பயிற்சி பெரும்பாலும் பள்ளிப் பயிற்சியோடு இணைவுற்று நடைபெறுகிற காரணத்தினால் சாரணத் தொகுப்புகள் பெரும்பாலும் குறைத் தொகுப்புகளாகவே இருந்து விடுகின்றன. துவக்கப் பள்ளிகளில் குருளையர் பயிற்சிக்கு வசதி இருப்பது போல சாரணர் பயிற்சிக்கும் திரிசாரணர் பயிற்சிக்கும் வசதி இல்லை. உயர்நிலைப் பள்ளிகளில் குருளையர் சாரணர்

பயிற்சிக்கு வசதி இருப்பது போல திரிசாரணப் பயிற்சிக்கு வசதி இல்லை. கல்லூரிகளில் திரிசாரணர் பயிற்சிக்கு மட்டுமே வசதி உண்டு. ஆகவே குறைத் தொகுப்புகள் மாறுதல் எதுவுமின்றி குறைத் தொகுப்புகளாகவே இருந்து வருகின்றன. இது கல்வி நிலையங்களைச் சார்ந்துள்ள தொகுப்புகளுக்கு நிரந்தரமாக உள்ள ஒரு குறையே ஆகும்.

கல்வி நிலையங்களில் போலவே வேறு நிலையங்களிலும் சாரணத் தொகுப்புகள் அமைக்கப் படலாம். உடற்பயிற்சி நிலையங்கள், கிறித்துவ வாலிப சங்கங்கள், சமூக சேவா நிலையங்கள் போன்றவை சார்பில் சாரணத் தொகுப்புகள் நிறுவப்படலாம். இவை நிலையச் சார்புடையத் தொகுப்புகள் அல்லது சார்பு பெற்ற தொகுப்புகள் (Sponsored Groups) என வழங்கும் .

இத்தகைய தொகுப்புகள் தவிர நகரத்தின் அல்லது பட்டணத்தின் பல பாகங்களில் அல்லது கிராமங்களில் அந்தந்தப் பேட்டைகளில் உள்ள பிரமுகர்களால் அங்குள்ள சிறுவர்கள் அல்லது வாலிபர்களின் நன்மையை எண்ணி தொகுப்புகள் அமைக்கப் படலாம். அத்தகைய தொகுப்புகள் பொதுத் தொகுப்புகள் (Open Groups) என வழங்கப் பெறும்.

அமைக்கப் பட்டுள்ள தொகுப்புகள் இவைகளுள் எந்த வகுப்பைச் சேர்ந்ததாயினும் அவை சாரண சங்கத்தில் பதிவுபெற வேண்டும். பதிவுபெற்ற தொகுப்புகளே சங்கத்தின் அங்கங்களாகக் கருதப்படும். பதிவுபெற்ற தொகுப்புகளுக்குச் சில சலுகைகள் உண்டு. பாசறை செல்லும் போது அல்லது சாரண விழாக்களில் பங்குகொள்ளச் செல்லும் போது குறைந்த கட்டணத்தில் ரயில் பயணம் செய்ய அனுமதி இந்தச் சலுகைகளில் ஒன்று. பள்ளிகளில், கல்லூரிகளில், அமைக்கப் பட்டுள்ள தொகுப்புக்களாக இருந்தால் அந்தந்த நிலையத்திலிருந்து பண உதவி பெறும் வாய்ப்பு இந்தச் சலுகைகளில் இன்னொன்று. இவற்றைவிட மிக முக்கியமாக உள்ளது சாரணர்கள் என்ற முறையில் சாரணச் சீருடையையும் சாரணச் சின்னங்களையும் அணிந்து கொள்ளும் உரிமை ஆகும். பதிவுபெற்ற தொகுப்புக்களுக்கே சாரணச் சின்னங்களைப் பெறவும், அணிந்து கொள்ளவும் உரிமை உண்டு.

சாரணத் தொகுப்புகள் சாரண மாநிலத் தலைமையலுவலகத்தில் பதிவு செய்யப்படும். பதிவுக்குரிய விண்ணப்பத்தாள் தொகுப்புகளால் தல சங்கத்துக்கு (Local Association) அனுப்பப்பட வேண்டும். அந்தக் காரியாலயத்தார் அதனைப்பரிசீலனை செய்து மாவட்டச் சங்கத்துக்கு (District Association) அனுப்புவார்கள்.

மாவட்ட ஆணையாளர் அந்த விண்ணப்பத்தை ஏற்றுக் கொண்டதும் அவர் அதை மாநிலத் தலைமைக் காரியாலயத்துக்கு அனுப்புவார். பதிவைப் பற்றிய முழுப்பொறுப்பும் மாவட்ட ஆணையாளருக்கே உண்டு. மாநிலக் காரியாலயத்தார் பதிவைச் செய்த பிறகு பதிவு செய்யப்பட்டுள்ளதற்கு அறிகுறியாக பதிவுப் பத்திரம் (Charter) ஒன்றை அந்தத் தொகுப்புக்கு வழங்குவார்கள். இந்தப் பதிவு நிரந்தரமான பதிவே ஆயினும் அதனைத் தொகுப்பு அதிகாரிகள் ஒவ்வொரு ஆண்டு ஆரம்பத்திலும் புதுப்பித்துக் கொள்ள வேண்டும். முதன் முதலாகப் பதிவு செய்வதற்கும், ஒவ்வொரு ஆண்டும் புதுப் பித்துக் கொள்வதற்கும் மாநிலக் காரியாலயத்தார்களுக்கு உரிய கட்டணம் செலுத்த வேண்டும். இதன் முழுவிவரங்களும் மாநில அல்லது மாவட்ட அலுவலகத்தில் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

**மாநிலச் செயலாளர். தமிழ்நாட்டுப் பாரதச் சாரண சாரணிகள் சங்கம். மாநிலத் தலைமைநிலையம், வென்லக் பூங்கா, தெற்குக் கடற்கரைச்சாலை, திருவல்லிக்கேணி, சென்னை 5** என்பது மாநில அலுவலகத்தாரின் முகவரி ஆகும். மாவட்ட அலுவலகங்களின் முகவரியை அவர்களிடமிருந்து அறிந்து கொள்ளலாம்.

புதிதாகப் படை, அல்லது குருளையர்குழு, அல்லது திரிசாரணர் குழு அமைக்கும் பொழுது அந்தந்த நிலையங்கள் அல்லது பேட்டைப் பொதுமக்கள் மாவட்ட ஆணையாளரின் அனுமதி பெற்றே அமைக்கும் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். பயிற்சி அளிக்கும் ஏற்பாடு களையும், அவருடைய அனுமதியுடன் செய்ய வேண்டும். இரண்டு மூன்று வாரங்கள் அல்லது ஒரு மாதம் வரை மாவட்ட ஆணையாளர் தொகுப்பு செயல்படும் விதத்தைக் கவனித்து அதன் பிறகு அவருக்குத் தொகுப்பு நல்ல முறையில் நடைபெறும் என்ற நம்பிக்கை வந்ததும் பதிவுக்குரிய விண்ணப்பத்தைப் பற்றி அவர் முடிவு செய்வார்.

சாரணத் தொகுப்புகள் **தொகுப்பு அலுவலர்குழு** (Group Council) **தொகுப்பு பேரவை** (Group Committee) என்ற இரு குழுவினரால் நிர்வகிக்கப்படுகின்றன.

## தொகுப்பு அலுவலர் குழு

**இந்தக்** குழுவின் **அங்கத்தினர்கள்** (1) தொகுப்பு ஆசிரியர் (Group Leader (S) ), (2) குருளையாசிரியரும் உதவி ஆசிரியரும் (Pack Scouter and Asst.) (3) சாரண ஆசிரியரும் உதவியாசிரி யரும் (Troop Scouter and Asst) (4) திரிசாரண ஆசிரியரும் உதவி

யாசிரியரும் (Crew Scouter and Asst)—அதாவது நிர்வாக அதிகாரப் பத்திரம் (Warrant) பெற்றுள்ள தொகுப்பு அலுவலர்கள் அனைவரும் ஆவர்.

பயிற்சி முறையைக் கண்காணிப்பது இக்குழுவின் முக்கிய கடமை. குருளைக் குழு, சாரணர் படை, திரிசாரணர் குழு ஆகிய தொகுப்புப் பிரிவுகள் தங்கள் தங்கள் பயிற்சிகளையும் பயிற்சி முறைகளையும் உரியமுறையில் பின்பற்றி தங்கள் தங்கள் அலுவல்களைச் செவ்வனே செய்ய அவர்களுக்கு உதவியாக நின்று கண்காணித்தல் இந்தக் குழுவுக்குள்ள பொறுப்பு. குழுக்கூட்டங்களில் தொகுப்பு ஆசிரியர் தலைமை வகிப்பார். குருளையர் குழுவுக்கு, சாரணர் படைக்கு, திரிசாரணர் குழுவுக்கு அவசியமான பண வசதிகளையும் ஏனைய வசதிகளையும் திட்டப்படுத்தி இவர்கள் கூற, தொகுப்புப் பேரவை அவைகளுக்கு வழிவகை செய்யும்.

## தொகுப்புப் பேரவை

தொகுப்புப் பேரவை சாரணர்களின் பெற்றோர்களில் சிலரையும் பொதுமக்களையும் கொண்ட ஒரு குழு. இதற்கு தொகுப்பாசிரியர் குழுவைக் கூட்டுபவராகவும் செயலாளராகவும் இருப்பர். சாரண அலுவலர்களுள் அவர் ஒருவர் மட்டுமே இந்தக்குழுவில் அங்கம் வகிக்கலாம். இந்தக் குழு தொகுப்புக்குத் தேவையான எல்லா வசதிகளையும் அமைத்துத்தரவேண்டும். அதன் கடமைகள் :

1. தொகுப்பு அலுவலர்களை அதாவது ஆசிரியர், உதவியாசிரியர்களை நியமனம் செய்தல். ஏதாவது ஒரு இடம் காலியாயிற்றானால் அந்த இடத்துக்குப் பொருத்தமான இன்னொருவரைத் தேடி நியமனம் செய்வது ;

2. குருளைக்குழு, படை, திரிசாரணர் குழு ஆகிய எல்லாப் பிரிவுகளுக்கும் தேவையாக உள்ள பணவசதிகளை அளிப்பது — பண வசதிக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வது, பணம் திரட்டுதற்கு நாடகம் முதலியன நடத்துவது ;

3. குருளையர் குழு, படை, திரிசாரணர் குழு முதலியவை தங்கள் கூட்டங்களை நடத்தவும் பயிற்சிஅளிக்கவும் அவசியான இடவசதிகள் அமைத்துத் தருதல் ;

4. தொகுப்புக்குச் சொந்தமான பொருள்களைப் பாதுகாத்து அவைகளைப் பராமரித்தல் ;

5. தொகுப்பில் உள்ள குருஜெயர்கள், சாரணர்கள், திரி சாரணர்கள் பாசறைகள் நடத்தும் பொழுது அதற்கு வேண்டிய வசதிகளை அமைத்துத் தரல்;

6. பாசறை அமைக்கத் தேவையான வசதிகளைச் செய்தல்;

7. இவைகளும் இவைபோன்ற பிறவும் இந்த தொகுப்புப் பேரவைக்குரிய கடமைகள் ஆகும்.

இந்தப் பேரவையில் உள்ள ஒரு சில அங்கத்தினர்கள் வருடா வருடம் விலகிக் கொள்ள அவர்களுக்குப் பதில் பொருத்தமுள்ள வேறு அங்கத்தினர்களை நியமிக்கவேண்டும். இந்தப் பொறுப்பு சாதாரணமாக தொகுப்பு ஆசிரியரிடம் விடப்படுகின்றது.

தொகுப்பு அலுவலர்குழு பயிற்சிக்குப் பொறுப்பு. தொகுப்புப் பேரவை பயிற்சியொழிந்த ஏனைய காரியங்களுக்குப் பொறுப்பு. தொகுப்புப் பேரவை தொகுப்பைச் சமுதாயத்தோடு இணைக்கின்றது, சாரணப் பயிற்சியில் சமுதாயத்தினருக்கு அக்கறை உண்டாக வழி செய்கிறது.



# 22. படையும் படை ஏடுகளும்

சாரணப் படை நடத்தும் ஆசிரியர் படை ஆரம்பம் ஆகிற நாள் முதல் படை நிர்வாகத்துக்குரிய பல ஏடுகளை முறையாக வைத்து வர வேண்டும். அவைகளில் எழுதிவைக்க வேண்டிய விவரங்களை ஒழுங்காகவும் குறித்த காலத்திலும் எழுதி வைக்கவேண்டும். ஏடுகளை ஒழுங்காக ஆரம்பிப்பது எளிது. எழுதிவைக்க வேண்டிய விவரங்களை, எழுதி வைக்கவேண்டிய காலத்தில் உடனுக்குடன் எழுதிப் பூர்த்திசெய்வது சற்றுக்கடினம். எழுதி வைக்கவேண்டிய குறிப்புகளை ஒரு சிறிதும் காலம் தாழ்த்தாமல் எழுதிவைப்பது அல்லது ஏடுகளில் எழுதும்படி செய்வது சாரண ஆசிரியருக்குரிய முக்கிய கடமைகளில் ஒன்று.

சாரணப் படை ஒழுங்காக நடைபெறுவதற்கு அவசியமாக உள்ள ஏடுகள் பத்து. அவை

(1) பெயர்ப்பதிவு ஏடு (Admission Register),

(2) வருகைக்குறிப்பு ஏடு (Attendance Register),

(3) சாரணர்களின் முன்னேற்றக்குறிப்பு ஏடு (Progress Register),

(4) வரவு செலவுக்குறிப்பு ஏடு (Account Book),

(5) படைப் பண்டங்கள் குறிப்பு ஏடு (Stock Register),

(6) படைப்பயிற்சிக் கூட்ட நிகழ்ச்சிக் குறிப்பு ஏடு (Record of Troop Meetings)

(7) படை நிகழ்ச்சி சிறப்பு ஏடு (Troop Log),

(8) கண்ணிய மன்றக் குறிப்பு (Minutes of the Court of Honour),

(9) சாரணர்களின் பண்பாட்டுக் குறிப்பு (Confidential Notes on Individual Scouts),

(10) மாற்றல் சான்றிதழ் ஏடு (Transfer Certificate),

ஆக பத்தும் தனித்தனியாக இருப்பின் நல்லது. அப்படி இருப்பின் ஒவ்வொரு ஏடும் பல ஆண்டுகளுக்குப் பயன்படும். ஒரு புத்தகத்தில் பல ஏடுகளை எழுதி வைப்பது அவ்வளவு நல்லதல்ல. ஆயினும் வரவு செலவுக் குறிப்புடன் படைப்பண்டங்கள் குறிப்பை இணைத்துக் கொள்வது பொருத்தமாகக் காணப்படலாம். அதுபோலவே பெயர்ப் பதிவு ஏட்டையும் முன்னேற்றக் குறிப்பு ஏட்டையும் இணைத்துக் கொள்ளலாம். ஏனைய தனித் தனியாகவே அமைய வேண்டும்.

## 1. பெயர்ப்பதிவு ஏடு

இந்த ஏடு சாரணப் படையில் சேர்த்துக் கொள்ளப்படும் சிறுவனைப்பற்றிய விவரங்களைத் தரும். அந்தச் சிறுவனுடைய பெயர், வயது, பெற்றோர்கள், கல்வி கற்கும் பள்ளி முதலிய விவரங்கள் இங்குத் தரப்படும். வேறுபடையில் சாரணனாக இருந்து இந்தப் படைக்கு மாற்றல் பெற்றுள்ள சாரணனைப் பற்றியும் விவரங்கள் தரப்படும். அடியில் குறிப்பிட்டுள்ளபடி புத்தகத்தின் எதிர் பக்கங்களில் பத்திகள் அமைத்து இவை எழுதப்படலாம்.

| பதிவு எண் | பதிவுத் தேதி | பெயர் | பிறந்த ஆண்டு மாதம் தேதி | அவன் தந்தை அல்லது தாயார் அல்லது அவனைப் பராமரிப்பவர் பெயர் |
|---|---|---|---|---|
| | | | | |

| அவருடைய முகவரி | தொழில் | சிறுவன் கல்வி கற்கும் | | ஏனைய விவரங்கள் |
|---|---|---|---|---|
| | | பள்ளி | வகுப்பு | |
| | | | | |

குறிப்பு : ''ஏனைய விவரங்கள்'' என்ற பத்தியில் மாற்றல் பெற்றுச் சாரணப்படையில் சேர்த்துக்கொள்ளப் பட்டால் அதைப் பற்றிய முழுவிவரம் தரப்படவேண்டும். இந்தப்படையை விட்டு மாற்றல் பெற்று வேறு படைக்குச் செல்லநேரிட்டால் அதைப்பற்றிய விவரமும் தரப்படவேண்டும்.

''மாற்றல்,'' ''மாற்றல் சான்றிதழ்'' என்பவை சங்கவிதிகளில் விவரிக்கப்பட்டுள்ளன.

## 2. வருகைக் குறிப்பு ஏடு

படைப் பயிற்சிக் கூட்டங்களுக்குச் சாரணர்கள் ஒழுங்காக வந்து கலந்து கொள்கிருர்களா என்பதை அறிந்து கொள்வதற்குரிய ஏடு "வருகைக் குறிப்பு ஏடு" எனப்படும். இந்த ஏட்டில் சாரணர் களின் பெயர் அணிவாரியாகத் தரப்படும். குறிப்பிட்ட தேதிகளில் நடைபெற்ற பயிற்சிக்கு சாரணன் வந்ததும் வராததும் இந்த ஏட்டில் இருந்து தெரிந்து கொள்ளலாம்.

இந்த ஏட்டுக்குரிய புத்தகத்தில் பத்திகள் எப்படி அமைக்கப் படலாம் என்பது இங்கு விளக்கப்பட்டுள்ளது.

| அணி | அணி எண் | சாரணர்கள் பெயர் | கூட்டம் எண் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | கூட்டம் நடந்த தேதிகள் | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | | | |

## 3. சாரணர்கள் முன்னேற்றக் குறிப்பு ஏடு

சாரணர்கள் படிப்படியாக முன்னேறிச் செல்கிருர்களா என்பதை உணர்த்துகின்ற படைஏடு சாரணர்கள் முன்னேற்றக் குறிப்பு எனப் படும். இளம்பாதப் பயிற்சிக்கு ஒருசில பக்கங்களும், இரண்டாம் தரப் பயிற்சிக்கு ஒரு சில பக்கங்களும், முதல் தரப் பயிற்சிக்கு ஒரு சில பக்கங்களும், பல்திற விருதுக்கயிறுகளுக்கு ஒருசில பக்கங்களும், வனவியல் கயிற்றுக்கு ஒருசில பக்கங்களும், ஜனதிபதி சாரணப்

பயிற்சிக்கு ஒருசில பக்கங்களும் இந்த ஏட்டில் ஒதுக்கி வைக்கப்பட வேண்டும். அப்படி ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள பக்கங்களில் பத்திகள் அமைக்கப்பட வேண்டிய முறை இங்குதரப்பட்டுள்ளது.

## 1. இளம்பாதன்

| அணிப் பெயர் | அணி எண் | பெயர் | 1 சாரண நெறி வாக்குறுதி | 2 சமிக்ஞை வணக்கம் சின்னம் | 3 தேசியக் கொடி சாரணக் கொடி | 4 தேசிய கீதம் வந்தே மாதரம் | 5 ஆற்றுப் படைக் குறிகள் |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |

| 6 சாரண தண்டம் | 7 முடிச்சுகள் கட்டுதல் | 8 கயிற்றில் நுனிவரிதல் | 9 வெளியிட அனுபவம் | இளம்பாதச் சின்னம் சூட்டப்பெற்ற தேதி |
|---|---|---|---|---|
| | | | | |

புத்தகத்தின் எதிர் எதிர் பக்கங்களில் இப்பத்திகளை அமைத்துக் கொள்ளவேண்டும். இதற்காக 20 பக்கங்களை ஒதுக்கலாம். அந்தச் சாரணன் பெயருக்கு நேர் அவன் அந்தந்தப் பயிற்சிகளில் தேர்ச்சி பெற்ற தேதியைக் குறிப்பிடவேண்டும். சின்னம் சூட்டப்பெற்ற பிறகு சின்னம் சூட்டல் தேதி குறிப்பிடப்பட வேண்டும். பெயர்களை எழுதும் பொழுது அவைகள் அணி அடிப்படையில் எழுதப்பட வேண்டும்.

## 2. இரண்டாம்தரச் சாரணன்

| அணிப் பெயர் | அணி எண் | பெயர் | 1<br>முதல் உதவி | 2<br>சைகைப் பேச்சு | 3<br>ஊன்றிப் பார்த்தல் | 4<br>சாரண வேகம் | 5<br>ஆக்கல் கலை | 6<br>நெருப்பு மூட்டல் |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | |

| 7<br>சமையல் செய்தல் | 8<br>திசை அறிவு | 9<br>முற் காப்பு | 10<br>கவாத்து | 11<br>உழைப் புத் தானம் | 12<br>இயற்கை அறிவு | 13<br>முகவரி தெரிதல் | இரண்டாம் தரச் சாரணச் சின்னம் அளிக் கப்பட்ட தேதி |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |

புத்தகத்தின் எதிர் எதிர் பக்கங்களில் இப்பத்திகளை அமைத்துக் கொள்ளவேண்டும். இதற்காக 20 பக்கங்களை ஒதுக்கலாம். அந்தந் தச்சாரணன் பெயருக்கு நேர் அவன் பயிற்சிகளில் தேர்ச்சிபெற்ற தேதியைக் குறிப்பிட வேண்டும். சின்னம் அளிக்கப்பட்ட பிறகு அளிக்கப்பட்ட தேதியைக் குறிப்பிட வேண்டும். அணி அடிப் படையில் பெயர்கள் எழுதப்படவேண்டும்.

## 3. முதல்தரச் சாரணன்

| அணிப் பெயர் | அணி எண் | பெயர் | 1<br>நீச்சல் கலை | 2<br>ஆக்கல் கலை | 3<br>சைகைப் பேச்சு | 4<br>கண் மதிப்பு | 5<br>முதல் உதவி | 6<br>சமையல் கலை |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | |

| 7<br>தலபடக் கலை | 8<br>கோடரிக் கலை | 9<br>பயணக் கலை | 10<br>பாசறைக் கலை | 11<br>பயிற்சி அளிக்கும் ஆற்றல் | 12<br>சேமிப்புக் கலை | 13<br>பணி செய்தல் | முதல்தரச் சாரணச் சின்னம் அளிக்கப்பட்ட தேதி |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |

## 4. ஜனாதிபதி சாரணன்

புத்தகத்தின் எதிர் எதிர் பக்கங்களில் இப்பத்திகளை அமைத்துக் கொள்ளவேண்டும். இதற்காக 20 பக்கம் ஒதுக்கப்படலாம். அந்தந்தச் சாரணன் பெயருக்கு நேராக அவன் தேர்ச்சிபெற்ற தேதியைக் குறிப்பிடவேண்டும். பெயர்கள் அணி அடிப்படையில் எழுதப்பட வேண்டும்.

| வரிசை எண் | அணிப் பெயர் | முதல்தரச் சாரணன் பெயர் | 1 | 2 | |
|---|---|---|---|---|---|
| | | | முதல்தரச் சாரணன் ஆன தேதி | ஆறு தனிச் சின்னங்களும் அவைகளைப் பெற்ற தேதியும் | |
| | | | | சின்னம் | தேதி |
| | | | | | |

| 3 | | 4 | 5 | |
|---|---|---|---|---|
| சமூகத் தொண்டு 8 வகை தொண்டு | | ஆக்கல் திறன் அல்லது பல நாட்டுச் சாரணியம் | இதர மாநில அறிவு | ஜனாதிபதி சாரணச்சின்னம் அளிக்கப்பட்ட தேதி |
| தொண்டு | தேதி | | | |
| | | | | |

புத்தகத்தின் எதிர் எதிர் பக்கங்களில் இந்தப் பத்திகளை அமைத்துக் கொள்ள வேண்டும். இதற்காக 10 பக்கங்கள் ஒதுக்கப் படலாம். சாரணர்களை அவர்கள் முதல்தரச் சாரணர்களாகச் சின்னம் பெற்றதும் அவர்கள் இங்கு பெயரை வரிசையாகப் பதிவு செய்யவேண்டும். ஒவ்வொரு சாரணனுக்கும் 8 வரிகள் விட்டுவைத்து சின்னங்களைப் பெற்றதும் சின்னத்தின் பெயரையும் சின்னம் பெற்ற தேதியையும் '2' என்ற பத்தியில் குறிப்பிட வேண்டும். அது போலவே '3' என்ற பத்தியில் சாரணன் செய்த சமூகத்தொண்டையும் செய்த தேதியையும் குறிப்பிடவேண்டும். இது பேரேடாக வைக்கப்படவேண்டிய ஏடு. இது அணிவரிசையில் எழுதப்பட வேண்டியதில்லை.

## 5. பல்திறக்கயிறு

இது பேரேடாக வைக்கப்பட வேண்டிய ஏடு. சாரணப் படையில் உள்ள சாரணர்கள் இரண்டாம்தரச் சின்னம் பெற்றவுடன் அவர்கள் ஒவ்வொருவருக்கும் அடியில் தரப்பட்டிருப்பதுபோலப் பத்திகள் அமைத்துள்ள சில வரிகள் ஒதுக்கப்பட வேண்டும். இந்த ஏடு அணி வரிசையில் எழுதப்படத் தேவையில்லை.

| வரிசை எண் | அணி | பெயர் | முதல் தரப் பல்திறக்கயிறு | | இரண்டாம்தரப் பல்திறக் கயிறு | | மூன்றும்தரப் பல்திறக் கயிறு | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | எண் சின்னம் | அளிக்கப் பெற்ற தேதி | எண் சின்னம் | அளிக்கப் பெற்ற தேதி | எண் சின்னம் | அளிக்கப் பெற்ற தேதி |
| | | | 1 | | 1 | | 1 | |
| | | | 2 | | 2 | | 2 | |
| | | | 3 | | 3 | | 3 | |
| | | | 4 | | 4 | | 4 | |
| | | | 5 | | 5 | | 5 | |
| | | | 6 | | 6 | | 6 | |

எதிர் எதிர் பக்கங்களில் 10 பக்கங்கள் இதற்கு ஒதுக்கப்பட வேண்டும்.

## 6. வனக்கலைக்கயிறு

இதையும் முன்போல பேரேடாகவே வைக்கப்பட வேண்டும்.

| வரிசை எண் | அணி | பெயர் | முதல் சின்னம் எது என்பதும் பெற்ற தேதியும் | 2-வது சின்னம் இன்னது என்பதும் பெற்ற தேதியும் | 3-வது சின்மை் இன்னது என்பதும் பெற்ற தேதியும் | வனவியல் கயிறு அளிக்கப் பெற்ற தேதி |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | |

எதிர் எதிர் பக்கங்களில் இதற்கு 10 பக்கங்கள் ஒதுக்கலாம்.

# 4. வரவு செலவுக் குறிப்பு ஏடு

கடைகளில் விற்கப்படும் கணக்குப் புத்தகம் இதற்குப் பொருத்த மானது. நாமே பத்திகள் அமைப்பதானல் அவை அடியில் தரப் பட்டுள்ள மாதிரி இருக்க வேண்டும்.

| ஆண்டு மாதம் தேதி | விவரம் | ஆதரவு எண் (Voucher No.) | தொகை | | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|
| | | | ரூ | பை. | |
| | | | | | |

எதிர் எதிர் பக்கங்களில் இடதுகைப் பக்கமுள்ளதை வரவு களுக்கும் வலதுகைப் பக்கத்திலுள்ளதை செலவுகளுக்கென்றும் வரையறுத்துக் கொள்வது நல்லது. ,வரவுகளுக்கும் செலவுகளுக்கும் ஆதரவு அவசியம்.

மாதக்கடைசியில் வரவுகளையும் செலவுகளையும் கூட்டிப்பார்த்துக் கையிருப்புத் தொகையை அடுத்த மாதத்துக்குக் கொண்டுபோய் விடவேண்டும். அல்லது ஆண்டு முடிவுக்கே கொண்டுபோய் விடலாம்.

படை வரவு செலவுக் கணக்கு ஒரு உறுதியான புத்தகத்தில் ஒழுங்காக எழுதிவைக்க வேண்டும். பணம் வரவு வந்ததைப் பதிவு செய்யும்போது பணத்துடன் வந்த கடிதத்தை வந்த தொகைக்கு ஆதரவாகப் பத்திரப்படுத்தி வைக்கவேண்டும். அதுபோலவே பணம் செலவு செய்யும்போது செலவுக்கு கடையில் இருந்து வாங்கி யுள்ள ''பில்''களை ஆதரவாகப் பத்திரப்படுத்தி வைக்கவேண்டும்.

வரவு செலவுகளைப் பாகுபாடு செய்து பேரேடு எழுதிக் கொள்ளவேண்டும். இதற்காக தனிப்புத்தகம் இருந்தால் நல்லது. இல்லையானல் கணக்குப் புத்தகத்தின் கடைசிப் பக்கங்களில் அதை எழுதிவைக்கலாம்.

வரவுத் தொகைகள், தொகுப்பை அல்லது படையை நிர்வாகம் செய்யும் அதிகாரிகளிடமிருந்து வரலாம். வேறு இடங்களிலிருந்தும் வரலாம். வரவு வந்துள்ள பணத்தைப் பாதுகாத்து அதிகாரிகள் உத்தரவுப்படி செலவு செய்து உரிய முறையில் கணக்குவைப்பது சாரண ஆசிரியர் கடமை. வரவு செலவுகளுக்குரிய கடிதங்களையும், ''பில்''களையும் பத்திரமாகத் தொகுத்து வைப்பதும் மிக முக்கியமானது.

சாரணர்களிடமிருந்து கட்டணமாக அல்லது சேமிப்பாக பணங்கள் வரவு வரலாம். சாரண ஆசிரியர் இந்தப் பணங்களுக்குத் தனியாகக் கணக்கு வைத்துக் கொள்ளவேண்டும். இந்த வரவு செலவுக்கு கண்ணிய மன்றத்தார்கள் பொறுப்பு. அவர்கள் உத்தரவின் பேரில் பணங்கள் வசூல் செய்யப்படும். பணங்களை செலவு செய்வதும் கண்ணிய மன்றத்தார்கள் உத்தரவின் பேரிலேயே செய்யப்படும்.

படைக்குரிய வரவு செலவு கணக்கு ஆண்டுக்கு ஒரு முறை தணிக்கை செய்யப்பட வேண்டும். படைக்குரிய ஆண்டறிக்கையில் வரவு செலவு விவரங்கள் இடம் பெறவேண்டும்.

## 5. படைப் பண்டங்கள் குறிப்பு ஏடு

சாரணப் படை நடத்துவதற்குத் தேவைப்படும் பண்டங்கள் பல வகை. அவற்றுள் ஒருசில பயிற்சிப் பண்டங்கள், ஒருசில விளையாட்டுப் பண்டங்கள், ஒருசில பாசறைப் பண்டங்கள், ஒருசில படைக்கூடப் பண்டங்கள். இந்த நான்கு பிரிவில் அடங்காதவைகளும் இருக்கலாம்.

பயிற்சிப் பண்டங்களுள் — சாரண தண்டங்கள், முடிச்சுகள் கட்டும் கயிறுகள், கொடிக்கம்பம், கொடிகள், கொடிக் கயிறு, பாலங்கட்டும் மூங்கில் அல்லது கொம்புகள், வடங்கள், கயிறுகள், கப்பிகள் (Pulleys), கட்டுகளுக்கு உபயோகமாகும் சல்லிக்கயிறுகள், கோடரிகள், கத்திகள், சைகைப் பேச்சுக் குரிய கொடிகள், சைகைப் பேச்சு விளக்குகள், சைகைப் பேச்சுத் தந்திக் கட்டைகள், மண் வாரிகள், புல்வாரிகள், மண்வெட்டிகள், பிக்காசுகள், கட்டப்பாரைகள், திசை காட்டிகள், பந்தய நிறுத்தற் கடிகாரங்கள். கொல்லுருக்கள், நீர்மட்டங்கள், ரசமட்டங்கள், புத்தகங்கள் முதலியன அடங்கும்.

விளையாட்டுப் பண்டங்களுள்—பந்துகள், புளிய முத்துப்பைகள், இரவு விளையாட்டு முகமூடிகள் (Night Scouting Masks) எண்ணிக்கை அட்டைகள் (Number Cards). மாத்திரைக் கோல்கள் (Batons) முதலியன அடங்கும்.

பாசறைப் பண்டங்களுள்—கூடாரங்கள், சமையல் பாத்திரங்கள், லாந்தர் விளக்குகள், பெட்ரோமாக்ஸ் விளக்குகள், வாளிகள், தண்ணீர் அண்டாக்கள், தச்சுவேலை ஆயுதங்கள், மண்வெட்டி, கட்டப்பாரை, கூடைகள் முதலியன அடங்கும்.

படைக்கூடப் பண்டங்களுள்—மேஜைகள், நாற்காலிகள், பெஞ்சுகள், அலமாரிகள், விளக்குகள், விளம்பரப் பலகைகள் முதலியன அடங்கும்

படைக்குரிய பண்டங்கள் பணவசதிக்கேற்பச் சிறிது சிறிதாக வாங்கப்படும். அவைகள் வாங்கப்பட்ட உடன் படைப்பண்டங்கள் குறிப்பு ஏடு என்ற புத்தகத்தில் எழுதிவைக்க வேண்டும். பண்டங்களை வாங்கிய தேதி, அவற்றின் எண்ணிக்கை அல்லது அளவு, விலை, வாங்கிய இடம் முதலியவற்றை எழுதிவைப்பது அவசியம்.

ஆண்டுக்கு ஒருமுறை இந்த ஏட்டில் உள்ள பண்டங்கள் தணிக்கை செய்யப்படவேண்டும். அந்த நேரத்தில் பழுது அடைந்தவைகளைப் பழுதுபார்க்க ஏற்பாடு செய்யவேண்டும். பயனற்றவைகளை அதிகாரிகளின் அனுமதியோடு கணக்கிலிருந்து அகற்றிவிடலாம்.

படைப்பண்டங்கள் குறிப்பு அடியில் உள்ளபடி பத்திகள் அமைத்து எழுதப்படலாம்.

| ஆண்டு மாதம் தேதி | வரிசை எண் | பண்டங்களின் முழு விவரம் | எண்ணிக்கை அல்லது எடை | வாங்கின இடம் | விலை | | பொதுக் குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | ரு. | பை. | |
| | | | | | | | |

குறிப்பு: பண்டங்களை வாங்கின உடன் தேதிவாரியாக இந்தக் குறிப்பில் எழுதப்பட வேண்டும். வாங்கப்பட்ட பண்டம் பயிற்சிப் பண்டமாக இருந்தாலும் விளையாட்டுப் பண்டமாக இருந்தாலும் வேறு எந்த வகையாக இருந்தாலும் ஒன்றாக இந்த ஏட்டில் பதிவு செய்து விட்டுப் பின்னால் அவகாசமாக இனவாரி ஜாபிதா தயார் செய்து கொள்ளலாம்.

## 6. படைக்கூட்ட நிகழ்ச்சிக் குறிப்பு ஏடு

படையானது பயிற்சிக்காகக் கூடும்பொழுது நடைபெறும் நிகழ்ச்சிகளை வரிசையாக இந்த ஏட்டில் எழுதிவைக்க வேண்டும். அல்லது நிகழ்ச்சித் தாளையே ஒட்டி வைக்கலாம். ஒவ்வொரு கூட்டத்திலும் என்ன என்ன பயிற்சிகள் அளிக்கப்பட்டன, என்ன என்ன விளையாட்டுகள் விளையாடப்பட்டன என்பதைத் தெரிந்து கொள்ள இந்த ஏடு பயன்படும்.

பயிற்சிக்குள்ள கூட்டங்கள் தவிர பேடன்-பவல் பிறந்த நாள் விழா, குடியரசுதின விழா, சுதந்திரதின விழா, காந்தியடிகள் பிறந்தநாள் விழா, ஜவாஹர்லால் நேரு பிறந்தநாள் விழா, சரஸ்வதி பூஜை விழா, தீபாவளிப் பண்டிகை விழா, கிறிஸ்துமஸ் பண்டிகை விழா, ஈத்பண்டிகை விழா முதலிய விழாக்கள் நடைபெற்றால் அவை களின் நிகழ்ச்சி நிரலையும் இங்கு எழுதிவைக்கலாம், அல்லது ஒட்டி வைக்கலாம்.

## 7. படை நிகழ்ச்சிச் சிறப்பு ஏடு

படை நிகழ்ச்சிச் சிறப்பு ஏடு (Troop Log) என்பது மிகவும் முக்கியமான ஏடு. படையின் வாழ்க்கை வரலாற்றை உணர்த்து வது. படையை ஒட்டி அவ்வப்போது நடக்கும் சம்பவங்களைக் கால வரிசையில் எழுதப்படும் இப்புத்தகம் உறுதியானதும் நல்ல திண்ணமுள்ள காகிதத்தால் ஆக்கப்பட்டுள்ளதுமான அழகு வாய்ந்த புத்தகம் அவசியம். சாரணர்களுக்கே உரிய முறையில் இப் புத்தகத்துத்குரிய அட்டை அமைக்கப்பட வேண்டும். அட்டை வரை படங்களால் அலங்கரிக்கப்பட வேண்டும். புத்தகத்தின் பெயர் அட்டை மேல் மிக அழகாக எழுதப்பட வேண்டும். புத்தகத்தின் உள்ளிலும் எழுதப்பட்டுள்ள குறிப்புகள் அச்செழுத்துப் போன்ற அழகான எழுத்துக்களில் எழுதப்பட வேண்டும். இடைஇடையே வரைபடங்களும் (Sketches) நிழற் படங்களும் (Photographs) எழுதியுள்ள குறிப்புகளை அழகுபடுத்த வேண்டும்.

படை ஆரம்ப நாளன்று இப்படை வாழ்க்கை வரலாற்றுச் சிறப் பிதழும் ஆரம்பமாக வேண்டும். படையைப்பற்றிய முக்கிய விவரங் கள் இப்புத்தகத்தில் இருக்கும். படை எப்பொழுது எப்படி, ஆரம்பம் ஆயிற்று? எந்த எந்த அணிகளை வைத்து ஆரம்பம் ஆயிற்று? முதன் முதலாகச் சேர்ந்த சாரணர்கள் யாவர்? முதல் சாரண ஆசிரியர் யார்? முதல் சாரண அணித்தலைவர்கள் யாவர்? என்பது போன்ற விவரங்களை இந்தப் புத்தகத்தில் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அவ்வப்போது படைக்கு வருகை தந்து படைக்கு

ஊக்கம் அளித்து வந்து பெரியார்கள், சாரண ஆணையாளர்கள், அவர்கள் வருகை தந்தபொழுது எடுக்கப்பட்ட நிழற் படங்கள், அவ்வருகையின்போது நடந்த முக்கிய நிகழ்ச்சிகள் யாவை என்பன போன்ற குறிப்புகளும் இப்புத்தகத்தில் இடம்பெற வேண்டும். வருகை தந்த பெரியார்களிடம் இந்தப்படை வாழ்க்கை வரலாற்றுச் சிறப்பிதழைக் காண்பித்து அவர்களின் ஆசிபெறும் முறையில் அவர்களைக் கொண்டு இதில் ஏதாவது அறிவுரை வழங்கிக் கையெழுத்துச் செய்யக் கேட்டுக் கொள்வது இப்புத்தகத்தின் மதிப்பை அதிகப்படுத்தும்.

படையின் வாழ்க்கை வரலாற்றுச் சிறப்பிதழ் காலம் செல்லச் செல்ல படையின் வரலாற்றை வளர்த்துக் கொண்டு செல்லும். படையைப்பற்றிய முக்கிய நிகழ்ச்சிகளை அதில் காணலாம். புத்தகத்தைப் பார்க்கப் பார்க்க படையின் பழய நினைவுகள் பார்ப்பவர்கள் கண்முன் வரும். சுருக்கமாக, இது பார்க்க வேண்டிய புத்தகம். படிப்பதற்காகவும் அமைந்தது.

## 8. கண்ணிய மன்ற குறிப்புக் ஏடு

படையை நிர்வாகம் செய்வது கண்ணிய மன்றம். கண்ணிய மன்றக் கூட்டத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள் முக்கியம் வாய்ந்தவை. இந்த நிகழ்ச்சிகளைப்பற்றிய குறிப்புகள் உடனுக்குடன் எழுதப்பட்டு, அடுத்த கூட்டத்தில் படித்துக் காட்டி, குறிப்பு சரியாகவே எழுதப் பட்டுள்ளது என்று கூட்டத்தாரால் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும். அப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட குறிப்புகள் படையின் நிர்வாக முறைக்கு ஒரு சரியான சான்ருக அமையும்.

குறிப்புகளைக் கூட்டம் நடந்துகொண்டிருக்கும்போதே கூட்டத்தின் செயலாளர் அல்லது எழுத்தர் சுருக்கமாகக் குறித்து வைத்துக் கொள்ள வேண்டும். வீடு சென்றதும் வாய்ப்புள்ளபொழுது நிகழ்ச்சிக் குறிப்பை விரிவாகவும் எழுத வேண்டிய முறையிலும் எழுதி அதைச் சாரண ஆசிரியரிடம் காட்டவேண்டுக். அவர் சரிபார்த்து, பார்த்த தற்கு அடையாளமாகத் தன்கையெழுத்தைப் போடுவார். அடுத்த கூட்டத்தில் இந்தக் குறிப்பு படிக்கப்பட வேண்டும். கூட்டத்தில் உள்ளவர்கள் அதனை ஒப்புக் கொண்டபிறகு கூட்டத்துக்கு அன்று தலைமை வகிப்பவர், ‘‘கூட்டத்தில் படித்துக் காட்டப்பட்டு அவர்களால் சரி என்று ஒப்புக் கொள்ளப்பட்டது’’ என்று எழுதிக் கையெழுத்துச் செய்வார். எழுதினதில் திருத்தங்கள் தேவைப்பட்டால், என்ன திருத்தங்கள் செய்ய நேர்ந்ததோ அவைகளைக் கூறிப் பிறகு தலைவர் கையெழுத்துச் செய்வார்.

இத்தப் புத்தகம் மிக முக்கியமானது. இது ஆசிரியரிடம் ஒப்படைக்கப்பட்டு அவரிடம் இருப்பது மிகவும் அவசியம்.

## 9. சாரணர்களின் பண்பாட்டுக் குறிப்பு ஏடு

இது சாரண ஆசிரியர் எழுதி வைக்க வேண்டிய ஏடு. அவருடைய தனித்த பார்வைக்குரியது. பிறர் யாரிடமும் இதைக் காண்பிக்க வேண்டியதில்லை. இதில் ஒவ்வொரு சாரணனுக்கும் ஒரு பக்கம் ஒதுக்கி வைக்கப்படும். சாரண ஆசிரியர் ஒவ்வொரு சாரணனிடமும் காணப்படும் நல்ல பண்புகளையும், அதுபோலக் குறைபாடுகள் இருப்பின், அவற்றையும் குறித்து வைக்க வேண்டும். நல்ல பண்புகள் நாளுக்கு நாள் வளர வேண்டும் குறைபாடுகள் நாளுக்கு நாள் குறைந்து கடைசியில் அறவே அகல வேண்டும். சாரணர்களின் ஒழுக்கத்தையும் நல்ல பண்புகளையும் வளரச் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ள சாரண ஆசிரியருக்கு இந்தப் புத்தகம் ஒரு நல்ல நண்பனாக அமையும்.

அவசியம் வரும்பொழுது உதவி ஆசிரியர்கள் பார்வைக்கு இந்தப் புத்தகத்தைத் தரலாம். ஆசிரியர் படையை விட்டு நீங்கிக் கொள்ள வேண்டியதாகவரின் தன்னிடத்துக்கு வந்துள்ள ஆசிரியரிடம் இப்புத்தகத்தைக் கொடுக்க வேண்டும்.

இங்கு விவரிக்கப்பட்டுள்ள படை ஏடுகள் அனைத்தும் மிக முக்கியமானவை. படை முன்னேற்றத்துக்கு அவை இன்றியமையாதவை.



# 23. அணிப்பயிற்சியும் படைப் பயிற்சியும்

சிறுவர் சாரணியத்துக்கு அடிப்படை சாரண அணி. அணி வலுவாக இயங்கினால் படையும் வலுவாக இயங்கும். அணியை வலுவாக இயங்க வைக்கும் பொறுப்பு அதன் அணித் தலைவனுக்குரியது. அணியின் முன்னேற்றத்துக்காக அணித் தலைவன் முழு மனதுடன் உழைக்க வேண்டும். ஆசிரியரும் அவனுக்கு முழு ஆதரவு அளிக்க வேண்டும்.

அணியின் சார்பில் அணித் தலைவனுக்கு ஏற்படக்கூடிய கவலைகள் மிகப் பல. தன் அணி நல்ல முன்னேற்றம் அடைய வேண்டும். எவ்விதத்திலும் ஏனைய அணிகளுக்கு இளைத்ததாக இருக்கக்கூடாது. மற்ற அணிகளை விடத் திறனுடையதாகச் செய்ய வேண்டும் என்பது எப்பொழுதும் அணித்தலைவனுக்கு இருக்கக்கூடிய கவலை. அது தவிர வேறு கவலைகளும் இருக்கலாம். சென்ற படைப்பயிற்சிக் கூட்டத்தில் தன் மரங்கொத்தி அணி தான் எதிர்பார்த்த அளவு நன்மதிப்பு பெறவில்லை என்பது ஒரு கவலை. சைகைப் பேச்சுப் போட்டியில் சாரணன் இராமனும் சாரணன் கண்ணப்பனும் செய்தி அனுப்புவதில் நல்ல திறமையும் விரைவும் உடையவர்களாய்க் காணப்படினும், செய்தி வாங்குவதில் மிகுந்த திகைப்புக் காட்டினர். இதற்கு என்ன செய்ய வேண்டும் என்பது இன்னொரு கவலை. ஆக்கல் கலைப் போட்டியில் பங்கு கொண்ட சாரணர்கள் பால்வண்ணனும் கிருட்டிணனும் கட்டி முடித்த பாலத்தட்டி கண்ணுக்கு அழகாக அமைந்ததெனினும், ஆசிரியர் சோதனையின்போது இரண்டு இடத்தில் உள்ள கட்டுகள் நழுவி விட்டனவே. இதற்கு நாம் செய்யக் கூடியது என்ன என்பது மற்றொரு கவலை. சமையல் கலைப் போட்டியில் பங்கு கொண்ட சாரணர்கள் கோபியும், சீனுவும் சமையலை நன்றாய்ச் செய்தனராயினும் சமையல் செய்த இடத்தை முறைப்படி அமைக்கவில்லை. அவசியமுள்ள அமைப்புகளும் மிகச்சில என்ற காரணத்தினால் போதுமான மதிப்பெண் பெறத் தவறி விட்டார்கள். இவர்களைத் திருத்துவது எப்படி என்பது வேறு ஒரு கவலை. இப்படிப் பல கவலைகள் அணித் தலைவனைச் சிந்தனையில் ஆழ்த்தலாம். அதே நேரத்தில் தன் அணிக்குப் புது வகையான பயிற்சிகளையும் அளிக்க வேண்டுவதாக இருக்கலாம்.

அணி நிர்வாகம் என்பது இதுபோன்ற மேடு பள்ளங்களைச் சீர்ப் படுத்துவதே ஆகும். சாரணர்கள் கற்றுக் கொள்ளும் சாரணப் பயிற்சி தங்கள் அணிகளில் தங்கள் அணித் தலைவர்களிடமே முக்கியமாகக் கற்றுக்கொள்ள வேண்டும். உதவித் தலைவனிடமும் கற்றுக் கொள்ளலாம். இதற்கு உரிய வழி அணித்தலைவன் வாரம் ஒரு முறை அணியைக் கூட்டி அதற்கு நல்ல ஒழுங்கான முறையில் பயிற்சி அளிப்பதே ஆகும். அணித் தலைவனும் உதவித் தலைவனும் அணிக்குரிய பயிற்சியை அளித்தலும் வேண்டும்.

## அணிப் பயிற்சி

அணிப் பயிற்சிக்காக அணித்தலைவர்கள் தங்கள் அணிகளைத் தனியாக வாரம் ஒரு முறை கூட்டுவது அவசியம். அந்தக் கூட்டங்கள் $1\frac{1}{2}$ மணி நேரம் நடைபெற வேண்டும். அணித் தலைவனும் உதவித் தலைவனும் அணியில் உள்ள சாரணர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். தாம் கற்றுள்ள சாரணக் கலைகளை அவர்கள் தங்கள் சாரணர்களுக்குக் கற்பிக்க வேண்டும். சாரணர்களை அவர்கள் திறமைக்கும் அவர்கள் அடைந்துள்ள முன்னேற்றத்துக்கும் பொருந்தும் முறையில் இரண்டு மூன்று சிறு குழுக்களாகப் பிரித்து கற்பிக்கும் போது அந்தந்தக் குழுவுக்குத் தேவையான பாடங்களைக் கற்பிக்கவேண்டும். ''செய்து கற்றல்'' ''தனித் தனி கற்றல்'' என்ற கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும்.

அணிப்பயிற்சி அளிக்கும்போது ஆசிரியர் மேற்பார்வை அவசியமில்லை. முழுப் பொறுப்பையும் அணித் தலைவனுக்கே விட்டு விடுதல் அவசியம். ஆயின் கூட்டங்கள் ஆசிரியரின் தகவலுடன் கூட்டப் பட வேண்டும்.

அணிப் பயிற்சிக் கூட்டங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளை அணித்தலைவன் உறுதியான ஒரு ஏட்டில் குறித்துவைத்துக் கொள்வதவசியம். அதே ஏட்டில் தன் அணி படைக் கூட்டங்களில் கலந்து கொள்ளும்பொழுது நடைபெறும் நிகழ்ச்சிகளையும் குறித்து வைக்க வேண்டும். அணிப் பயிற்சிக் கூட்ட நிகழ்ச்சிகளையும் ஒன்றன் பின் ஒன்ருய்த் தேதி வாரியாக எழுதலாம்.

அணிகள் தனிக் கூட்டம் நடத்தித் தனிப் பயிற்சி பெற்றுக் கொள்வதுபோல தனிப் பாசறைகளை நடத்திப் பாசறைக் கலையிலும் தேர்ச்சி அடைதல் வேண்டும். இரண்டு மூன்று மாதத்துக்கு ஒரு முறை அணிப் பாசறைகள் நடைபெறலாம். ஆசிரியர் அனுமதியுடனும் அவருடைய ஒத்துழைப்புடனும் அத்தகைய பாசறைகள் நடைபெற வேண்டும். அணிப் பாசறைகள் இரண்டு நாள் அல்லது மூன்று நாள் வரை நீடிக்கலாம். ஆசிரியர் சென்று பாசறையைப்

பார்வை இட்டு ஒரு பிற்பகல் அல்லது ஒரு இரவு அங்கு தங்கும் வாய்ப்பு இருந்தால் மிக நல்லது.

## படைப் பயிற்சி

சிறுவர் சாரணீயத்தில் அடிப்படையாக உள்ளது சாரண அணியே. ஆயினும், சாரணப் படையில் உள்ள பல அணிகளும் ஒன்று கக்கூடி வந்து படை என்ற அடிப்படையில் பயிற்சி பெற்றுக்கொள்வது மிக மிக அவசியம். இப்படி உள்ள பொதுவான படைக்கூட்டங்கள் வாரம் ஒரு முறை நடைபெற வேண்டும். குறிப்பிட்ட ஒரு கிழமை குறிப்பிட்ட ஒரு நேரத்தில் கூட்டம் நடைபெற வேண்டும். கூடும் பொழுது குறித்த நேரம் தவருமல் கூட்டம் ஆரம்பம் ஆகவும் வேண்டும். இந்த வகையான பயிற்சிக் கூட்டங்கள் 1½ மணி நேரம் நீடிக்கலாம். ஆயின் 75 நிமிடங்களுக்குக் குறையக் கூடாது.

படைப் பயிற்சிகளுக்கு நிகழ்ச்சி நிரல் தயார் பண்ணுவது சாரண ஆசிரியர் பொறுப்பு.

நிகழ்ச்சிகள் படைச் சோதனை (Troop Inspection) உடன் ஆரம்பமாகும். பின் இறைவணக்கம், கொடி வணக்கம் நடைபெறும். இவைகளுக்கு 5 நிமிடம் தேவைப்படலாம்.

இவைகளுக்குப் பின் விளையாட்டுகளும் பயிற்சிகளும் வரும். முதலில் பொது விளையாட்டுகள், அப்புறம் கட்சிவிளையாட்டுகள், இவைகளுக்கு 10 அல்லது 15 நிமிடங்கள்.

அடுத்தபடியாக அணிப் பயிற்சிகள் (Patrol Projects) கற்றுள்ள சாரணக் கலைகளைப் பயன் படுத்தும் முறையில் நடைபெறும். அணிகள் செய்யவேண்டிய அலுவல்களைத் துண்டுக் காகிதத்தில் எழுதி அணித் தலைவன் தன் உதவித் தலைவனிடம் தந்து, அதில் குறிப்பிட்டுள்ள, சாரண அலுவல்களை அவன் மேற்பார்வையில் செய்து முடிக்க ஏற்பாடு செய்துவிட்டு, தான் தனக்குரிய தனிப்பட்ட பயிற்சிகளுக்காக ஆசிரியரிடம் வந்துவிட வேண்டும். இதற்காக 10 நிமிடம்.

இந்த அணிப்பயிற்சி அலுவல்கள் (Patrol Projects) ஒவ்வொரு அணிக்கும் ஒவ்வொரு மாதிரி இருக்கும். அணியில் உள்ள உதவித் தலைவனுக்கு இது அணி நிர்வாகப் பயிற்சியாக அமையும். சாரணக் கலையையும் உணர்த்தும்.

இதற்குப் பின் சில கட்சி விளையாட்டுகள் விளையாடலாம். கட்சிகளை அமைப்பது அணி அடிப்படையிலும் இருக்கலாம். அல்லது வேறு விதமாகவும் இருக்கலாம். இந்த விளையாட்டுக்களுக்காக 10 நிமிடம்.

இவை முடிந்ததும் அணிகளைத் தங்கள் தங்கள் கோணங்களுக்கு (Patrol Corners) அனுப்பி அணித் தலைவன் தான் விரும்பும் பயிற்சிகள் அளிக்க அனுமதி தரவேண்டும். இப்பொழுது அணித் தலைவர்கள் தங்கள் தங்கள் சாரணர்களின் முன்னேற்றத்துக்கு ஒத்த பயிற்சி அளிப்பார்கள். உதவித் தலைவனும் பயிற்சி அளிப்பதில் பங்கு கொள்ளவேண்டும். இதற்கு 10 நிமிடங்கள்.

இது முடிந்ததும் அணிகள் பயிற்சிப் போட்டி விளையாட்டுகளில் ஈடுபடலாம். அணியின் அடிப்படையில் விளையாடுவதால் அணிகளுக்கு சாரணக் கலையில் உள்ள முன்னேற்றத்தை ஆசிரியர் உணர்ந்து கொள்ள முடியும். இவைகளும் 10 நிமிடம்.

இது முடிந்ததும் ஆசிரியர் படையை ஒன்று சேர்த்து வைத்துக் கொண்டு பொதுவான ஒரு பொருள்பற்றிப் பயிற்சி அளிப்பார். அல்லது ஏதாவது முக்கியமான பொருள்பற்றிப் பேசுவார். பேடன்—பவலாரின் ''சிறுவர்கள் சாரணியம்'' (Scouting for Boys) என்னும் நூலில் உள்ள ''பாடித்தீப் பனுவல்'' கள் இதற்கு பயன்படும். 10 அல்லது 15 நிமிடங்கள் இதற்காக ஒதுக்கப்படலாம்.

இது முடிந்ததும் படைக் கூட்டத்தை ஆரம்பம் செய்த முறையிலேயே அதனை முடிக்க வேண்டும். படையில் உள்ள சாரணர்களுக்கு ஒரு சிறிது ஓய்வுதந்து தங்கள் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டு தங்கள் உடைகளைச் சரிபார்த்துக் கொண்டு அவர்கள் வீடு செல்லத் தயார் பண்ணிக்கொள்ள அவகாசம் கொடுக்கவேண்டும். அப்புறம் படைச்சோதனை (Troop Inspection) நடக்கும். அதற்குப் பிறகு அறிக்கைகள். அப்புறம் இறைவணக்கம், கொடி இறக்குதல் நடக்கும். அப்புறம் கூட்டத்தைக் கலைக்கலாம். இவைகளுக்கு 5 நிமிடம்.

ஆகவே நிகழ்ச்சி நிரல் அடியில் தந்துள்ள முறையில் அமையும்:

| | | | |
|---|---|---|---|
| (1) | கூட்ட ஆரம்பத்தில் படைச்சோதனை இறைவணக்கம் கொடிவணக்கம் | 5 | நிமிடம். |
| (2) | பொது விளையாட்டு, கட்சி விளையாட்டு | 15 | ,, |
| (3) | அணிப்பயிற்சிகள் | 10 | ,, |
| (4) | கட்சி விளையாட்டுகள் | 10 | ,, |
| (5) | கோணங்களில் பயிற்சி | 10 | ,, |
| (6) | போட்டி விளையாட்டுகள் | 10 | ,, |
| (7) | ஆசிரியரின் பனுவல் | 10 | ,, |
| (8) | படைச்சோதனை, அறிக்கைகள் இறை வணக்கம், கொடி இறக்குதல் | 5 | ,, |
| | | 75 | நிமிடம் |

குறிப்பு .—இங்கு விவரிக்கப் பட்டுள்ளது சாரணப் படைப்பயிற்சிக் கூட்டம். இதில் கவனிக்க வேண்டிய சில முக்கிய அம்சங்கள் இருக்கின்றன—அவை :

(1) ஆரம்பமும் முடிவும் சடங்கு போலச் சடங்கு உருவத்திலே அமைந்துள்ளன.

(2) பயிற்சிக் கூட்டங்களில் விளையாட்டுகள் முக்கிய இடம் பெறுகின்றன.

(3) பயிற்சியின் பல அம்சங்கள் விளையாட்டுருவத்தில் அமைந்துள்ளன.

(4) அணியின் முழுப்பொறுப்பு அணித் தலைவனுக்கே ஆனாலும் உதவித் தலைவனுக்கும் அணியைக் கண்காணிக்கும் வாய்ப்பு அளிக்கப்படுகிறது. அந்த நேரத்தில் அணித் தலைவர்களுக்கு புதிய பயிற்சிகள் அளிக்கப்படுகிறது.

(5) ஒவ்வொரு கூட்டத்திலும் சாரண ஆசிரியர் ஏதாவது ஒன்றைப்பற்றி எல்லோருக்கும் பொதுவான பயிற்சி அளிக்க வேண்டும் என்பன ஆகும்.

படைக் கூட்டங்களில் அளிக்கப்படும் சாரணக்கலைப் பயிற்சி சிறிது சிறிதாகச் சாரணச் சிறுவர்களை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்வதாய் இருத்தல் வேண்டும். முதல் உதவி, ஆக்கல் கலை, சைகைப் பேச்சு, தலப்படக்கலை போன்றவற்றைப் படிப்படியாகப் பல பயிற்சிப் பாகங்களாகப் பிரித்துக் கற்பிக்க வேண்டும். இவைகளைப் படிப்படியாகக் கற்பிப்பது அவசியம்.

இங்கு விவரிக்கப் பட்டுள்ள சாரணப் பயிற்சி கூட்டங்கள் தவிர சில சிறப்புப் பயிற்சிக் கூட்டங்களும் நடைபெறவேண்டும். அவைகள் நான்குவகை

(1) இயற்கையை ஆராய்தல் (Nature Ramble or Research)

(2) தடைகளைத் தாண்டல் (Outdoor Expedition)

(3) அணிவாரிப் போட்டிகள் (Patrol Competitions)

(4) அணிவாரிப் பயிற்சிகள் (Patrol Activities)

# 1. இயற்கையை ஆராய்தல்

சிறப்புப் படைப் பயிற்சியில் முதல் இடம் பெறுவது இயற்கையை ஆராய்தல் பயிற்சியே ஆகும். இயற்கை எழிலைக் கண்டு மகிழ்ச்சியடையும் நோக்கத்தோடும், மரம் செடி கொடி முதலிய தாவரங்களின் வாழ்க்கை முறையைத் தெரிந்துகொள்ளும் ஆர்வத்துடனும், பல வகையான பறவைகள், மிருகங்கள் முதலியவற்றை இயற்கைச் சூழ்நிலையில் கண்டு அவற்றின் வாழ்க்கை முறைகளைத் தெரிந்து கொள்ளும் நோக்கத்துடனும், எழில் நிறைந்த வெளி வட்டாரங்களுக்குச் சாரணப் படையை அழைத்துச் செல்வது சாரண ஆசிரியருக்குள்ள பொறுப்புக்களில் ஒன்று. அப்படி அழைத்துச் செல்வது சாரணப் பயிற்சி அளித்தற்குரிய பயிற்சிக் கூட்டங்களில் ஒரு வகையாகவும் அமையும்.

இத்தகைய இயற்கை ஆராய்ச்சிக்காக தொலைவில் உள்ள இடங்களுக்கு சாரணர்களை அழைத்துச் செல்லலாம். படைக் கூடங்களுக்கு அருகாமையிலும் குளங்கள் குட்டைகள் உள்ள இடங்களில், மரம் செடிகள் அடர்ந்து வளர்ந்துள்ள தோப்புகளில், பசும்புல் செழிப்பாக வளர்ந்துள்ள புல் தரைகளில், செடி கொடிகள் செழித்து வளர்ந்துள்ள புதர்களில் இயற்கையைப் பற்றிய பயனுள்ள பயிற்சி பெற வாய்ப்பு உள்ள இடங்களிலும் இயற்கை ஆராய்ச்சி செய்யலாம்.

நாம் செய்யக்கூடிய இயற்கை ஆராய்ச்சிகளுக்கு உதாரணமாகச் சிலவற்றை இங்கு கூறல் வேண்டும்.

(1) பாசறைத் திடலில் 25 அடி நீளம் 15 அடி அகலம் உள்ள தரையில் எத்தகைய இயற்கை உயிர் வகைகள் உள்ளன என்பதைக் கணக்கிடல், சேகரிக்கக் கூடிய உயிர் வகைகளை சேகரித்தல். அவைகளைப் பற்றி ஒரு சிறு அறிக்கை தயாரித்தல்.

(2) விறகுக்குப் பயன்படும் மரங்களுள் ஆறு மரங்களைப் பற்றி, அவை எப்படி எரிகின்றன, எந்த அளவுக்கு வெப்பம் தருகின்றன, சமையலுக்கு எவைகளை உபயோகிக்கலாம், எரியும் போது எவைகளால் இடைஞ்சல்கள் உண்டாகலாம் என்ற செயல் முறையில் ஆராய்ச்சி செய்தல்.

(3) அடர்ந்துள்ள தோப்பில் எத்தகைய பறவைகள் காணப்படுகின்றன, அவற்றுள் எந்தப் பறவைகள் கூடு கட்டி அங்கு குஞ்சுகளோடு இருக்கின்றன என்பதை ஆராய்தல். கூட்டையும் கூட்டில் இருக்கும் பறவைகளையும் குஞ்சுகளையும் முட்டைகளையும் அவைகளுக்குத் தொந்தரவு ஏற்படாமல் பார்வை இடுதல்.

(4) படைக் கூடத்துக்கு அருகில் அல்லது சாரணர்கள் கல்வி பயிலும் பள்ளிக்கு அருகாமையில் உள்ள ஊருணியில் அல்லது சிறு

குளத்தில் எத்தகைய செடி கொடி வகைகள், உயிர் வகைகள் உள்ளன என்பதை ஆராய்தல், நீர் வாழ்வனவற்றையும் செடி கொடிகளையும் இனம் தெரிந்து கூறல், சேகரிக்கக் கூடியவற்றைச் சேகரித்தல்.

(5) பல மாதிரியான ''காளான்'' அல்லது ''நாய்க்குடை'' என்பதை, வெட்டுண்ட அடி மரத்தில் முளைத்துள்ள செடி, பிறிதொரு மரத்தில் தொத்திக் கொண்டுள்ள செடி, மருந்துக்குரிய மூலிகைகள், நீரில் வாழ்கின்ற செடிகள், கொடிகள், ''பெரண்'' (Ferns) ஆகியவற்றைச் சேகரித்தல், அவைகளைப் பற்றிக் குறிப்பெழுதல், அவைகளை காட்சிக்காக ஒழுங்கு படுத்தல்.

(6) காட்டுப் பூக்களைச் சேகரித்தல், காட்டுப் பூஞ்செடிகளை சேகரித்தல், அவைகளைக் காட்சிக்காக ஒழுங்கு படுத்திவைத்தல்.

இந்த மாதிரியான ஆராய்ச்சிகளிலும் சாரண அலுவல்களிலும் நம் சாரணர்களை ஈடுபட வைப்பது நல்ல பயன் தரும்.

## 2. தடைகளைத் தாண்டல்

தான் கற்றுக்கொண்டுள்ள சாரணக் கலைகளை ஏட்டுச்சுரைக் காயாக விட்டுவிடாமல் அனுபவத்தில் அவற்றைப்பயன் படுத்துவது தடைகளைத் தாண்டல் பயிற்சியின் நோக்கமாகும். செய்யமுடியாது என்று தோன்றக்கூடிய சில சாரண அலுவல்களைச் சாரணர்களுக்குத் தந்து அவற்றை எப்படிச் செயல் படுத்தலாம் என்று சாரணர்களைச் சிந்திக்க வைப்பது இந்தப் பயிற்சியின் நோக்கம்.

இப்படியான பயிற்சிகளுக்கு இரண்டு மணி நேரம் தேவைப் படலாம். இந்தப் பயிற்சியைப் போட்டி முறையில் நடத்தவேண்டும். எத்தனை சாரண அணிகள் சாரணப் படையில் உள்ளனவோ அத்தனை அலுவல் திடல்கள் (Working Bases) அமைத்துக்கொண்டு ஒவ்வொரு திடலிலும் என்ன என்ன சாரண அலுவல் செய்யப்பட வேண்டும் என்று முடிவு செய்து கொள்ள வேண்டும்.

அலுவல் திடல்கள் ஒன்றில் இருந்து மற்றொன்று 100 அல்லது 150 மீட்டர் தொலைவில் இருக்க வேண்டும். ஒரு அலுவல் திடலில் நடைபெறுவனவற்றை இன்னொரு திடலிலிருந்து பார்க்க முடியாமல் இருக்க வேண்டும். ஒவ்வொரு திடலில் நடைபெற இருக்கும் சாரண அலுவல்களும் 20 நிமிட நேரத்தில் முடிவடையக் கூடியனவாயிருக்க வேண்டும்.

தடைகளைத் தாண்டல் பயிற்சிப் போட்டி முறையிலே நடத்தப் படும். பயிற்சி நான்கு அலுவல் திடல் இருந்தால் நான்கு போட்டி நடுவர்கள் வேண்டும். பக்கத்துக் குழுக்களிலிருந்து திரிசாரணர் களின் உதவி பெறலாம். அல்லது வேறு சாரண ஆசிரியர்களின் உதவி பெறலாம்.

போட்டியைப் பற்றிய விவரங்களடங்கிய இரண்டு சீட்டுகள் தயார் பண்ண வேண்டும். அவைகளில் ஒன்று நடுவர்களுக்காகவும் மற்றையது அணித்தலைவர்களுக்காகவும் இருக்க வேண்டும். இந்தச் சீட்டுகளை வரைய வேண்டிய முறை இங்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

(1) நடுவர்களுக்கு கொடுக்க வேண்டிய சீட்டு

| தடைகளைத் தாண்டல் பயிற்சி — தேதி | |
|---|---|
| **தடைகள்**<br>(1) சதுப்பு நிலம் தாண்டல்<br>(2) ஊர்வலம் பார்த்தல்<br>(3) ஆறு தாண்டல்<br>(4) பெருவெள்ளம்—<br>எச்சரிக்கை | **திடல்கள்**<br>(1) கோயிலுக்குப் பின்புறம்<br>(2) தெருவாசலை ஒட்டி<br>(3) கிணற்றுக்கருகில்<br>(4) மாமரத்துக்கருகில் |
| **சதுப்பு நிலம்**<br>3-10 மான் அணி<br>3-30 கரடி அணி<br>3-50 மீன்கொத்தி அணி<br>4-10 புலி அணி | **ஊர்வலம்**<br>3-10 கரடி அணி<br>3-30 மீன்கொத்தி அணி<br>3-50 புலி அணி<br>4-10 மான் அணி |
| **ஆறு தாண்டல்**<br>3-10 மீன்கொத்தி அணி<br>3-30 புலி அணி<br>3-50 மான் அணி<br>4-10 கரடி அணி | **பெருவெள்ளம்**<br>3-10 புலி அணி<br>3-30 மான் அணி<br>3-50 கரடி அணி<br>4-10 மீன்கொத்தி அணி |

(2) அணித்தலைவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய சீட்டு.

தடைகளைத் தாண்டல் பயிற்சி

மீன் கொத்தி அணி — தேதி

| தடை | திடல் | செல்ல வேண்டிய வரிசை | செல்ல வேண்டிய நேரம் | மதிப் பெண் | நடுவர் கை எழுத்து |
|---|---|---|---|---|---|
| 1. சதுப்பு நிலம் தாண்டல் | கோயிலுக்குப் பின்புறம் | 3 | 3-50 | | |
| 2. ஊர்வலம் பார்த்தல் | தெரு வாசலை ஒட்டி | 2 | 3-30 | | |
| 3. ஆறு தாண்டல் | கிணற்றுக்கு அருகில் | 1 | 3-10 | | |
| 4. பெரு வெள்ளம் எச்சரிக்கை | மாமரத்துக்கு அருகில் | 4 | 4-10 | | |

இதுபோல ஒவ்வொரு அணிக்கும் அதற்குரிய வரிசையும் நேரமும் குறிப்பிட்ட சீட்டு ஒன்று கொடுக்கப்பட வேண்டும்.

பயிற்சிக்கு அரைமணி நேரத்துக்குமுன் போட்டி நடுவர்களையும் அணித்தலைவர்களையும் ஒரு இடத்தில் கூடச்செய்து போட்டி விவரங்களை அவர்களுக்குத் தெளிவாக விளக்க வேண்டும்.

## பயிற்சிகளுக்கு விளக்கம்

1. **சதுப்பு நிலம் தாண்டல்:** இது தண்ணீர் தேங்கியுள்ள சதுப்பு நிலம். இதன் அகலத்தைக் குறிக்க கயிறு கட்டப்பட்டிருக்கிறது. அணியில் உள்ள சாரணர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சாமான்களுடன் இதைத் தாண்டி அக்கரை செல்ல வேண்டும். நிலத்தை யாரும் மிதிக்கக் கூடாது. கரையில் தயாராக வைத்துள்ள கருவிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். [குறிப்பு : கரையில் 12 அடி மூங்கிலால் கட்டப்பட்ட கடத்துப்பொறி (Scout Transporter) அதை இயக்குதற்குரிய நீளக்கயிறு, அதைத் தூக்கி நிறுத்துவதற்கு தூக்கல் பொறி (Gadget for lifting) ஆகியவை வைக்கப்பட வேண்டும்.]

2. **ஊர்வலம் பார்த்தல் :** இரண்டு வயோதிகர்கள் பெரிய ஊர்வலம் ஒன்றைப் பார்க்க ஆசையோடு வந்துள்ளனர். மிகப் பிந்தி வந்த இவர்களுக்கு வசதியான இடம் கிடைக்கவில்லை. ஊர்வலம் பார்ப்பதற்காக 3 மீட்டர் உயரத்தில் உறுதியான ஒரு அமைப்புத் தயார் பண்ணி அவர்களை அதில் ஏற வைக்க வேண்டும். இங்கு வைக்கப்பட்டுள்ள கொம்புகளையும் கயிறுகளையும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

3. **ஆறு தாண்டல்:** இந்த ஆற்றில் மனிதர்கள் இறங்கக் கூடாது. ஆற்றில் முதலைகள் மிகுதியாக உள்ளன. ஆற்றின் கரையில் வைக்கப்பட்டுள்ள கயிற்றைப் பயன்படுத்தி அணியில் உள்ள சாரணர்கள் ஒவ்வொருவரும் அக்கரை சேர வேண்டும். அக்கரை சேர்ந்த பின் எதிர்க்கரையில் தரையில் நின்றபடியே கயிற்றை அவிழ்த்து நடுவரிடம் கொடுக்கவேண்டும்

குறிப்பு : ஆற்றின் இரு கரைகளும் கயிற்றினுல் குறிப்பிடப்பட்டுள்ளது.

4. **பெரு வெள்ள எச்சரிக்கை :** இந்த இடத்தில் இன்னும் 10 நிமிடங்களுக்குள் 3 மீட்டர் உயரத்திற்கு பெரு வெள்ளம் வந்து விடும் என்று அரசு எச்சரிக்கை விடுத்திருக்கிறது. 10 நிமிடமானதும் விபத்தில் காப்பு அளிக்கும் குழுவினர் நால்வர் இங்கு வருவார்கள்.

அவர்களுக்குத் தேநீர் கொடுக்க வேண்டும். வேண்டிய அளவு பால், சீனி, தேயிலை, இரண்டு தீக்குச்சுகள் நடுவரிடம் பெற்றுக் கொள்ளலாம்.

குறிப்பு : வீடுகளில் கூரை வேயப் பயன்படுத்தப்படும் இருப்புத்தகடு ஒன்று இங்கு வைக்கப்பட வேண்டும். தேவையான விறகு அணியில் உள்ளவர்கள் சேகரித்துக்கொள்ளவேண்டும்.

## பயிற்சிக்குள்ள விதிகள் :

1. அணிகள் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்டுள்ள அலுவல் திடலில் இருத்தல் வேண்டும். அங்கு தங்கள் சாரண அலுவலை முடித்துவிட்டு தங்களுக்குத் தரப்பட்ட பயிற்சிக் கருவிகளை முன் இருந்ததுபோல வைத்துவிட்டுக் காலதாமதமில்லாமல் அடுத்த திடலுக்குச் செல்லவேண்டும். அப்படி நான்கு திடல்களுக்கும் சென்று தாங்கள் செய்ய வேண்டிய அலுவல்களை முடிக்க வேண்டும்.

2. திடல் ஒவ்வொன்றிலும் கடைசியாக (நான்காவதாக) வரும் அணி அந்தத் திடலில் உள்ள அமைப்புகளைக் கலைத்துப் பயிற்சிக் கருவிகளை ஆசிரியரிடம் ஒப்படைக்க வேண்டும்.

3. பயிற்சிப் போட்டியின் முடிவுகளை 5-00 மணிக்கு ஆசிரியர் அறிவிப்பார்.

## 3. அணிவாரிப் போட்டிகள்

அணிவாரிப் போட்டிகள் இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை நடத்தலாம். போட்டிக்கு எல்லாச் சாரணக் கலையையும் பயன்படுத்தலாம். கூடாரம் அடித்தல், குடிசைகள் கட்டுதல், சமையல் செய்தல், சைகைப் பேச்சு, முதல் உதவி, பாலம் கட்டல், தலபடம் வரைதல், திசை காட்டும் கருவியின் உதவியால் ஒருவர் சென்றுள்ள பாதையைப் பின்பற்றல் போன்ற எல்லாச் சாரண அலுவலும் போட்டியில் இடம் பெறலாம். இது தவிர வேடிக்கையான சிலவற்றையும் போட்டிக்கு எடுத்துக் கொள்ளலாம். உதாரணமாக தீக்குச்சு இல்லாமல் தீ மூட்டுதல், பாத்திரங்கள் இல்லாமல் சமையல் செய்தல், செடி கொடிகளில் உள்ள இயற்கைச்சாறுகளைப் பயன் படுத்தி பல வண்ணப்படங்கள் வரைதல் முதலியன வேடிக்கை யாகவும் பயனுள்ளதாகவும் அமையும்.

ஒவ்வொரு போட்டிக்கும் ஒரு சில சாரண அலுவல்களைத் தேர்ந்துகொண்டு போட்டிக்குச் சில நாட்களுக்குமுன் அணிகளுக்கு அறிக்கை செய்தால் அணிகள் நன்ருக பயிற்சிபெற்று போட்டியில் கலந்து கொள்வார்கள்.

போட்டிகள் அணிகளுக்கு ஊக்கம் அளிக்கும் இயல்புடையன வாக இருக்கவேண்டும். ஒரு சில அணிகளுக்கு மட்டுமே வெற்றி தரும் போட்டிகள் ஏனைய அணிகளுக்கு மனச்சோர்வு தரக் கூடும். பொறாமையும் உண்டாகலாம். அதற்கு இடம் தராமல் போட்டிகளை மாற்றி அமைத்து எல்லோருக்கும் அவ்வப்போது வெற்றி கிடைக்கும் வழியைத் தேடிக்கொள்வது அவசியம்.

போட்டிகளால் ஒவ்வொரு நேரம் கெடுதியும் விளையக்கூடும். அணிகள் உணர்ச்சி வசப்பட்டு எப்படி நடந்துகொள்ள வேண்டுமோ அப்படி நடந்துக் கொள்ள முடியாதவர்களாய்க் காணப்படலாம். அப்படியான தருணங்களில் சாரண ஆசிரியர் அணிகளுக்கு நல்ல அறிவுரை வழங்கி அவர்களை நியாயமான, கண்ணியமான முறையில் நடந்து கொள்ளப் பழக்கவேண்டும்.

## 4. அணிவாரிப் பயிற்சிகள்

சாரண அணித்தலைவன் தன் அணியில் உள்ள சாரணர்களைத் தனியாக சந்தித்து சாரணக் கலைகளில் அவர்களுக்குப் பயிற்சி அளிப்பது அணிப்பயிற்சி எனப்படும். அணிவாரிப் பயிற்சிகள் என்பன படைப்பயிற்சிக் கூட்டங்களின் நடுவில் ஒருசில நிமிடங் களுக்கு, அல்லது முழுப்பொழுதுக்கும், சாரண ஆசிரியர் அணி களுக்கு தனித்தனி கட்டளைகள் தந்து அணிகள் அவற்றை நிறைவேற்றச் செய்வதாகும்.

அணிகள் அனைத்துக்கும் ஒரே சாரண அலுவலைத்தந்து அவைகள் செயலையும் செயல் முறையையும் மதிப்பிடுதல் போட்டியாகும். அணி களுக்கு வெவ்வேறு சாரண அலுவல்களைத் தந்து அவைகள் தங்கள் தங்களுக்குத் தரப்பட்டுள்ள வேலையை எவ்வாறு செய்து முடிக்கின்றன என்பதை மதிப்பிடுவது அணிவாரிப் பயிற்சியாகும். செய்வ தெல்லாவற்றையும் போட்டியாகவே செய்வது நல்லதல்ல. செயல் திறத்தை வளர்க்கும் முறையில் செய்யப்படுவனவற்றைச் செய்ய வேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காகவே அவ்வப்போது அணிவாரிப் பயிற்சிகள் கையாளப்படுகின்றன.

சாரணக் கலையில் முன்னேற்றம் அளிக்கும் நோக்கத்தோடு அணிப்பயிற்சியும் படைப்பயிற்சியும் நடைபெற வேண்டும். அணிப் பயிற்சிகள் வாரத்துக்கு ஒருமுறை, படைப் பயிற்சிகள் வாரத்துக்கு ஒருமுறை, என்று சாரணர்கள் வாரத்துக்கு இரண்டு முறை சாரணப் பயிற்சி பெறுவது நன்மைதரும்; சாரணர்களும் சாரணக்கலை பயில் வதில் முன்னேற்றம் அடைவார்கள்.

சாரணப்பயிற்சி, படை என்ற அமைப்பில் வாரம் ஒரு முறையும், அணி என்ற அமைப்பில் வாரம் ஒரு முறையும் நடைபெறவேண்டும். இவை முறையே படைப்பயிற்சியாகவும் அணிப்பயிற்சியாகவும் வழங்கும்.

அணிப்பயிற்சிக்கு பொறுப்பு அணித்தலைவன். அணிப்பயிற்சி அணிக்கு வசதியாக உள்ள ஒரு கிழமையில் வசதி உள்ள ஒரு இடத்தில் நடைபெறும். அணியில் உள்ள சாரணர்களின் முன்னேற்றத்திற்கேற்ப இந்த பயிற்சிக்குரிய நிகழ்ச்சி நிரல் வரையப் படவேண்டும். அதை வரைகிற பொறுப்பு அணித் தலைவனுடையது. சாரணர்கள் ஒவ்வொருவரும் படிப்படியாக இளம்பாதன், இரண்டாந் தரச் சாரணன், முதல்தரச் சாரணன் என்று முன்னேற வேண்டிய நோக்கத்துடன் இந்நிகழ்ச்சி நிரல்கள் வாராவாரம் தயார் செய்யப்பட வேண்டும். சாரண ஆசிரியரின் உதவி அணித் தலைவனுக்கு இருப்பது அவசியம்.

சாரணர்கள் கற்கவேண்டிய சாரணக் கலைகள் எல்லாவற்றையும் கற்றுத் தேறவேண்டியது அணிப்பயிற்சியின்போது. அங்கு கற்பிக்கப்படவேண்டியவைகளை ஆசிரியர் அணித்தலைவர்களுக்கு முன்னதாகவே கற்றுத்தரவேண்டும். இதற்குரிய வாய்ப்புகளை சாரண ஆசிரியர் தானுகவே அமைத்துக் கொள்ளவேண்டும்.

சாரணர்கள் கற்றவைகளைச் சரிவரக் கற்றுள்ளார்களா என்று ஆசிரியர் சரிபார்க்கும் இடம் படைப்பயிற்சிக் கூட்டம்.

படைப்பயிற்சிக் கூட்டங்களுக்குரிய மாதிரி நிகழ்ச்சி நிரல்கள் ஒரு சில இங்கு தரப்பட்டுள்ளன. நிகழ்ச்சிநிரல்களுக்குப் பொறுப்பு உடையவர் சாரண ஆசிரியர். அவர் முன்னதாகவே இவைகளைத் தயாரித்து வைத்துக்கொண்டு பயிற்சிக் கூட்டங்களை உதவி யாசிரியரின் ஒத்துழைப்போடு நடத்தவேண்டும்.

குறித்த நேரத்தில் நிமிடம் தவருது கூட்டத்தைக் கூட்டுவதும், குறித்த நேரத்தில் கூட்டத்தை முடிப்பதும் மிகமிக அவசியம்.

கூட்டம் சில சடங்குகளுடன் ஆரம்பமாகவேண்டும். அது போலவே சில சடங்குகளுடன் முடிவாகவேண்டும்.

கூட்ட ஆரம்பத்தில் விளையாடும் விளையாட்டுக்கள் சாரணர் களுக்கு உற்சாகமளித்துப் பின்னுல் கற்கவேண்டியவைகளைப் பிரிய மாகக் கற்றுக்கொள்ளச் செய்யும் இயல்பு பொருந்தியவை. போட்டிகள் சாரணக் கலையின் நுட்பங்களை மறந்துவிடாமலிருக்க வாய்ப்பு அளிக்கும். ஒவ்வொரு நாளும் ஒரு சில நிமிடங்களுக்குச் சாரண ஆசிரியர் ஏதாவது பொருள்பற்றிப் பனுவல் இழைத்து சாரணர்களைச் சிந்திக்க வைப்பதும் மிக அவசியமான பயிற்சி.

## படைப்பயிற்சி

### மாதிரி நிகழ்ச்சி நிரல்—1.

| | | |
|---|---|---|
| 1. | கூட்டம் ஆரம்பச் சடங்குகள்<br>படை குதிரைலாட வட்ட அமைப்பு.<br>இறை வணக்கம்.<br>கொடி வணக்கம்.<br>படைச் சோதனை. | 5 நிமிடங்கள். |
| 2. | படை விளையாட்டுகள், கட்சி விளையாட்டுகள்<br>திருடனும் காவலனும்.<br>திரி விளையாட்டு.<br>குளத்துக்குள்—கரைமேல்.<br>கைக்குட்டையைத் தூக்குதல். | 15 ,, |
| 3. | பயிற்சி விளையாட்டுகள், போட்டி<br>விளையாட்டு வரிசை அமைப்பு.<br>முடிச்சு வரிசை.<br>தோலுரிக்கும் பாம்பு.<br>தவளையும் முயலும். | 15 ,, |
| 4. | அணித் தலைவனுக்குத் தனிப்பயிற்சி<br>அதே நேரம் உதவித் தலைவனுக்கு<br>அணிப் பொறுப்புப் பயிற்சி. | 15 நிமிடங்கள். |
| 5. | அணிகளுக்கு தங்கள் தங்கள் கோணங்களில்<br>தனிப்பயிற்சி. | 15 ,, |
| 6. | அணிப்போட்டிகள். | 15 ,, |
| 7. | ஆசிரியர் பனுவல். | 5 ,, |
| 8. | கூட்ட முடிவுச் சடங்குகள். | 5 ,, |
| | | 90 ,, |

குறிப்பு

**அணித் தலைவனுக்குத் தனிப்பயிற்சி:** நேர்க் கட்டு, சதுரக் கட்டு, குறுக்குக் கட்டு.

**உதவித் தலைவர்களுக்கு**—தனித்தனியான செயல் குறிப்பு:

1. நோயுற்றவர்களை மருத்துவமனைக்கு எடுத்துச் செல்ல அவசரத் தொட்டில் (Stretcher) அமைத்து அதில் அணியில் உள்ள சாரணர்கள் ஒவ்வொருவரையும் 30 தப்படி தொலைவு எடுத்துச்செல்ல வேண்டும். இதற்கு 15 நிமிடங்கள்.

2. படுக்கை விரிப்புகளை பயன்படுத்தி ஒரு போலிக் கூடாரம் அமைத்து, கூடார வாழ்க்கைக்குத் தேவைப்படும் சில வசதிகளையும் அமைக்க. இதற்கு 15 நிமிடங்கள்.

3. அணியில் உள்ள உங்கள் கயிறுகளை நன்ருக இணைத்து அப்படி அமைந்துள்ள கயிற்றின் ஒரு நுனியைத் தூணில் அல்லது மரத்தைச் சுற்றிக் கட்டிவைத்துப் பின்னர் நீங்கள் எல்லோரும் மறு நுனியை முழுபலத்துடன் இழுத்துப் பார்த்துவிட்டு, கயிறுகளை அவிழ்த்து தனித்தனியாக்க வேண்டும். கயிறுகளை அழகாகச் சுருள் சுருளாகக் கட்டிவைக்கவேண்டும். இதற்கு 15 நிமிடங்கள்.

4. அணியில் உள்ளோர் தங்கள் மேல் சட்டைகளை உலரப் போடத் தரையில் இருந்து 4 அடி உயரத்தில் ஒரு கயிற்றுக்கொடி அமைக்க வேண்டும். இது உறுதியாக இருக்கவேண்டும். இதற்கு 15 நிமிடங்கள்.

செயல் குறிப்பு (மாதிரி)

**சிறுத்தை அணி—அணித் தலைவனுக்கு:** இப்பொழுது உன்னிடம் தரப்படும் செயல் குறிப்புச் சீட்டை உன் உதவித் தலைவனிடம் கொடுத்து அதில் கண்டிருக்கும் ஆணையை நிறைவேற்ற அவனுக்குக் கட்டளை தந்துவிட்டு நீ உதவி ஆசிரியரிடம் உனக்குள்ள தனிப்பயிற்சி பெறச் செல்லவேண்டும்.

அணிகளுக்கு தங்கள் தங்கள் கோணங்களில் தனிப்பயிற்சி என்பது அணித் தலைவனல் அல்லது அவன் மேற்பார்வையில் நடைபெறும் பயிற்சி.

அந்தந்த அணியிலுள்ள சாரணர்களின் முன்னேற்றத்திற்கிணங்க, அவர்களை குழுக்களாக பிரித்துக்கொண்டு, அவர்களுக்குத் தானும் தன் உதவித் தலைவனும் பயிற்சி அளிக்கலாம். இதற்குரிய நிகழ்ச்சி நிரல் அணித்தலைவனுடைய பொறுப்பு.

அணிப்போட்டிகள் என்பவை அணிகளின் முன்னேற்றத்திற்கு இணங்க அமைக்கவேண்டுவன. இதை சாரண ஆசிரியர் முன்னதாக முடிவு செய்யவேண்டும்.

சாரண நெறிக்குள்ள கதைகளை அமைத்துப் பின் நடித்துக் காண்பிப்பது, முடிச்சுகளைக் கட்டச்சொல்வது, ஆற்றுப்படைக் குறிகளைப் பயன்படுத்துவது முதலியவற்றை ஒட்டி போட்டிகள் நடத்தலாம்.

**ஆசிரியர் பனுவல்:** ஒவ்வொரு நாளும் ஏதாவது பொருள் பற்றி சாரண ஆசிரியர் சிறிது பயிற்சி அளிக்கவேண்டும். அல்லது அறிவுரை நிகழ்த்தவேண்டும்.

இதை முன்கூட்டியே தயார் செய்து கொள்ளவேண்டும். சொல்ல வேண்டியதைச் சுருங்கச் சொல்வது அவசியம்.

பொதுவாக உள்ள சாரணக் கலைகளில் இரண்டொன்றை செயல் முறையில் செய்து காண்பிப்பதும் பொருத்தமுடையது.

**மாதிரி நிகழ்ச்சி நிரல்—2.**

| | | |
|---|---|---|
| 1. | ஆரம்பச் சடங்குகள் | 5 நிமிடங்கள். |
| 2. | படை விளையாட்டுக்கள், கட்சி விளையாட்டுக்கள் | 15 ,, |
| | கண்ணிழந்த சிலந்தி.<br>பார்வை இழந்த காவலன்.<br>சாரணச் சங்கிலி.<br>சிங்கமும் கூண்டும். | |
| 3. | பயிற்சி விளையாட்டுகள் | 15 ,, |
| | எட்டுத் திசைகள் — போட்டி<br>தீ அணைப்போர் தூக்கு ,,<br>கை இருக்கைகள் ,,<br>மேற்கட்டுகள் ,, | |
| 4. | அணித் தலைவனுக்குத் தனிப் பயிற்சியும், உதவித் தலைவனுக்கு அணி நிர்வாகப் பொறுப்புப் பயிற்சியும். | 15 நிமிடங்கள். |
| 5. | அணிகள் போட்டி விளையாட்டு. | 15 ,, |
| | கிம் விளையாட்டு.<br>ஐம்புலப் பயிற்சி.<br>தடம்பற்றல் கதைகள். | |
| 6. | அணிக் கோணப்பயிற்சி. | 15 ,, |
| 7. | ஆசிரியர் பனுவல். | 5 ,, |
| 8. | கூட்ட முடிவுச் சடங்குகள். | 5 ,, |
| | | 90 ,, |

குறிப்புகள்

**அணித் தலைவனுக்குத் தனிப்பயிற்சி:** கயிற்றில் நுனி திணிப்பு—ஆசிரியர்.

**உதவித் தலைவனுக்கு:** 1. வானத்தில் காணப்படுவதுபோல துருவ நட்சத்திரத்தையும், சப்தரிஷி மண்டலத்தையும் தரையில் கட்டுத்தறிகளால் அமைக்க. கொடுக்கப்பட்டிருக்கும் கயிற்றின் ஒரு

நுனி துருவனிலும் மறு நுனி சப்தரிஷிகளின் கடைசியிலும் கட்டப் பட்டிருக்கவேண்டும். கயிறு முழுவதும் பயன்படுத்த வேண்டும். இதற்கு 15 நிமிடங்கள்.

2. கிம் விளையாட்டை விளையாட இரண்டு புது முறைகளை கண்டுபிடித்து விளையாடிப்பார்க்கவேண்டும். இதற்கு 15 நிமிடங்கள்.

3. தொலைவில் உள்ள நண்பர்களோடு தொடர்புகொள்ள புதிய ஒரு சைகை முறை கண்டுபிடித்து அதைப் பயன்படுத்த 15 நிமிடங்கள்.

4. கொடிக்கம்பத்துக்கும் வடக்கு வாசலுக்கும் உள்ள தொலைவு, கால்பந்து களத்தில் கோலு(Goal)க்கு கோல் தொலைவு, பள்ளி முன் வராந்தா நீளம்—இவைகளை அணியில் உள்ள சாரணர்கள் பார்த்து மதிப்பிடவேண்டும். பிறகு நடந்து தப்படிகளாக கணக்கிட்டு, கடைசியாக உண்மை நீளத்தை அறிவிக்கவேண்டும். இதற்கு 15 நிமிடங்கள்.

### அணிக்கோணப் பயிற்சி

அந்தந்த அணியின் முன்னேற்றத்திற்கு ஏற்ப.

### மாதிரி நிகழ்ச்சி நிரல்—3.

| | | |
|---|---|---|
| 1. | ஆரம்பச் சடங்குகள் | 5 நிமிடங்கள். |
| 2. | படை விளையாட்டுக்கள்,<br>கட்சி விளையாட்டுக்கள்<br>''குறித்த எண்ணுள்ள சிறு குழு''<br>''இரண்டும் மூன்றும்''<br>''புலியும் ஆட்டுக்குட்டியும்''<br>''வணக்கம், நலமா?'' | 15 நிமிடங்கள். |
| 3. | பயிற்சி விளையாட்டுக்கள் — போட்டி<br>தல படம்.<br>கொடிக்கம்பம்.<br>கொடி அமைத்தல். | 15 ,, |
| 4. | அணிகளுக்கு அணிக்கோணங்களில் பயிற்சி | 15 ,, |
| 5. | கைத்திறன் பயிற்சி | 30 ,, |

1 மீட்டர், 3/4 மீட்டர் நீளம் உள்ள உருளைக் கட்டைகள், வேலை செய்ய ஆயுதங்கள், கயிறு, ஆணி போன்ற உபகரணங்கள் கொடுக்கப்பட்டு சாரணர்கள் வசதிப் பொருள்களைத் தயாரித்தல்.

| | | |
|---|---|---|
| 6. | ஆசிரியர் பனுவல் | 5 ,, |
| 7. | முடிவுச் சடங்குகள் | 5 ,, |
| | | 90 ,, |

## மாதிரி நிகழ்ச்சி நிரல்—4.

| | | |
|---|---|---|
| 1. | கூட்டு ஆரம்பச் சடங்குகள் | 5 நிமிடங்கள். |
| 2. | படை விளையாட்டுக்கள்; | |
| | கட்சி விளையாட்டுக்கள் | 15 ,, |

1. முக்கால் மீட்டர் நீளமுள்ள உருளைக் கட்டைகளையும், டென்னிஸ் பந்து அளவுள்ள துணிப்பந்தையும் பயன்படுத்தி "ஹாக்கி" விளையாட்டு. பந்தைக் கையால் தொடக்கூடாது. எதிர்க் கட்சி கோலு(Goal)க்குள் பந்து செல்லவேண்டும்.

2. பழைய துணி அல்லது பஞ்சடைக்கப்பட்ட கால்பந்து மேல் உறை பந்தாகவும் 30 அடி நீளமும் எட்டு அடி உயரத்தில் கட்டப் பட்டிருக்கும் கயிறு வலையாகவும் "வாலிபால்" விளையாடுவது.

| | | |
|---|---|---|
| 3. | பயிற்சி விளையாட்டுக்கள் | 15 நிமிடங்கள். |

சைகைப் பேச்சு — போட்டி.
முதல் உதவி — போட்டி.
முடிச்சுகள் கட்டுதல் — போட்டி.
போலிக் கூடாரம் அமைத்தல்—போட்டி.

| | | |
|---|---|---|
| 4. | ஆற்றுப்படை பயிற்சி | 30 நிமிடங்கள். |

முன்னதாக ஒரு அணி ஆற்றுப்படைக் குறிகள் அமைத்துச் செல்லவேண்டும். ஏனைய அணிகள் 10 நிமிடங்களுக்குப் பின் முதல் சென்ற அணியைப் பின்பற்றிச் சென்று அவர்களைப் பிடிக்க வேண்டும். ஆட்டம் முடிந்து திரும்புகையில் இயற்கையைப் பற்றி தெரிந்து கொள்ளும் முறையில் இலைகள், பூக்கள், காய்கள் முதலியன சேகரித்து அணிக்காட்சிச் சாலையில் வைத்தல்.

| | | |
|---|---|---|
| 5. | படைக்கூடம் அடைந்த பின் சாரண ஆசிரியரின் பனுவல். | 10 நிமிடங்கள். |
| 6. | அணிக்கோணங்களில் அணிப்பயிற்சி. | 10 ,, |
| 7. | முடிவுச் சடங்குகள். | 5 ,, |
| | | 90 ,, |

## மாதிரி நிகழ்ச்சி நிரல்—5.

| | | |
|---|---|---|
| 1. | கூட்ட ஆரம்பச் சடங்குகள் | 5 நிமிடங்கள் |
| 2. | படை விளையாட்டுகள், கட்சிவிளையாட்டுகள் | 15 ,, |
| | சடுகுடு—விளையாட்டு<br>கோ—விளையாட்டு | |
| 3. | அணிக்கோணங்களில் அணிப்பயிற்சி | 15 ,, |

அணித் தலைவன் பயிற்சி அளிக்க வேண்டும். அல்லது அவன் மேற்பார்வையில் நடக்க வேண்டும்.

இரண்டாந்தர சாரணனுக்குரிய சைகைப் பேச்சு, திசை அறிவு, திசைக் கருவியைப் பயன்படுத்தல், குறித்த திசையைப் பின்பற்றல், முதலுதவி.

4. அணிப்போட்டி — 15 ,,

சாரண உயர் நெறிகளை நடித்துக் காட்டல் — ஒவ்வொரு அணிக்கும் நெறியின் ஒரு பிரிவு — பேச்சு கூடாது.

5. கைத்திறப் பயிற்சி — 20 நிமிடங்கள்

தரப்பட்டுள்ள பொருள்களைப் பயன்படுத்திப் பாசறைச் சமையல் கூட வசதிப் பொருள்களை தயார் செய்தல். அணியிலுள்ள ஒவ்வொருவரும் இதில் பங்குகொள்ள வேண்டும்.

6. ஓவியம் வரைதல் — 10 நிமிடங்கள்

பள்ளிக்கூடத்தில் பயிற்சிக் கூட்டம் நடைபெறுகையில் அங்கு காணப்படும் சிறுசிறு காட்சிகளைப் படமாக வரைதல். ஒவ்வொருவரும் பங்குகொள்ள வேண்டும்.

| | | |
|---|---|---|
| 7. | ஆசிரியர் பனுவல் | 5 நிமிடங்கள் |
| 8. | கூட்ட முடிவுச் சடங்குகள் | 5 ,, |
| | | 90 ,, |

## மாதிரி நிகழ்ச்சி நிரல்—6.

| | | |
|---|---|---|
| 1. | ஆரம்பச் சடங்குகள் | 5 நிமிடங்கள் |
| 2. | படை விளையாட்டுக்கள், கட்சி விளையாட்டுக்கள் | 15 ,, |
| | '' கழுத்துப்பட்டி ''<br>'' நெருக்கித்தள்ளு ''<br>'' இருட்டறை ''<br>'' வரவேற்பு '' | |
| 3. | அணித் தலைவனுக்கும் உதவித் தலைவனுக்கும் தனித்தனி பயிற்சி | 15 நிமிடங்கள் |
| 4. | அணிகள் போட்டி | 15 ,, |
| | முதலுதவி - காறை எலும்பு முறிவு<br>மூன்றுகை இருக்கை. | |
| 5. | அணிக் கோணங்களில் பயிற்சி | 15 ,, |
| 6. | ஆசிரியர் பனுவல் | 20 ,, |
| | தலபடமும், தலபடம் வரைதலும் | |
| | முடிவுச் சடங்குகள் | 5 ,, |
| | | 90 ,, |

அணித் தலைவர்களுக்கு தனிப்பயிற்சி:- சாரண தண்டத்தால் பார்வை கோபுரம் அமைத்தல்.

உதவித் தலைவர்களுக்குத் தனிப்பயிற்சி:-இளம்பாத முடிச்சுகள் காட்சிப் பலகை.

ஆசிரியர் பனுவலில் தலபடம் வரைகின்ற முறையை விளக்கலாம்.

---

# 24. பயிற்சியும் தேர்வும்

பயிற்சியும் தேர்வும் (Training and Testing) ஒன்றோடொன்று இணைந்துள்ளன. சாரணர்கள் சாரணக் கலைகள் பலவற்றில் பயிற்சி பெறுகிறார்கள். கற்றுக்கொள்ள வேண்டியவைகளை ஐயம் திரிபறக் கற்றுக் கொள்கிறார்கள். அந்தக் கலைகளில் அவர்கள் அடைந்துள்ள தேர்ச்சி, எவ்வளவு, எத்தகையது என்று அவ்வப்போது மதிப்பிடுதற்குப் பயன்படுவது தேர்வு. பயிற்சி ஒரு பக்கம் நடந்து கொண்டிருக்க, இன்னொருபக்கம் தேர்வும் நடந்து கொண்டேயிருக்க வேண்டும். இப்படிச் செய்வது சாரணர்களை சாரணக் கலையில் எந்த நேரத்திலும் நல்ல தேர்ச்சியும் திறமையும் உள்ளவர்களாக இருக்கச் செய்யும்.

தங்களுக்கு வேண்டிய சாரணக்கலை அனைத்தையும் சாரணர்கள் தங்கள் தங்கள் அணிப் பயிற்சிக் கூட்டங்களிலேயே கற்றுக் கொள்கிறார்கள். அணித்தலைவன் இதற்குப் பொறுப்புடையவன். அணிக் கூட்டங்களில் கற்றுக் கொண்டுள்ள பயிற்சியின் திறத்தை ஆசிரியர் படைக்கூட்டங்கள் நிகழும்போது மதிப்பிட்டுக் கொள்கிறார். ஆகவே அணிக்கூட்ட நிகழ்ச்சிகளும் படைக்கூட்ட நிகழ்ச்சிகளும் முறையே பயிற்சியும் தேர்வுமாக முடிகின்றன. இந்தப் பயிற்சியும் தேர்வும் சாரணப்படை அமைப்புக்கு இயல்பாக உள்ள பயிற்சியும் தேர்வும் ஆகும். இது தவிர நாமாகவே அமைத்துக் கொள்ளக்கூடிய வேறொரு வகைப் பயிற்சியும் தேர்வும் உண்டு. அது ஒரு தனி விளையாட்டாகவும் போட்டியாகவும் அமையும். இந்த விளையாட்டுப் போட்டியை அணி அடிப்படையிலும் படை அடிப்படையிலும் செயலாற்றலாம்.

''பயிற்சியும் தேர்வும்'' என்ற விளையாட்டுப் போட்டி நடத்துவதால் நம் சாரணர்கள் தாம் கற்கும் சாரணக் கலைகளில் நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைந்து நல்ல தேர்ச்சியைப் பெறுவார்கள். கற்றவைகளை மறந்து விடாமல் அவைகளைப் பழக்கத்தில் வைத்துக் கொண்டிருப்பார்கள். கற்ற கலையைச் செயல்படுத்த சந்தர்ப்பம் நேரிடும்போது ஒரு சிறிதும் திகைப்படையாமல் அவைகளை முறையோடு செயலாற்ற முன் வருவார்கள். ''ஆயத்தமாயிரு'' என்ற சாரணக் குறிக்கோளுக்குப் பொருந்தும் முறையில் அவர்கள் சாரண வாழ்க்கை அமையப் பெறும்.

பயிற்சியும் தேர்வும் என்ற போட்டியை நடத்துவதற்கு—

1. ஒரு விசாலமான விளையாட்டரங்கு வேண்டும்;

2. அந்த அரங்கின் எல்லையோரத்தை ஒட்டி ஆறு (அல்லது எத்தனை வேண்டுமோ அத்தனை) தேர்வுக் களங்களும், அவை ஒவ்வொன்றிலும் சாரணக் கலையில் நல்ல தேர்ச்சி பெற்றுள்ள ஒரு நடுவரும் வேண்டும்;

3. விளையாட்டரங்கின் மத்தியில் ஒரு பயிற்சிக் களமும் அதில் சாரணக்கலை நன்கு கற்றுள்ள நிபுணர் ஒருவரும் வேண்டும்;

4. இவை தவிர, போட்டியில் எத்தனை சாரணர்கள் பங்கு கொள்வார்களோ அத்தனை மதிப்பெண் சீட்டும் தயாராக இருக்க வேண்டும்.

சாரணப் பயிற்சி அனைத்தும் இந்தப் போட்டிக்குப் பொருத்த முடையதே. முடிச்சுகள் கட்டுவதில், கட்டுக்கள் (Lasbings) கட்டு வதில், முதல் உதவி செய்வதில், சைகைப் பேச்சுப் பேசுவதில், இந்தப் பயிற்சியும் தேர்வும் என்ற போட்டி நடத்தலாம். மீதி உள்ள சாரணக் கலைகளிலும் இந்தப் போட்டி நடத்தலாம்.

மதிப்பெண் சீட்டில் போட்டியின் தலைப்பு, செய்து காண்பித்துத் தேர்வு பெற வேண்டிய செயல்கள் முதலியவற்றை விவரமாக எழுதி வைத்து, வெற்றிபெறுவது முதல் முயற்சியிலா, அல்லது இரண்டாவது முயற்சியிலா, அல்லது மூன்ருவது முயற்சியிலா என்பதையும் விளக்கி அதற்குத்தக்கபடி மதிப்பெண் கொடுக்க வசதி அமைக்க வேண்டும்.

மதிப்பெண் சீட்டு அமைக்க வேண்டிய மாதிரி: அடுத்த பக்கத்தில் தரப்பட்டுள்ளது.

செய்து காண்பித்து முதல் தடவையில் வெற்றியடைந்தவர் களுக்கு ஐந்து மதிப்பெண் கொடுக்க வேண்டும். முதல் தடவை வெற்றி பெறவில்லையானல் மதிப்பெண்ணுக்குப் பதில் ஒரு × அடை யாளம் செய்து சாரணனை பயிற்சிக்களத்துக்கு அனுப்ப வேண்டும். அங்கு சாரணன் நிபுணரிடம் கற்றுத் தெரிந்துகொண்டு இரண்டாவது முறை முயற்சி செய்து வெற்றி அடைந்தால் மூன்று மதிப்பெண் பெறலாம். இரண்டாவது தரமும் தோல்வியானல் மறு முறையும் × அடையாளம் இட்டுச் சாரணனை மறுமுறையும் பயிற்சிக் களத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும். இந்த மூன்ருவது முயற்சி யில் வெற்றி அடைந்தால் ஒரு மதிப்பெண் கொடுக்கலாம். வெற்றி பெருமல் இந்த முறையும் தோல்வியானல் அவன் விடா முயற்சியைப் பாராட்டி அதற்கு அதே ஒரு மதிப்பெண் கொடுக்க வேண்டும்.

| தேதி...... பயிற்சியும் தேர்வும்: இளம்பாதன் 2-ம் தரச்சாரணன் முடிச்சுகள் | | | | | |
|---|---|---|---|---|---|
| சாரணனின் பெயர் : ப. கோமதிநாதன் | | | | | |
| அணி : கரும்புலி | | | | | |
| வரிசை எண் | தேர்வு விவரம் | மதிப்பெண் | | | நடுவர் கையெழுத்து |
| | | முதல் தடவை வெற்றி | 2-வது தடவை வெற்றி | 3-வது தடவை | |
| 1 | வளைய முடி | 5 | — | — | அ. க. |
| 2 | வடக்கயிற்றுத் தொடுப்பு | × | 3 | — | வ. வி. |
| 3 | ஆட்டிடையர் முடி | 5 | — | — | ச. க. |
| 4 | தீ அணைப்போர் நாற்காலி மூடி | × | 3 | — | ப. மு. |
| 5 | யானைக்கொலுசு | 5 | — | — | த. லே. |
| 6 | இரட்டைத்தூளி முடி | × | × | 1 | அ. ஆ. |
| | ஆக மொத்தம் | 15 | 6 | 1 | 22 |

சாரணர்களின் மதிப்பைத் தனித்தனியாகவும் அணி அடிப் படையிலும் கணக்கிட இந்தப் பயிற்சியும் தேர்வும் வகை செய்கிறது.

பயிற்சியும் தேர்வும் என்பது சாரணர்களுக்கே உரிய ஒரு தேர்வு முறை.



# 25. பாடித்தீயும் பாடித்தீ நிகழ்ச்சிகளும்

பாசறை வாழ்க்கையில் சாரணர்கள் முக்கியமான பொறுப்புக்களை ஏற்று பல வகையான சாரண அலுவல்களில் ஈடுபட்டு பகல் முழுதும் ஓடி ஆடி வேலை செய்கின்றனர். பல விதமான சாரணக்கலைப் பயிற்சியில் பங்கு கொள்கின்றனர். பலவிதமான விளையாட்டுகளில் ஈடுபடுகின்றனர். பாசறைக் காரியங்களை ஒழுங்காகவும் கட்டுப்பாட்டுடனும் கவனிக்கிறார்கள். நாள் முழுதும் உடல் உழைப்பிலும் உள உழைப்பிலும் ஈடுபாடு கொள்கின்ற சாரணர்களின் மனம் நாள் இறுதியில் இரவு உணவு அருந்தினதும் கேளிக்கையில் நாட்டம் கொள்கிறது. அவர்கள் பாடித்தீயை வளர்த்து அதைச் சுற்றி அமர்ந்து கொண்டு அணி ஆகவும், படை என்ற அடிப்படையிலும் ஆடல், பாடல் முதலிய கேளிக்கைகளில் ஈடுபடுகிறார்கள்.

பாடித்தீ என்பது சாரணப் பாசறை வாழ்க்கையின் ஒரு முக்கிய அம்சம். பாடித்தீ நிகழ்ச்சிகள் சாரணர்களுக்கு மிக்க மன மகிழ்ச்சி அளிப்பன. அவர்களை ஒழுங்கும் கட்டுப்பாடும் உடையவர்களாக ஆக்கும் ஆற்றலும் அவைகளுக்கு உண்டு.

## பாடித்தீ அமைத்தல்

பாடித்தீ பல வகையாக அமைக்கப் படலாம். கூம்புக் கோபுர (Pyramid) உருவத்தில் பாடித்தீயை சாதாரணமாக அமைப்பார்கள். சந்தர்ப்பத்துக்கும் சௌகரியத்துக்கும் ஏற்ற வகையில் இந்த கூம்புக் கோபுரம் சிறிதாகவும் பெரிதாகவும் அமையும்.

சதுரமாக அடுக்கி வைக்கப்பட்டுள்ள கட்டைகளாலும் பாடித்தீ அமைப்பதுண்டு. இப்படிச் செய்வதில் இரண்டு முறைகள் கையாளப் படுகின்றன. ஒன்று ஒரே நீளமுள்ள கட்டைகளைச் சதுரமாக அடுக்குதல். இது சதுர அடுக்குப் பாடித்தீ (Log Cabin Fire) எனப்படும். இன்னொன்று படிப்படியாக நீளம் குறைந்த கட்டைகளை அடுக்கி அமைப்பது. கோபுர அடுக்குப் பாடித்தீ (Pagoda Fire) எனப் படும்.

## நிகழ்ச்சிகள்

பாடித்தீ நிகழ்ச்சிகள் படையில் உள்ள சாரண அணிகள் சார்பில் ஆசிரியருக்கும் துணை ஆசிரியருக்கும் அளிக்கப்படும் ஒரு சிறு விருந்தாகவும் படை அணியிலுள்ள சாரணர்களின் குதூகலத்தை உணர்த்துவதாகவும் அமையும். பாடித்தீ நிகழ்ச்சிகள் சாரணர்களை மகிழ்வுறச் செய்யும் நோக்கத்தோடு அமைக்கப் பெறும். அப்படி அவர்களை மகிழ்விக்க முயற்சி செய்யும் பொழுது சாரணர்கள் தங்கள் கண்ணியத்துக்கும் கட்டுப்பாடுகளுக்கும் தங்கள் கடமை உணர்ச்சிக்கும் பொருத்தமுள்ள முறையிலேயே நடந்து கொள்வார்கள்.

நிகழ்ச்சிகள் குறித்த காலம் தவருமல் ஆரம்பமாக வேண்டும். ஆரம்பத்துக்குச் சில நிமிடங்களுக்கு முன்னேயே சாரணர்கள் அணி அணியாக தங்கள் தங்கள் இடங்களில் அமர்ந்து கொள்வார்கள். பாடித்தீ உரிய முறையில் அமைக்கப் பெற்றுத் தயாராக இருக்கும். ஆனால், நெருப்பு ஏற்றப்படாமல் இருக்கும். ஆசிரியர் முதலியோரை அழைக்கச் சென்ற சாரணனும் ஆசிரியர், உதவி ஆசிரியர், விருந்தினர்கள் முதலியோரும் பாடித்தீ வட்டத்துக்கு வருகை தருவார்கள். சாரணர்கள் அவர்களை முறையாக வரவேற்றபின் அவர்கள் தங்களுக்காக உள்ள இருக்கையில் அமர்ந்து கொள்வார்கள்.

பாடித்தீ நிகழ்ச்சிகளை மேற்பார்க்கும் அணித்தலைவன் ஆசிரியரை அல்லது அவர் அனுமதியுடன் விருந்தினர்களுள் ஒருவரை பாடித்தீயை ஏற்றி வைத்து நிகழ்ச்சிகளை ஆரம்பிக்கக் கேட்டுக் கொள்ளலாம். கேட்டுக் கொண்டதும் ஆசிரியர் அல்லது விருந்தினர் பாடித்தீயை ஏற்றுவார். அதைத் தொடர்ந்து தன் ஆசிகளை அளிக்கும் முறையில் ஒரு சில வார்த்தைகள் கூறுவார். அதன் பின் நிகழ்ச்சிகள் ஒன்றன் பின் ஒன்ருக நிகழ்ச்சி நிரல்படி நடைபெறும்.

பாடித்தீயைச் சுற்றி ஆடல்களும் பாடல்களும் முக்கிய நிகழ்ச்சிகளாக அமையும். இவைகளில் சாரணர்கள் எல்லோரும் கலந்து கொள்ள வேண்டும். பாடித்தீயைச் சுற்றிக் கிராமிய ஆடல்களும் பாடல்களும் மிகப்பொருத்தமுடையன. அவை தேசிய ஒருமைப் பாட்டு உணர்வை ஊட்டவல்லன. இவைகளை அணிகள் அணிகளாக ஆடலாம். கிராமிய ஆடல்களுக்கு ஏற்ற ஆடைகளை அணிந்து கொள்வது நல்லது. அது ஆட்டத்துக்கு அழகு தரும். வேடிக்கையான நிகழ்ச்சிகள், கேலியாக உள்ள கூத்துகள் இவைகள் மிதமாயிருக்கவேண்டும். இவை சாரணர்களின் கண்ணியத்துக்குப் பொருத்தமுடையனவாக இருக்க வேண்டும். சாரண நெறிக்கு முரண்பாடு இல்லாதவையாயும் இருக்க வேண்டும். எந்தப் பாடித்தீ

நிகழ்ச்சியும் யாருடைய மனத்தையும் புண்படுத்தும் இயல்புடையதாக இருத்தல் ஆகாது. அவை பங்கு கொள்ளும் எல்லோருக்கும் மாசற்ற மகிழ்ச்சி அளிக்க வல்லதாகவும் இருக்க வேண்டும்.

நிகழ்ச்சிகள் விறுவிறுப்பாக நடைபெற வேண்டும். நிகழ்ச்சி களை நீடிக்கவிடக் கூடாது. நிகழ்ச்சிகள் கட்டுப்பாட்டுடன் நடை பெற வேண்டும்.

பாடித்தீயைப் பற்றி எல்லா பொறுப்புகளும் ஒவ்வொரு நாளும் வெவ்வேறு சாரண அணிக்குக் கொடுக்கப்பட வேண்டும். பாடித்தீ அமைத்தல், நிகழ்ச்சிகளை சேகரித்தல், நிகழ்ச்சிகளைச் செயலாற் றுதல் ஆகிய எல்லாப் பொறுப்புகளும் ஒரு நாள் ஒரு சாரண அணிக்குக் கொடுக்கலாம்.

நிகழ்ச்சி நிரலில் உள்ள நிகழ்ச்சிகள் முடிவானதும் ஆசிரியர் அல்லது விருந்தினர் ஒரு சில வார்த்தைகள் கூறுவது பொருத்த முடையதாக இருக்கும். அன்று நடைபெற்ற நிகழ்ச்சிகளைப் பற்றிய தன் அபிப்பிராயத்தைக் கூறிச் சாரணர்களைப் பாராட்டலாம். ஏதாவது பொது அறிக்கைகள் இருக்குமாயின் அவற்றை அறிவிக் கலாம். கடைசியாக இறைவனை வணங்கும் முறையில் பொருத்த முள்ள பாட்டுகளை எல்லோரும் சேர்ந்து பாடலாம்.

மன மகிழ்ச்சியோடும் நல்ல மன அமைதியோடும் சாரணர்கள் தங்கள் தங்கள் படுக்கைக்குச் செல்ல வேண்டும். அந்த நாள் நல்ல பயனுள்ள முறையில் செலவு செய்யப்பட்டது என்ற உணர்ச்சியும் அவர்கள் உள்ளத்தில் உறைவிடம் பெறவேண்டும். சாரண இயக்கம், தங்கள் சாரணப்படைக்கு, தங்கள் படையில் உள்ள சாரணர்களுக்கு சகோதர உணர்ச்சி ஊட்டுகிறது என்ற எண்ணமும் அவர்கள் எண்ணத்தில் குடி கொள்ள வேண்டும். இப்படியான நன்மைகளை எதிர்பார்ப்பது சாரண ஆசிரியரின் உரிமையாக அமையும்.



# 26. சாரண இயக்கத் தந்தை பேடன் – பவலார்

நம் சாரண இயக்கத்துக்குத் தந்தையாக உள்ள பேடன்–பவல் பெரியார் 1857ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 22ஆம் நாள் லண்டன் மாநகரில் திரு அவதாரம் செய்தார். இவர் தந்தையார் மறைத்திரு பேராசிரியர் பேடன்-பவல் ஆவார். இவர் தாயார் ஹென்றியட்டா (Henrietta) பேடன்-பவல் அம்மையார் ஆவார். இவர்களுக்கு எட்டாவது குழந்தையாக அவதரித்த நம் சாரண இயக்கத் தந்தை ராபுர்ட்டு ஸ்டீவென்ஸன் ஸ்மித் பேடன்-பவல் என்று நாமகரணம் செய்யப் பட்டார்.

இவருடைய மூன்ருவது வயதில் இவரது தந்தையார் இறந்து போகவே, பேடன்–பவலார் தன் தாயாரால் வளர்க்கப்பட்டார். இவர் சகோதரர்களில் இருவர் இவருக்கு மூத்தவர்கள். ஒருவர் இளையவர். இவர் சகோதரி இவருக்கு இளையவர்.

லண்டனுக்கருகாமையில் உள்ள டண்பிரிட்ஜவெல்ஸ் என்ற பட்டணத்தில் ரோஸ் ஹால் என்ற ஆரம்பப் பள்ளியிலும், பின்னுல் லண்டனில் உள்ள சார்ட்டர் ஹௌஸ் (Charter House) என்ற உயர் நிலைப்பள்ளியிலும் இவர் கல்வி பயின்ருர்.

சார்ட்டர் ஹௌஸ் பள்ளியில் பேடன்-பவலாருக்குத் தலைமை ஆசிரியராக இருந்த மறைத்திரு டாக்டர் ஹேக் பிரௌன் (Dr. Haig Brown) என்பவர் சிறுவர் மனப்போக்கை நன்கு உணர்ந்தவர். மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் முழு சுதந்திரம் அளிக்கும் மனப்பான்மை உடையவர்.

பேடன்–பவலார் தான் மாணுக்கனுக இருக்கும் பொழுது பறவைகளையும் பிராணிகளையும் நன்கறிந்து கொள்ளும் விருப்பத் தினுல் தூண்டப்பட்டு பள்ளியின் பக்கத்தில் உள்ள காடுகளுக்குச் சென்று பிராணிகள் பறவைகளைப் பின்பற்றிச் சென்று அவைகளின் பழக்க வழக்கங்களை நன்கு தெரிந்துகொள்ளும் முயற்சிகளில் ஈடுபடுவது வழக்கம். அந்த வேளைகளில் முயலைப் பிடித்து அதனை உணவாகச் சமைத்துக் கொள்வதும் உண்டு. ஆசிரியர்கள் யாராவது

தன்னைப் பார்த்துவிடக்கூடும் என்ற பயத்தால் சிறு சிறு தீயை மூட்டித் தன் சமையல் வேலையை முடித்துக் கொள்ளும் திறமை வாய்ந்தவர்.

பள்ளிப் பாடங்களைப் படிப்பதில் பேடன்-பவலார் மிகுந்த திறமை உடையவராய்க் காணப்படவில்லை. நாடகக் கலையிலும் இசைக் கலையிலும் கேலித் கூத்துகள் ஆடுவதிலும் இவருக்கு நிகர் இல்லை என்று சொல்லும்படி நல்ல தேர்ச்சியிருந்தது. மேடை ஏறித் தன் கலைத்திறனைப் புலப்படுத்தும் ஆற்றல் இவரிடம் மிகுதியாகக் காணப்பட்டது. ஆசிரியர்களைப்போல நடித்துக் காண்பிப்பதிலும் மிகுந்த திறமை உடையவராக இருந்தார்.

விடுமுறை நாட்களில் தன் சகோதரர்களுடன் சுற்றுலாச் செல்வதும், பாசறை அமைப்பதும், கடற்கரை ஓரமாகத் தோணி செலுத்திக் கடல் யாத்திரை செய்வதும் இவரது பொழுதுபோக்கு. அந்தக் காலங்களில் இவருடைய மூத்த சகோதரர்கள் இவருக்குக் கடுமையான வேலைகளைத் தருவார்கள். தோணி யாத்திரை செய்யும்போது ஒரு நாள் இவர் சமையல் செய்யவேண்டி வந்தது. இவர் சமைத்த 'சூப்' (Soup) என்னும் உணவு தீய்ந்து அடியிற் பிடித்துப் பாழாகிவிட்ட காரணத்தினால் அந்த 'சூப்' அவ்வளவையும் அதனைச் சமையல் செய்த பேடன்-பவலாரே பருகவேண்டும் என்று அவர் அண்ணன் கட்டளையிட்டார். கட்டளை இட்டு விட்டு அந்தக் கட்டளையை நிறைவேற்றும் பொறுப்பைத் தன் அடுத்த சகோதரருக்குத் தந்தார். இதைப் பற்றி பேடன்-பவலார் தன் நூலில் கூறியுள்ளார்.

1876ஆம் ஆண்டு இராணுவத் தேர்வில் இரண்டாவதாக வந்த பேடன்-பவலார் 13வது ஹுஸ்ஸார்ஸ் (13th Hussars) என்ற குதிரைப் படையில் ஸப்-லெப்டினெண்ட் (Sub-Lieutenant) ஆக நியமனம் செய்யப் பெற்று நம் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டார். இந்தியாவில் ஐந்து ஆண்டுகள் பணியாற்றினர். அந்தக் காலத்தில் அவருக்குள்ள சம்பளம் ஆண்டு ஒன்றுக்கு 150 பவுன். இது தன் செலவுக்குப் போதாமையால் பேடன்-பவலார் பல வகையில் சிக்கனத்தை நாடினர். முதலில் புகை பிடிப்பதை அடியோடு விட்டு விட்டார். பிறகு மது அருந்துவதையும் பெரும் அளவுக்குக் குறைத்துக் கொண்டார். இவை தவிர லண்டனில் உள்ள பத்திரிகைகளுக்கு கட்டுரைகள் எழுதித் தன் வருவாயைப் பெருக்கிக் கொண்டார். போலோ விளையாட்டில் மிகுந்த பற்றுடைய பேடன்-பவலார் சாமான்யமான குதிரைகளை விலைக்கு வாங்கி அவற்றை போலோ விளையாட்டுக்குப் பழக்கி இராணுவத்தில் உள்ள ஏனைய அலுவலர்களுக்கு விற்று இலாபம் அடைவதும் உண்டு.

இராணுவத்தில் ஏனைய அலுவலர்களுக்கு இராணுவச் சாரணியம் (Reconnaisance) என்ற கலையைக் கற்பிக்கும் வாய்ப்புப் பெற்ற பேடன்-பவலார் அதனை நன்கு பயன்படுத்திக் கொண்டார். இராணுவச் சாரணியத்தைத் திறமையுடன் செய்ததற்கு இவர் அளித்த பயிற்சி மிக நல்ல அளவு பயன் அளிப்பதாக உணர்ந்தார். இந்தக் காலத்தில் அவர் எழுதித் தயாரித்த பயிற்சிக் குறிப்புகள் பிற் காலத்தில் இவருக்கு இராணுவச் சாரணியத்தைப் பற்றி ஒரு நல்ல நூலை இயற்றி வெளியிடும் வாய்ப்பைத் தந்தது.

ஐந்து ஆண்டுகள் பணியாற்றியதும் பேடன்-பவலாருடைய இராணுவப்படை இங்கிலாந்து திரும்பியது. திரும்பிப் போகும் பொழுது நெட்டால் என்னும் இடத்தில் இவரை இறங்கச் செய்து, அங்கிருந்து மற்ற இடங்களுக்குச் செல்ல வசதி அளிக்கும் மலைப் பாதை ஒன்றை அமைத்துத்தர இவர் பணிக்கப்பட்டார். உடனே அந்த வேலையில் அவர் மும்முரமாக ஈடுபட்டார்.

அது முதல் பத்து ஆண்டுகள் வரை பல இடங்களில் பல மாதிரியான வேலைகளில் அவர் ஈடுபட நேர்ந்தது. சூலுப் போர் (Zulu War) ஆரம்பமானதும் அதில் பங்கு கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றார். இவருக்கு சூலு இனத்தவரை நன்றாய்த் தெரிந்துகொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது. சூலுத் தலைவர்களைப் பிடித்து அடக்கும் கடினமான வேலை இவருக்குக் கொடுக்கப்பட்டது. மற்றெல்லாத் தலைவர்களும் பிடிபட்டு டினி சூலு (Dini Zulu) என்ற தலைவன் மட்டும் பிடிபடாமல் இருந்தான். பேடன் பவலார் விடாமுயற்சியோடு காடுகள் பலவற்றைச் சுற்றி அலைந்து திரிந்து கடைசியில் அவனையும் பிடித்தார்.

''சிறுவர்கள் சாரணியம்'' (Scouting for Boys) என்ற தன் புத்தகத்தில் சூலு இனத்தார்களைப் பற்றியும் அவர்களுடைய பழக்க வழக்கங்களைப் பற்றியும் பல முக்கிய குறிப்புகள் தந்துள்ளார். அவர்களுடைய ஈங்கோன்யாமா கீதத்தையும் (Engonyama Chorus) அதைப் பாடும் முறையையும் அப்புத்தகத்தில் விளக்கி யுள்ளார்.

இதற்குப்பின் சில காலம் மத்தியதரைக்கடலில் உள்ள மால்டா (Malta) என்னும் தீவில் எதிரிகளைப் பற்றிய முக்கியமான விவரங்கள் பலவற்றை ஒற்றறிந்து வந்தார். அவருக்கு இந்தக் காலத்தில் ஏற்பட்ட அனுபவங்களைப் பற்றி ''ஒற்றன் ஒருவனுடைய விசித்திர அனுபவங்கள்'' (Advenutres of a Spy) என்ற புத்தகத்தை சில ஆண்டுகளுக்குப் பின் வெளியிட்டார்.

அதற்குப்பின் அஷான்டி (Ashanti) என்னும் இடத்துக்கு அனுப்பப்பட்டு அங்கு பாலங்கள் அமைக்கும் ஆக்கல் கலை (Pioneering) யில் ஈடுபட்டார். அந்தக் கலையில் நல்ல அனுபவமும் அடைந்தார். பொறி இயல் வல்லுநர்கள் தங்கள் கையில் சிறு தண்டங்களை வைத்துக்கொண்டு செல்வதையும் அவைகளைத் தங்கள் கணக்கீடுகளுக்குப் பயன்படுத்துவதையும் அவர் இங்குதான் முதன் முதலாகக் கண்டார். மக்கள் இடது கையைப் பிடித்துக் குலுக்கித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளும் பழக்கத்தையும் இங்குதான் கண்டார்.

1896ஆம் ஆண்டில் அவர் மட்டபலி லாண்டு (Matabaleland) என்னும் இடத்தில் மிகப்பெரிய அளவில் மும்முரமான ஒற்றறிதல் அலுவலில் ஈடுபட்டார். இந்த இடத்தில் குடு (Kudu)என்ற ஒருவகை மானின் கொம்பு ஒன்றை சேகரித்துக் கொள்ளும் வாய்ப்பு அவருக்கு கிட்டியது. வெகுகாலத்துக்குப்பின் 1907ஆம் ஆண்டில் அந்தக் கொம்பினை ஊதி அழைப்பொலி எழுப்பி பிரௌன்ஸீத் தீவில் (Brownsea Island) உலகிலேயே முதன்முதலாக நடைபெற்ற சாரணப் பயிற்சிப் பாசறையைத் துவக்கி வைத்தார்.

1897ஆம் ஆண்டு பேடன்-பவலார் ஐந்தாவது டிரகூன் கார்ட்ஸ் (5th Dragoon Guards) என்ற படைக்குத் தலைவராய், கர்னல் (Colonel) பதவி பெற்று, மறுபடியும் இந்தியாவுக்கு வந்தார்.

1899ஆம் ஆண்டு ஆஃப்ரிக்காவில் மேஃப்கிங் (Mafeking) என்ற இடத்துக்கு அனுப்பப்பட்டார். அப்பொழுது ஆங்கிலேயர்களுக்கும் போயர்களுக்கும் கலகம் ஏற்பட்டிருந்தது. இந்தக் கலகம் முற்றிப் போராக முடிந்தது. போயர்கள் மேஃப்கிங் பட்டணத்தை முற்றுகை இட்டனர். அந்தப் பட்டணத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு பேடன்-பவலாருக்குத் தரப்பட்டது. 1899ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 11ஆம் நாள் ஆரம்பமான இந்த முற்றுகை 217 நாள் நீடித்தது. பின் 1900ஆம் ஆண்டு மே திங்கள் 16ஆம் நாள் முடிவு பெற்றது. வந்து விடும், வந்துவிடும் என்று ஆவலுடன் எதிர்பார்க்கப்பட்ட ஆங்கிலேயர் உதவிப்படை மே (May) 16 அன்று மேஃப்கிங்கை அடைந்தது. பேடன்-பவலார் வெற்றி அடைந்தார். அவர் பெயரும் புகழும் ஒரே நாளில் உலகம் எங்கிலும் பரவிற்று.

ஆங்கிலேயர்கள் போரை எதிர்பார்க்கவில்லை. போர் ஆரம்பமான பொழுது மேஃப்கிங்கில் போதுமான அளவு போர் வீரர்களும் இல்லை, யுத்த தளவாடங்களும் இல்லை. அப்படி இருந்தும் பேடன்-பவலார் வெற்றி பெற்றார் என்றால் அதற்குரிய காரணமாக

அமைந்தவை—அவருக்கு இயற்கையாக உள்ள மனோதைரியமும், எதிரியை ஏமாற்றுவதில் அவருக்கிருந்த இணையில்லாத் திறமையுமே ஆகும். எவ்வளவு துன்பம் நேர்ந்தாலும் ஒரு சிறிதும் கலக்கம் அடையாமல் தம் காரியத்தில் மிகுந்த அக்கறையோடு கண்ணும் கருத்துமாகச் செயல்படும் திறமை அவருக்குத் துணை நின்றது. நெருக்கடிகளில் ஒரு சிறிதும் மனக்கலக்கமோ பரபரப்போ இல்லாமல் உடனுக்குடன் முடிவுக்கு வருகின்ற திறனும் பேடன்-பவலாரிடம் மிகுதியாகக் காணப்பட்டது. அவர் கொடுக்கும் கட்டளைகள் எப்பொழுதும் எவ்வித சந்தேகத்துக்கும் இடந்தராமல் மிகத் தெளிவாகவே இருந்தன. அப்படிச் செய்வதா அல்லது இப்படிச் செய்யலாமா என்ற சந்தேக நிலை பேடன்-பவலாரிடம் எப்பொழுதும் காணப்பட்டதில்லை. எவ்வித பரபரப்பும் காட்டாமல், நல்ல திறமையுடன் பலவித ஏமாற்றங்களைச் செய்து எதிரியை எப்பொழுதும் திகைப்பு நிலையிலேயே வைத்துக்கொண்டிருந்தார்.

மேஃப்கிங் முற்றுகை ஆரம்பத்தில் போர் வீரர்கள் ஒரு சிலரே இருந்தனர். நாளடைவில் அவர்கள் எண்ணிக்கை குறைந்து கொண்டே வந்தது. பேடன்-பவலார் தன்னுடன் அலுவல் பார்த்து வந்த லார்டு எட்வர்ட் ஸிஸில் பிரபு (Lord Edward Cecil) என்பவர் மேஃப்கிங்கிலுள்ள சிறுவர்களைத் திரட்டி ஒரு சிறுவர் படை அமைத்துப் போர் சம்பந்தமான சில்லரை வேலைகளை அவர்களிடம் ஒப்படைத்தார். அந்தச் சிறுவர்களும் ஒரு சிறிதும் பயப்படாமல் மிகுந்த மனமகிழ்ச்சியுடன், தங்களுக்குத் தரப்பட்டுள்ள கட்டளைகளைத் தைரியமாக மிகச் சிறந்த முறையில் நிறைவேற்றி வந்தனர்.

எண்ணரிய துப்பாக்கிக் குண்டுகள் அங்கும் இங்கும் பறந்து கொண்டிருக்கும்பொழுது அவைகளின் நடுவில் சற்றும் பயமில்லாமல் ''மிதிவண்டி'' என்ற ஈருருளியில் தைரியமாக வந்து தன்னிடம் இராணுவக் கடிதம் ஒன்றைத் தந்த சிறுவன் ஒருவனிடம், ''இப்படி குண்டுகள் பறந்து கொண்டிருக்கும் பொழுது அவைகளின் நடுவில் நீ போவது வருவது அபாயம் அல்லவா?'' என்று கேட்க நேர்ந்த போது; அச்சிறுவன், ''இல்லை. குண்டுகளைவிட மிக விரைவாக சைக்கிளை மிதித்துக் கொண்டு நான் போய்விடுவேன். நீங்கள் பயப்பட வேண்டாம்'', என்று பதில் இறுத்தான்; என்பது சிறுபடைச் சிறுவர்கள் நல்ல மனக்கிளர்ச்சியுடன் தங்கள் வேலைகளைச் செய்து வந்தனர் என்பதற்கு ஒரு நற்சான்று. அவர்கள் நடந்து கொண்ட முறையைக் கண்ணுற்ற பேடன்–பவலார் அடிக்கடி சிந்தனையில் ஆழ்ந்தார். சிறுவர்களுக்கு பொறுப்பான வேலைகள் தரப்பட்டால் நல்ல பொறுப்புணர்ச்சியுடன் அந்தப் பொறுப்பை அவர்கள் நிர்வகிப்பார்கள், என்ற உண்மையை அப்பொழுது மிக நல்ல முறையில் உணர்ந்துகொண்டார்.

மேஃப்கிங் முற்றுகையும் அதன் எதிர்பாராத வெற்றிகரமான முடிவும் நம் சாரண இயக்கத் தந்தை பேடன்–பவலாருக்கு அழியாப் புகழைத் தேடித் தந்தன. ஆங்கில மக்கள் அவருக்குப் புகழ்மாலை சூட்டித் தங்கள் பாராட்டுகளையும் ஆசிகளையும் அவர் மேல் சொறிந்தார்கள்.

பல ஆண்டுகளுக்குப் பின்னர் ஏழாவது எட்வர்ட் (Edward VII) மன்னரை சந்திக்க நேர்ந்தபொழுது அவருடன் நிகழ்ந்த உரையாடலின் இடையில் தன் மனத்தில் வெகுநாளாகக் குடிகொண்டிருந்த ஒரு ஆசையை பேடன்-பவலார் மன்னர் பெருமானுக்குத் தெரிவித்தார். அதன் விளைவாக பேடன்–பவலார் மன்னர் அனுமதி பெற்று இராணுவத்திலிருந்து விலகிக் கொண்டு தம் நாட்டுச் சிறுவர்களை நல்ல வழிக்குத் திருப்பும் நற்பணியில் ஈடுபடத் தீர்மானித்தார். செய்ய விரும்பிய சோதனையையும் பிரௌன்சித் தீவில் 1907ஆம் ஆண்டில் செய்து முடித்தார். சாரணியமும் பிறந்தது.

1910ஆம் ஆண்டு அமெரிக்காவில் ஆரம்பமான சாரண இயக்கம் எப்படிச் செயல்படுகிறது என்பதை நேரில் கண்டறியும் எண்ணத்தோடும் அங்கு சுற்றுப்பிரயாணம் செய்து பல இடங்களில் சாரண இயக்கத்தைப்பற்றி சொற்பொழிவுகள் ஆற்றவேண்டும்என்ற நோக்கத்தோடும், 1912ஆம் ஆண்டு ஆரம்பத்தில் அமெரிக்காவுக்கு கப்பல் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்போது எதிர்பாராத விதமாக அவர் தன் வாழ்க்கைத் துணைவியைச் சந்திக்க நேர்ந்தது. தன் குடும்ப நண்பர் ஒருவரால் தனக்கு அறிமுகப்படுத்தப்பட்ட **குமாரி ஒலேவ் ஸோம்ஸ்** என்பவரோடு உரையாடத் தொடங்கியதும் அவரை முன்னொருக்கால் லண்டன் மாநகரில் சந்தித்துள்ளது அவர் நினைவுக்கு வந்தது. அந்த நினைவு வரவே அவருக்கும் குமாரி ஸோம்ஸுக்கும் புதுமாதிரியான ஒரு உரையாடல் நடந்தது.

‘‘நீங்கள் லண்டன் மாநகரத்தில்தானே குடியிருக்கிறீர்கள்?’’ என்று பேடன்-பவல் கேட்டார்.

‘‘இல்லை! நான் இருப்பது டார்ஸெட்’’, என்று குமாரி சோம்ஸ் பதில் அளித்தார்.

‘‘தவிட்டு நிறமும் வெள்ளைநிறமும் கலந்த ஒரு ஸ்பானியல் நாய் உங்களிடம் இருக்கிறதல்லவா?’’ என்றார் பேடன்-பவல்.

‘‘ஆம்!’’ என்று ஆச்சரியத்தோடு ஒப்புக்கொண்டார் குமாரி ஸோம்ஸ்.

''லண்டனில் நைட்ஸ் பிரிட்ஜ் பாரக்ஸ் (Knights Bridge Barracks) என்ற இடத்துக்கு நீங்கள் வந்தது உண்டு, அல்லவா?'', என்றார் பேடன்-பவல்.

''வந்ததுண்டு. இரண்டு ஆண்டுகளுக்கு முன் என் அத்தை வீட்டுக்கு'', என்றார் குமாரி ஸோம்ஸ்.

குமாரி ஸோம்ஸும் அவருடைய ஸ்பானியல் நாயும் இரண்டு ஆண்டுகளுக்கு முன் ஒருநாள் கென்ஸிங்டன் தோட்டத்தில் இருந்து பாரக்ஸ் இருக்கும் இடம் நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்ததையும், அப்பொழுது அந்த அம்மையாரையும் அவருடன் இருந்த அந்த நாயையும் கவனித்துப் பார்க்க நேர்ந்தது அவருடைய நினைவுக்கு வந்தது. ''இம் மாது தன் குறிக்கோள்களை அடைவதில் உண்மையான அக்கறை உடையவர், மிகுந்த அளவு பொது அறிவு படைத்தவர். புதுப்புது அனுபவங்களை வரவேற்கும் மனப்பான்மை உடையவர்'' என்று குமாரி ஸோம்ஸைப்பற்றித் தான் அப்போது அபிப்பிராயம் கொண்டதும் தன் நினைவுக்கு வந்தது.

கப்பலில் மேல் தட்டில் நடந்து கொண்டே உரையாடலில் ஈடு பட்ட இருவரும் பொழுது போனதே தெரியாமல் வெகு நேரமாக உரையாடிக் கொண்டே இருந்தார்கள். நண்பகல் உணவுக்கான நேரமும் கடந்தது.

குமாரி ஸோம்ஸ் பத்து வயதுப் பெண்ணாயிருக்கும்போது ஆஃப்ரிக்காவில் போயர் போரைப்பற்றிக் கேட்டுத் தெரிந்துக் கொண்டுள்ளதையும், மேஃப்கிங் வெற்றியடைந்ததும் பல்லாயிரம் ஆங்கிலேய மக்களைப்போலத் தானும் பேடன்–பவலார் உருவச் சின்னம் ஒன்றை வாங்கி அணிந்து கொண்டதையும் அவருக்குச் சொல்லி மகிழ்ந்தார். இருவருடைய பிறந்த நாளும் பிப்ருவரித் திங்கள் 22ஆம் நாள் வருவது வேடிக்கையாகவும் ஒரு ஒருமைப் பாட்டைக் குறிப்பதாகவும் அவர்களுக்குத் தோன்றியது. சங்கீதத் திலும் ஓவியக் கலையிலும் இருவர்களுக்கும் உள்ள ஈடுபாடு, இயற்கை யின் எழிலைக் கண்டு களிப்பதில் இருவருக்கும் உள்ள ஆர்வம், பல வகை விளையாட்டுகளில் இருவர்களுக்குமுள்ள ஈடுபாடு முதலிய வற்றை அவ்வொருமைப்பாட்டின் புது அம்சங்களாகக் கொண்டனர்.

பின்னர் குமாரி ஸோம்ஸ் பேடன்-பவலாரைத் தன் தந்தை யாருக்கு அறிமுகம் செய்து வைக்க, அதுமுதல் ஸோம்ஸ் குடும்பத் தினரோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு பேடன்-பவலாருக்குக் கிடைத்தது. இப்படித் தொடங்கிய நட்புறவு கப்பல் யாத்திரை

முடிந்த பின்னரும் சில மாதங்கள் கடிதம் மூலம் நீடித்துக் கடைசியாக 1912ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 30ஆம் நாள் அவர்கள் இருவரின் திருமணத்தில் இனிது முடிந்தது.

பேடன்-பவலார் செய்து வந்த சாரண நற்றெண்டில் தன் திருமணம் முதல் ஒலேவ் அம்மையாரும் மிக்க மகிழ்ச்சியோடு ஈடுபட்டார். சாரண இயக்கத்திலும், சாரணிகள் இயக்கம் ஆரம்பமான பிறகு சாரணிகள் இயக்கத்திலும், ஒலேவ் அம்மையாருக்குள்ள பங்கு மிகப் பெரிது. இவ்விரு இயக்கங்களையும் நிர்வாகம் செய்வதிலும் அவ்வம்மையார் தன் கணவனுக்கு உறுதுணையாய் அமைந்தார். இவ்விரு இயக்கங்கள் சார்பில் பேடன்-பவலார் வெளிநாடுகளுக்குச் சென்று வந்தபொழுது ஒலேவ் அம்மையாரும் அவர் கூடவே சென்று பணியாற்றி வந்தார்.

1920ஆம் ஆண்டு லண்டன் மாநகரில் கிரிஸ்டல் அரண்மனை என்ற இடத்தில் முதல் முதலாகச் சாரணர்கள் உலகப் பெருங்கூட்டம் (International Jamboree) நடந்தேறியது. அப்பொழுது அங்கு வருகை தந்த பலநாட்டுச் சாரணர்கள் பேடன்-பவலாருக்கு அனைத்துலக முக்கிய சாரணர்'' (Chief Scout of the World) என்ற பெரு மதிப்பிற்குரிய பதவியை அவருக்கு வழங்கினர்.

1929ஆம் ஆண்டு பெர்க்கன்ஹெட் (Birkenhead) என்ற இடத்தில் சாரண இயக்கத்தின் 21-வது வயது நிறைவு கொண்டாட நடந்த உலகப் பெருந்திரள் கூட்டத்தில் ஆங்கில நாட்டுமன்னர் பெருந்தகை ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் (King Georege V) ஜாம்பூரிக்கு வந்து கலந்துகொண்டு சாரண இயக்கத்தின் வாயிலாக பேடன்-பவலார் உலகச் சிறுவர்கள் நன்மையைக் கோரி ஆற்றும் தொண்டினைப் பாராட்டும் முறையில் அவருக்கு கில்வெல் பிரபு (Lord Gilwell) என்ற பதவியையும் பட்டத்தையும் வழங்கினர். ஒலேவ் அம்மையாரும் லேடி பேடன்-பவல் என்று வழங்கப் பெற்றார்.

கில்வெல் பிரபு பேடன்-பவலாரும் அவர் மனைவியார் லேடி ஒலேவ் பேடன்-பவலும் சாரண இயக்கத்தையும் சாரணிகள் இயக்கத்தையும் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து வந்தனர். அவர்கள் இருவரும் எடுத்துக் கொண்டுள்ள உழைப்பை எளிதில் கணக்கிட்டுவிட முடியாது. ஓய்வுபெற்ற பேடன்-பவலார் ஆஃப்ரிக்காவில் கினியா(Kenya)வைச் சேர்ந்த நயேரி (Nyeri) என்னுமிடத்தில் 1941ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 8ஆம் நாள் காலமானார். எண்பது வயதான ஒலேவ் அம்மையார் இவ்

விரு இயக்கங்களையும் பேடன்-பவல் பாதுகாத்து வந்தது போலவே இப்பொழுதும் பாதுகாத்து வருகின்ருர். அவ்விரு இயக்கங்களும் இறைவனருளால் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகின்றன.

பேடன்-பவல் பெரியார் ஒரு அவதார புருஷர். அவருடைய வாழ்க்கையை ஆராய்ந்து பார்க்கையில் சாரணப் பயிற்சியை உரு வாக்குவதற்காகவே அவர் அவதாரம் செய்ததாகத் தோன்றும். அவர் நிறுவிய சாரண இயக்கம் ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூன்றி மனித இனத்துக்கு மிக அவசியமான சீர்திருத்தங்களைச் செயலாற்றிக் கொண்டிருக்கிறது.



# 27. முடிவுரை

சாரணப்பயிற்சி நாட்டின் எதிர்காலச் செல்வங்களாகிய சிறுவர் களுக்கு ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் குடிமை உணர்ச்சியை யும் கற்பிப்பதில் மிகுந்த அக்கறை கொண்ட பயிற்சி. அவர்களிடை யில் கண்ணியத்தையும் கடமை உணர்ச்சியையும் வளர்க்கும் இயல்பு அமைந்தது.

சாரணப் பயிற்சி செயல்திறனை வளர்க்க வல்லது. ஒத் துழைப்பை ஊட்டுவது. நாட்டுப்பற்றை வளர்ப்பது, சேவாமனப் பான்மை அளிப்பது, இயற்கையின் எழிலில் ஈடுபடச்செய்வது, இறை பக்தியை வளர்க்கவல்லது. குடிமை உணர்ச்சியைத் தருவது, குடிமைப் பண்பை ஊட்டுவது, இவை அனைத்துக்கும் மேலாக சிறுவர் களின் வாழ்க்கையை மகிழ்ச்சிகரமானதாக ஆக்கும் ஆற்றலும் பொருந்தியது.

அமெரிக்காவில் நியூயார்க் நகரத்தில் உள்ள கொலம்பியா பல் கலைக்கழகத்தில் பல ஆண்டுகள் பணியாற்றி உலகப் புகழ்படைத்த கல்வி நிபுணர் டீன் ஜேம்ஸ் இ. ரஸ்ஸல் (Dean James E. Russel) என்ற பெரியார் சாரணப் பயிற்சித் திட்டத்தைப் பற்றியும் அந்தத் திட்டத்தில் கையாளப்படும் பயிற்சி முறைகளைப் பற்றியும் பலவா றுகப் புகழ்ந்து பாராட்டி யிருக்கிறார். சாரணப் பயிற்சித் திட்டத்தை மிக நுணுக்கமாக ஆராய்ந்து பார்த்த அப்பேரறிஞர் அந்தத் திட்டத் தில் அடங்கியுள்ளவை மனித வாழ்க்கைக்கு அவசியமான பல பண்புகளைப் புகட்டி அவைகளைப் பேணி வளர்க்கும் தன்மை பொருந் தியன என்றும், அவை வாழ்க்கைக்கு அவசியமான பல வகையான அனுபவங்களையும் அறிவையும் அளிக்கவல்லன என்றும் கருதுகிறார்.

சாரணப் பயிற்சித் திட்டம் ஒரு புரட்சிகரமான திட்டம் என்பது அப் பேரறிஞர் கருத்து. புரட்சிகரமாக உள்ளது, அந்தத் திட்டத்தில் உள்ள பயிற்சிகளை விட அப்பயிற்சிகளை அளிப்பதில் கையாளப்படும் முறைகளே ஆகும் என்பது அவருடைய முடிவு.

செய்கையில் கற்றல் (Learning by doing) என்றுள்ள முறை புரட்சிகரமாக உள்ளது. எனினும், சிறுவர்களுக்குப் பொறுப்பு அளித்து அந்த அடிப்படையில் அவர்களுக்குப் பொறுப்புணர்ச்சி

ஊட்டிப் பொறுப்புப் பயிற்சி அளிக்க முன்வருவது அதைவிடப் புரட்சிகரமாக இருக்கின்றது என்பது அவர் கருத்து.

மேலும், சிறுவர்களுக்கு நற்குண நல்லொழுக்கங்களைப் பயிற்றுவிக்க சாரணப் பயிற்சியைவிடச் சிறந்த முறை வேறெதுவும் இல்லை என்பதும் அவர் கருத்தாகும் சாரணப் பயிற்சி நல்லொழுக்கத்தை வளர்ப்பதோடு நல்வாழ்க்கைக்கு இன்றியமையாத நற்பண்புகளையும் வளர்க்கின்றது. தன் முயற்சி, தன்னடக்கம், தன்னம்பிக்கை, கூட்டுணர்ச்சி, கைம்மாறு கருதாது தொண்டாற்றும் மனப்பான்மை போன்ற உத்தம நற்பண்புகளை சாரணியம் பேணி வளர்க்கின்றது. வாழ்க்கைக்கு என்ன செய்யலாம் என்ற ஏக்கத்துக்குப் பதிலாக வாழ்க்கையை எப்படி அமைத்துக் கொள்ளலாம் என்ற உத்தமமான கேள்விக்கு விடை காண முயற்சிசெய்யும் இயல்பு பொருந்தியது சாரணப் பயிற்சி என்பது அப்பேரறிஞரின் துணிபு.

இப்படி நன்மை பலவற்றை அளிக்கவல்ல சாரணப் பயிற்சியில் சிறுவர்களை ஈடுபடச் செய்து அவர்களுக்குக் குடிமை உணர்ச்சி ஊட்டி, எதிர்காலத்தில் நாட்டின் நற்குடி மக்களாகப் பணியாற்ற அவர்களை ஆளாக்கி விடுவது நாம் நம் நாட்டுக்குச் செய்யும் அரும் பெரும் தொண்டாக அமையும். சாரணர்களுக்குரிய இப் பயிற்சி அளிப்பதில் ஆசிரியர்களுக்குள்ள பொறுப்பு மிகப்பெரிது. சாரண ஆசிரியர் தன் சாரணர்களுடன் உண்மையான அன்புடனும் உண்மையான சோதர உணர்ச்சியுடனும் எப்பொழுதும் நடந்து கொள்ள வேண்டும். மேலும், அவர் சாரண நெறிகளுக்குக் கட்டுப்பட்டவராய் அவைகளுக்குப் பொருந்தும் முறையில் தன் வாழ்க்கையை சாரணர்களுக்கு முன்மாதிரியாக அமைத்துக்கொண்டு தான் சாரணர்களுக்கு வழிகாட்டியாக இருக்கவும் வேண்டும்.

சாரணர்கள் மனத்தில் அவர் நாட்டுப்பற்றை ஊட்ட வேண்டும். அவர்களிடத்தில் சோதர மனப்பான்மையை வளர்க்க வேண்டும். அவர்களை இயற்கை ஆராய்ச்சியில் ஈடுபடச் செய்யவேண்டும். அவர்கள் மனத்தில் இறைபக்தியை ஊட்டவேண்டும். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சமயக் கடமைகளைச் சரிவரச் செய்யத் தூண்டவேண்டும். ஏனைய சமயங்களையும் சமயத்தினரையும் மதித்து நடத்தும் மனப்பான்மையும் அவர்களுக்கு உண்டாகும்படி செய்யவேண்டும்.

சாரணப் பயிற்சி சிறுவர்களைச் சமுதாய வாழ்க்கைக்குப் பக்குவப்படுத்தும் பயிற்சி. சாரணக்கலைகளை மட்டும் கற்பிப்பதால் இந்த நோக்கம் கைகூடாது. ஒழுக்கப் பயிற்சியை மட்டும் அளிப்பதும் போதாது. சமுதாய வாழ்க்கைக்குரிய பொறுப்புகளிலும்,

அந்தப் பொறுப்புகளையேற்று அவைகளைச் செயல்படுத்தும் முறைகளிலும் சாரணர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட வேண்டும்.

சாரணப் பயிற்சியின் நோக்கம் மிக மிகப் பெரியது. சாரணர்கள் வருங்காலத்தில் நாட்டின் நற்குடி மக்களாகத் திகழவேண்டியவர்கள். அவர்கள் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் தங்கள் கடமையைச் செய்தற்கு ஆற்றல் பெறவேண்டும். இதற்காக சாரண ஆசிரியர்களாகிய நாம் நம் வாழ்க்கையை அர்ப்பணிக்க வேண்டும். புனிதமான நோக்கத்தோடு சாரண ஆசிரியர்கள் சாரணப் பயிற்சி அளிக்க முன் வரவேண்டும். அப்படி முன்வந்து சாரணப் பயிற்சியை அளிக்க வேண்டிய முறையில் அளித்தல் வேண்டும்.

சாரண ஆசிரியர்கள் செய்யும் பணி இறைவனுக்குகந்த பணி. நாட்டுக்கு நன்மை செய்யும் நற்பணி.

வாழ்க சாரணியம்! வாழ்க சாரணர்கள்! வாழ்க சாரண ஆசிரியர்கள்!



—முற்றும்—

# இணைப்பு (Appendix)

**ஆங்கிலத்தில் உள்ள சாரணக் கலைச்சொற்களுக்குச் சரியான தமிழ்ப் பதங்கள்**

**1. Scout Uniform**

Scout Uniform-சாரணச் சீருடை
Scout Staff–சாரண தண்டம்; சாரணக்கோல்
Scout Shirt–சாரண அங்கி, சட்டை
Shorts-அரைக்-கால்சட்டை
Scarf-கழுத்துப்பட்டி ;கழுத்துக்குட்டை
Woggle-குழை; தக்கை
Beret-குல்லாய்
Shoulder Strap (of shirt)-தோள்பட்டி
Collar-கழுத்துப்பட்டை
Belt-இடைவார்; இடைக்கச்சை
Shoulder Stripe-தோள் சின்னம்
Shoulder Badge-பெயர்ச் சின்னம்
Pleat (of shirt Pocket)-சட்டைப்பையின் நடுமடிப்பு
Stockings–மேஜோடு
Garter Tabs-மேஜோட்டுக் குஞ்சம்
Shoe-பாதரட்சை
Cheppal-செருப்பு, மிதியடி

**2. Scout Badges**

Scout Badge-சாரணச் சின்னம்
Beret Badge-குல்லாய்ச் சின்னம்
Patrol Leader's Stripes-அணித்தலைவன் பட்டை
Second's Stripes-உதவித்தலைவன் பட்டை; துணைத்தலைவன் பட்டை
Tenderfoot Badge-இளம்பாதச் சின்னம்
Second Class Badge-இரண்டாம்தரச் சாரணச் சின்னம்
First Class Badge-முதல்தரச் சாரணச்சின்னம்
President's Scout Badge-ஜனாதிபதி சாரணச்சின்னம்
All Round Cords–பல்திற விருதுக்கயிறுகள்
Jungle Goph-வனவியல் கயிறு
Proficiency Badge (or) Merit Badge } கலைச்சின்னம், தகுதிச்சின்னம்

### 3. Articles Worn with Uniform

Scout Knife-சாரணக்கத்தி
Clasp Knife-மடக்குக்கத்தி
Sheath Knife-பிடிகத்தி, நேர்கத்தி, சூரி,
(உறையில் இடப்படுவது)
Lanyard-ஊதல் கயிறு
Haversack-தோள் பை; ஜோல்னுப் பை
Ruck Sack-முதுகுப் பை
Whistle-ஊதல்

### 4. Troop and Patrol

Scout Troop-சாரணப்படை
Scout Patrol-சாரண அணி
Scout Group-சாரணத் தொகுப்பு, தொகுதி
Cub Pack-குருளையர் குழு
Rover Crew-பெருஞ்சாரணர் குழு
Senior Scout Troop-பெரிய சாரணர் படை
Senior Scout Patrol-பெரிய சாரணர் அணி
Tenderfoot Scout-இளம்பாதன்
Second Class Scout-இரண்டாம்தரச் சாரணன்
First Class Scout-முதல்தரச் சாரணன்
President's Scout-ஜனாதிபதி சாரணன்

### 5. Scout Training

Character Training-ஒழுக்கப் பயிற்சி
Health Training-உடல்நலப் பயிற்சி
Handicraft Training-கைத்திறப் பயிற்சி; ஆக்கல் பயிற்சி
Service Training-தொண்டாற்றல் பயிற்சி
Physical Exercise-உடற்பயிற்சி

### 6. Tenderfoot Tests

Scout Sign-சாரண சமிக்ஞை
Scout Salute-சாரண வணக்கம்
National Flag-தேசியக் கொடி
Scout Flag-சாரணக்கொடி
Flag Staff-கொடிக்கம்பம்
National Anthem-தேசிய கீதம்
Tracking Signs } ஆற்றுப்படைக் குறிகள்
Trail signs }
Scout Staff-சாரண தண்டம்; சாரணக் கோல்
Knots-முடிச்சுகள்
Flag Mast-கொடிக்கம்பம், கொடி பறக்கவிடப்படுமிடம்

## 7. Second Class Tests

First Aid-முதல் உதவி
Signalling-சைகைப் பேச்சு
Observation-உற்று நோக்கும் ஆற்றல்; ஊன்றிப் பார்த்தல்
Scout Pace-சாரண வேகம்; சாரண விரைவு
Fire lighting-தீ மூட்டல்
Forked stick-கவட்டைக் குச்சு
Tripod-முக்காலி
Pyramid-கூம்புக் கோபுரம்
Cooking-சமையல்கலை
Compass Points-திசைகள்
Compass-திசைக்கருவி; திசையறிகருவி
Direction Sense-திசை உணர்வு; திசை அறிவு
Cardinal Points-அடிப்படைத் திசைகள்
Grass Turf-புல் கரண்
Safety Rnles-முற்காப்பு விதிகள்
Following Trail-தடம்பிடித்தல்
Drill-கவாத்து
Sense Training-ஐம்பொறிப் பயிற்சி
Shop Window-விற்பனைச்சாளரம்

## 8. Games

Games-விளையாட்டுகள்
Out door Games-வெளி விளையாட்டுகள்
Indoor Games-உள் விளையாட்டுகள்
Wide Games-விசால வெளி விளையாட்டுகள்
Night Games-இரவு விளையாட்டுகள்
Camp Fire Games-பாடித்தீ விளையாட்டுகள்
Sense Training Games-ஐம்பொறிப் பயிற்சி விளையாட்டுகள்
Troop Games-படை விளையாட்டுகள்; பொது விளையாட்டுகள்
Relay Games-போட்டி வரிசை விளையாட்டுகள்
Test Games-பயிற்சி விளையாட்டுகள்
Team Games-கட்சி விளையாட்டுகள்
Quiet Games-அமைதி விளையாட்டுகள்
Patrol Games-அணி விளையாட்டுகள்

## 9. First Class Tests

Swimming-நீந்துதல்
Swimming Pool-நீந்துதல் குளம், நீந்துகுளம்

Pioneering–ஆக்கல்கலை; அமைத்தல் கலை
Signalling–சைகைப் பேச்சு
Miscellaneous Signals–சைகைப் பேச்சுக் குழூ உக்குறி
Estimation-கண்மதிப்புக் கலை
First Aid–முதல் உதவிக் கலை
Cooking–சமையல் கலை
Mapping-தலபடக் கலை
Map–தலபடம்
Sketch–வரைபடம்
Conventional Signs-சங்கேத அடையாளங்கள்
Setting a Map–தலபடம் ஒன்றவைத்தல்
Map Feature–தலபட அம்சம்
Map Scale-தலபட அளவைத்திட்டம், தலபட அளவை
Axemanship–கோடரிக் கலை
Scout Journey–சாரண யாத்திரை; சாரணப்பயணம்
Camping-பாசறைக்கலை
Hike-சுற்றுலா
Compass Bearing-திசை டிகிரி அளவு
Pivot-சுழல்முனை
Electric Torch-மின் கை-விளக்கு
Electric Buzzer-மின்சார இரைப்பான், மின்சார ஒலிப்பான்
Magnetic Needle–காந்த ஊசி

## 10. Training the Boy

Cubbing - குருளைப் பயிற்சி; குருளையர் பயிற்சி
Scouting ; Boy Scouting – சிறுவர் சாரணப் பயிற்சி
Rovering ; Rover Scouting - பெருஞ் சாரணப் பயிற்சி
Senior Scouting - பெரிய சாரணர் பயிற்சி

## 11. First Aid

First Aid - முதல் உதவி; முதற் சிகிச்சை
Triangular Bandage - கட்டுத் துணி; முக்கோணக் கட்டுத்துணி
Bandage once folded - ஒரு முறை மடித்த கட்டுத்துணி
Broad fold Bandage – அகல மடிப்பு
Narrow fold Bandage - ஒடுக்க மடிப்பு
Medium fold Bandage – நடுத்தர மடிப்பு
Sling - கைத் தொட்டில்
Large Sling - பெருந் தொட்டில்
Small Sling - சிறு தொட்டில்

Cuff and Collar Sling - மணிக்கட்டு கழுத்துப் பட்டைத் தொட்டில்
Hem for Bandage - ஓரமடிப்பு
External Bandage - மேற்கட்டு
Dressing - மருந்துக்கட்டு
Head Bandage - தலைக்கு மேற்கட்டு
Hand Bandage - கைக்கு மேற்கட்டு
Foot Bandage - பாதத்துக்கு மேற்கட்டு
Knee - முழங்கால் முட்டுக்கு மேற்கட்டு
Lint - பஞ்சுத்துணி
Cut - வெட்டுக்காயம்
Scratch - உராய்சு காயம்
Sprain - கணுப்பிசகு, சுளுக்கு
Scald - கொதி நீர்ப்புண்
Burn - சூட்டுப்புண்
Bleeding - இரத்தப் பெருக்கு
Heat Stroke - வெப்ப மயக்கம்
Heat Exhaustion - வெப்பச் சோர்வு
Sun Stroke - சூரிய வெப்ப மயக்கம்
Foreign body (in wounds) - புறப் பொருள்
Artificial Respiration) செயற்கை மூச்சு
Shock - அதிர்ச்சி
Splint - மட்டை
Stretcher - நோயாளிக் கட்டில்; தொட்டில்; டோலி
Fireman's Drag - தீயணைப்போன் இழுவை
Sting - பூச்சி கொட்டுதல்
Bite - கடி
Mad Dog Bite வெறி நாய்க்கடி
Soap - சவர்க்காரம்
Antiseptic - கிருமிநாசினி

## 12. Miscellaneous Activities

Skipping - கயிறு தாண்டல்
Wrestling - குஸ்தி போடுதல்
Rowing - தோணி செலுத்தல்

## 13. Knotting

Reef Knot - படிமுடிச்சு; சதுர முடிச்சு; நேர் முடிச்சு
Harness Bend - கட்டு முடிச்சு
Sheet Bend - தூளி முடிச்சு; ஏணை முடிச்சு

Double Sheet Bend - இரட்டைத் தூளி முடிச்சு
Surgeon's Knot - மருத்துவர் முடிச்சு
Sheet Knot - துணி முடிச்சு
Bow Line - வளைய முடிச்சு
Clove Hitch - யானைக் கொலுசு
Round Turn and Two Half Hitches - முழுச் சுற்றும் இரண்டு அரைக் கொலுசும்
Fisherman's Knot - செம்படவர் முடிச்சு; மீனவர் முடிச்சு
Sheep Shank - ஆட்டிடையர் முடிச்சு
Stopper Knot தடுப்பு முடிச்சு
Figure of Eight Knot - எட்டு முடிச்சு
Hitch - தொடுப்பு
Timber Hitch - பருமரத் தொடுப்பு
Rolling Hitch - வடக்கயிற்றுத் தொடுப்பு
Whipping – நுனிவரிதல்
Seizing - பிணைத்து வரிதல்
Bend - இணைப்பு (கயிறுகளை இணைத்துக் கட்டுதல்)
Toggling - குச்சுச் செருகல்
Drawing Rope Through - கயிற்றை உருவுதல்
Sailmaker's Whipping - கப்பல் பாய் செய்வோர் நுனிவரிதல்
Ordinary Whipping - சாதாரண நுனிவரிதல்
Fireman's Chair Knot - தீயணைப்போர் நாற்காலி முடி
Manharness Hitch - வண்டியிழுத்தல் தொடுப்பு
Double Bowline - இரட்டை வளைய முடிச்சு
Bowline Bend - வளைய முடிச்சு இணைப்பு
Highwayman's Hitch - கொள்ளைக்காரன் தொடுப்பு

## 14. Splicing

Splicing - புரிதிணித்தல்
Back Splice - நுனி திணிப்பு
Eye Splice - கண்ணித் திணிப்பு
Cut Splice/Short Splice - குறுக்குத் திணிப்பு; வெட்டுத் திணிப்பு
Crown Knot - கிரீட முடிச்சு

## 15. Pioneering

Square Lashing - சதுரக் கட்டு
Diagonal Lashing - குறுக்குக் கட்டு
Frapping - இடை இறுக்கல்

Wrapping - வரிந்து கட்டல்
Shear Legs - கவட்டைக்கால்
Shear Lashing - கவட்டைக்கால் கட்டு
Flag Staff Lashing - கொடிக்கம்பக் கட்டு ; நேர்க்கட்டு
Sheer Lashing - நேர்க்கட்டு
Tripod Lashing/Gyn Lashing - முக்காலிக் கட்டு
Scaffold Lashing - ஊஞ்சல் கட்டு
Trestle - பாலத்தட்டி
Leg - கால்
Transom - மேல்சட்டம்
Ledger - கீழ்ச்சட்டம்
Diagonal ; Brace - குறுக்குச் சட்டம்
Roadway (Part of Bridge) - நடை பாதை
Road Bearer – பாதை தாங்கிச் சட்டம், பாதை தாங்கி
Lashings (Ropes) - கட்டுக்கயிறு
Working end of Ropes - கட்டும் நுனி
Standing Part - நீட்டுப்பாகம் ; நீட்டுக்கயிறு ; நீளக்கயிறு
Tent Peg - கூடாரக் கட்டுத்தறி
Anchorage - பற்றுக்கோடு ; வலித்துக் கட்டமைப்பு
Picket – கட்டுத்தறி
3-2-1 Picket - 3–2–1 கட்டுத்தறி அமைப்பு
Log & Picket Anchorage – பருமரக் கட்டுத்தறிப் பற்றுக் கோடு
Deadman's Anchorage - இறந்து பட்டவன் பற்றுக்கோடு
Natural Anchorage - இயற்கைப் பற்றுக்கோடு
Seizing Pickets – பிணைத்து வரிதல்

## 16. Miscellaneous

Fleur-de-Lis - லிலீமலர்
Trefoil - மூவிதழ் மலர்
Scout Handshake - சாரணக் கை குலுக்கல்
Scout Motto – சாரணக் குறிக்கோள்
Scout Law - சாரண விதி
Scout Promise - சாரண வாக்குறுதி; சாரணப் பிரதிக்ஞை
Scout Investiture - சாரணச் சின்னம் சூட்டல் சடங்கு
Shram Dan – உழைப்புத்தானம்
Nature Knowledge - இயற்கை அறிவு
General Proficiency Training - பொதுப் பயிற்சி; பொதுத் தேர்ச்சிப் பயிற்சி
Special Proficiency Training – தனிப்பயிற்சி; சிறப்புத் தேர்ச்சிப் பயிற்சி

**17. Drill Movements**

Fall In - வரிசையாக நிற்க
Dress – ஒழுங்காக நிற்க
Right Dress - வலக்கை ஒழுங்கு, வல ஒழுங்கு
Left Dress - இடக்கை ஒழுங்கு, இட ஒழுங்கு
Eyes Front - பார்வை நேராக, பார்வை நேர்
Eyes Right - பார்வை வலமாக, பார்வை வலம்
Eyes Left - பார்வை இடமாக, பார்வை இடம்
Forward - முன்செல்க
Mark Time - கால அடையாளம்
Take Numbers - எண் கூறுக
Disperse - கலைக
Dismiss - கலைந்து செல்க
Staff Drill - சாரண தண்டக்கவாத்து
Route March - அணிவகுப்பு ஊர்வலம்
Marching Song – வழிநடைப்பாட்டு
Alert, Attention - நேர்நிலை நிற்க
Stand at Ease - தளர்நிலை நிற்க
Stand Easy - தளர்ந்த நிலை நிற்க
Trail Staves - தண்டம் சம நிலை
Secure Staves – தண்டம் உறுதி
Shoulder Staves - தண்டம் தோளொடு
Slope Staves - தண்டம் தோள்மேல்
Support Staves – தண்டம் தாங்குக
Sit on Staves - தண்ட மீது அமர்க
Ground Staves-தண்டம் தரைமேல், தரையில்
Pick up Staves-தண்டம் எடுக்க
Right Turn-வலம் திரும்புக
Left Turn-இடம் திரும்புக
Right About Turn-(வலமாகப்) பின்புறம் திரும்புக
Horse Shoe Formation-குதிரைலாட வட்ட அமைப்பு
Rows Formation-விளையாட்டு வரிசை அமைப்பு
Open Column Formation-கலக்க வரிசை அமைப்பு
Spokes Formation-சக்கர ஆரை அமைப்பு
Circle Formation–வட்ட வடிவ அமைப்பு
Hollow Square Formation – 'ப' அமைப்பு

**18. Camping**

Camping Ground-பாசறைத்திடல்
Camp-பாசறை
Patrol Area-அணித்திடல்

Tent-கூடாரம்
Kitchen-சமையல் களம், சமையல்கூடம்
Tent Gadgets-கூடார வசதிகள்; கூடார வசதி அமைப்புகள்
Kitchen Gadgets-சமையல்கள வசதிகள்; சமையல்கள வசதி அமைப்புகள்
Camp Dresser-பாசறைப் பாத்திரப்பரண்
Box Rack-பெட்டிப்பரண்
Shoe Rack-பாதரட்சைப் பரண்
Firewood Store-விறகுப்பரண்—விறகுப் பட்டரை
Fireplace-சமையல் அடுப்பு
Altar Fire Place-மேடை அடுப்பு; மேஜை அடுப்பு
Hunter Fire Place-வேட்டைக்கார அடுப்பு
Crane Fire Place-துலா அடுப்பு
Lumberman's Fire-மரம் வெட்டி அடுப்பு
Cartman's Fire-வண்டிக்காரர் அடுப்பு; முக்கட்டி அடுப்பு
Star Fire-நட்சத்திரத் தீ அமைப்பு; முக்கட்டைத் தீ அமைப்பு
Dry Pit-உலர்ந்த கழிவுக் குப்பைத் தொட்டி
Wet Pit-கழிநீர்க் குழி
Plate Rack-உணவுத் தட்டுப் பரண்
Mug Tree-தண்ணீர்க்குவளைப் பரண்
Dining Table-உணவு மேஜை
Cook's Table-சமையல் பக்குவங்களுக்குரிய மேஜை
Chopping Block-தறிக்கட்டை
Clothes line-துணி உலர் கொடி
Camp Larder-பாசறை உறி; நெய் பால் உறி
Guy Line-கூடாரக் கட்டுக்கயிறு
Tent Peg - கூடாரக் கட்டுமுளை, கட்டுத்தறி
Tent Upright - கூடாரக்கால்
Ridge Pole - முகட்டு மூங்கில், முகட்டுக்கழி
Tent Flaps - கூடாரக் கதவுகள்
Tent Brailles - கூடாரச் சுவர்கள்
Latrine - ஒதுங்குமிடம்
Latrine Pit - மலக் குழி
Urine Pit - சிறு நீர்க்குழி
Flag Circle - கொடிவட்டம்
Camp Notice Board - பாசறை விளம்பரப் பலகை
Camp Letter Box - பாசறைத் தபால் பெட்டி
Camp Fire - பாடித் தீ
Camp Fire Activities - பாடித் தீ நிகழ்ச்சிகள்
Log Cabin Fire - சதுர அமைப்புப் பாடித் தீ
Pagoda Fire - கோபுர அமைப்புப் பாடித் தீ
Pyramid Fire - கூம்புக் கோபுர அமைப்புப் பாடித் தீ

